முதற் பதிப்பு : மே, 1961

விலை ரூபா 3-00
வெளியூரில் ரூ. 3-15

புலியூர்க் கேசிகன்
பதிப்புக்கள்

புறநானூறு
அகநானூறு-மூன்று தொகுதிகள்
சிலப்பதிகாரம்
மணிமேகலை
கலிங்கத்துப்பரணி
கலித்தொகை
நாலடியார்
பழமொழி நானூறு
நள வெண்பா
குற்றாலக் குறவஞ்சி
முக்கூடற் பள்ளு

மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை-2

# பதிப்புரை

'தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்' என்று, தமிழர் சமுதாயத்திற்கு ஆணையிட்டுச் சென்ற அமரகவி பாரதியின் வாக்கு, இன்று நினைவாகச் செயலாக ஒவ்வொரு துறையிலுமே மலர்ச்சிபெற்று வருகின்றது. புத்தக வெளியீட்டுத் துறையிலே, அந்த மலர்ச்சி, மக்கள் பதிப்பு நூல்களாகக், குறைந்தவிலையிலே சிறந்த இலக்கியங்கள் பலவும் அனைவர்க்கும் எளிதாகக் கிடைக்கும் பணியாக, உருவாகியிருக்கின்றது.

அந்தப் பெரும்பணியிலே எங்கள் நிலையமும் ஈடுபட்டுத், தமிழ் இலக்கியக் கருவூலங்கள் பலவற்றையும் வழங்கி வருகின்றது. தமிழன்பர்களும் அவற்றை ஆயிரமாயிரமாக வாங்கிப் பயன்பெற்று, எங்கள் நற்பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்றனர். தமிழகத்தில் எழுந்திருக்கும் இந்த இலக்கிய ஆர்வம் மென்மேலும் செழித்துப் பெருகவும், தமிழர் அனைவருமே இலக்கிய அன்பர்களாகவும் செல்வர்களாகவும் திகழவும், மேலும் பல நல்ல நூல்களையும் மக்கள் பதிப்புக்களாக வெளியிட வேண்டும் என்ற எங்கள் திட்டத்தின்படி, இப்போது, ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியப் பெருநூலின் தெளிவுரையோடுங் கூடிய இந்த மக்கள்பதிப்பு நூலினைத் தமிழ் உலகிற்கு வழங்குகின்றோம்.

காலத்தாற் பழமையும், கால வெள்ளத்தைக் கடந்து என்றும் கருவூலமாகத் திகழும் செழுமையும் கொண்ட தொல்காப்பியப் பெருநூல், தமிழினத்திற்கே மேன்மையும் உயிர்ப்பும் தருவதாகும். பெரும் பேராசிரியன்மாரான

நச்சினார்க்கினியர், பேராசிரியர், இளம்பூரணர் போன்றோர் ஆக்கிய விரிவான செப்பமான பேருரைகளுடன் திகழும் அந்தத் தமிழ்ச் செல்வம், இப்போது, புலியூர்க் கேசிகன் தெளிவுரையுடன் வெளிவருகின்றது.

மக்கள் பலரும், சங்கத் தமிழ்ச் செல்வங்களின் நுட்பத்தையும் திட்பத்தையும் அறிந்து பயன்பெற வேண்டும் என்ற ஆர்வத்தினாலே, புறநானூறு, கலித்தொகை, சிலப்பதிகாரம் முதலிய பல அரிய நூல்களை எல்லாம், தெளிவுரையுடன் அமைத்துப் பரவும் வகை செய்தவர் புலியூர்க் கேசிகன். அவருடைய இந்தத் தெளிவுரையமைப்பும் தமிழ் அன்பர்களால் விருப்பமுடன் வரவேற்கப்பெறும் என நம்புகின்றோம்.

இதனைத் தொடர்ந்து இறையனார் அகப்பொருள் போன்ற பிற நூல்களும் மக்கள் பதிப்புக்களாக அடுத்தடுத்து வரவிருக்கின்றன. தமிழன்பர்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் அவற்றிற்கும் பெருமளவில் வாய்த்தல் உறுதி என்ற நம்பிக்கையுடன், இந்தச் சிறந்த நூலை வழங்குகின்றோம்.

இதனை நன்முறையிலே அச்சியற்றித் தந்த மெட்ரோபாலிடன் அச்சகத்தினருக்கும், மற்றும் பல்லாற்றானும் உதவிய அன்பர்கள் பலருக்கும், எங்கள் நன்றி என்றென்றும் உரியதாகும்.

கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார்
உரிமையாளர்,
அருணா பப்ளிகேஷன்ஸ்

# தொல்காப்பியம்

காலத்தினால் தொன்மையானதாகவும், கருத்தின் கொழுமையிற் செப்பமானதாகவும், தமிழ் நாகரிகத்தின் செம்மையினையும் செம்மாந்த மேன்மையினையும் தெள்ளத்தெளிய உணர்த்துக்காட்டும் ஒப்பற்ற ஒளிவிளக்கமாகவும், மொழியின் இயலுக்கு முற்காலத்தேயே வகுத்து நிலவும் வனப்புமிக்க ஒரு வரம்பாகவும், தோன்றிய நாளினின்று இந்நாள்வரையும் இனி வருங்காலத்தும் எழிலுடன் ஏற்றமுடன் திகழும் ஒப்பற்ற செழுந்தமிழ்ச் செல்வக்கடலாகவும் விளங்குவது தொல்காப்பியப் பெருநூல் ஆகும்.

கடைச்சங்கத்தே தோன்றிய கவின்நிறை தமிழ்க் கருவூலங்களாக, நம்மிடையே நிலவிவரும் எட்டுத்தொகை பத்துப்பாட்டு முதலான தமிழ்நூல்களுக்கும், அவற்றைத் தொடர்ந்து எழுந்த ஐம்பெருங்காப்பியம் போன்ற அளவற்ற தமிழ்நூல்களுக்கும், அடிப்படையாய், ஆதி முதலாய், அரியதோர் வரம்பின் இலக்கணமாய் விளங்குவதும், ஆன்றோர் போற்றும் தொல்காப்பியப் பெருநூலே யாகும்.

கடைச்சங்கத்திற்கும் முற்பட்ட இடைச்சங்கத்தே எழுந்து, அந்த இடைச்சங்கத்து ஏற்றமிகு தமிழ்ச் சான்றோர்க்கும், அவருக்குப் பின்னர் கடைச்சங்கத்தே இருந்து தமிழாய்ந்த கருத்துச் செல்வராய நற்றமிழ்ச் சான்றோர் பல்லோர்க்கும்,நாயகமாய், நல்லதொரு இலக்கண

வரம்பாய், விளங்கிய நற்றமிழ்த் திருநூலும் தொன்மை மிகு தொல்காப்பியமே ஆகும்.

வடமொழி இலக்கண வரம்பினைத் தெளிவிக்கும் பாணினீயத்திற்கும், காலத்தால் முற்பட்டதாக எழுந்து, உலகத்து மொழிகளின் இலக்கண வரம்பினை உருப்படுத்தும் நூல்கள் அனைத்துக்கும் முற்பட்டதொன்றாக அமைந்து, அனைத்துலகின் அனைத்து மொழியியலும் தன் அரியதோர் செப்பத்திற்கும் ஆதித்தோற்றத்திற்கும் பிற்பட்டதென்னு மாறு, அருமைமிக, அன்றும் இன்றும் என்றும் அமைதி பெற, நிலவுவதும் தொல்காப்பியச் செழு நூலேயாகும்.

இத்தகைய, வளமார் வண்தமிழ்ப் பெருநூலாய், வாழ்வியலிலே சிறப்புற்றிருந்த வண்தமிழரின் வாழ்க்கை மரபுகளையும், வழங்கிய செய்யுள் வகையினையும், காதலை யும், கற்பையும், போரையும், பிற போற்றும் ஒழுகலாறு களையும் வயணமுடன் வடித்தெடுத்து நல்கி, 'ஐயாயிர ஆண்டுகட்கும் முன்பே அமைந்திருந்த தமிழ்ப்பெரும் இனத்தின் அரியதோர் ஆற்றல்சால் அமைவின் செழுமை யினையும் செப்பத்தினையும் காண்மின் காண்மின்' எனச், சான்றாக நின்று, உலகிற்குத், தமிழர் வாழ்வியற் செப்பத் தின் தொன்மைச் சிறப்பையும் நேரிய பண்பமைதிகளையும் நிரல்படத் தெளிவுபட நுட்பமாக நுவல்வதும் தொல்காப்பியமே ஆகும். தொல்காப்பியத்தினிடத்தே கூறப்பட்டுள்ள பல்வேறான விதிகட்கும் மரபுகட்கும் நிலைக்களனாக விளங்கியிருத்தற்கு உரியவான, எண்ணற்ற ஏற்றமிகு செந்தமிழ்ச் செல்வங்களையும், எழில்கொழிக்கும் செந்தமிழரின் இயல்புநிறை வாழ்க்கையமைதிகளையும்

எண்ணும்போது, "அத்துணைத் தொல்பழங் காலத்திற்றானே அத்துணை மேதகுநிலையிலே திகழ்ந்த நாம் இன்றுவாழ் நிலையின் தன்மைதான் என்னே?" என்னும் சிந்தனையும், "அத் தொன்மைசால் புகழை ஒல்லும் வகையான் ஓவாது முயன்று மீளவும் அடைதல் வேண்டும்' என்றவோர் ஆர்வமும், தமிழரிடையே, தமிழ்ப்பற்றும் தமிழ் உணர்வும் கொண்டாரிடையே, எழாமற் போவதில்லை.

"இடைச் சங்கத்தார்க்கும் கடைச் சங்கத்தார்க்கும் நூலாயிற்று தொல்காப்பியம்" என நுவல்கின்றார் நுண்மாண் நுழைபுலச் செம்மலும், 'நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே' என இறையனாரையும் எதிர்த்து நின்ற தமிழ் வள்ளலும் ஆகிய நக்கீரனார். அவருடைய அருள்வாக்கினை, 'மேலும் தமிழகத்திலே என்றென்றும் தோன்றும் அறிஞராவர்க்கும்' எனச் சேர்ந்தே வழங்கலாம் நாம். அத்தகைய நிலையிலே, கால வெள்ளத்தையும் எதிர்நீந்திக், கவினோடு திகழும் கருவூலமும் தொல்காப்பியமே ஆகும்.

'எழுத்து சொல் பொருள்' என அமைந்த மூன்று பெரும் அதிகாரப் பகுப்பினை உடையதாகவும், அவை ஒவ்வொன்றும் ஒன்பது இயல்களாக இயலும் நெறியினைக் கொண்டதாகவும், ஒவ்வோர் இயலும் எளிய இனிய சூத்திரங்களைக் கொண்டதாகவும், அமைந்து விளங்கும் முறையினோடு விளங்குவது இத் தமிழ்ப் பெரு நூல்.

இதனை இயற்றியோராகக் குறிக்கப்படும் தமிழ்ச் சான்றோர், 'ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியன்'

தூத்துக்குடி வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களும், பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்களும், பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் அவர்களும் யாழ்ப்பாணத்துப் பேராசிரியர் கணேசையர் அவர்களும், மற்றும் பிறரும் இந்த நல்ல பணியிலே ஈடுபட்டுத் தமிழ் வளர்க்கும் பெருந்தொண்டினை ஆற்றிப் பெருமை பெற்றுள்ளார்கள். இத்தகைய பேரறிஞர் பெருமக்கட்கும், தொல்காப்பியத்தின் சிறப்பினை நாளெல்லாம் நன்முறையிலே நாடெங்கணும் பரப்பிப் பரப்பிப் பேணிய பெருந்தகையாளர்களான எண்ணற்ற தமிழாசிரியர் பெருமக்கட்கும், மற்றும் இவ்வுரையமைப்பிலே எனக்கு உதவியும் என்னை ஊக்கியும் வந்த என் கெழுதகை நண்பர்கள் பலருக்கும் யான் மிகப் பெரிதும் நன்றிக்கடன் உடையவனாவேன்.

தமிழ்ச் செல்வங்களை யெல்லாம் மக்கள் பதிப்புக்களாக, ஓரளவிற்கு மலிவான விலையிலே வழங்குதல் வேண்டுமென்ற ஆர்வத்துடன், தம் நிலைய வெளியீடாக இதனையும், மற்றும் என் நூல்கள் பலவற்றையும் வெளியிட்டுள்ள அருணா பப்ளிகேஷன்சின் உரிமையாளர் திரு. கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியாரவர்களின் பேரன் பிற்கும் யான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்தத் தெளிவுரை அமைப்பு மிகமிகப் பெரியதொரு முயற்சி. அதனை என்னுடைய ஆற்றலுக்கு ஏற்றவாறு ஒருவாறாக அமைத்து வழங்கியிருக்கின்றேன். குறைமறந்து குணங்கொண்டு போற்றுமாறு அனைவரையும் வேண்டுகின்றேன். இந்நூலினை மேலும் சிறப்புறச் செய்வதற்கான கருத்துக்களையும் திருத்தங்களையும் தந்து, தமிழிலக்கிய வளர்ச்சிக்குத் தாங்களும் உதவுமாறும் தமிழன்பர்களைப் பெரிதும் வேண்டுகின்றேன்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப் பண்பு!

புலியூர்க் கேசிகன்

# பொருளடக்கம்

[எண்—பக்க எண்]



## எழுத்து அதிகாரம் (19—130)



## சொல் அதிகாரம் (131—240)

## பொருள் அதிகாரம் (241—419)

# தொல்காப்பியம்

## *சிறப்புப் பாயிரம்*

*[பனம்பாரனார் இயற்றியது]*

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச் 5
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய 10
அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியன்எனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே. 15

*வடக்கின்கண் திருவேங்கடமும் தெற்கின்கண் குமரியும் ஆகிய இரண்டெல்லைக்குள் தமிழைச் சொல்லும் நல்லாசிரியர்களுடைய வழக்குஞ் செய்யுளுமாகிய அவ்விரண்டையும் அடியாகக் கொள்ளுகையினால், எழுத்திலக்கணத்தையுஞ் சொல்லிலக்கணத்தையும் பொருளிலக்கணத்தையும் நன்கு ஆராய்ந்து, செந்தமிழினது இயல்புபொருந்திய செந்தமிழ்நிலத்து வழக்கோடு முதல் நூல்களில் சொன்னவற்றினைக் கண்டு முறைமையாக ஆராய்ந்து; பகைவர்களது நிலத்தினைத் தன்கீழ் வாழ்பவர்களுக்குக் கொடுக்கும் போர்ச்செல்வத்தினையுடைய பாண்டியன்*

*தொ—2*

மாகீர்த்தியின் அவைக்கண், அறத்தினைக் கூறும் நாவினை உடையவனும், நான்மறையுங் கற்றுணர்ந்தவனும், அதங்கோடு என்னும் ஊரில் தோன்றியவனுமாகிய ஆசிரியனுக்குக் குற்றமறத் தெரிந்து கூறி; மயக்கத்தினை அடையாத நெறிமுறையில் எழுத்திலக்கணத்தை வேறு தெரிவித்து; மிக்க நீரையுடைய கடலாகிய எல்லையைக்கொண்ட உலகின்கண் இந்திரனால் இயற்றப்பட்ட ஐந்திர இலக்கண நூலை நன்கு கற்றுணர்ந்தவனும், பழைய காப்பியக்குடியில் உள்ளோன் எனத் தன் பெயரை நிலைநிறுத்தியவனும், பல புகழ்களை உலகிலே நிலைநாட்டியவனும் ஆகிய தொல்காப்பியன், நூலுக்குச் சொல்லப்பட்ட குற்றங்களற்ற தொல்காப்பிய நூலைத் தொகுத்துக் கூறினான்.

# எழுத்து அதிகாரம்

## 1. நூன்மரபு

### 1. எழுத்துக்களின் வகை பெயர் முதலின

எழுத்தெனப் படுப
அகரமுதல னகர இறுவாய்
முப்பஃ தென்ப;
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே. 1

*எழுத்தென்று கூறப்பெறுவன சார்ந்து வருதலையுடைய மூன்றெழுத்துக்களும் இல்லாதபோது அகரம் முதல் னகரம் இறுதியாக உள்ள முப்பதெழுத்துக்களுமாம் என்று இலக்கண நூலார் உரைப்பர். சார்பெழுத்துக்கள் மூன்றுஞ் சேரின் அவை முப்பத்து மூன்ருகும்.*

*சார்பெழுத்துக்கள்*

அவைதாம்,
குற்றிய லிகரம் குற்றிய லுகரம் ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன. 2

*சார்ந்துவரும் என்று சொல்லப்பெற்ற குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்னும் மூன்றிடத்துப் புள்ளியும் மேற்கூறப்பெற்ற முப்பதெழுத்துக்களோடு ஒரே தன்மையை உடையன.*

## 2. மாத்திரை

*ஒரு மாத்திரையுடைய குற்றுயிர்*

அவற்றுள்,
அ இ உ எ ஒ என்னும்
அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப. 3

*முன் கூறப்பட்ட முப்பதெழுத்தினுள் அ இ உ எ ஒ என்று கூறப்பெறுகின்ற அப் பகுதிகளைந்தும் ஒரே அளவாக ஒரு மாத்திரை ஒலிக்கும் குற்றெழுத்தென்று புலவர் கூறுவர்.*

### இரண்டு மாத்திரையுடைய நெட்டுயிர்

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும்
அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப. 4

*ஆ, ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்று சொல்லப்பெறும் அப்பகுப்பினையுடைய ஏழு எழுத்துக்களும் ஒவ்வோர் எழுத்தும் இரண்டு மாத்திரையளவாக ஒலிக்கும் நெட்டெழுத்தென்று புலவர் கூறுவர்.*

### ஓரெழுத்து மூன்று மாத்திரை ஒலிக்காமை

மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே. 5

*ஓர் எழுத்து மட்டும் மூன்றுமாத்திரை நேரம் ஒலித்தல் என்பது இல்லை.*

### மாத்திரை நீளுதல்

நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழுதல் என்மனார் புலவர். 6

*இசை முதலியவிடங்களில் நீட்டி யொலித்தலை விரும்பினால் அவ்வளபுடைய எழுத்துக்களைக் கூட்டி எழுப்புக என்று கூறுவர் புலவர். (எடுத்துக் காட்டு) ஆஅ, ஈஇ, ஊஉ. ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ எனவரும்.*

### மாத்திரைக்கு அளவு

கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே. 7

*கண்ணை இமைத்தலும் கையை நொடித்தலும் ஆகிய அவ்விரண்டே மாத்திரைக்கு அளவாகும். இது, நுட்பமாக நூல் இலக்கணத்தை உணர்ந்த புலவர்கள் அறிந்த நெறியாகும்.*

## 3. எண்

### பன்னிரண்டு உயிர்

ஔகார இறுவாய்ப்
பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப. 8

*அகரம் முதலாக ஔகாரம் இறுதியாக உள்ள பன்னிரண்டு எழுத்துக்களும் உயிரெழுத்தென்று புலவர் கூறுவர்.*

### பதினெட்டு மெய்

னகார இறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப. 9

*ககாரம் முதல் னகாரம் இறுதியாகவுள்ள பதினெட்டு எழுத்துக்களும் மெய்யெழுத்து என்னும் பெயரினையுடைய என்று புலவர் கூறுவர்.*

### உயிர்மெய்க்கு அளவு

மெய்யோ டியையினும் உயிரியல் திரியா. 10

*பன்னிரண்டு உயிரெழுத்துக்களும் பதினெட்டு மெய்யெழுத்துக்களோடுங் கூடி நின்றனவாயினும் தம்முடைய உயிரெழுத்து இலக்கணத்தில் மாறுபடமாட்டா.*

### தனிமெய்க்கு அளவு

மெய்யின் அளவே அரையென மொழிப. 11

*மெய்யெழுத்துக்கள் ஒவ்வொன்றுக்கும் மாத்திரை அரை யென்று கூறுவர் புலவர்.*

### சார்பெழுத்துக்கு அளவு

அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே. 12

*சார்பெழுத்துக்கள் மூன்றும் முற்கூறிய அரைமாத்திரை யாகிய இயல்பிலேயே நிற்கும். (எ-டு) கேண்மியா, நாகு, எஃகு வரும்.*

### மகரக் குறுக்கம்

அரையளவு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலை. 13

*வேறோர் எழுத்தினது ஓசையின்கண் மகரவொற்றுத் தன் அரைமாத்திரையிற் குறுகிக் கால்மாத்திரை பெறுதலை யுடைத்து. ஆராயுமிடத்து இது சிறுபான்மையேயாம். (எ-டு) போன்ம், வரும் வண்ணக்கன் என வரும்.*

## 4. வடிவு

### மகரத்தின் வடிவம்

உட்பெறு புள்ளி உருவா கும்மே. 14

*உள்ளாற் பெறுகிற புள்ளி மகரத்திற்கு வடிவமாகும். (எ-டு) மகரம், பகரத்தின் உள்ளே புள்ளியுடையதாக*

ட்பெறுபுள்ளி நீண்டு ம என்றவாறு

## மெய்யெழுத்தின் இயல்பு

மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் 15

*பதினெட்டு மெய்யெழுத்துக்களின் தன்மையும் புள்ளி பெற்று நிற்றலாகும். (எ-டு) க் ங் முதலியன.*

## எகர ஒகரங்களின் இயல்பு

எகர ஒகரத் தியற்கையும் அற்றே. 16

*எகர ஒகரங்களினது நிலையும் மெய்போலப் புள்ளி பெறு தலாம். (எகர ஒகரங்கட்குப் புள்ளியிடுதல் இந் நாளில் இல்லை.)*

## உயிர்மெய்யெழுத்தின் இயல்பு

புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்
ஏனை உயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே. 17

*புள்ளிபெறாத எல்லா மெய்யெழுத்துக்களும் புள்ளி பெறு கின்ற காலத்தில், இயல்பாகிய அகரநீங்கிய வடிவே தமக்கு வடிவமாகி நின்ற பின்னர், ஏறிய அகரத்தோடு ஒலித்தலும், பிற உயிர்களோடு வடிவுதிரிந்து ஒலித்தலும் ஆகிய ஒலிக்கும் முறை மையைப் பெறும். (எ-டு) க. ங முதலியனவாகவும் கா, கி, கீ, கு, கூ, கெ, கே, கை, கொ, கோ, கௌ முதலியனவாகவும் வரும்.*

## உயிர்மெய் ஒலிக்கும் முறை

மெய்யின் வழியது உயிர்தோன்றும் நிலையே. 18

*உயிரினது ஒலி தோன்றுகின்ற நிலை மெய்யினது ஒலி தோன்றிய பிறகேயாம்.*

## வல்லின மெய்

வல்லெழுத் தென்ப கசட தபற. 19

*க ச ட த ப ற என்னும் ஆறு எழுத்துக்களையும் வல்லினம் என்று கூறுவார்கள்.*

## மெல்லின மெய்

மெல்லெழுத் தென்ப ஙஞண நமன. 20

ங ஞ ண ந ம ன என்னும் ஆறு எழுத்துக்களையும் மெல்லினம் என்று கூறுவார்கள்.

### இடையின மெய்

இடையெழுத் தென்ப யரல வழள. 21

ய ர ல வ ழ ள என்னும் ஆறு எழுத்துக்களையும் இடையினம் என்று கூறுவார்கள்.

## 5. மயக்கம்

### மெய் மயங்கும் முறை

அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்
மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை 22

ஆராயுமிடத்து, மேற்கூறப்பட்ட பதினெட்டு மெய்யெழுத்துக்களும் தம்மை மொழிப்படுத்தி வழங்குமிடத்து மெய்ம்மயக்கம் என்றும் உடனிலைமயக்கம் என்றும் இருவகைப்படும்.

### தனிமெய் பிறமெய்யுடன் மயங்கும் முறை

டறலள என்னும் புள்ளி முன்னர்க்
க ச ப என்னும் மூவெழுத் துரிய. 23

ட ற ல ள என்று சொல்லப்பெறுகிற மெய்யெழுத்துக்களின் முன்பு, க ச ப என்று சொல்லப்பெறும் மூன்று எழுத்துக்களும் மயங்குதற்கு உரியன. (எ-டு) கட்க, கற்க, செல்க, கொள்க; கட்சிறார், கற்சிறார், செல்சிறார், கொள்சிறார்; கட்ப, கற்ப, செல்ப, கொள்ப என வரும்.

அவற்றுள்
ல ள ஃகான் முன்னர் யவவுந் தோன்றும். 24

முற்கூறிய நான்கனுள் லகார ளகாரமாகிய மெய்யெழுத்துக்களின் முன்னர் க ச ப க்களே அல்லாமல் யகர வகரங்களும் வந்து மயங்கும். (எ-டு) கொல்யானை, செல்வம், வெள்யாறு, கள்வன் எனவரும்.

ங ஞ ண ந ம ன எனும்புள்ளி முன்னர்த்
தத்தம் மிசைகள் ஒத்தன நிலையே. 25

ங ஞ ண ந ம ன என்று கூறப்பெறும் மெய்யெழுத்துக்களின் முன்னர்த் தமக்கினமாய் முன்னின்ற கசடதபற என்னும் எழுத்துக்கள் மயங்கி நிற்றற்கண் பின்னிற்றற்குப் பொருந்தின. (எ-டு) கங்கன், கஞ்சன், கண்டன், கந்தன், கம்பன் எனவரும்.

தெங்கு, பிஞ்சு, வண்டு, பந்து, கம்பு, கன்று எனக் குற்றுகரமும் காட்டுவர்.

அவற்றுள்,
ண னஃகான் முன்னர்க்,
கசஞ பமயவ ஏழும் உரிய. 26

மேற்கூறிய மெல்லெழுத்து ஆறனுள், ணகார னகாரங்களின் முன் டற என்னும் எழுத்துக்களே யல்லாமல், க ச ஞ ப ம ய வ என்னும் ஏழு எழுத்துக்களும் வந்து மயங்குதற்கு உரியன. (எ-டு) எண்கு, வெண்சாந்து, வெண்ஞாண், பண்பு, வெண்மை, மண்யாறு எண்வட்டு எனவும்; புன்கு, புன்செய், மென்ஞாண், அன்பு, வன்மை, இன்யாழ், புன்வரகு எனவும் வரும்.

ஞநமவ என்னும் புள்ளி முன்னர்,
யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே. 27

ஞ ந ம வ என்று சொல்லப்பெறுகின்ற மெய்யெழுத்துக்களின் முன்னர் யகரம் மயங்கிநிற்றல் பொருண்மை பெற்றது. (எ-டு) உரிஞ்யாது, பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது என வரும்.

மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும். 28

மகரமாகிய மெய்யெழுத்தின் முன்னர் வகரமுந் தோன்றி மயங்கும். (எ-டு) நிலம் வலிது என வரும்.

யரழ என்னும் புள்ளி முன்னர்,
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும். 29

ய ர ழ என்று சொல்லப்பெறுகின்ற மெய்யெழுத்துக்களின் முன்னர் மொழிக்கு முதலாகும் என்று கூறப்பெற்ற ஒன்பது மெய்யும் ஙகரத்தோடு தோன்றி மயங்கும் (எ-டு) வேய்கடிது, வேர்கடிது, வீழ்கடிது, சிறிது, தீது, பெரிது; ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவரும். வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் எனவும் ஓட்டுக.

## தனிமெய் தன்மெய்யோடு மயங்குமாறு

மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்
தம்முன் தாம்வரூஉம் ரழ அலங் கடையே. 30

பொருள் நிலைமைக் கருத்தின்கண் எல்லா மெய்யெழுத்துக்களும் தம் முன்னே தாம் வந்து மயங்கும், ரகாரம் ழகாரங்கள் அல்லாத இடத்து. (எ-டு) காக்கை, எங்ஙனம், பச்சை, மஞ்ஞை, பட்டை, மண்ணை, தத்தை, வெந்நாய், அம்மை, அம்பி, வெய்யர், எல்லி, எவ்வி, கொள்ளி கொற்றி, கன்னி என வரும்.

# 6. எழுத்துக்களின் பிற மரபுகள்

## சுட்டெழுத்துக்கள்

அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு. 31

அ இ உ என்று கூறிய மூன்றும் சுட்டெழுத்துக்கள் என்னும் பெயரினையுடைய. (எ-டு) அக் கொற்றன், இக் கொற்றன், உக் கொற்றன் என வரும்.

## வினாவெழுத்துக்கள்

ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா. 32

ஆ ஏ ஓ என்று கூறப்பெறும் மூன்றெழுத்துக்கள் வினா வெழுத்தாக வரும். (எ-டு) உண்கா, உண்கே, உண்கோ என வரும்.

## இசைநூல் முறையில் எழுத்தொலிகள்

அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர். 33

தமக்குச் சொன்ன அளவினைக் கடந்து ஒற்றெழுத்துக்கள் தம் ஒலி முன்கூறிய அளபின் நீடலும், விளியின்கண் அன்றி இசைபொருந்திய நரம்பினையுடைய யாழிசை நூற்கண்ணும் உளவாமெனக் கூறுவார் இசைநூலார் என்று புலவர்கள் கூறுவர். (எ-டு) 'வருவர் கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேஎளினி' என வரும்.

# உ. மொழிமரபு

[மொழிக்கண் நின்ற எழுத்தின் இலக்கணம் உணர்த்துவது]

## 1. சார்பெழுத்துக்கள் மொழிகளிற் பயிலும் முறை

### குற்றியலிகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும்

குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே. 34

*ஒருமொழிக் குற்றியலிகரம் உரையசைச் சொல்லாகிய மியா என்பதற்குச் சினையாக, அச் சொல் தன்னிடத்து வருகின்ற யா என்னுஞ் சினைக்குமுன் மகர ஒற்றினை ஊர்ந்து நிற்றல் வேண்டும். (எ-டு) கேண்மியா சென்மியா என வரும்.*

புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும். 35

*அக் குற்றியலிகரம் புணரியலுள் ஒரு மொழியிடத்தன்றி இருமொழிகள் தம்மிற் புணருங் காலத்தினும் குறுகும் தன்மையை உடையது. அதற்கு இடம் பற்றுக்கோடு ஆகியன கூறத் தொடங்கினால் குற்றியலுகரப் புணரியலுள் கூறப்படும். (எ-டு) நாகியாது, வரகியாது, தெள்கியாது, எஃகியாது, கொக்கியாது, குரங்கியாது என வரும்.*

### தனிமொழிக் குற்றியலுகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும்

நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. 36

*குற்றியலுகரம் வல்லெழுத்துக்கள் ஆறினையும் ஊர்ந்து நெட்டெழுத்தின் பின்னும் ஐவகைத் தொடர்மொழியின் இறுதியினும் நிற்றல் வேண்டும். (எ-டு) நாகு, வரகு, தெள்கு, எஃகு, கொக்கு, குரங்கு என வரும்.*

## புணர்மொழிக் குற்றியலுகரம் தன்மாத்திரையில் குறுகல்

இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான, 37

*குற்றியலுகரம் புணர்மொழி இடைப்படின் தன் அரை மாத்திரையில் குறுகும் இடனும் உண்டு. அதற்கு, இடமும் பற்றுக்கோடும் எங்குப் பெறுவதெனின் அதன் புணர்ச்சி முறையை அறியும் குற்றியலுகரப் புணரியலுள் என்க. (எ-டு) செக்குக் கணை, சுக்குக் கோடு என வரும். இவை அரை மாத்திரையிற் குறுகிக் கால் மாத்திரையளவே ஒலிக்கும்.*

## ஆய்தம் தனிமொழியுள் வரும் முறை

குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே. 38

*ஆய்தமாகிய ஒற்று, குற்றெழுத்தின் முன்னதாய் உயிரோடு கூடிய வல்லெழுத்து ஆறின் மேலும் வரும். (எ-டு) எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு, அஃது, இஃது, உஃது என வரும்.*

## ஆய்தம் புணர்மொழியுள்ளும் வரும் முறை

ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும். 39

*நிலைமொழியீறு வருமொழி முதலொடு புணர்ந்து நடக்கும் இடத்தும் அரை மாத்திரையே ஒலிக்குந் தன்மை தோன்றும், (எ-டு) கஃறீது, முஃடீது என வரும்.*

## ஆய்தத்தின் இயல்பு

உருவினும் இசையினும் அருகித் தோன்றும்
மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தின் இயலா
ஆய்தம் அஃகாக் காலை யான. 40

*உருவத்தின்கண்ணும் ஒலியின்கண்ணும் சிறுபான்மை ஆய்தந்தோன்றும் பொருள் குறித்தலையுடைய சொல்லும், அவையொழிந்த எல்லா மொழிகளும், ஒற்றெழுத்துக்கள்போல் அரை மாத்திரையிலும், சிறுபான்மை மிகுந்தும் நடந்து ஆய்தம் சுருங்காத இடத்துச் சொற்களாம். (எ-டு) 'கஃறென்றது' என்பது உருவு. 'சுஃறென்றது' என்பது இசை.*

## 2. அளபெடை

### அளபெடையின் நிலை

குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே. 41

இசை குறைவதான மொழியிடத்திலே நெட்டெழுத்திற்குப் பிறகு அவைகளுக்கு இனமான குற்றெழுத்து அமைந்து நின்று இசையை நிறைக்கும்; அது அளபெடை. (எ-டு) ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஓஒ என வரும்.

### ஐகார ஔகார அளபெடை

ஐ ஔ என்னும் ஆயீ ரெழுத்திற்கு
இகர உகரம் இசைநிறை வாகும். 42

தமக்கு இனமில்லாத ஐகாரம் ஔகாரம் என்று கூறப் பெறும் இரண்டு எழுத்துக்கட்கும் ஈகார ஊகாரங்கட்கு இனமான இகர உகரங்களைச் சார்த்திக் கூற இசை நிறைவினை அடையும். (எ-டு) ஐஇ, ஔஉ என வரும்.

## 3. எழுத்துக்கள் மொழியாதல்

### ஓரெழுத்து ஒருமொழி

நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி. 43

நெட்டெழுத்தாகிய உயிர்களேழும் ஓரெழுத் தொருமொழி யாகும். (எ-டு) ஆ, ஈ, ஏ, ஐ, ஓ, ஔ என வரும்.

### குற்றெழுத்தின் இயல்பு

குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே. 44

குற்றெழுத்துக்கள் ஐந்தும் மொழியாக நிறைவுறும் தன்மை உடையனவல்ல. சில எழுத்துக்கள் வரும். (எ-டு) து, நொ என்பன காண்க.

### மொழியின் பெயர் முறை தொகை

ஓரெழுத்தொரு மொழி ஈரெழுத் தொரு மொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே. 45

ஓரெழுத்தால் ஆகும் ஒரு மொழியும், ஈரெழுத்தால் ஆகும் ஒரு மொழியும், இரண்டெழுத்துக்கள் மேல் தோன்றியிசைக்கும்

தொடர் மொழியோடு கூட, அவை தோன்றிய வழக்கு நெறிக் கண், மொழிகளின் நிலைமை மூன்றேயாகும். (எ-டு) ஆ, மணி, வரகு, கொற்றன் எனவரும்.

## 4. எழுத்துக்களின் இயக்கம்

### தனிமெய்யின் இயக்கம்

மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும் 46

*தனிமெய்களினது இயக்கம் அகரத்தோடு பொருந்திவரும். (எ-டு) 'க ச த ப' எனவரும்.*

### உயிர்மெய் என்னும் பெயர்

தம்மியல் கிளப்பின் எல்லா எழுத்தும்
மெய்ந்நிலை மயக்கம் மான மில்லை. 47

*எல்லா மெய்யெழுத்தும் மொழியிடையின்றித் தம் வடிவின் இயல்பைச் சொல்லுமிடத்து மெய்ம்மயக்கம் நிலையில் மயங்கி வருதல் குற்றமில்லை. (எ-டு) வல்லெழுத்தியையின் டகார மாகும் என வரும்.*

### ஈரொற்று உடனிலை

யரழ என்னும் மூன்றுமுன்
கசதப ஙஞ நம ஈரொற் றாகும். 48

*ய ர ழ என்று சொல்லப்பெறுகிற மூன்றனுள் ஒன்று முன்னே ஒற்றாய் நிற்க, அவற்றின் பின்னே க ச த ப ங ஞ ந மக் களும் வந்து ஈரொற்றாய் நிற்கும். (எ-டு) வேய்க்க, வாய்ச்சி, பாய்த்தல், வாய்ப்பு, பீர்க்கு, நேர்ச்சி, வார்த்தல், ஆர்ப்பு, வாழ்க்கை, தாழ்ச்சி, தாழ்த்தல், தாழ்ப்பு, காய்ங்கனி, தேய்ஞ்சது, காய்ந்தனம், காய்ம்புறம், நேர்ங்கல், நேர்ஞ்சிலை, நெர்ந்திலை, நேர்ம்புறம் எனவரும்.*

### குறிற்கீழ் ஒற்றாகா மெய்கள்

அவற்றுள்,
ரகார ழகாரங் குற்றொற் றாகா. 49

*முற்கூறிய மூன்றனுள் ரகாரமும் ழகாரமும் குறிற்கீழ் ஒற்றாகா. நெடிற்கீழ் ஒற்றாம்; குறிற்கீழ் உயிர் மெய்யாம். (எ-டு) கார், வீழ், கரு, மழு என வரும்.*

### தொடர்மொழி இயல்பு

குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
தொடர்மொழி யெல்லாம் நெட்டெழுத்தியல, 50

உயிரெழுத்திற்குக் குறுமையும் நெடுமையும் அளவிற் கொள்ளப்படுதலின் தொடர்மொழிக்கீழ் நின்ற ரகார ழகாரங் களெல்லாம் நெடிற்கீழ் நின்ற ரகார ழகாரங்களின் இயல்பை உடையனவாம். (எ-டு) அகர், புகர், அகழ், என வரும்.

### செய்யுளில் ஈரொற்று இலக்கணம்

செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றுகும். 51

செய்யுள் இறுதிக்கண் 'போலும்' என்னும் மொழிக்கண் னகாரமும் மகாரமும் ஈரொற்று உடனிலையாக நிற்கும். (எ-டு) முந்நூலாக் கொள்வானும் போன்ம். திசையறி மீகானும் போன்ம் எனவரும்.

### மகரம் குறுகுமிடம்

னகாரை முன்னர் மகாரம் குறுகும். 52

முன் கூறிய னகரத்தின் முன்னர் வந்த மகரம் தன் அரைமாத்திரையிற் குறுகி நிற்கும். (எ-டு) போன்ம்.

### மொழிக்கண்ணும் மாத்திரை வேறுபடாமை

மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினும்
எழுத்தியல் திரியா என்மனார் புலவர். 53

'ஆராய்ந்து சொல்லாகச் சேர்த்துச் சொல்லினும் வேறே சொல்லினும் எழுத்துக்கள் தம்முடைய மாத்திரையில் திரிய மாட்டா என்று புலவர் கூறுவர். (எ-டு) அஃகல், அ எனவும்; ஆல் ஆ எனவும்; கடல், க எனவும்; கால், கா எனவுங் கண்டு கொள்க.

## 5. போலி

### போலி எழுத்துக்கள்

அகர இகரம் ஐகாரம் ஆகும். 54

அகரமும் இகரமுங் கூடிச்சொல்ல ஐகாரம்போல )சைக் கும். (எ-டு) ஐவனம், அஇ வனம் என வரும்.

அகர உகரம் ஔகார மாகும். 55

அகரத்தையும் உகரத்தையுங் கூட்டிச் சொல்ல ஔ காரம் போல இசைக்கும். (எ-டு) ஔவை, அஉவை என வரும்.

அகரத்திம்பர் யகரப் புள்ளியும்
ஐ என் நெடுஞ்சி னைமெய்பெறத் தோன்றும். 56

அகரத்தின் பின் இகரமே அல்லாமல் யகரமாகிய புள்ளி வந்தாலும் ஐயெனப்பட்ட நெட்டெழுத்தின் வடிவு பெறத் தோன்றும். (எ-டு) ஐவனம், அய்வனம் எனவரும்.

### ஐ ஔ குறுகுதல்

ஓரள பாகும் இடனுமா ருண்டே
தேருங் காலை மொழிவயி னான. 57

ஒரு சொல்லிடத்தே நின்ற ஐகார ஔகாரங்கள் ஆராயுமிடத்தில் ஒரு மாத்திரையாய் நிற்கும் இடமும் உண்டு, (எ-டு) ஐப்பசி, கைப்பை, இடையன், குவளை, ஔவை, கௌவை எனவரும்.

### போலியில் மற்றொரு வகை

இகர யகரம் இறுதி விரவும். 58

இகரமும் யகரமும் ஒரு மொழியின் இறுதிக்கண் ஓசை விரவி வரும். (எ-டு) நாய், நாஇ என வரும்.

## 6. மொழிமுதல் எழுத்துக்கள்

### மொழி முதலாகும்உயிர்கள்

பன்னீ ருயிரும் மொழி முதலாகும். 59

பன்னிரண்டு உயிரெழுத்துக்களும் மொழிக்கு முதலாம். (எ-டு) அடை, ஆடை, இலை, ஈயம், உளை, ஊர்தி, எழு, ஏணி, ஐந்து, ஒன்று, ஓடம், ஔவியம் என வரும்.

### தனிமெய் முதல் ஆகாமை

உயிர் மெய் அல்லன மொழிமுத லாகா. 60

உயிரோடு கூடிய மெய்யல்லாதனவாகிய தனிமெய்கள் மொழிக்கு முதலாகா.

### பன்னீருயிருடன் மொழி முதலாதல்

கதந பமஎனும் ஆவைந் தெழுத்தும்
எல்லா உயிரொடுஞ் சொல்லுமார் முதலே. 61

க த ந ப ம என்று கூறப்பட்ட அவ்வைந்து தனி மெய்யும் பன்னிரண்டு உயிரோடும் மொழிக்கு முதலாக வரும். (எ-டு) கலை, கார், கிளை, கீரி, குடம், கூடு, கெண்டை, கேழல், கைதை, கொண்டல், கோடை, கௌவை எனவும்; தந்தை, தாய், திருமகள், தீமை, துணி, தூணி, தெற்றி, தேன்,

தையல், தொண்டை, தோடு தௌவை எனவும்; நந்து, நாரை, நிலம், நீலம், நுகம், நூல், நெய்தல், நேமி, நைவளம், நொச்சி, நோக்கம், நௌவி எனவும்; படை, பிடி, பீடு, புகழ், பூ, பெடை, பேடை, பைதல், பொன், போது, பௌவம் எனவும்; மலை, மாலை, மிடறு, மீளி, முகம், மூப்பு, மெலிவு, மேனி, மையல், மொழி, மோத்தை, மௌவல் எனவும் வரும்.

## சகரமெய் ஒன்பது உயிருடன் மொழிமுதலாதல்

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே 62

சகரமாகிய எழுத்தும் அ ஐ ஔ என்னும் மூன்றும் ஒழித்த பிற எழுத்துக்களோடு மொழிக்கு முதலாக வரும். (சகரம் மொழிக்கு முதலாக இக்காலத்தில் வருகிறது. சகரத்தை முதலாகக் கொண்ட மொழிகள் பல உள்ளன.) (எ-டு) சாலை, சிலை, சீலை, சிறுக, சுரும்பு, சூழ்க, செய்கை, சேவடி, சொறிக, சோறு என வரும்.

## வகரமெய் எட்டு உயிருடன் மொழிமுதலாதல்

உ ஊ ஒ ஓ என்னும் நான் குயிர்
வ என் எழுத்தொடு வருதல் இல்லை. 63

உ ஊ ஒ ஓ என்று சொல்லப்பெறுகிற நான்கு உயிரும் வ என்னும் மெய்யெழுத்தோடு மொழிக்கு முதலில் வரமாட்டா. (பிற உயிர்கள் வரும்.) (எ-டு) வளை, வாளி, வில், வீடு, வெள்ளி, வையம், வௌவு எனவரும்.

## ஞகரமெய் மூன்றுயிருடன் மொழி முதலாதல்

ஆ எ ஒ
எனும் மூவுயிர் ஞகாரத் துரிய. 64

ஆ எ ஒ என்று சொல்லப்பெறுகிற மூன்று உயிர்கள் ஞகார ஒற்றோடு மொழிக்கு முதலில் வரும். (எ-டு) ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று எனவரும்.

## யகரம் ஆகாரத்துடனே மொழி முதலாதல்

ஆவோ டல்லது யகர முதலாது. 65

ஆ என்னும் எழுத்தோடல்லாமல் பிற உயிர்களோடு யகரம் மொழிக்கு முதலாக மாட்டாது. (எ-டு) யானை, யாடு, யான், யாது, யாவர் என வரும்.

### எல்லா எழுத்தும் முதலாகும் இடம்

முதலா ஏன தம்பெயர் முதலும். 66

மொழிக்கு முதலாகாத பிறமெய்களும் அவ்வெழுத்துக் களின் பெயர் கூறுவதற்கு முதலாம். (எ-டு) ஙக்களைந்தார், டப்பெரிது, ணந்நன்று என வரும்.

### குற்றியலுகரம் மொழிக்கு முதலாமாறு

குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும். 67

குற்றியலுகரம், முறைப்பெயரிடத்து ஒற்றாய் நின்ற நகரத்தின் மேலாய நகரத்தோடு மொழிக்கு முதலாகும். (எ-டு) நுந்தை என வரும்.

### மொழிமுதற் குற்றியலுகரத்தின் இயல்பு

முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது
அப்பெயர் மருங்கின் நிலையிய லான. 68

முறைப்பெயரிடத்தே நிற்குங் குற்றியலுகரம், இதழ் குவித்துக் கூறுமிடத்து வரும் முற்றுகரத்தோடு, அவ்விடத்துக் குற்றுகரம் பொருள் வேறுபடுமாறுபோல, ஈண்டுப் பொருள் வேறுபட்டு நில்லாது.

## 7. மொழியிறுதி எழுத்துக்கள்

### மொழியீறும் உயிர்கள்

உயிர் ஔ எஞ்சிய இறுதி யாகும். 69

உயிர் எழுத்துக்களுள் ஔகாரம் ஒழிந்தவை மொழிக்கு ஈறும்; ஔகாரந்தான் ஈறாகாது. (எ-டு) ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ; ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஓஓ; கா, தீ, பூ, சே, கை, கோ; விள, கிளி, மழு என வரும்.

### ஔ ஈறும் இடம்

கவவோ டியையின் ஔவு மாகும். 70

முன் ஈறாகாதென்ற ஔகாரமும் ககர வகரத்தோடு பொருந்தியபொழுது ஈறாக வரும். (எ-டு) கௌ, வௌ என வரும்.

## எகரவுயிர் மெய்யோடு ஈருகாமை

ஏ என வருமுயிர் மெய்யீ ருகாது. 71

*எ என்று சொல்லப்பெறும் உயிர், தானே ஈருவதல்லாமல் மெய்யோடு பொருந்தி ஈருகமாட்டாது.*

## ஒகரம் நகரமெய் ஒன்றுடன் ஈருதல்

ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே. 72

*நகரமெய்யோ டல்லாத விடத்து, ஒகரமும் தானே ஈருவதல்லாமல் மெய்யோடு பொருந்தி ஈருகமாட்டாது.*

## ஏ ஓ ஞகரமெய்யுடன் ஈருகாமை

ஏ ஓ எனுமுயிர் ஞகாரத் தில்லை. 73

*ஏ ஓ என்று சொல்லப்பெறுகிற உயிர்கள், பிறமெய்களோடு நின்றும் ஈருவதல்லாமல், ஈருக மாட்டா.*

## உ ஊ நகர வகரங்களுடன் ஈருகாமை

உ ஊ காரம் நவவொடு நவிலா. 74

*உ ஊ காரங்கள் தாமே நின்றும் பிறமெய்களோடு [illegible]ன்றும் வழங்குவதன்றி, நகர வகரங்களோடு ஈருகா.*

## சகர வுகரம் இருமொழிக்கு ஈருதல்

உச்ச காரம் இருமொழிக்கு உரித்தே. 75

*உகரத்தோடு கூடிய சகரம் இருமொழிகளிடத்தேயே வரும். (எ-டு) உசு, முசு என வரும்.*

## பகர வுகரம் ஒருமொழிக்கே ஈருதல்

உப்ப காரம் [illegible] ன மொழிப
இருவயி னிலையும் பொருட்டா கும்மே. 76

*உகரத்தோடு கூடிய பகரம்(பு) ஒருமொ[illegible] பல மொழிகட்கு ஈருகாதென்று கூறுவர் புலவர். [illegible] பிறவினை என்னும் இரண்டிடத்தும் நிலைபெறும் பொருண்மை உடையது. (எ-டு) தபு என வரும். உப்பு, காப்பு போல்வன குற்றியலுகரம் என்பர்.*

ஈறுகா உயிர்மெய் இன்னவகையில் ஆம் எனல்

எஞ்சிய வெல்லாம் எஞ்சுதல் இலவே. 77

மொழிக்கு ஈறுகாது நின்ற உயிர்மெய்களெல்லாம், தம் பெயர் கூறும் வழி ஈறுதற்கு ஒழிபு இல. (எ-டு) ஙௌக்களாந்தார், கெக்களாந்தார், கொக்களாந்தார், ஞெக்களாந்தார், ஞொக்களாந்தார், நுக்களாந்தார், நூக்களாந்தார், வுக்களாந்தார், வூக்களாந்தார் என வரும்.

மொழியீறும் மெய்கள்

ஞணநம னயரல வழள வென்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி. 78

ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்று கூறப்பெறும் அப் பதினொன்றுமே மெய்யெழுத்துக்களில் மொழிக்கு ஈறுவன. (எ-டு) உரிஞ், மண், பொருந், திரும், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வேள் என வரும்.

நகரமெய் இருமொழிக்கு ஈறுதல்

உச்ச காரமொடு நகாரஞ் சிவணும். 79

உகரத்தோடு கூடிய சகாரத்தோடே நகாரம் பொருந்தி, அஃது இருமொழிக்கு ஈறுயவாறுபோலத், தானும் இருமொழிக்கே ஈறும். (எ-டு) பொருந், வெரிந் என வரும்.

ஞகரமெய் ஒருமொழிக்கே ஈறுதல்

உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே
அப்பொருள் இரட்டா திவணை யான. 80

பு என்னும் எழுத்தைப்போல் ஞகாரமும் ஒருமொழிக்கு ஈறுகும். இவ்விடத்து அதன் பொருள், பு என்பதைப்போல் பொருள் படாது. (எ-டு) உரிஞ் என வரும்.

வகரமெய் நான்கு மொழிக்கு ஈறுதல்

வகரக் கிளவி நான்மொழி ஈற்றது. 81

வகரமெய் நான்கு மொழிக்கு ஈறுக வரும். (எ-டு) அவ், இவ், உவ், தெவ் என வரும்.

## அஃறிணைக்கண் னகர ஈற்றுமொழிகள் ஒன்பது

மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி ஒன்பஃ தென்ப
புகரறக் கிளந்த அஃறிணை மேன. 82

குற்றமறச் சொல்லப்பட்ட அஃறிணையிடத்து, மகரவீற்றுத் தொடர்மொழியோடு மயங்காதென்று வரையறுக்கப்பட்ட னகர வீற்றுத் தொடர்மொழி, ஒன்பது என்று கூறுவர். (எ-டு) கலன், கலம், பிலன், பிலம் என்பன மயங்குவன. உகின், செகின், விழன், பயின், அழன், புழன், குயின், கடான், வயான் என்பன மயங்காதவை.

# 3. பிறப்பியல்

[எழுத்துக்களின் பிறப்பிலக்கணம் கூறுவது]

## 1. எழுத்துக்கள் பொதுவாகப் பிறத்தல்

உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்துஞ் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியும் காட்சி யான. 83

*தமிழெழுத்துக்களெல்லாம், ஒருவன் முறைப்பட ஆராய்ந்து தம்மைச் சொல்லுங் காலத்துக், கொப்பூழ் அடியாக மேலே தோன்றுகின்ற உதானன் என்னும் பெயரையுடைய காற்றுத் தோன்றித், தலையினிடத்தும் கண்டத்தினிடத்தும் நெஞ்சின் கண்ணும் நிலைபெற்றுப், பல்லும் இதழும் நாவும் மூக்கும் மேல் வாயும் உட்பட எட்டாகிய முறைமையை உடைய இடங்களில் ஓர் உறுப்போடு ஓர் உறுப்புத் தம்மிற் பொருந்தி, அமைதி பெறப், பிறப்பினது ஆக்கம் கூறுபாடுளதாக, ஆராயும் அறிவிடத்துத் திறப்படத் தெரிவனவாம்.*

## 2. உயிரெழுத்துக்கள் பிறத்தல்

*பொதுவாகப் பிறக்கும் வகை*

அவ்வழிப்
பன்னீ ருயிருந் தந்நிலை திரியா
மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும். 84

*அவ்வாறு பிறக்கும்போது பன்னிரண்டு உயிரெழுத்துக் களும் தத்தம் நிலையில் மாறுபடாவாய்க் கண்டத்தின்கண் தோன்றிய காற்றால் ஒலிக்கும்.*

### அ, ஆ பிறக்கும் முறை

அவற்றுள்,
அ ஆ ஆயிரண் டங்காந் தியலும். 85

மேற்கூறப்பட்ட உயிர் பன்னிரண்டனுள், அகர ஆகாரங்களாகிய அவ் விரண்டெழுத்துக்களும் வாயைத் திறந்து கூறப் பிறக்கும்.

### இகரம் முதலியன பிறக்கும் முறை

இ ஈ எ ஏ ஐயென இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய. 86

இ ஈ எ ஏ ஐ என்று சொல்லப்பெறுகிற ஐந்து எழுத்துக்களும், மேற்கூறிய அகர ஆகாரங்களைப்போல வாயைத் திறந்து சொல்லப் பிறக்கும். அவை பல்லினது நெருங்கிய இடத்தினை நாவினது அடியின் விளிம்பு சென்று சேருதலை உடையன.

### உகரம் முதலியன பிறக்குமாறு

உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும். 87

உ ஊ ஒ ஓ ஔ என்று சொல்லப்பெறுகின்ற ஐந்து எழுத்துக்களும் இதழ் குவித்துச் சொல்லப் பிறக்கும்.

### உயிர்க்கும் மெய்க்கும் ஒரு பொதுவிதி

தத்தம் திரிபே சிறிய வென்ப. 88

அவ்வெழுத்துக்களின் பிறப்பு வேறுபாடுகள் சிறிய அளவினவேயாகும் என்பர்.

## 3. மெய் எழுத்துக்கள் பிறக்கும் முறை

### க ங பிறக்குமாறு

ககார ஙகாரம் முதல்நா அண்ணம். 89

ககாரமும் ஙகாரமும் நாமுதலும் மேல்வாய் முதலும் உறப் பிறக்கும்.

### ச ஞ பிறக்கும் வகை

சகார ஞகாரம் இடைநா அண்ணம். 90

சகாரமும் ஞகாரமும் நாவின் இடையும் மேல்வாயின் இடையும் பொருந்தப் பிறக்கும்.

### ட ண பிறக்கும் முறை

டகார ணகாரம் நுனிநா அண்ணம். 91

*டகாரமும் ணகாரமும் நாவின் நுனியும் மேல்வாய் நுனியும் பொருந்தப் பிறக்கும்.*

### மேலானவற்றிற்கு ஓர் ஐயந் தீர்த்தது

அவ்வா றெழுத்தும் மூவகைப் பிறப்பின. 92

*மேற்கூறப்பெற்ற ஆறு எழுத்துக்களும் வரிசை முறையால் மூவகைப் பிறப்பினை உடையன.*

### த ந பிறக்குமாறு

அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற வொற்றத்
தாமினிது பிறக்கும் தகாரம் நகாரம். 93

*மேல் வாயைப் பொருந்திய பல்லினது நெருங்கிய விடத்தே நாவினது நுனிபரந்து வடிவைப் பொருந்தும்படி ஒற்றத், தகார நகாரங்கள்தாம் இனிதாகப் பிறக்கும்.*

### ற ன பிறக்குமாறு

அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும். 94

*மேல் நோக்கிச் சென்று நுனிநா மேல்வாயை ஒற்ற றகார னகாரமாகிய அவ்விரண்டு எழுத்துக்களும் பிறக்கும்.*

### ர ழ பிறக்குமாறு

நுனிநா அணரி அண்ணம் வருட
ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும். 95

*நுனி நா மேல்நோக்கிச் சென்று மேல்வாயைத் தடவ ரகார ழகாரமாகிய இரண்டு எழுத்துக்களும் பிறக்கும்.*

### ல ள பிறக்குமாறு

நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும். 96

*நாவினது விளிம்பு தடித்துப் பல்லினது நெருங்கிய இடத்தைப் பொருந்த, அவ்விடத்து முதல்நா அவ்வண்ணத்தை ஒற்ற*

*வகாரமும், அதனைத் தடவ ளகாரமுமாக அவ்விரண்டெழுத்துக்களும் பிறக்கும்.*

### ப ம பிறக்குமாறு

இதழியைந்து பிறக்கும் பகார மகாரம். 97

*கீழ் இதழும் மேல் இதழும் தம்மில் பொருந்தப், பகாரமும் மகாரமும் பிறக்கும்.*

### வகரம் பிறக்குமாறு

பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும். 98

*மேற் பல்லும் கீழ் இதழும் தம்மிற் பொருந்த, வகாரம் பிறக்கும்.*

### யகரம் பிறக்குமாறு

அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற்று அடைய யகாரம் பிறக்கும். 99

*மேல் வாயை நாவானது சேர்ந்தபொழுது, கண்டத்தினின்றும் எழும் காற்றினாலாகிய இசை, அம் மேல்வாயைச் சேர்ந்து பொருந்த, யகாரம் பிறக்கும்.*

### மெல்லினப் பிறப்புக்கு ஒரு சிறப்பு விதி

மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின வாயினும்
மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும். 100

*மெல்லெழுத்துக்கள் ஆறும் தத்தம் பிறப்பினது ஆக்கம் மேற்சொல்லப்பட்ட இடத்தே நிலைபெற்றனவாயினும், அவை, மூக்கின் கண்ணுள்ளதாகிய காற்றினது இசையால் பொருந்தத் தோன்றும்.*

## 4. சார்பெழுத்துக்கள் பிறக்குமாறு

சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்
தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியின் தம்மியல் பியலும். 101

*சிலவற்றைப் பொருந்திவரினல்லது தமக்குத் தாமே வரும் இயல்பு இலவென்று ஆராய்ந்து வெளிப்படுத்தப்பட்ட ஒழிந்த மூன்றும், தத்தமக்குச் சார்பாகிய எழுத்துக்களது பிறப்பிடத்தே*

பிறத்தலொடு பொருந்தி, அவ்விடத்தே தமக்குரிய இயல்பில் நடக்கும். ஒழிந்த மூன்றும் என்றது, குற்றியலுகரம், குற்றிய லிகரம், ஆய்தம் ஆகியவற்றை

## 5. எழுத்துக்களின் பிறப்புக்குப் புறனடை

எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரு வளியின்
பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்து
அகத்தெழு வளியிசை அரில்தப நாடி
அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே. 102

எல்லா எழுத்துக்களும் வெளிப்படுதற்கு எடுத்துச் சொல் லப்பட்ட இடத்தின்கண்ணே எழுகின்ற காற்றால் தாம் பிறக் குந் தொழிலுடைய ஆதலோடு, தம்மைச் சொல்லுமிடத்து மாறு படுந் தன்மையை உடைய உண்ணின்று எழுங் காற்றாகிய இசையை, மாறுபாடில்லாமல் ஆராய்ந்து, மாத்திரை யளவிற் கொள்ளுதல், அந்தணருடைய மறையகத்தது ஆம்.

அஃதிவண் நுவலா தெழுந்து புறத் திசைக்கும்
மெய்தெரி வளியிசை அளபு நுவன் றிசினே. 103

அதனை இந்நூலிடத்துச்சொல்லாது, உள்ளத்தினின் றெழுந்து புறத்துப் போந்து இசைக்கும் பொருண்மையினையுடைய, காற் றினலாகிய இசையது மாத்திரையினையே யான் கண்டுக் கூறினேன்.

# 4. புணரியல்

[எழுத்துக்களின் புணர்ச்சி இலக்கணம் கூறுவது]

## 1. மொழிகளின் முதலும் ஈறும்

### முதலிலும் இறுதியிலும் வரும் எழுத்துக்கள்

மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தின்
இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃது
அறுநான் கீற்றொடு நெறிநின் றியலும்
எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்
மெய்யே உயிரென்று ஆயீ ரியல. 104

*முப்பத்து மூன்று எழுத்தினுள், இருபத்திரண்டு எழுத்துக்களும், இருபத்து நான்கு ஈற்றொடு வழக்குநெறிக்கண் நின்று நடக்கும் மூவகை மொழிக்கும் ஈறும் முதலுமாவன, மெய்யும் உயிரும் ஆகிய அவ்விரண்டு இயல்பினையுடைய. (எ-டு) மரம், இலை, ஆல், விள என வரும்.*

### மொழியிறுதி மெய்கள் புள்ளிபெறுதல்

அவற்றுள்,
மெய்யீ றெல்லாம் புள்ளி யொடு நிலையல். 105

*மெய்யும் உயிரும் என்று கூறிய இரண்டனுள், மொழிக்கு ஈறுய மெய்யெல்லாம் புள்ளிபெற்று நிற்கும்; முதலாயினவைகள் எல்லாம் புள்ளியிழந்து உயிர் ஏறி நிற்கும்.(எ-டு)மரம் எனவரும்.*

### குற்றுகரம் ஒற்றெழுத் தொத்தல்

குற்றிய லுகரமும் அற்றென மொழிப. 106

*ஈற்றிற் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங் கொடுக்கும் அத் தன்மையினையுடையது என்று கூறுவர்.*

### உயிர்மெய்ஈறு உயிரீற்றது

உயிர்மெய் யீறும் உயிரீற் றியற்றே. 107

*உயிர்மெய் மொழியீற்றில் நின்றதுவும் உயிரீற்றின் இயல்பை யுடையது; இடையில் நின்றதுவும் உயிரீன் இயல்பை உடையது.*

### புணர்ச்சிக்கு உரிய இரு மொழிகளின் இயல்பு

உயிரிறு சொல்முன் உயிர்வரு வழியும்
உயிரிறு சொல்முன் மெய்வரு வழியும்
மெய்யிறு சொல்முன் உயிர்வரு வழியும்
மெய்யிறு சொல்முன் மெய்வரு வழியுமென்று
இவ்வென அறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவி யென்று
ஆயீ ரியல புணர்நிலைச் சுட்டே, 108

*உயிரீற்றுச் சொல்முன் உயிர்முதல்மொழி வரும் இடமும், உயிரீற்றுச் சொல்முன் மெய்ம்முதல்மொழி வரும் இடமும், மெய்யீற்றுச் சொல்முன் உயிர்முதல்மொழி வரும் இடமும், மெய்யீற்றுச் சொல்முன் மெய்ம்முதல்மொழி வரும் இடமும் இவையென அறியுமாறு ஆசிரியர் கூறுமிடத்து, அவை நிறுத்த சொல்லும், அதன் பொருண்மையைக் குறித்து வருஞ் சொல்லுமாகிய அவ்விரண்டு இயல்பையுடைய, புணரும் நிலைமைக்கண் என்பர். (எ-டு) ஆ, ஈ, ஆவலிது, ஆல் இலை, ஆல் வீழ்ந்தது என வரும்.*

## 2. புணர்தலின் இயல்பு

### மொழிபுணர் இயல்பு நான்கு

அவற்றுள்,
நிறுத்த சொல்லின் ஈறு கெழுத்தொடு
குறித்துவரு கிளவி முதலெழுத்து இயையப்
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
மூன்றே திரிபிடன் ஒன்றே இயல்பென
ஆங்கந் நான்கே மொழிபுணர் இயல்பே. 109

*நிலைமொழி வருமொழி எனப்பட்டவற்றுள், நிறுத்த சொல்லினது ஈறுகின்ற எழுத்தினோடு, அதனைக் குறித்து வருகின்ற சொல்லினது முதலெழுத்துப் பொருந்தப், பெயர்ச் சொல்லோடு பெயர்ச்சொல்லைப் புணர்க்குங் காலத்திலும், பெயர்ச் சொல்லோடு வினைச்சொல்லைப் புணர்க்குங் காலத்திலும், வினைச்சொல்லோடு பெயர்ச்சொல்லைப் புணர்க்குங் காலத்திலும், திரியும் இடம் மூன்றும் இயல்பு ஒன்றும் ஆகிய அந் நான்கே, மொழிகள் தம்மில் புணரும் இயல்பாகும். (எ-டு)*

சாத்தனகை, சாத்தன் உண்டான், வந்தான் சாத்தன், வந்தான் போனன் என வரும்.

## புணர்ச்சியில் மூவகையான திரிபுகள்

அவைதாம்
மெய்பிறி தாதல் மிகுதல் குன்றலென்று
இவ்வென மொழிப திரியு மாறே. 110

அத் திரிபுதான் மெய் பிறிதாதலும், மிகுதலும், குன்றலு மாகிய இவையெனச் சொல்லுவர். திரியும் நெறியான இம் மூன்றும் அல்லாதது இயல்பு என்று கொள்க. (எ-டு) பொற் குடம், யானைக்கோடு, மரவேர் என வரும்.

## அடைமொழிகளோடு புணர்தல்

நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்
அடையொடு தோன்றினும் புணர்நிலைக்கு உரிய. 111

நிலைமொழியாக நிறுத்தின சொல்லும், அதனைக் குறித்து வரு சொல்லும், தாமே வந்து புணர்வதல்லாமல், அவை யிரண்டினும் ஓரோர் சொல்லடை வந்து ஒன்றித்தோன்றினும் புணர்நிலைக்கு உரியவாம். (எ-டு) பதினுயிரத் தொன்று, ஆயிரத் தொருபது, பதினுயிரத் தொருபஃது என வரும்.

## மரூஉமொழிப் புணர்ச்சி

மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்
உரியவை உளவே புணர்நிலைச் சுட்டே. 112

இருவகையாகி மருவிய சொற்களும், செவிக்கினிதாகச் சொற்றொடரிடத்தில் நிறுத்த சொல்லும், குறித்துவரு கிளவியு மாய், ஒட்டிநிற்போல நின்று பொருளுணர்த்தாது, பிரிந்து, பின்னர்ச் சென்று ஒட்டிப் பொருளுணர்த்த, மடங்குதல் இயன்ற சொற்களும் புணரும் நிலைமைக் கருத்தின்கண் உரியன உள. (எ-டு) முன்றில், மீகண் என வரும்.

## இருவகைப் புணர்ச்சி

வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்
வேற்றுமை அல்வழிப் புணர்மொழி நிலையும்
எழுத்தே சாரியை ஆயிரு பண்பின்
ஒழுக்கல் வலிய புணருங் காலை. 113

வேற்றுமையது பொருண்மையினைக் குறித்த புணர்மொழி யது நிலைமையும், வேற்றுமையல்லாத அல்வழியிடத்துப் புணர்

மொழியது நிலைமையும், எழுத்து மிகுதலும், சாரியை மிகுதலுமாகிய அவ்விரண்டு இலக்கணத்தானும் நடாத்துதலைத் தமக்கு வலியாகவுடைய, அவை புணருங் காலத்து. (எ-டு) விளங்கோடு, மகவின் கை, வ்ளக் குறிது, பனையின் குறை எனவரும்.

## 3. உருபு புணர்ச்சி

### வேற்றுமை உருபுகள் நிற்குமிடம்

ஐ ஒடு கு இன் அது கண் ணென்னும்
அவ்வா றென்ப வேற்றுமை யுருபே. 114

*ஐ ஒடு கு இன் அது கண் என்று சொல்லப்பெறும் அவ்வாறினையும் வேற்றுமை உருபுகள் என்று கூறுவர்.*

### வலிமுதல் உருபு புணரும் நிலை

வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்கு
ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும், 115

*வல்லெழுத்து முதலாகவுடைய வேற்றுமை யுருபிற்குப் பொருந்தினவிடத்திலே, வல்லொற்றாயினும் மெல்லொற்றாயினும் இடையிலே மிகுதல் வேண்டும், (எ-டு) ஊர்க்கு, நீர்க்கு, ஊர்க்கண், தங்கண், எங்கண் என வரும.*

### அது உருபின் அகரம் கெடுதல்

ஆறன் உருபின் அகரக் கிளவி
ஈறு ககரமுனைக் கெடுதல் வேண்டும். 116

*ஆறும் வேற்றுமையாகிய அது என்னுஞ் சொல்லிடத்தில், அகரமாகிய எழுத்து மொழியீற்றில் உளதாகின்ற அகரத்தின் முன்னர்த், தான் கெடுதல் வேண்டும். (எ-டு) நமது, எமது, தனது, எனது, நினது என வரும்.*

### வேற்றுமை உருபுகள் நிற்குமிடம்

வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே. 117

*சொற்களோடு வேற்றுமை புணருமிடத்தில், பெயர்களின் பின்னிடத்தே வருவனவாம். (எ-டு) சாத்தனை, சாத்தனொடு என வரும்.*

### பெயர்களின் பெயர், முறை, தொகை

உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்று
ஆயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே. 118

*பொருளை ஒருவர் கருதுதற்குக் காரணமான நிலைமையை உடைய பெயர்களை உயர்திணைப் பெயர் அஃறிணைப் பெயர் என்று இரண்டாகக் கூறுவர். (எ-டு) ஆடூஉ, மகடூஉ; ஒன்று, பல என வரும்.*

## 4. சாரியைப் புணர்ச்சி

### சாரியை வரும் இடம்

அவற்றுவழி மருங்கிற் சாரியை வருமே. 119

*அவ் வுயர்திணை அஃறிணைப் பெயர்களின் பின்னே சாரியை வரும். (எ-டு) ஆடூஉவின் கை, மகடூஉவின் கை, பலவற்றுக் கோடு என வரும்.*

### பெயரும் முறையும் தொகையும்

அவைதாம்
இன்னே வற்றே அத்தே அம்மே
ஒன்னே ஆனே அக்கே இக்கே
அன்னென் கிளவி உளப்படப் பிறவும்
அன்ன என்ப சாரியை மொழியே. 120

*அவற்றுவழி மருங்கின் வருவனதாம் இன், வற்று, அத்து, அம், ஒன், ஆன், அக்கு, இக்கு, அன் என்ற சொற்கள் அடங்கப் பிறவும், அத் தன்மையனவாகக் கூறப்பட்டன சாரியை மொழிகளாம்.*

### இன் சாரியை கெடுதல்

அவற்றுள்
இன்னி னிகர மாவின் இறுதி
முன்னர்க் கெடுத லுரித்து மாகும். 121

*அச் சாரியைகளுள், இன் சாரியையின் இகரம், ஆகாரத்தை இறுதியாகக் கொண்ட சொற்களின் பின்னர்க் கெடுதலும் உண்டு. (எ-டு) ஆனை, ஆவினை; மானை, மாவினை என வரும்.*

### இன் சாரியை ஈறு திரியும் இடம்

அளவாகும் மொழிமுதல் நிலைஇய உயிர்மிசை
னஃகான் றஃகா [illegible]ய [illegible] 122

அளவைக் குறிக்கும் சொல்லின் முதலாயுள்ள உயிர் எழுத்தின் முன்னர் அமைந்த, இன்னின் னகரம் றஃகானாகும் தன்மையினை உடையது. (எ-டு) பதிற்றொன்று,பதிற்றேழு என வரும்.

## வற்று முதல்கெடுதல்

வஃகான் மெய்கெடச் சுட்டுமுத லைம்முன்
அஃகா னிற்ற லாகிய பண்பே. 123

சுட்டெழுத்தை முதலாகவும், ஐகாரத்தை ஈற்றெழுத்தாகவும் கொண்ட அவை, இவை, உவை என்ற சொற்களின் பின்னர் வருகின்ற வற்றுச் சாரியை, வகரங் கெட்டு, அகரம் நிற்கும் தன்மை உடையது. (எ-டு) அவையற்றை, இவையற்றை, உவையற்றை, அவையற்றுக் கோடு என வரும்.

## னகர ஈற்றுச் சாரியை திரிதல்

னஃகான் றஃகான் நான்கனுரு பிற்கு. 124

நான்காம் வேற்றுமையுருபிற்கு முன்னுள்ள னகரம் றகரமாகத் திரியும். (எ-டு) விளவிற்கு, கோஒற்கு, ஒருபாற்கு, அதற்கு என வரும்.

## பொருட்புணர்ச்சியில் ஆன்ஈறு திரிதல்

ஆனி னகரமு மதனோ ரற்றே
நாண்முன் வருஉம் வன்முதற் றொழிற்கே. 125

அவற்றுள் விண்மீனைக் குறிக்குஞ் சொல்லின் பின்னர், வல்லெழுத்தை முதலெழுத்தாகக் கொண்ட வினைக்கு முன்னுள்ள ஆன் சாரியையின் னகரமும், றகரமாகத் திரியும். (எ-டு) பரணியாற் கொண்டான் என வரும்.

## அத்து முதல்கெடுதல்

அத்தி னகரம் அகரமுனை யில்லை. 126

அவற்றுள் அகரவீற்றுச் சொல்லின் பின்னருள்ள அத்துச் சாரியையின் அகரம் கெடும். (எ-டு) மகத்துக்கை என வரும்.

## இக்கு முதல்கெடுதல்

இக்கி னிகரம் இகரமுனை யற்றே. 127

இகர வீற்றுச் சொல்லின் பின்னருள்ள இக்குச் சாரியையின் இகரமுங் கெடும். (எ-டு) ஆடிக்குக் கொண்டான் என வரும்.

ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும். 128

ஐகார வீற்றுச் சொல்லின் பின்னரும் இக்குச் சாரியையின் இகரங் கெடும். (எ-டு) சித்திரைக்குக் கொண்டான் என வரும்.

## அக்கு அகரம்நிற்க ஏனைய கெடுதல்

எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கின் இறுதிமெய்ம் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகரம் முற்றத் தோன்றாது. 129

எத்தகைய பெயர்களின் முன்னரும், வல்லெழுத்தை முதலாகக் கொண்ட வருமொழி வருமிடத்து, இடையில் வரும் அக்குச் சாரியையின் இறுதியில் உள்ள ககரம், தன் முன்னருள்ள ககர வொற்றுடன் கெடும்; குற்றியலுகரமும் இறுதியில் தோன்றாது. (எ-டு) குன்றக்கூகை, மன்றப்பெண்ணை, ஈமக்குடம், அரசக்கன்னி, தமிழக்கன்னி என வரும்.

## அம் ஈறுதிரிதல்

அம்மி னிறுதி கசதக் காலைத்
தன்மெய் திரிந்து ஙஞந வாகும். 130

க ச த இவற்றை முதலாகக் கொண்ட வருமொழி வருமிடத்து, அம் சாரியையின் இறுதி மகரம், முறையே ஙஞந ஆகத் திரியும். (எ-டு) புளியங்கோடு, புளியஞ்செதிள், புளியந்தோல் என வரும்.

## அம் ஈறு கெடுதல்

மென்மையும் இடைமையும் வரூஉங் காலை
இன்மை வேண்டும் என்மனார் புலவர். 131

மெல்லெழுத்து இடையெழுத்து இவற்றை முதலாகக் கொண்ட வருமொழி வருமிடத்து; அம் சாரியையின் மகரங் கெடுதல் வேண்டும் எனபர் புலவர். (எ-டு) புளியஞெரி, புளியநுனி, புளியமுரி, புளியயாழ், புளியவட்டு என வரும்.

## இன் சாரியை முழுவதும் கெடுதல்

இன்னென வரூஉம் வேற்றுமை உருபிற்கு
இன்னென் சாரியை இன்மை வேண்டும். 132

இன் என்ற வேற்றுமையுருபின் முன்னர், 'இன்' என்ற சாரியை வராது. (எ-டு) விளவின், பலாவின் என வரும்.

### புணர்மொழிகளில் சாரியை வருதல்

பெயரும் தொழிலும் பிரிந்தொருங்கு இசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்
ஒட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்
சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்காது
இடைநின் றியலுஞ் சாரியை இயற்கை
உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும். 133

*பெயரும் வினையும் பிரிந்திசைத்து, இடையில் வேற்றுமை உருபு ஏற்றும் ஏற்காமலும் சேர்ந்துவரும் வழக்கோடும், பெயரும் தொழிற்பெயரும் ஒருசொல்போலாகி இடையில் வேற்றுமையுருபு ஏற்றும் ஏலாதும் சேர்ந்துவரும் வழக்கோடும் பொருந்தி, சொற்களைப் பகுதியும் வேற்றுமையுருபுமாகப் பிரித்துக் கூறுமிடத்து, அவற்றின் பின்னர்த் தோன்றாது, இடையில் தோன்றுஞ் சாரியையின் தன்மை, ஒடு உருபு வரும் போது, இருந்தும் இல்லாதும் இருக்கும். (எ-டு) விளவினைக் குறைத்தான், விளவினைக் குறைத்தவன்; நிலாத்துக்கொண்டான், நிலாத்துக் கொண்டவன் என வரும்.*

### அத்து வற்று வருமிடத்து நிகழும் விகாரம்

அத்தே வற்றே ஆயிரு மொழிமேல்
ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே
அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே. 134

*அத்து, வற்று எனுமிரண்டு இடைச்சொற்களின் முன்னருள்ள மெய், தன் வடிவங் கெடுதல் தெளியப்பட்டது. அவ் விடைச்சொற்களின் பின்னர் வரும் வல்லெழுத்து மிகும். (எ-டு) கலத்துக்குறை, அவற்றுக்கோடு என வரும்.*

## 6. எழுத்துச் சாரியை

### எழுத்துச் சாரியைகளின் பெயர்

காரமுங் கரமுங் கானொடு சிவணி
நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை. 135

*நேராகத் தோன்றும் எழுத்தினுடைய சாரியைகள் காரம், கரம் இவ்விரண்டுங் கானொடு பொருந்தி மூன்றும்.*

### நெட்டெழுத்துச் சாரியை

அவற்றுள்
கரமும் கானும் நெட்டெழுத் திலவே. 136

*அவ் வெழுத்துச் சாரியைகளுள் கரம், கான் இவ் விரண்டனையும் நெட்டெழுத்துக்கள் பெறமாட்டா. (எ-டு) ஆகாரம் எனக் காரம்மட்டுமே வரும்.*

### குற்றெழுத்துக்குச் சாரியை

வரன்முறை மூன்றுங் குற்றெழுத்து உடைய. 137

*வருதல் முறையைக் கொண்ட மூன்றனையும், குற்றெழுத் துக்கள் உடைய. (எ-டு) அகரம், அகாரம், என வரும்.*

### ஐ ஔவின் சாரியை

ஐகார ஔகாரம் கானொடுந் தோன்றும். 138

*ஐ ஔ இரண்டும் கான் சாரியையோடும் தோன்றும். (எ-டு) ஐகான், ஔகான் என வரும்.*

## 6. உயிரெழுத்தின் புணர்ச்சி இயல்புகள்

புள்ளி யீற்றுமுன் உயிர்தனித் தியலாது
மெய்யொடுஞ் சிவணும் அவ்வியல் கெடுத்தே. 139

*நிலைமொழி யின் ஈற்றில், மெய் குற்றியலுகரம் இவ்விரு புள்ளியுள் ஒன்று நிற்க, வருமொழி முதலில் உயிர்வரின், அப் புள்ளியின் தனமையைக் கெடுத்து, அவ்வுயிர், அம் மெய்யுடனும் அக் குற்றியலுகரப் பற்றுக்கோடாகிய மெய்யுடனும் பொருந்தும். (எ-டு) ஆல்+அடை—ஆலடை என வரும்.*

### உயிர் பிரிந்த மெய்யின் இயல்பு

மெய்யுயிர் நீங்கின் தன்னுரு வாகும். 140

*உயிர் நீங்கின், மெய், தன் வடிவாய் ஆகும் (எ-டு) பாலடை=பால்+ஆடை என வரும்.*

### உடம்படுமெய் தோன்றும் இடம்

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார். 141

*மொழிகள் எல்லாவற்றிற்கும் வருமொழி முதல் உயிரா யிருக்க, உடம்படுமெய்யின் வடிவு கொள்ளலை நீக்கமாட்டார்கள்.*

(எ-டு) புளியங்கோடு, எருவங்குழி, விளவத்துக் கொட்கும் என வரும்.

## 7. புணர்ச்சியில் பொருள் வேறுபடுமிடம்

### ஒலி வேற்றுமையாற் பொருள் வேறுபடல்

நா ரன்ன பொருள்தெரி புணர்ச்சி
ில் திரிதல் நிலை இய பண்பே. 142

எழுத்துக்களில், ஒரு தன்மையவாய்ப் பொருள் தேர்ந்து அறியப்படும் புணர்ச்சியுடைய மொழிகள், ஓசை வேற்றுமையால் வேறுபடும் தன்மையை உடையன. (எ-டு) செம்பொன், பதின் றொடி, குன்றேருமா என வரும்.

அவைதாம்
முன்னப் பொருள புணர்ச்சி வாயின்
இன்ன என்னும் எழுத்துக்கடன் இலவே. 143

முற் கூறப்பட்டவை தாம் புணர்ச்சியின்கண் இவ்வாறெனை எழுத்துமுறை இல்லாதனவாய்க் குறிப்பான் உணரப்படும் பொருளுடையன.

# 5. தொகை மரபு

[தொகுத்துக் கூறுவதற்குரிய புணர்ச்சி இலக்கணங்கள்]

## 1. உயிரீறு மெய்யீறுகளின் பொதுப் புணர்ச்சி

### மெல்லினம் தோன்றுமிடம்

கசதப முதலிய மொழிமேல் தோன்றும்
மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்
ஙஞநம வென்னும் ஒற்றா கும்மே
அன்ன மரபின் மொழிவயி னான. 144

*க், ச், த், ப் இவற்றை முதலெழுத்தாக உடைய வருமொழியின் முன்னர் வரும் மெல்லெழுத்து, முறையே ங், ஞ், ந், ம் இவையே யாகும், அவ்வாறுள்ள மரபைக் கொண்ட மொழிகள் உள. விளங்கோடு, விளஞ்செதிள், விளந்தோல், விளம்பூ என வரும்.*

### வருமொழி இயல்பாதல்

ஞநம யவவெனும் முதலாகு மொழியும்
உயிர்முத லாகிய மொழியும் உளப்பட
அன்றி யனைத்தும் எல்லா வழியும்
நின்ற சொன்முன் இயல்பா கும்மே. 145

*நிலைமொழியின் பின்னர் ஞ், ந், ம், ய், வ் உயிர்கள் இவற்றை முதலாகக்கொண்ட வருமொழிகள், வேற்றுமை அல்வழி ஆகிய எல்லா வழியும் இயல்பாகும். (எ-டு) விள, தாழ் என நிறுத்தி ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது, அடைந்தது, ஆடிற்று, இருந்தது, ஈண்டிற்று, உடைந்தது, ஊறிற்று, எழுந்தது, ஏறிற்று, ஐது, ஒடிந்தது, ஓடிற்று, ஔவியத்தது, நன்கையது எனவும்; ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை, அடைவு, ஆட்டம், இடிப்பு, ஈட்டம், உடைப்பு, ஊற்றம், எழு, ஏணி, ஐயம், ஒடுக்கம், ஓக்கம், ஔவியம், நன்கை எனவும் ஒட்டிக் கொள்க.*

அவற்றுள்
மெல்லெழுத் தியற்கை யுறழினும வரையார்
சொல்லிய தொடர்மொழி யிறுதி யான. 146

*மேற்கூறப்பட்ட வருமொழி முதலாகிய ஞ், ந், ம், ய், வ், உயிர் இவற்றுள் ஞ், ந், ம் என்னும் மெல்லெழுத்து. சொல்லப் பட்ட தொடர்மொழி ஈற்றின்கண் உறழ்ந்துவரினும் நீக்க மாட்டார்கள். (எ-டு) கதிர்ஞெரி, கதிர்ஞ்ஞெரி; கதிர் நுனி, கதிர்ந்நுனி என வரும்.*

## ணன முன் யாவும் ஞாவும்

ண ன வென் புள்ளிமுன் யா வும்ஞாவும்
வினையோ ரனைய எனமனூர் புலவர். 147

*'ண், ன் இவற்றின் பின்னர், வருமொழி முதலாகிய யா, ஞா இவ்விரண்டும் வினைக்கண் ஒரு தன்மையாக வரும்' என்று கூறுவர் புலவர். (எ-டு) மண்யாத்த, பொன்யாத்த என வரும்.*

## ண ன ஈறு அல்வழியில் இயல்பாதல்

மொழிமுத லாகும் எல்லா எழுத்தும்
வருவழி நின்ற ஆயிரு புள்ளியும்
வேற்றுமை அல்வழித் திரிபிடன் இலவே. 148

*மொழிமுதற்கண் வரும் எல்லா வெழுத்தும் வருமிடத்து, நிலைமொழி யீற்றின் கண்ணுள்ள ண், ன் என்ற அவ்விருமெய்யும் அல்வழிப் புணர்ச்சியில் திரிபிடத்தை உடையனவல்ல. (எ-டு) மண்கடிது, மண்சிறிது, மண்தீது, மண்பெரிது, பொன்கடிது, பொன்சிறிது, பொன்தீது, பொன் பெரிது என வரும்.*

## அவை வேற்றுமையிலும் இயல்பாதல்

வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி
மேற்கூ றியற்கை யாவயி னான. 149

*அவ்விடத்தில், அவ் விரண்டு மெய்யும் நிலைமொழி யீறாய் வருமிடத்து, வேற்றுமைப் புணர்ச்சிக் கண்ணும் வருமொழி முதல் வல்லெழுத்தல்லாதன வருமிடத்து, மேற் கூறப்பட்ட இயல்பே புணர்ச்சியாகும். (எ-டு) மண் நீட்சி, பொன் நீட்சி என வரும்.*

## ல ன முன் த ந க்கள் திரிதல்

லனவென வருஉம் புள்ளி முன்னர்த்
த ந எனவரிற் றனவா குமமே. 150

*ல், ன் இவற்றின் பின்னர் த், ந் இவை வரின், த், ந், இவை முறையே ற் ன் ஆகும். (எ-டு) கஃறீது, கன்னன்று, பொன்றீது, பொன்னன்று என வரும்.*

### ணளமுன் தநமெய் டண வாதல்

ணள வென் புள்ளிமுன் டணவெனத் தோன்றும். 151

ண் ள் இவற்றின் பின்னர், த் ந் இவை வரின், அவை முறையே ட் ண் ஆகும். (எ-டு) மண்டீது, மண்ணன்று, முஃடீது, மூண்ணன்று என வரும்.

## 2. உயிரீறு மெய்யீறுகளின் சிறப்புப் புணர்ச்சி

### முன்னிலை வினைச்சொல் முடிதல்

உயிரீறாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளி யிறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பா குநவும் உறழா குநவு மென்று
ஆயீ ரியல வல்லெழுத்து வரினே. 152

உயிர், மெய் இவைகளை ஈற்றிற்கொண்ட முன்னிலைச் சொற்கள் நிலைமொழியாயிருக்க, வருமொழி முதலில் வல்லெழுத்து வரின், அவை இயல்பு உறழ்ச்சி என்னும் இரண்டு தன்மைகளை உடையன. (எ-டு) எறி கொற்றா, கொணா கொற்றா, நடகொற்றா நடக்கொற்றா, என வரும்

### அதற்குச் சிறப்பு விதி

ஔவென வருஉம் உயிரிறு சொல்லும்
ஞநமவ வென்னும் புள்ளி யிறுதியும்
குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட
முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே. 153

ஔகாரவீற்றுச் சொல்லும், ஞ், ந், ம், வ் இப் புள்ளி யீற்றுச் சொல்லும், குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொல்லும் முன்னிலை மொழிக்கண் முன்போலத் தோன்றா. (எ-டு) கௌவு கொற்றா, கௌவுக் கொற்றா; உரிஞு கொற்றா உரிஞுக் கொற்றா; பொருநு கொற்றா, பொருநுக் கொற்றா; திருமு கொற்றா, திருமுக் கொற்றா; தெவ்வு கொற்றா, தெவ்வுக் கொற்றா, கூடு கொற்றா, கூடுக் கொற்றா என வரும்.

### உயர்திணைப் பெயர் புணருமாறு

உயிரீ றாகிய உயர்திணைப் பெயரும்
புள்ளியிறுதி உயர்திணைப் பெயரும்
எல்லா வழியும் இயல்பென மொழிப, 154

உயிரையும் புள்ளியையும் இறுதியிற் கொண்ட உயர்திணைப் பெயர் நிலைமொழியாயிருக்க, வேற்றுமை அல்வழி இரண்டன் கண்ணும் இயல்பு புணர்ச்சியாய் முடியும் என்பர் புலவர். (எ-டு) நம்பிகை, நம்பிபெரியன், அவன் பெருமை, அவன் பெரியன் என வரும்.

## அதற்குச் சிறப்பு விதி

அவற்றுள்
இகர இறுபெயர் திரிபிட னுடைத்தே. 155

அவ் வுயர்திணைப் பெயர்களுள் இகர வீற்றுப் பெயர் திரியும் இடமும் உள்ளது. (எ-டு) நம்பிப் பூ, நம்பிப் பேறு என வரும்.

## விரவுப் பெயருள் இயல்பு

அஃறிணை விரவுப்பெயர் இயல்பு மாருளவே. 156

எல்லா வழியினும் அஃறிணை விரவுப்பெயர் இயல்பாயிருத்தலும் உண்டு. (எ-டு) சாத்தன் குறிது, சாத்தன் கை என வரும்.

## மூன்றும் வேற்றுமை முடிபு

புள்ளி யிறுதியும் உயிரிறு கிளவியும்
வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையால்
தம்மி னாகிய தொழிற்சொல் முன்வரின்
மெய்ம்மை யாகலும் உறழத் தோன்றலும்
அம்முறை இரண்டும் உரியவை உளவே
வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். 157

வல்லெழுத்து மிகுதி கூறப்பட்ட முறையிலுள்ள புள்ளி உயிர் இவற்றை இறுதியிற் கொண்ட சொற்கள் நிலைமொழியாகவும், அவற்றான் ஆகிய தொழிலைக் குறிக்கும் வினை வருமொழியாகவும் வரின், வேற்றுமை வழியில் இயல்பு, உறழ்ச்சி இவ்விரண்டின் கண்ணும் உரியவை உள; அவற்றைப் போற்றல் வேண்டும். (எ-டு) நாய் கோட்பட்டான், புலி கோட்பட்டான், புலி சாரப்பட்டான், புலி தீண்டப்பட்டான், புலி பாயப்பட்டான்; இவை இயல்பு. சூர்கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான்; வளிகோட் பட்டான், வளிக்கோட் பட்டான்; இவை உறழ்ச்சி.

## இரண்டாம் வேற்றுமைத் திரிபு

மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்
வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலும்

இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்
உயிர்மிக வருவழி உயிர்கெட வருதலும்
சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்
சாரியை இயற்கை உறழத் தோன்றலும்
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ்வியல் நிலையலும்
மெய்பிறி தாகிடத்து இயற்கை யாதலும்
அன்ன பிறவுந் தன்னியன் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கும்
ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப. 158

*மெல்லெழுத்து, வல்லெழுத்து இவை மிகவேண்டியவழி மாறுபட்டு, வல்லெழுத்து மெல்லெழுத்து இவை மிகுதலும்; இயல்பிடத்து மிகுதல் வருதலும், உயிர் மிகுதலிடத்து உயிர் கெடுதலும், சாரியை வரவேண்டுமிடத்தில் வாராதிருத்தலும், சாரியை உருபு இரண்டுமிருத்தலும், சாரியையின் உறழ்ச்சியும், உயர்திணை அஃறிணை விரவுப்பெயர் இரண்டிடத்தும் ஐகார வேற்றுமை ஒழியாதிருத்தலும், மெய்பிறிதாதற்கு மாறாக இயல்பாதலும், அவ்வாறுள்ளதன் பிறவும் தன்மையை உண்மையாகக் கூறப்பட்ட பொருளினின்றும் வேறுபட்டு ஒலிக்கும் இரண்டாம் வேற்றுமைத் திரிபு, அதன் பின்னர் வினைவரின் ஆகுமென்று புலவர் கூறுவர். (எ-டு) 'விளக் குறைத்தான்' என்பது மெல்லெழுத்து மிகுவழி வல்லெழுத்து மிக்கது. 'மரங்குறைத்தான்' என்பது வல்லெழுத்து மிகுவழி மெல்லெழுத்து மிக்கது. 'தாய்க்கொலை' என்பது இயல்பாமிடத்து மிக்கது. 'பலாக்குறைத்தான்' என்பது உயிர் மிக வருவழி உயிர் கெட்டது. 'வண்டு கொணர்ந்தான்' என்பது சாரியை உள்வழிச் சாரியை கெட்டது. 'வண்டினைக் கொணர்ந் தான்' என்பது சாரியை உள்வழித் தன்னுருபு நிலையிற்று. 'புளி குறைத்தான்', 'புளிக் குறைத்தான்', 'பூல் குறைத்தான்' 'பூற்குறைத்தான்' என இவை, சாரியை இயற்கை உறழத் தோன்றின.*

## *இகர ஐகார ஈற்று அல்வழி முடிபு*

வேற்றுமை அல்வழி இஐ என்னும்
ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைஇய
அவைதாம்
இயல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவும்
உறழா குநவும் என்மனார் புலவர். 159

*அல்வழிப் புணர்ச்சியின்கண், இகரவீற்றுப் பெயரும் ஐகார வீற்றுப்பெயரும் நிலைமொழியா யிருக்கும்போது, இயல்பு*

வல்லெழுத்து மிகுதி, உறழ்ச்சி என்னும் மூவகை நிலையை உடையன, என்பர் புலவர். (எ-டு) பருத்தி குறிது, அரை சிறிது; இவை இயல்பு. அலிக்கொற்றன், புலிக்கொற்றன்; இவை மிகுதி. கிளி சிறிது; கிளிச் சிறிது; திணை சிறிது, திணைச்சிறிது இவை உறழ்ச்சி.

## இ ஐ ஈற்று ஏழாம் வேற்றுமை முடிபு

சுட்டுமுத லாகிய இகர இறுதியும்
எகரமுதல் வினாவின் இகர இறுதியும்
சுட்டுச்சினை நீடிய ஐயென் இறுதியும்
யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
வல்லெழுத்து மிகுநவும் உறழாகுநவும்
சொல்லிய மருங்கின் உளவென மொழிப. 160

முற்கூறப்பட்ட சுட்டெழுத்தை முதலாகவும் இகரத்தை இறுதியாகவுங் கொண்ட சொற்களும், எகரத்தை முதலாகவும் இகரத்தை இறுதியாகவுங் கொண்ட வினாச் சொற்களும், சுட்டெழுத்தின் நெடிலை முதலாகவும் ஐகாரத்தை இறுதியாகவுங் கொண்ட வினாச் சொற்களும், வல்லெழுத்து மிகுதியையும் உறழ்ச்சியையுங் கொள்வன என்று புலவர் கூறுவர். (எ-டு) அதோளிக்கொண்டான், இதோளிக்கொண்டான், உதோளிக் கொண்டான், எதோளிக்கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் எனவும்; ஆண்டைக்கொண்டான, ஈண்டைக் கொண்டான், ஊண்டைக்கொண்டான், யாண்டைக்கொண்டான் எனவும் வரும்.

## நெடில்முன் குறில்முன் ஒற்றுக்கள்

நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்
குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டலும்
அறியத் தோன்றிய நெறியிய லென்ப. 161

நிலைமொழியில், நெட்டெழுத்தின் பின்னரும் ஈற்றிலுமுள்ள ஒற்றாகிய மெய் கெடுதலும், குற்றெழுத்தின் பின்னர் ஈற்றுமெய் இரட்டலும், அறியுமாறு தோன்றும் தன்மையன என்று கூறுவர் புலவர். (எ-டு) கோறீது, கோனன்று, மண்ணகல், பொன்னகல் என வரும்.

## குறில்முன் ஒற்று இரட்டாத இடம்

ஆறன் உருபினும் நான்கன் உருபினும்
கூறிய குற்றொற்று இரட்ட லில்லை
ஈறுகு புள்ளி அகரமொடு நிலையும்
நெடுமுதல் குறுகும் மொழிமுன் னன. 162

நெடுமுதல் குறுகுமொழியின் பின்னர், ஆறும் வேற்றுமை நான்காம் வேற்றுமை இவற்றின் உருபுகள் நிற்க, முற் சூத்திரத்திற் கூறப்பட்ட குறியதன் பின்னருள்ள ஒற்று இரட்டாது; ஒற்றின் பின்னர் அகரம் வரும். (எ-டு) தமது, தமக்கு; நமது, நமக்கு என வரும்.

## நும் என் மொழிக்கும் அவ் விதி

நும்மென் இறுதியும் அந்நிலை திரியாது. 163

ஆறும் வேற்றுமை நான்காம் வேற்றுமை உருபுகளின் முன்னர், நும் என்ற சொல்லின் இறுதியும் அந்நிலையில் இருந்து மாறுபடாது. (எ-டு) நுமக்கு, நுமது என வரும்.

## புள்ளியிறுதி உகரம் பெறுத இடம்

உகரமொடு புணரும் புள்ளி யிறுதி
யகரமும் உயிரும் வருவழி இயற்கை. 164

உகரப் பேற்றினை யடையும் புள்ளியிறுதி, தன் பின்னர் வருமொழி முதல் யகரமாயும் உயிராயும் இருக்க இயல்பாகும். (எ-டு) உரிஞ்யாது, உரிஞ் அனந்தா, பொருந்யாறு, பொருந் அனந்தா என வரும்.

## அளபு நிறை எண்ணுப் பெயர்கள் தம்மிற் புணருமாறு

உயிரும் புள்ளியும் இறுதி யாகி
அளவும் நிறையும் எண்ணுஞ் சுட்டி
உளவெனப் பட்ட எல்லாச் சொல்லும்
தத்தங் கிளவி தம்மகப் பட்ட
முத்தை வருஉங் காலந் தோன்றின்
ஒத்த தென்ப ஏயென் சாரியை. 165

அளவு, நிறை, எண் இவற்றைக் குறிப்பனவும், உயிர் புள்ளி இவற்றை ஈற்றிற்கொண்டனவுமான நிலைமொழிகளுக்குத் தத்தம் இனத்தனவாயும் தம்மிற் குறைந்தனவாயுமுள்ள சொற்கள் வருமொழியாய் வருமிடத்து, ஏ என்னுஞ் சாரியை ஒத்தது என்று கூறுவர் புலவர். (எ-டு) உழக்கே யாழாக்கு, கலனே பதக்கு, தொடியே கஃசு, கொள்ளே ஐயவி, காணியே முந்திரிகை, காலே காணி என வரும்.

## 'அரை' என்பதனோடு புணர்தல்

அரையென வருஉம் பால்வரை கிளவிக்குப்
புரைவ தன்றால் சாரியை இயற்கை. 166

*பகுதிச் சொல்லாகிய அரையென்னும் வருமொழிக்குச் சாரியையின் தன்மை பொருந்தாது. (எ-டு) உழக்கரை, தொடியரை, ஒன்றரை என வரும்.*

## குறை என்பதனோடு புணர்தல்

குறையென் கிளவி முன்வரு காலை
நிறையத் தோன்றும் வேற்றுமை யியற்கை. 167

*அளவு, நிறை, எண் இவற்றைச் சுட்டும் பெயர்களின் பின், குறை என்றது வருமொழியா யிருக்கும்போது, வேற்றுமை இயற்கை மிகுதியாகத் தோன்றும். (எ-டு) உரிக்குறை, கலக்குறை, தொடிக்குறை, கொட்குறை, காணிக்குறை, காற்குறை என வரும்.*

## குற்றுகர மொழிகட்குச் சாரியை

குற்றிய லுகரக் கின்னே சாரியை, 168

*குற்றியலுகரத்தை இறுதியிற் கொண்ட அளவு, நிறை, எண் இவற்றைக் குறிக்கும் பெயருக்குப்பின், குறை யென்னுஞ் சொல் வருமாயின் இன்னே சாரியை ஆகும். (எ-டு) உழக்கின் குறை, கழஞ்சின் குறை, ஒன்றின் குறை என வரும்.*

## 'கலம்' அத்துச் சாரியை பெறுதல்

அத்திடை வருஉங் கலமென் அளவே. 169

*கலம் என்னும் அளவுப் பெயரின்கண், குறை என்பது வருமொழியாக வருமிடத்து, இடையில் அத்து வரும் (எ-டு) கலத்துக் குறை என வரும்*

## பனையும் காவும் இன் சாரியை பெறுதல்

பனையென் அளவுங் காவென் நிறையும்
நினையுங் காலை இன்னொடு சிவணும். 170

*குறை என்கிற சொல் முன்னால் வரும்பொழுது, பனையென்னும் அளவுப் பெயரும், கா என்னும் நிறைப்பெயரும், ஆராயுங் காலத்து இன் சாரியையைப் பெறும். (எ-டு) பனையின் குறை, காவின் குறை என வரும்.*

### அளவு நிறைப் பெயர்களின் மொழி முதலாம் எழுத்துக்கள்

அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுத லாகி
உளவெனப் பட்ட ஒன்பதிற் றெழுத்தே
அவைதாம்
கச தப என்று நமவ என்று
அகர உகரமோ டவையென மொழிப. 171

*அளவுப்பெயர், நிறைப்பெயர் இவ்விரண்டற்கும் முதலாய் உளவெனப்பட்டன ஒன்பதெழுத்துக்கள். அவைதாம் க், ச், த், ப், ந், ம், வ், அ, உ எனக் கூறுவர் புலவர். (எ-டு) கலம், சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டில், அகல், உழக்கு; கழஞ்சி, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை என வரும்.*

## 3. புறனடை

### இவ்வியலுக்குப் புறனடை

ஈறியல் மருங்கின் இவையிவற் றியல்பெனக்
கூறிய கிளவிப் பல்லா றெல்லாம்
மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி
ஒத்தவை உரிய புணர்மொழி நிலையே. 172

*நிலைமொழி ஈற்றின்கண் இவைஇவை இயல்பெனக் கூறப்பட்ட சொற்களின் பலவழிகளெல்லாம், உண்மையாயுள்ள வழக்கொடு பொருந்திப் புணர்ச்சியின்கண் ஒத்தவை உரிய.*

### யாவர் யாது என்னுஞ் சொற்களின் மரூஉ

பலரறி சொன்முன் யாவ ரென்னும்
பெயரிடை வகரங் கெடுதலும் ஏனை
ஒன்றறி சொன்முன் யாதென் வினவிடை
ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்
மருவின் பாத்தியின் திரியுமன பயின்றே. 173

*பலர்பாற் பெயரின் பின்னர் யாவரென்னும் பெயரிடையில் வகரங்கெடுதலும், ஒன்றன்பாற் பெயரின் பின்னர் யாது என்னுஞ் சொல்லினிடையில் உயிரோடு பொருந்திய வகரம் வருதலும், மரூஉக்களது முடிபின்கண் பயின்று திரியும். (எ-டு) அவர் யார், அது யாவது என வரும்.*

# 6. உருபியல்

*[உருபெழுத்துக்களின் புணர்ச்சி இலக்கணம் கூறுவது]*

## 1. உயிரீறுகள்

### *அகரஈறு முதலியவற்றில் வேற்றுமை யுருபிற்கு இன் சாரியை*

அஆ உஊ ஏஔ என்னும்
அப்பா லாறன் நிலைமொழி முன்னர்
வேற்றுமை உருபிற் கின்னே சாரியை. 174

*அ, ஆ, உ, ஊ, ஏ, ஔ என்னும் அப் பகுதியவாய ஆறினையும் ஈற்றிற்கொண்ட நிலைமொழியின் பின்னர், வேற்றுமையுருபு வரின், இடையில் வருஞ் சாரியை இன்னே யாகும். (எ-டு) விளவினை விளவினோடு, விளவிற்கு, விளவினது, விள வின் கண்; பலாவினை, பலாவினொடு; கடுவினை, கடுவினொடு, கழூஉவினை, கழூஉவினொடு; சேவினை, சேவினொடு; வௌவினை, வௌவினொடு என வரும்.*

### *அகர ஈற்றுப் பன்மைப் பெயர்கட்கு வற்றுச் சாரியை*

பல்லவை நுதலிய அகர இறுபெயர்
வற்றொடு சிவணல் எச்ச மின்றே. 175

*பன்மைப் பொருளைக் குறிப்பதும், அகரத்தை இறுதியிற் கொண்டதுமான, பெயர் வேற்றுமை உருபின் முன்னர் வற்றுச் சாரியை பொருந்தும். (எ-டு) பல்லவற்றை, பல்லவற் றொடு; உள்ளவற்றை, உள்ளவற்றொடு; இல்லவற்றை, இல்லவற் றொடு; சில்லவற்றை, சில்லவற்றொடு என வரும்*

### *யா என்னும் வினாவுக்கும் வற்றுச் சாரியை*

யாவென் வினாவும் ஆயியல் திரியாது 176

*யா என்ற வினாப்பெயரும் வற்றுச் சாரியை பெறுதலில் நின்றும் மாறுபடாது (எ-டு) யாவற்றை; யாவற்றொடு என வரும்.*

### உகர வீற்றுச் சுட்டுக்கு அன் சாரியை

சுட்டுமுத லுகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய்யொழித்து உகரங் கெடுமே. 177

சுட்டை முதலாகவுடைய உகரவீற்றுச் சொல் அன் சாரியை யோடு பொருந்த, அவ் வுகரம் ஒட்டிய மெய்யை நீக்கித் தான் கெடும். (எ-டு) அதனை, அதனொடு; இதனை, இதனொடு; உதனை, உதனொடு என வரும்.

### ஐகார ஈற்றிக்கு வற்றுச் சாரியை

சுட்டுமுத லாகிய ஐயென் இறுதி
வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே. 178

சுட்டை முதலாகவும் ஐகாரத்தை ஈருகவும் உடைய சொல் வேற்றுமையுருபின் முன்னர் வற்றுச்சாரியை பெறுதலும் உரித்து. (எ-டு) அவையற்றை, அவையற்றொடு; இவையற்றை இவையற்றொடு; உவையற்றை உவையற்றொடு என வரும்

### யாவென் வினுவின் ஐக்கும் வற்றுச் சாரியை

யாவென் வினுவின் ஐயென் இறுதியும்
ஆயியல் திரியா தென்மனுர் புலவர்
ஆவயின் வகரம் ஐயொடுங் கெடுமே. 179

யாவை என்னும் வினுப்பெயரும் அத்தன்மையினின்றும் மாறுபடாது என்று கூறுவர் புலவர்; அவ்விடத்து வகரம் ஐகா ரத்தோடுங் கெடும். (எ-டு) யாவற்றை, யாவற்றொடு என ஒட்டுக.

### நீ என்னும் ஈகார ஈற்றுப் பெயர்க்கு னகர வொற்று

நீயென் ஒரு பெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயின் னகரம் ஒற்று கும்மே. 180

நீ என்னும் ஒரு பெயராகிய நெடில், முதல் வேற்றுமை யுருபின் முன்னர்க் குறுகும். அவ்விடத்தில் னகர வொற்று வரும். (எ-டு) நின்னை, நின்னொடு எனச் செய்கையறிந்து ஒட்டுக.

### ஓகார ஈற்றுக்கு ஒன் சாரியை

ஓ கார இறுதிக்கு ஒன்னே சாரியை. 181

ஓகாரத்தை இறுதியாகக் கொண்ட சொற்கு வேற்றுமை யுருபின் முன்னர் ஒன் என்னுஞ் சாரியையே வரும். (எ-டு) கோஒனை, கோஒனொடு என ஒட்டுக.

*அகர ஆகார ஈற்றுப் பெயர்க்கு அத்துச் சாரியை*

அ ஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு
அத்தொடுஞ் சிவணும் ஏழன் உருபே. 182

*ஏழாம் வேற்றுமையுருபு அகர ஆகாரவீற்று மரப்பெயரின் கண் வரின், அஃது அத்துச்சாரியை யோடும் பொருந்தும். (எ-டு) விளவத்துக்கண், பலாவத்துக்கண் என வரும்.*

## 2. மெய்யீறுகள்

*ஞ ந மெய் ஈற்றுக்கு இன் சாரியை*

ஞ ந என் புள்ளிக்கு இன்னே சாரியை. 183

*ஞ், ந் இவற்றை ஈற்றிற்கொண்ட சொற்கு, வேற்றுமை யுருபின் முன்னர் இன் சாரியையே வரும் (எ-டு) உரிஞினை, உரிஞினொடு, பொருநினை, பொருநினொடு என ஒட்டுக.*

*வகர ஈற்றுச் சுட்டுக்கு வற்றுச் சாரியை*

சுட்டு முதல் வகரம் ஐயும் மெய்யும்
கெட்ட இறுதி யியல்திரி பின்றே. 184

*சுட்டெழுத்தை முதலாகவும்,வகரவொற்றை இறுதியாகவுங் கொண்ட சொல்,ஐயு மெய்யுங்கெட்ட ஐகார வீற்றுச்சொல்லின் இயல்பில் நின்றும் மாறுதலின்று. அஃதாவது வற்றுச் சாரியை பெறும். (எ-டு) அவற்றை, அவற்றொடு; இவற்றை, இவற்றொடு; உவற்றை, உவற்றொடு என ஒட்டுக.*

*ஏனை வகர ஈற்றுக்கு இன் சாரியை*

ஏனை வகரம் இன்னொடு சிவணும். 185

*ஏனை வகர வீற்றுப்பெயர் இன்சாரியையோடு பொருந்தும். (எ-டு) தெவ்வினை, தெவ்வினொடு என ஒட்டுக.*

*மகர ஈற்றுக்கு அத்துச் சாரியை*

மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை. 186

*மகரத்தை இறுதியிற் கொண்ட சொல்லின் முன்னர் வேற்றுமை யுருபுவரின் அத்துச் சாரியையே வரும். (எ-டு) மரத்தை, மரத்தொடு என வரும்.*

## சில மகரஈறு இன் சாரியை பெறுதல்

இன்னிடை வரூஉம் மொழியுமா ருளவே. 187

*மகர வீற்றுச் சொற்களுள், இன் சாரியை இடையில் வருகின்ற சொற்களும் உள. (எ-டு) உ(*
*என ஒட்டுக.*

## நும் என்னும் மகரவீற்றுப் பெயர் சாரியை பெறாமை

நும்மென் இறுதி இயற்கை யாகும். 188

*'நும்' என்னும் மகரவீறு மேற்கூறிய அத்தும் இன்னும் பெறாது இயல்பாய் முடியும். (எ-டு) நும்மை, நும்மொடு என ஒட்டுக.*

## தாம், நாம், யாம் என்னும் மகரஈறுகளும் அன்ன

தாம்நாம் என்னும் மகர இறுதியும்
யாமென் இறுதியும் அதனோ ரன்ன
ஆஎ ஆகும் யாமென் இறுதி
ஆவயின் மகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகும். 189

*தாம், நாம் என்னும் மகரவீற்றுச் சொற்களும், யாம் என்னும் மகரவீற்றுச் சொல்லும் வேற்றுமை யுருபு பின்வரின் சாரியை பெறாது இயற்கையாக விருக்கும். யாம் என்னும் மகரவிறுதிச் சொல்லின்கண் உள்ள ஆகாரம் எகரமாகும். அவ் விடத்து யகர வொற்றுக் கெடும். ஏனை இரண்டன்கண் உள்ள நெடு முதல் குறுகும் (எ-டு) தம்மை, தம்மொடு; நம்மை, நம்மொடு; எம்மை, எம்மொடு என ஒட்டுக.*

## எல்லாம் என்னும் மகர ஈற்றிற்கு வற்றும் உம்மும்

எல்லா மென்னும் இறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதி யான, 190

*'எல்லாம்' என்னும் மகரவீற்றுச் சொல்முன் வேற்றுமை யுருபுவரின் இடையில் வற்றுச் சாரியை முழுதுந் தோன்றும்; இறுதிக்கண் உம்மை நிலைபெறும். (எ-டு) எல்லாவற்றையும், எல்லாவற்றொடும் என ஒட்டுக.*

### உயர்திணையில் 'அது' நம் சாரியை பெறுதல்

உயர்திணை யாயின் நம்மிடை வருமே. 191

'எல்லாம்' என்னுஞ் சொல் உயர்திணையாய் இருக்குமிடத்து வேற்றுமையுருபின் முன்னர், நம் வரும். இறுதிக்கண் உம்மை நிலைபெறும். (எ-டு) எல்லா நம்மையும், எல்லா நம்மொடும் என ஒட்டுக.

### எல்லாரும் எல்லீரும் என்னும் மகரஈறுகளின் முடிபு

எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும்
எல்லீரு மென்னும் முன்னிலை யிறுதியும்
ஒற்றும் உகரமுங் கெடுமென மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி
உம்மை நிலையும் இறுதி யான
தம்மிடை வருஉம் படர்க்கை மேன
நும்மிடை வருஉம் முன்னிலை மொழிக்கே. 192

எல்லாரும் என்னும் படர்க்கையுணர்த்து மகரவீற்றுச் சொல்லின்கண்ணும், எல்லீரும் என்னும் முன்னிலையுணர்த்தும் மகரவீற்றுச் சொல்லின்கண்ணும், பின் வேற்றுமையுருபு வரின், ஈற்றிலுள்ள உம் கெட்டு ,ர்-நிற்க, வேற்றுமை யுருபின் பிறகு இறுதியின்கண் உம் நிற்குமென்றும், பகுக்கும் வேற்றுமை யுருபிற்கும் இடையில்,படர்க்கைச் சொல்லின்கண் தம் என்பதும், முன்னிலைச் சொல்லின்கண் நும் என்பதும் வருமென்றும் புலவர் கூறுவர். (எ-டு) எல்லார் தம்மையும், எல்லார் தம்மொடும்; எல்லிர் நும்மையும், எல்லிர் நும்மொடும் என ஒட்டுக.

### தான், யான் என்னும் னகரவீற்றுப் பெயர்கள் சாரியை பெறுமை

தான்யான் என்னும் ஆயீ ரிறுதியும்
மேன்முப் பெயரொடும் வேறுபா டிலவே. 193

தான் யான் என்னும் அவ்விரண்டு றகரவீற்றுச் சொற்களும், மேற்கூறப்பட்ட தாம், நாம், யாம் என்னும் பெயரோடு வேறுபாட்டினை உடையவல்ல. (எ-டு) தன்னை, தன்னொடு; என்னை, என்னொடு என ஒட்டுக.

### அழன் புழன் என்னும் னகர ஈறுகள் அத்தும் இன்னும் பெறுதல்

அழனே புழனே ஆயிரு மொழிக்கும்
அத்தும் இன்னும் உறழத் தோன்றல்
ஒத்த தென்ப உணரு மோரே. 194

அழன் புழன் என்னும் இரண்டு சொற்களுக்கும் பின்னர், வேற்றுமையுருபு, வரின், அத்து இன் என்னுஞ் சாரியைகள் உறழ்ச்சியாகத் தோன்றுதல் பொருந்துமென்று உணர்ந்தோர் கூறுவர். (எ-டு) அழத்தை, அழத்தொடு; அழனினை, அழனினொடு; புழத்தை, புழத்தொடு; புழனினை, புழனினொடு என ஒட்டுக.

## 3. முற்றுகர குற்றுகர ஈறுகள்

### 'ஏழு' என்னும் எண்ணுப்பெயர்க்கு அன் சாரியை

அன்னென் சாரியை ஏழன் இறுதி
முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப. 195

ஏழ் என்னுஞ் சொல்லின் இறுதியின் பின்னர் வேற்றுமை யுருபு வரின், இடையில் அன் சாரியை தோன்றும் இயற்கை யுடையது என்று கூறுவர். (எ-டு) ஏழனை, ஏழனொடு என ஒட்டுக.

### குற்றுகர ஈற்றிற்கு இன் சாரியை

குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்றும் இன்னென் சாரியை. 196

குற்றியலுகரத்தை இறுதியாகக் கொண்ட சொற்களின் முன்னர், வேற்றுமையுருபு வரின் இன் சாரியை தோன்றும். (எ-டு) வரகினை, வரகினொடு; நாகினை, நாகினொடு என ஒட்டுக.

### சில குற்றுகர ஈறுகள் இரட்டி முடிதல்

நெட்டெழுத் திம்பர் ஒற்றுமிகத் தோன்றும்
அப்பால் மொழிகள் அல்வழி யான. 197

நெட்டெழுத்தைக் கொண்ட ஈரெழுத்து ஒரு மொழியின் பின்னர், வேற்றுமையுருபு வரின் குற்றியலுகரத்தின் பற்றுக் கோடாகிய ஒற்று மிகும், இனவொற்று மிகாச் சொற்களில்லாத விடத்து. (எ-டு) யாட்டை, யாட்டொடு என வரும்.

## இரட்டி முடிவன சாரியை பெருமை

அவைதாம்,
இயற்கைய வாகும் செயற்கைய என்ப. 198

அவ்வொற்றுமிகுஞ் சொற்கள், சாரியை பெறாது இயல்பாய் நிற்குந் தன்மையன என்பர். (எ-டு) யாட்டை, யாட்டொடு என ஒட்டுக.

## குற்றுகர ஈற்று எண்ணுப்பெயர்க்கு அன் சாரியை

எண்ணின் இறுதி அன்னொடு சிவணும். 199

எண்ணுப் பெயர்களினது குற்றுகரவீறு அன் சாரியை யொடு பொருந்தும். (எ-டு) ஒன்றனை, ஒன்றனோடு, இரண் டனை, இரண்டனோடு என ஒட்டுக.

## ஒருபஃது முதலிய குற்றுகர ஈறுகள் அன் சாரியையும் பெறுதல்

ஒன்றுமுத லாகப் பத்தூர்ந்து வரூஉம்
எல்லா எண்ணுஞ் சொல்லுங் காலை
ஆனிடை வரினும் மான மில்லை
அஃதென கிளவி ஆவயிற் கெடுமே
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே. 200

பத்தால் தொடர்ந்து வரப்படும், ஒன்று முதலான எல்லா எண்ணையும் வேற்றுமையுருபின் முன்னர்ச் சொல்லுங் காலத்தில், ஆன் சாரியை இடையில் வரினுங் குற்றமில்லை. அப்போது, அஃது என்னுஞ் சொல் கெடும்; பகர வொற்று நிற்கும். (எ-டு) ஒருபானை, ஒருபானொடு; ஒருபஃதினை, ஒரு பஃதினொடு; இருபஃதினை, இருபஃதினொடு என ஒட்டுக.

## யாது, அஃது என்னும் குற்றுகர ஈறுகட்கு அன் சாரியை

யாதென் இறுதியும் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்

ஆய்தம் கெடுதல் ஆவயி னான. 201

யாது என்னும் குற்றிய லுகர விறுதிச் சொல்லும், சுட்டை முதலிலும் ஆய்தத்தை இடையிலுங் கொண்ட குற்றியலுகர விறுதிச்சொற்களும், வேற்றுமையுருபின் முன்னர் அன் சாரியை யோடு பொருந்தும்; அவ்விடத்து ஆய்தங் கெடும். (எ-டு) யாதனை, யாதனொடு; அதனை, அதனொடு; இதனை, இதனொடு; உதனை, உதனொடு என ஒட்டுக.

## குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர் ஏழனுருபிற் சாரியை பெருமலும் வருதல்

ஏழன் உருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்
சாரியைக் கிளவி இயற்கையு மாகும்
ஆவயின் இறுதி மெய்யொடுங் கெடுமே. 202

திசைப்பெயரின் பின்னர் ஏழாம் வேற்றுமையுருபு வரின் சாரியை இயல்பாகவும் இருக்கும். அவ்விடத்துக் குற்றியலுகரத் திறுதி அதன் பற்றுக்கோட்டுடன் கெடும். (எ-டு) வடக்கின் கண், கிழக்கின்கண், தெற்கின்கண், மேற்கின்கண் எனவும்; வடக்கண், கிழக்கண், தெற்கண், மேற்கண் எனவும் வரும்.

# 4. புறனடை

## இவ்வியலின் புறனடை

புள்ளி யிறுதியும் உயிரிறு கிளவியும்
சொல்லிய அல்ல ஏனைய வெல்லாம்
தேருங் காலை உருபொடு சிவணிச்
சாரியை நிலையுங் கடப்பா டிலவே. 203

புள்ளியீற்றுச் சொற்களுள், உயிரீற்றுச் சொற்களுள்ளும் சொல்லப் பெற்றவற்றை நீக்கி, எஞ்சிய சொற்களெல்லாம், ஆராயுமிடத்து, உருபொடு பொருந்தும்போது சாரியையோடு நிலைபெற வேண்டும் என்னும் கட்டாயமில்லை. (எ-டு) மண்ணினை, மண்ணை; வேயினை, வேயை; நாரினை, நாரை, கல்லினை, கல்லை; முள்ளினை, முள்ளை; கிளியினை கிளியை; பொன்னினை, பொன்னை; யாழினை யாழை; தீயினை தீயை; கழுவினை, கழுவை என ஒட்டுக.

# 7. உயிர் மயங்கியல்

[உயிரீறுகளின் புணர்ச்சி யிலக்கணம் உணர்த்துவது]

## 1. அகரவீறு

### அல்வழியில் அகர ஈற்றுப்பெயர் புணருமாறு

அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யல்வழிக் க ச த ப தோன்றின்
தத்தம் ஒத்த ஒற்றிடை மிகுமே. 204

அகரத்தை இறுதியிற் கொண்ட பெயர்ச்சொல்லின் பின்னர், வருமொழி முதலில் கசதப இவை வரின், அல்வழிக்கண், அவற்றை ஒத்த ஒற்று இடையில் மிகும். (எ-டு) விளக்குறிது; மகக் குறிது, விளச்சிறிது, மகச்சிறிது; விளத்தீது மகத்தீது; விளப்பெரிது, மகப்பெரிது என வரும்.

### அகரவீற்று வினைச்சொல்லும் இடைச் சொல்லும்

வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
எனவென் எச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே. 205

அகரவீற்று வினையெச்சமும், அகரவீற்று உவமவுருபும், என என்னும் எச்சமும், அகரச் சுட்டும், ஆங்க என்னும் உரையசைச் சொல்லும் நிலைமொழியாய் வருமிடத்து, வருமொழி முதலில் கசதப வரின் முதற்சூத்திரத்திற் கூறப்பட்ட வல்லெழுத்து மிகுந்து முடியும். (எ-டு) உணக்கொண்டான், தினக்கொண்டான், உணச்சென்றான், தினச்சென்றான், உணத்தந்தான், உணப் போயினான், தினத் தந்தான், தினப் போயினான், புலிபோலக் கொன்றான், கொள்ளெனக் கொண்டான், அக்கொற்றன், அச்சாத்தன், அத்தேவன், அப்பூதன், என வரும்.

### சுட்டின்முன் ஞ ந ம மெய்

சுட்டின் முன்னர் ஞ ந ம த் தோன்றின்
ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும். 206

*அகரச் சுட்டு நிலைமொழியாயிருக்க, வருமொழி முதலில் ஞ ந ம க்கள் தோன்றினால், அவற்றை யொட்டிய ஒற்று இடையில் மிகுதல் வேண்டும். (எ-டு) அஞ்ஞாலம், அந்நூல், அம்மணி என வரும்.*

### சுட்டின்முன் ய வ மெய்

யவமுன் வரினே வகரம் ஒற்றும். 207

*யகர வகரம் முதல்மொழியாகச் சுட்டின் முன்னே வரின், இடைக்கண் வகரம் ஒற்றாகும். (எ-டு) அவ்யாழ், அவ்வளை என வரும்.*

### சுட்டின்முன் உயிர்

உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது. 208

*அகரச் சுட்டின் பின்னர் உயிர் வந்தாலும், அத் தன்மை திரியாது. (எ-டு) அவ்வாடை, அவ்வாண்டை என வரும்.*

### செய்யுளில் சுட்டு நீளுதல்

நீட வருதல் செய்யுளுள் உரித்தே. 209

*அகரச் சுட்டு நீண்டு வருதல் செய்யுளுக்கு உரிமையாகும். (எ-டு) ஆயிரு திணையி னிசைக்குமெனா சொல்லே.*

### சாவ என்னுஞ் சொல்

சாவ என்னும் செயவென் எச்சத்து
இறுதி வகரங் கெடுதலும் உரித்தே. 210

*சாவ என்னுஞ் செயவென்னெச்சத்தின் இறுதியில் உள்ள வகரங் கெடுதலும் உண்டு. (எ-டு) சாக்குத்தினான், சாச்சீறினான் சாத்தகர்த்தான், சாப்புடைத்தான் வரும்.*

### இயல்பாகும் அகர ஈற்றுச் சொற்கள்

அன்ன என்னும் உவமக் கிளவியும்
அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்

செய்ம்மன என்னும் தொழிலிறு சொல்லும்
ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்
செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்
செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்
அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்
பலவற் றிறுதிப் பெயர்க்கொடை உளப்பட
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப. 211

*அகர வீற்றுச் சொற்களாகிய, அன்ன என்னும் உவம உருபும், அண்மை விளிச்சொற்களும், செய்ம்மன என்னும் வினை முற்றும், ஏவலோடு பொருந்திய வியங்கோள் வினைமுற்றும், செய்த என்னும் பெயரெச்சமும், செய்யிய என்னும் வினையெச்சமும், கேள் எனச் சொல்லுதற்கண் வரும் அம்ம என்னும் இடைச் சொல்லும், பலவற்றைக் குறிக்கும் அகரவீற்றுப் பெயரும், உட்பட அவ்வெல்லாச் சொற்களும் நிலைமொழியாய் நிற்க, வருமொழி முதலில் கசதபத் தோன்றவரும் புணர்ச்சி, இயல்பாக முடியுமென்று கூறுவர் ஆசிரியர். (எ-டு) பொன் அன்ன குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும்; ஊர கொள், செல், தா, போ எனவும், உண்மன குதிரை, செந்நாய், தகர், பன்றி, எனவும்; செல்க குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும்; உண்ட குதிரை, செந்நாய், தகர், பன்றி, எனவும்; இதன் எதிர்மறை உண்ணாத குதிரை எனவும்; இதன் குறிப்பு நல்ல குதிரை, செந் நாய் எனவும்; உண்ணிய கொண்டான், சென்றான், தந்தான், போயினான் எனவும்; அம்ம கொற்ற, சாத்தா, தேவா, பூதா எனவும்; பல குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும் வரும்.*

## வாழிய என்னுஞ் சொல்

வாழிய வென்னுஞ் சேயென் கிளவி
இறுதி யகரங் கெடுதலும் உரித்தே. 212

*வாழிய என்னுஞ் சேய்மையில் உள்ள வாழுங்காலத்தை உணர்த்துஞ் சொல் நிலைமொழியா யிருக்க, இறுதியில் உள்ள யகரங் கெடுதலும் உண்டு. (எ-டு) 'வாழி கொற்றா' என வரும்.*

## 'அம்ம' என்னும் சொல்லுக்கு மேலும் ஒரு விதி

உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார். 213

*அம்ம என்பதன் அகரவீறுதியின் நீட்டத்தையும் புலவர்கள் நீக்க மாட்டார்கள். (எ-டு) 'அம்மா கொற்றா' என வரும்.*

### பல என்னுஞ் சொல்

பலவற் றிறுதி நீடுமொழி உளவே
செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான. 214

*பலவற்றைக் குறிக்கும் அகரவிறுதிச் சொற்களுள் அகரம் நீளுகின்ற மொழிகளும் செய்யுட்கண் பொருந்திய தொடர் மொழிக்கண் உள. (எ-டு) "பலாஅஞ் சிலாஅ மென்மனார் புலவர்" என வரும்.*

### பல சில என்னுஞ் சொற்கள்

தொடரல் இறுதி தம்முன் தாம்வரின்
லகரம் றகரவொற் றாதலு முரித்தே. 215

*தொடர்மொழி யல்லாதனவும், பலவற்றைக் குறிப்பனவு மான அகரவிறுதிச் சொற்கள், தம்முன் தாம் வரின், லகரம் றகர வொற்றாதலும் உரித்து. (எ-டு) பற் பல, சிற் சில என வரும்.*

### அவற்றிற்கு மேலும் ஒரு முடிபு

வல்லெழுத் தியற்கை உறழத் தோன்றும். 216

*பலவற்றைக் குறிக்குஞ் சொற்கள், தம்முன் தாம் வரின், வரு மொழி வல்லெழுத்தின் முன்னருள்ள இயற்கை உறழும். (எ-டு) பல பல, பலப்பல; சில சில, சிலச் சில என வரும்.*

### வேற்றுமையில் அகர வீறு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. 217

*அகரவிறுதிப் பெயர் நிலைமொழியாயிருக்க, பின்னர் க, ச, த, ப தோன்றினால், வேற்றுமைப் புணர்ச்சிக்கண் அஃது அல்வழிப் புணர்ச்சியோடு ஒரு தன்மையுடையதாக விருக்கும். அஃதாவது, தத்தம் ஒற்று அடை மிகுந்து முடியும். (எ-டு) இரு விளக்கொற்றன், சாத்தன், தேவன், பூதன் என வரும்.*

### மரப்பெயர்க்குப் பிறிது விதி

மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே. 218

*வேற்றுமைப் புணர்ச்சிக்கண், அகரவீறுதி மரப்பெயர்ச் சொல்லின் பின்னர் கசதபத் தோன்றின், இடையில், அவற்*

றிற்கு இனமாகிய மெல்லெழுத்து மிகும். (எ-டு) விளங்கோடு, விளஞ்செதில்; தோல், பூ. என வரும்.

### மக என்னும் பெயர்

மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை. 219

வேற்றுமைப் புணர்ச்சிக்கண், மக என்னும் அகரவீற்றுப் பெயர்க்குப் பின்னர் க, ச, த, ப வரின், டையில் இன் சாரியை வரும். (எ-டு) மகவின்கை; செவி, தலை, புறம் என வரும்.

### அத்து அங்கே வரினும் வரைநிலை இல்லை

அத்தவண் வரினும் வரைநிலை இன்றே. 220

அங்கு, அத்துச் சாரியை வரினும் நீக்கப்பட மாட்டாது. (எ-டு) மகத்துக்கை; செவி, தலை, புறம் என வரும்

### அகர ஈற்றுப் பன்மைச் சொற்கள்

பலவற் றிறுதி உருபியல் நிலையும். 221

பலவற்றைக் குறிக்கும் அகரவிறுதிச் சொல், பின்னர்க் க ச த பத் தோன்றின் உருபு புணர்ச்சியின் தன்மையில் நிற்கும், (எ-டு) பலவற்றுக் கோடு; செவி, தலை, புறம் என வரும்.

## 2. ஆகார ஈறு

### அல்வழியில் ஆகார ஈற்றுப் பெயர்

ஆகார இறுதி அகர இயற்றே. 222

ஆகாரவிறுதிப் பெயரின் பின்னர் கசதப த் தோன்றின், அல்வழிப் புணர்ச்சியில் அஃது அகரவிறுதிப் பெயரின் தன்மைத் தாகும் (அஃதாவது ஒற்று இடையில் மிகும்.) (எ-டு) தாராக் கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

### ஆகார ஈற்று வினை

செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர். 223

செய்யா என்னும் வினையெச்சமும் ஆகார விற்றுப் பெயர்ச் சொல்லின் தன்மையில் திரியாது என்று கூறுவர்

புலவர். (எ-டு) உண்ணாக் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

## உம்மைத் தொகை முடிபு

உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகை மொழி
மெய்ம்மை யாக அகரம் மிகுமே. 224

இருபெயர் உம்மைத்தொகையின் நிலைமொழியீறு ஆகாரமாயிருக்க, வருமொழி கசத பக்களில் தொடங்க, ஆகாரத்தின் பின்னர் உண்மையாக அகரம் மிகும் (எ-டு) உவா அப்பதினான்கு, இரா அப் பகல் என வரும்.

## இயல்பாகும் ஆகார ஈற்றுச் சொற்கள்

ஆவு மாவும் விளிப்பெயர்க் கிளவியும்
யாவென் வினாவும் பலவற் றிறுதியும்
ஏவல் குறித்த உரையசை மியாவும்
தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவியோடு
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப. 225

ஆ, மா, என்னுஞ் சொற்களும், ஆகாரவீற்று விளிப்பெயரும், யா என்னும் வினாப்பெயரும், பலவற்றைக் குறிக்கும், ஆகார வீற்றுச் சொற்களும், முன்னிலையசைச் சொல்லாகிய மியா என்னும் இடைச்சொல்லும், கூறுவோன் தொழிலைக் குறிக்கும் வினாக்களும், ஆகிய அவ்வனைத்தும் அல்வழிக்கண் வருமொழி முதல் கசதபக் களாயிருக்க, இயல்புபுணர்ச்சி பெறுமெனக் கூறுவர் புலவர். (எ-டு) ஆ குறிது, சிறிது, தீது, பெரிது எனவும்; மா குறிது, சிறிது, தீது, பெரிது, எனவும் ஊரா கொள், செல், தா, போ எனவும் வரும்; யா குறிய, சிறிய தீய, பெரிய எனவும்; உண்ணா குதிரை, செந்நாய், தகர், பன்றி எனவும்; கேண்மியா கொற்றா, சாத்தா, தேவா, பூதா எனவும்; உண்கா கொற்றா, சாத்தா, வா, பூதா எனவும் வரும்.

## வேற்றுமையில் ஆகார ஈறு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. 226

ஆகார இறுதிப்பெயர் வேற்றுமைவழியும் அகர வீறுதிப் பெயரோடு ஒரு தன்மைத்து. (எ-டு) தாராக் கால்; சிறகு, தலை, புறம் என வரும்.

## குறிற்கீழ் ஆகாரமும் தனி ஆகாரமும்

குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்
அறியத் தோன்றும் அகரக் கிளவி. 227

*குற்றெழுத்தின் பின்னருள்ள, ஆகாரவீற்றுச் சொற்கும், ஆகாரவீற்று ஓரெழுத்து மொழிக்கும் பின்னர், க ச த ப தோன்றின், இடையில் அகரம் விளங்கத் தோன்றும். (எ-டு) பலா அக் கோடு, செதிள், தோல், பூ எனவும்; கா அக் குறை, செய்கை, தலை, புறம் எனவும் வரும்.*

## இரா என்னுஞ் சொல்

இராவென் கிளவிக் ககர மில்லை. 228

*இரா என்னும் ஆகாரவீற்றுச் சொல்லிற்கு முன் கூறிய அகரப் பேறு இல்லை. (எ-டு) இராக் கொண்டான் என வரும்.*

## நிலா என்னுஞ் சொல்

நிலாவென் கிளவி அத்தொடு சிவணும். 229

*நிலா என்னுஞ் சொல் அத்துச் சாரியையோடு பொருந்தி முடியும். (எ-டு) நிலாத்துக் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.*

## சில மரப் பெயர்கள்

யாமரக் கிளவியும் பிடாவுந் தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே. 230

*யா என்னும் மரத்தைக் குறிக்குஞ் சொல்லும், பிடா, தளா என்னுஞ் சொற்களுமாகிய அம் முப்பெயர்க்கும், வருமொழி முதலில் க ச த ப தோன்றின், இடையில் வல்லெழுத்து மிகுந்து முடியும். (எ-டு) யா அங்கோடு, பிடா அங்கோடு, தளா அங் கோடு, செதிள், தோல், பூ, என வரும்.*

## அவற்றிற்கு மேலும் ஒரு முடிபு

வல்லெழுத்து மிகினு மான மில்லை. 231

*அம் முப் பெயர்க்கும் கசதபப் பின்னர் வரின், வல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை. (எ-டு) யா அக் கோடு, பிடா அக்கோடு, தளா அக்கோடு, செதிள், தோல், பூ என வரும்; யா வின்கோடு பிடாவின் கோடு, தளாவின் கோடு என வரும்.*

### மா என்னும் மரப்பெயரும் ஆ மா என்னும் விலங்கின் பெயர்களும்

மாமரக் கிளவியும் ஆவும் மாவும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன
அகரம் வல்லெழுத் தவையவண் நிலையா
னகரம் ஒற்றும் ஆவும் மாவும். 232

*மா என்னும் மரத்தைக் குறிக்குஞ் சொல்லும், ஆ, மா என்னுஞ் சொற்களுமாகிய அம் முப்பெயரும், யா, பிடா, தளா இவற்றோடு ஒரு தன்மைப்பட்டன. அவற்றுள் ஆ, மா இவ் விரண்டன் கண்ணும், அகரமும் வல்லெழுத்தும் நிலையாதிருக்க, னகர வொற்று வரும். (எ-டு) மாஅங் கோடு, செதிள், தோல் பூ எனவும்; ஆன் கோடு, மான் கோடு, செவி, தலை, புறம் எனவும் வரும்.*

### 'ஆன்' என்னுஞ் சொல்

ஆனொற் றகரமொடு நிலையிடன் உடைத்தே. 233

*ஆவின் னகரவொற்று அகரமொடும் பொருந்துமிடனுண்டு. (எ-டு) 'ஆனநெய் நெய் தெளித்து நான நீவி' என வரும்.*

ஆன்முன் வரூஉம் ஈகாரம் பகரம்
தான்மிகத் தோன்றிக் குறுலும் உரித்தே. 234

*ஆவின் பின்னர் வரும் ஈகார மேறிய பகரம், தான் மிகுந்து குன்றலுமுரித்து. (எ-டு) ஆப்பி என வரும்.*

### சிலவற்றிற்கு உகரப் பேறு

குறியதன் இறுதிச் சினைகெட உகரம்
அறிய வருதல செய்யுளுள் உரிதததே. 235

*குற்றெழுத்தின் பின்னர் வரும் ஆகார வீறுதியின் சினையாகிய அகரம் கெட, உகரம் விளங்க வருதல் செய்யுளின்கண் உரித்து. (எ-டு) "இறவுப் புறத்தன்ன பிணர்படு தடவுமுதல்" என வரும்.*

## 3. இகர ஈறு

### வேற்றுமையில் இகரவீற்றுப் பெயர்

இகர இறுதிப் பெயர் நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே. 236

*இகரத்தை ஈற்றிற்கொண்ட பெயரின் பின்னர் கசதபத்தோன்*

றின், வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லெழுத்து மிகுந்து முடியும். (எ-டு) கிளிக்கால்; சிறகு, தலை, புறம் என வரும்.

### இகர ஈற்று வினைச்சொல்லும் இடைச்சொல்லும்

> இனிஅணி என்னுங் காலையும் இடனும்
> வினையெஞ்சு கிளவியுஞ் சுட்டும் அன்ன. 237

இனி என்றும் அணி என்றுஞ் சொல்லப்படுகின்ற காலத்தையும் இடத்தையும் உணர்கின்ற இனி அணி என்னும் இடைச் சொற்களும், வினையெச்சமும், இகரச்சுட்டும் நிலைமொழியாயிருக்கப், பின்னர்க் கசதபத் தோன்றின், மேற் கூறியவாறேயாகும். (எ-டு) இனிக்கொண்டான்; அணிக்கொண்டான், சென்றான், தந்தான் போயினான் எனவும்; தேடிக்கொண்டான், சென்றான், தந்தான, போயினன் எனவும்; இக்கொற்றன், சாத்தன் தேவன், பூதன் எனவும் வரும்

### இன்றி என்னுஞ் சொல்

> இன்றி என்னுஞ் வினையெஞ் சிறுதி
> நின்ற இகரம் உகரம் ஆதல்
> தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே. 238

இன்றி என்னும் வினையெச்சத்தின் இறுதிக்கண் நின்ற இகரம் உகரமாதல், தொன்று தொட்டு வந்த வழக்கில் செய்யுட்கண் உளது. (எ-டு) "உப்பின்று புற்கை உண்கமா கொற்கை யோனே" என வரும்.

### சுட்டுப் பெயர்

> சுட்டி னியற்கை முற்கிளந் தற்றே. 239

இகரச் சுட்டின் இயற்கை முன் கூறப்பட்டதன் தன்மையை உடைத்து. (எ-டு) இஞ்ஞானம், இந்நூல், இம்மணி எனவும்; இவ்யாழ் இவ்வட்டு எனவும்; இவ்வடை, இவ்வாடை, இவ்வெளவிடம் எனவும்; ஈவயினை எனவும் வரும்.

### தூணி முன் பதக்கு

> பதக்குமுன் வரினே தூணிக் கிளவி
> முதற்கிளந் தெடுத்த வேற்றுமை யியற்றே 240

தூணி என்னுஞ் சொல்லின் பின்பு, பதக்கு என்னுஞ் சொல் வரின், அது முன்கூறப்பட்ட வேற்றுமைப் புணர்ச்சியை உடைத்தாகும் (எ-டு) தூணிப்பதக்கு என வரும்.

### நாழி முன் உரி

உரிவரு காலை நாழிக் கிளவி
இறுதி இகரம் மெய்யொடுங் கெடுமே
டகார மொற்றும் ஆவயி னான. 241

நாழி என்பதன் பின்னர் உரி என்னுஞ் சொல் வரும் பொழுது, ழி கெட, ட் என்பது அவ்வி[illegible]ன்றும். (எ-டு) நாடுரி என வரும்.

### பனி என்னுங் காலச் சொல்

பனியென வருஉங் கால வேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை ஆகும். 242

கால வேறுபாட்டினைக் குறிக்கும், பனி என்னுஞ் சொல்லின் பின்னர் க, ச, த, ப. தோன்றின், இடையில் அத்து இன் என்னுஞ் சாரியைகள் வரும். (எ-டு) பனிபத்துக் கொண்டான், பனியிற்கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

### 'வளி' என்னும் பூதச் சொல்

வளியென வருஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப. 243

வளி யென்னும் பூதத்தை உணர்த்துஞ் சொல்லும், அத்தன்மை பெறுதல் நேர்மையானதென்று கூறுவர் புலவர். (எ-டு) வளியத்துக் கொண்டான், வளியிற் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

### 'உதி' என்னும் மரப்பெயர்

உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே. 244

உதி என்னும் மரத்தை யுணர்த்துஞ் சொல்லுக்குப் பின்னர்க் கசதப வரின், வேற்றுமைவழி அவற்றிற்குரிய மெல்லெழுத்து மிகும் (எ-டு) உதிங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

### 'புளி' என்னும் மரப்பெயர்

புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை. 245

புளி என்னும் மரத்தை உணர்த்துஞ் சொல்லுக்கு, [வேற்]றுமை வழி அம் சாரியையே வரும், பின்னர்க் கதசப தோன்றினால். (எ-டு) புளியங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

### புளி என்னுஞ் சுவைப் பெயர்

**ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே. 246**

*மரப்பெயரல்லாப் புளிப்பெயரின் பின்னர், க ச த பத்தோன்றின் மெல்லெழுத்து மிகும். (எ-டு) புளிங் கூழ்; சோறு, தயிர் பாளிதம் என வரும்.*

### அதற்கு மேலும் ஒரு முடிபு

**வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை**
**ஒல்வழி யறிதல் வழக்கத் தான. 247**

*ஏனைப் புளிப்பெயரின் பின்னர்க் க ச த பத் தோன்றின், வல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை. அது பொருந்தும் வழியை வழக்கத்தின்கண் அறிதல் வேண்டும். (எ-டு) புளிக் கூழ், புளிச் சோறு, புளிப்பாளிதம் என வரும்.*

### நாட் பெயர்

**நாள்முன் தோன்றும் தொழில்நிலைக் கிளவிக்கு**
**ஆன் இடை வருதல் ஐயம் இன்றே. 248**

*இகர வீற்று நாட் பெயர்களின் பின்னர், கசதப இவற்றை முதலாகக்கொண்ட தொழிலை யுணர்த்துஞ் சொல் வரின், இடையில் ஆன் வருதல் ஐயம் இல்லை. (எ-டு) பரணியாற் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.*

### திங்கட் பெயர்

**திங்கள் முன்வரின் இக்கே சாரியை. 249**

*இகரவீற்றுத் திங்கட்பெயரின் பின்னர்த் தொழில்நிலைச் சொல் வரின், இடையில் தோன்றுஞ் சாரியை இக்கே யாகும். (எ-டு) ஆடிக்குக் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.*

## 4. ஈகார ஈறு

### அல்வழியில் ஈகார ஈற்றுப் பெயர்

**ஈகார இறுதி ஆகார இயற்றே. 250**

*ஈகார வீற்றுப்பெயர், அல்வழிக்கண் ஆகாரவீற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வரும்வழி, வல்லெழுத்து*

மிகுதிப் பட்டு முடியும். (எ-டு) நீக்கடிது; சிறிது, தீது, பெரிது என வரு

## நீ மீ முதலிய சொற்கள்

நீ என் பெயரும் இடக்கர்ப் பெயரும்
மீ என மரீஇய இடம்வரை கிளவியும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும். 251

நீ என்னும் பெயருக்கும் பீ என்னும் இடக்கர்ப் பெயருக்கும், மீ என்னும் இடத்தை உணர்த்தும் மரூஉச் சொற்கும், அவ்விடத்து வரும் வல்லெழுத்து இயற்கையாகும். (எ-டு) நீ குறியை; சிறியை, தீயை, பெரியை எனவும்; பீ குறிது, சிறிது, தீது, பெரிது எனவும்; மீ கண்; செவி, தலை, புறம் எனவும் வரும்.

## 'மீ' என்னுஞ் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்
உடனிலை மொழியும் உளவென மொழிப. 252

இடத்தினை வரைந்துணர்த்தும் மீ என்னுஞ் சொல்முன் இயல்பாய் முடிதலே அல்லாமல், வல்லெழுத்து மிகுதலைப் பெறும் உடனிலைச் சொற்களும் உள்ளன என்று கூறுவார்கள். (எ-டு) மீக்கோள், மீப்பல் என வரும்.

## வேற்றுமையில் ஈகாரவீற்றுப் பெயர்

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. 253

ஈகாரவீற்றுப் பெயர் வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணும் ஆகாரவீற்றுப் பெயரோடு ஒரு தன்மையுடையதாய், வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்துப் பெற்று முடியும். (எ-டு) ஈக்கால், சிறகு, தலை, புறம் என வரும்.

## 'நீ' என்னும் பெயர்

நீ என் ஒருபெயர் உருபியல் நிலையும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும். 254

ஈகாரவீற்றுப் பெயருள், நீ என்னும் ஒரு பெயரின் பின்னர் க ச த ப வரின், அஃது, பின்னர் வேற்றுமையுருபு வரும் போதுள்ள செய்கையைப் பெறும் அப்போது இடைவரும் வல்லெழுத்து இயற்கையாகும். (எ-டு) நின் கை, செவி, தலை, புறம் என வரும்.

# 5. உகர

## அல்வழியில் உகர ஈற்றுப் பெயர்

உகர இறுதி அகர இயற்றே. 255

உகர இறுதிப்பெயர் அல்வழிப் புணர்ச்சியில் கசதப பின் வரின் வல்லெழுத்து மிகும். (எ-டு) கடுக்குறிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

## உகரச் சுட்டு

சுட்டின் முன்னரும் அத்தொழிற்று ஆகும். 256

உகரச் சுட்டின் பின்னர் கசதப வரினும், வல்லெழுத்து மிகும். (எ-டு) உக்கொற்றன்; சாத்தன், தேவன், பூதன் என வரும்.

## சுட்டின்முன் மென்கணம் முதலியன

ஏனவை வரினே மேல்நிலை இயல்பே. 257

வல்லெழுத்தல்லாத ஞ ந ம வ ய உயிர்கள்பின் வரின் உகரம் மேற்கூறப்பட்ட அகரச் சுட்டின் தன்மையைப் பெறும். (எ-டு) உஞ்ஞாண், உந்நூல், உம்மணி எனவும்; உவ்யாழ், உவ்வட்டு எனவும்; உவ்வடை, உவ்வாடை, உவ்வௌவியம் எனவும்; ஊவயினை எனவும் வரும்.

## சுட்டின்முன் வலி இயல்பாதல்

சுட்டுமுதல் இறுதி இயல்பா கும்மே. 258

சுட்டினை முதலாகவும், உகரத்தை இறுதியாகவும் உடைய சொல்லின் பின்னர், கசதப வரின், அஃது இயல்பாகும். (எ-டு) அது குறிது, இது குறிது, உது குறிது, சிறிது, தீது, பெரிது என வரும்.

## செய்யுளில் சுட்டுப்பெயர்

அன்றுவரு காலை ஆவா குதலும்
ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்
செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப. 259

சுட்டு முதலுகர விறுதியின் பின்னர், அன்று வருமொழியாய் வர, இறுதி உகரம் ஆகாரமாய்த் திரிதலும், ஐ வரும்போது மெய்யை நீக்கி இறுதி உகர மாத்திரம் கெடுதலும், செய்யுளின்கண் உரித்தென்று கூறுவர். (எ-டு) அதா அன்றம்ம, இதா அன்றம்ம உதா அன்றம்ம எனவும்; அதை மற்றம்ம, இதை மற்றம்ம, உதை மற்றம்ம எனவும் வரும்

### வேற்றுமையின் உகர ஈற்றுப் பெயர்

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. 260**

*வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணும் உகர இறுதிப்பெயர் அகர இறுதிப்பெயரோடு ஒருதன்மையாக நடக்கும்; அஃதாவது கசதப வந்தவழி அவ்வெழுத்து மிகும். (எ-டு) கடுக்காய்; செதிள், தோல், பூ என வரும்.*

### எரு செரு என்னுஞ் சொற்கள்

**எருவுஞ் செருவும் அம்மொடு சிவணித்**
**திரிபிடன் உடைய தெரியுங் காலை**
**அம்மின் மகரஞ் செருவயின் கெடுமே**
**தம்மொற்று மிகூஉம் வல்லெழுத் தியற்கை. 261**

*எரு, செரு இவற்றின்பின்னர் கசதபத் தோன்றின், அவை அம்முச் சாரியையோடு பொருந்திப் பொது விதியினின்றும் வேறுபட்டு நிற்கும்; ஆராயும் இடத்து, செரு என்னுஞ் சொல்லின் பின்னர் வந்த அம்முச் சாரியையின் மகரங் கெடும். பின்வரும் வல்லெழுத்தின் இயற்கை தம்மொற்று மிகுதலைக் கொள்ளும். (எ-டு) எருவங்குழி, சேறு, தாது, பூழி எனவும்; செருவக்களம், சேனை, தானை, பறை எனவும் வரும்.*

### ழகர உகர ஈறு

**ழகர உகரம் நீடிடன் உடைத்தே**
**உகரம் வருதல் ஆவயி னான. 262**

*நிலைமொழி இறுதியில் உள்ள ழு நீளும் இடனுடைத்து; அவ்விடத்து, அதன் பின்னர் உகரமும் வருதல் வேண்டும்.(எ-டு) 'பழூப்பல்லன்ன பருவுகிர்ப் பாவடி' என வரும்.*

### ஒடு என்னும் மரப்பெயர்

**ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே. 263**

*ஒடு என்னும் மரத்தினை உணரநின்ற சொல், உதி என்னும் மரத்தின் இயல்புடைத்தாய், மெல்லெழுத்துப் பெற்று முடியும். (எ-டு) ஒடுங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.*

### சுட்டுப் பெயர்க்குச் சாரியை

**சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்**
**ஒற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை. 264**

*சுட்டினை முதலாகவும் உகரத்தை இறுதியாகவுமுள்ள சொற்கள், பின்னர் வேற்றுமையுருபு வருமபோதுள்ள தன்மையைப் பெறும். அப்போது, வல்லெழுத்தின் இயற்கையாகிய*

ஒற்று இடையில் மிகாது இருக்கும். (எ-டு) அதன் கோடு; இதன் கோடு, உதன் கோடு; செதிள், தோல், பூ என வரும்.

## 6. ஊகார ஈறு

### அல்வழியில் ஊகார ஈற்றுப் பெயர்

**ஊகார இறுதி ஆகார இயற்றே.** 265

*ஊகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் ஆகாரவீற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்தவழி வல்லெழுத்து மிக்கு முடியும். (எ-டு) கொண்மூக் கடிது, சிறிது, தீது, பெரிது என வரும்.*

### ஊகார ஈற்று வினைச்சொல்

**வினையெஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்**
**நினையுங் காலை அவ்வகை வரையார்.** 266

*ஊகார இறுதி வினையெச்சத்திற்கும், ஊகார முன்னிலை வினைச்சொற்கும், ஆராயுங்காலத்தில் அவ்வல்லெழுத்து மிக்கு முடிதலை நீக்கார். (எ-டு) உண்ணூக்கொண்டான், சென்றான், தந்தான், போயினான் என வரும்.*

### வேற்றுமையில் ஊகார ஈறு

**வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.** 267

*ஊகார இறுதிப்பெயர் வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணும் ஆகார இறுதிப்பெயரோடு ஒரே தன்மையாக நடக்கும். (எ-டு) கொண்மூக்குழாம், செலவு, தோற்றம், மறைவு என வரும்.*

### குறிற்கீழ் ஊகாரமும் தனிமொழி ஊகாரமும்

**குற்றெழுத் திம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்**
**நிற்றல் வேண்டும் உகரக் கிளவி** 268

*குற்றெழுத்தின்பின் நின்ற ஊகார ஈற்று மொழிக்கும் ஓரெழுத் தொருமொழியாகிய ஊகாரவீற்று மொழிக்கும் உகரமாகிய எழுத்து நிற்றலை விரும்புவர். (எ-டு) உடூக்குறை; தூஉக்குறை; செய்கை, தலை, புறம் என வரும்.*

### பூ என்னும் பெயர்

**பூஎன் ஒருபெயர் ஆஇயல் பின்றே**
**ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.** 269

*பூ என்னும் ஒரு பெயர் மட்டும், பின்னர் கசதப வரின் அத்தன்மைத்தன்று; அவ்விடத்து வல்லெழுத்து மிகுதலும் உரித்து.*

(எ-டு) பூங்கொடி, பூக்கொடி; செய்கை, தாமம், பந்து என வரும்.

ஊ என்னும் பெயர்

ஊ என் ஒருபெயர் ஆவொடு சிவணும். 270

ஊ என்று கூறப்பெறும் ஊகார ஈற்றையுடைய ஒரு பெயர், ஆகார வீற்றில் ஆ என்னுஞ் சொல்லொடு பொருந்தி, வல்லெழுத்துப் பெறாது நிலைமொழி னகரவொற்றுப் பெற்று முடியும். (எ-டு) ஊன்குறை; செய்கை, தலை, புறம் என வரும்.

இதுவுமது

அக்கென் சாரியை பெறுதலும் உரித்தே
தக்கவழி அறிதல் வழக்கத் தான. 271

ஊவென்னும் பெயரின், பின் கசதப வரின், அக்கு என்னுஞ் சாரியையைப் பெறுதலும் உரித்து; அதனை வழக்கத்தின்கண் தக்க வழியால் அறிதல் வேண்டும். (எ-டு) ஊனக்குறை; செய்கை, தலை, புறம் என வரும்.

ஆடூஉ மகடூஉ என்னும் பெயர்கள்

ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
இன்னிடை வரினும் மான மில்லை. 272

ஆடூஉ மகடூஉ என்னும் இரண்டுபெயர்கட்கும் பின்னர்க் கசதபத் தோன்றின், இடையில் 'இன்' வரினுங் குற்றமில்லை. (எ-டு) ஆடூஉவின் கை; மகடூஉவின் கை; செவி, தலை, புறம் என வரும்.

## 7. எகர ஒகர ஈறு

அல்வழியில் எகர ஒகர ஈறுகள்

எகர ஒகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய என்மனார் புலவர்
தேற்றமுஞ் சிறப்பும் அல்வழி யான. 273

எ ஒ இவை பெயர்க்கு ஈறுகாமல் முன்னிலை வினைக்கே ஈறுகுமென்பர் புலவர், தேற்றம் சிறப்பு இப்பொருள்களில் வாராத விடத்து (எ-டு) ஏஎ எனவும் ஓஒ எனவும் வரும்.

எகர ஒகர இடைச்சொற்கள்

தேற்ற எகரமுஞ் சிறப்பின் ஒவ்வும்
மேற்கூ றியற்கை வல்லெ ழுத்துமிகா. 274

தேற்றப் பொருளில் வரும் எகரமும், சிறப்புப் பொருளில் வரும் ஓகரமும் பின் கசதப வரின், மேற்கூறப்பட்ட வல்லெழுத்து மிகுதியைக் கொள்ளா. (இதனால் முன்னிலை வினைக்கண் வருவது வல்லெழுத்து மிகுதியைக் கொள்ளும் என்பது பெறப்பட்டது) (எ-டு) யானே எ கொண்டேன், நீயே எ கொண்டாய், அவனே எ கொண்டான், ஓஓ கொண்டான், ஓஓ கொண்டாய், (ஏ எக் கொற்று, ஓ ஓக் கொற்று) என வரும்.

## 8. ஏகார ஈறு

### அல்வழியில் ஏகார ஈற்றுப்பெயர்

ஏகார இறுதி ஊகார இயற்றே. 275

ஏகார இறுதிப்பெயர் அல்வழிக்கண் பின்னர்க் க ச த ப வரின், ஊகார விறுதியின் தன்மையைப் பெறும். (எ-டு) சேக் கடிது; சிறிது, பெரிது, தீது என வரும்.

### ஏகார இடைச் சொற்கள்

மாறுகோள் எச்சமும் வினாவும் எண்ணும்
கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும். 276

மாறுபாட்டினை எச்சமாகக் கொண்டதும், வினா, எண் இப் பொருள்களில் வரும் ஏகாரமும் பின்னர் வல்லெழுத்துவரின் இயல்பாகும். (எ-டு) யானே கொண்டேன்; சென்றேன், தந்தேன், போயினேன் எனவும்; நீயே கொண்டாய்; சென்றாய், சென்றாய், தந்தாய், போயினாய் எனவும்; கொற்றனே, சாத்தனே, தேவனே பூதனே எனவும் வரும்.

### வேற்றுமையின் ஏகார ஈறு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. 277

ஏகார இறுதிப்பெயர் வேற்றுமைக் கண்ணும், பின்னர்க் க ச த ப வரின் ஊகார இறுதிப் பெயரின் தன்மையைப் பெறும். (எ-டு) வேக்குடம்; சாடி, தூதை, பானை என வரும்.

### அதற்கு, மேலும் ஒரு முடிபு

ஏயென் இறுதிக்கு எகரம் வருமே. 278

கசதப பின்னர் வரின் ஏ என்னும் இறுதிக்கு எகரம் வரும். (எ-டு) ஏஎக் கொட்டில்; சாலை, துளை, புழை என வரும்.

### 'சே' என்னும் மரப்பெயர்

**சே என் மரப்பெயர் ஒடுமர இயற்றே. 279**

*சே என்னும் மரத்தினை உணர நின்ற பெயர் ஒடு என்னும் மரத்தையுணரும் பெயரோடு ஒருதன்மை உடையதாகும். (அஃதாவது மெல்லெழுத்து மிகும்) (எ-டு) செங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.*

### 'சே' என்னும் விலங்கின் பெயர்

**பெற்றம் ஆயின் முற்ற இன் வேண்டும். 280**

*சே என்னும் பெயர் பெற்றத்தை உணர்த்துமாயின், வருகிற மெல்லெழுத்தின் முன்னர் இன் சாரியை வரும். (எ-டு) சேவின் கோடு; செவி, தலை, புறம் என வரும்.*

## 9. ஐகார ஈறு

### வேற்றுமையில் ஐயீற்றுப் பெயர்

**ஐகார இறுதிப் பெயர் நிலை முன்னர்**
**வேற்றுமை ஆயின் வல்லெழுத்து மிகுமே. 281**

*ஐகார விறுதிப் பெயரின் பின்னர்க் க ச த ப வரின், வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லெழுத்து மிகும். (எ-டு) யானைக் கோடு; செவி, தலை, புறம் என வரும்.*

### சுட்டுப் பெயர்

**சுட்டு முதல் இறுதி உருபியல் நிலையும் 282**

*சுட்டை முதலாகவும் ஐகாரத்தை இறுதியாகவும் உடைய சொற்கள், வேற்றுமைப் புணர்ச்சியில் பின்னர்க் க ச த ப வரின் உருபியலிற் கூறிய தன்மை பெறும். (எ-டு) அவையற்றுக்கோடு, இவையற்றுக் கோடு, உவையற்றுக் கோடு; செவி, தலை, புறம் எனவும்; அவற்றுக்கோடு, இவற்றுக்கோடு; செவி, தலை, புறம் எனவும் வரும்.*

### விசை, ஞெமை, நமை என்னும் மரப் பெயர்கள்

**விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்**
**ஆமுப் பெயருஞ் சேமர இயல 283**

*விசை, ஞெமை, நமை ஆகிய மரத்தையுணர்த்தும் முப் பெயரும் மேற்கூறிய வல்லெழுத்து மிகாது சேயென்னும் மரத்தினது இயல்பினவாய் மெல்லெழுத்து மிக்கு முடியும். (எ-டு) விசைங்கோடு, ஞெமைங்கோடு, நமைங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.*

### 'பனை, அரை, ஆவிரை என்னும் மரப் பெயர்கள்

பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மொடு சிவணும்
ஐயென் இறுதி அரைவரைந்து கெடுமே
மெய் அவண் ஒழிய என்மனார் புலவர். 284

*பனை, அரை, ஆவிரை என்னுஞ் சொற்கள், வேற்றுமைப் புணர்ச்சியில் க ச த ப பின்னர் வரின், ஆராயுங்காலத்து, அம் சாரியையோடு பொருந்தும். 'அரை' என்னுஞ் சொல்லைத் தவிர்த்து ஏனைச் சொற்களில் மெய்யைவிட்டு ஐகாரங் கெடுமென்று புலவர் கூறுவர். (எ-டு) பனங்காய்; செதிள், தோல், பூ எனவும்; அரையங் கோடு செதிள், தோல், பூ எனவும்; ஆவிரங் கோடு; செதிள், தோல், பூ எனவும் வரும்.*

### பனை முன் அட்டு

பனையின் முன்னர் அட்டுவரு காலை
நிலையின் றாகும் ஐயென் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி னான. 285

*பனை நிலைமொழியா யிருக்க, அட்டு வருமொழியாய் வரும்போது, ஐ என்னும் உயிர் கெட்டு, அவ்விடத்தில் ஆகாரம் வருதல் வேண்டும். (எ-டு) பனாஅட்டு என வரும்.*

### பனை முன் கொடி

கொடிமுன் வரினே ஐயவண் நிற்பக்
கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி. 286

*பனை யென்னுஞ் சொல்லின் பின்னர் கொடி யென்னுஞ் சொல் வரின், அவ்விடத்தில் ஐ கெடாது நிற்க, அவ்விடத்தில் வல்லெழுத்து மிக்குவருதல் நீக்கப்பட மாட்டாது. (எ-டு) பனைக் கொடி என வரும்.*

### திங்கட் பெயரும் நாட்பெயரும்

திங்களும் நாளும் முந்து கிளந்தன்ன. 287

*திங்கள், நாள் இவற்றைக் குறிக்கும் ஐகாரவீற்றுப் பெயர் முன்னர்க் கூறப்பட்டன போலாகும். (அஃதாவது இக்கு ஆன் முதலிய சாரியைகளைப் பெறும்.) (எ-டு) சித்திரைக்குக் கொண்டான், கேட்டையாற் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.*

### மழை என்னுஞ் சொல்

மழையென் கிளவி வளியியல் நிலையும். 288

மழை யென்னுஞ் சொல்லின்பின்னர் க ச த ப வரின் வளி என்னுஞ் சொல்லின் தன்மையைப் பெறும். (அத்து இன் சாரியைகளைப் பெறுமென்க) (எ-டு) மழையத்துக் கொண்டான், மழையிற் கொண்டான், சென்றான், தந்தான், போயினான் என வரும்.

### வேட்கை முன் அவா

செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயென் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுதல் என்மனார் புலவர்
டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும். 289

செய்யுளில் வேட்கை யென்னும் ஐகாரவிறுதிப் பெயரின் பின்னர் அவா என்னுஞ்சொல் வரின், ஐகாரம் அதன் முன்னருள்ள மெய்யொடுங்கெட டகரம் ணகர மொழியாகும் என்று கூறுவர் புலவர். (எ-டு) 'வேணவா நலிய வெய்யவுயிரா' என வரும்.

## 10. ஓகார ஈறு

### அல்வழியில் ஓகார ஈற்றுப் பெயர்

ஓகார இறுதி ஏகார இயற்றே. 291

ஓகார இறுதிப் பெயர், பின்னர்க் கசதப வரின் அல்வழிக்கண் ஏகார இறுதிப் பெயரின் தன்மையை அடையும்; அஃதாவது வல்லெழுத்து மிகும். (எ-டு) ஓக்கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

### ஓகார இடைச் சொல்

மாறுகோள் எச்சமும் வினாவும் ஐயமும்
கூறிய வல்லெழுத் தியற்கை யாகும். 291

மாறுபாட்டினைக் கொண்ட எச்சப் பொருண்மையினை உடைய ஓகாரமும், வினாப் பொருண்மையை உடைய ஓகாரமும், ஐயப் பொருண்மையினையுடைய ஓகாரமும், முன் பெயர்க்குக் கூறிய வல்லெழுத்தன்றி இயல்பாக முடியும். (எ-டு) யானோ கொண்டேன், நீயோ கொண்டாய், பத்தோ பதினொன்றோ? என வரும்.

### இதுவும் அது

ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற் றியற்றே. 292

*ஒழியிசை ஓகாரத்தின் நிலையும் மேற் சொல்லியொழிந்த வற்றின் தன்மையைப் பெறும். (எ-டு) கொளலோ கொண்டான்.*

### வேற்றுமையில் ஓகார ஈற்றுப் பெயர்

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே
ஒகரம் வருதல் ஆவயி னான. 293

*ஓகார இறுதிப் பெயர் வேற்றுமைக் கண்ணும் அவ்வேகார விறுதிப் பெயரோடு ஒரு தன்மை உடையதாகும்; அவ்விடத்தில் ஒகரம் வருதலும் வேண்டும். (எ-டு) ஓ ஒக் கடுமை; சிறுமை, தீமை, பெருமை என வரும்.*

### கோ முன் இ

இல்லொடு கிளப்பின் இயற்கையாகும். 294

*ஓகார விறுதிச் சொல்லை இல் என்னுஞ் சொல்லோடு கூறின் வேற்றுமைக்கண் புணர்ச்சி இயல்பாகும். (எ-டு) கோயில் என வரும்*

### சில ஈறுகட்குச் சாரியை

உருபியல் நிலையும் மொழியுமா ருளவே
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும். 295

*ஓகார இறுதிப் பெயருள் உருபியல் நிலையில் உள்ள சொற்களும் உள; அவ்விடத்தில் வல்லெழுத்து மிகாது இயற்கையாகும். (எ-டு) கோ ஒன்கை; செவி, தலை, புறம் என வரும்.*

## 11. ஔகார ஈறு

### இருவழியிலும் ஔகார ஈற்று மெய்

ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத்து மிகுதல வரைநிலை இன்றே
அவ்விரு ஈற்றும் உகரம் வருதல்
செவ்வி தென்ப சிறந்திசி னோரே. 296

*ஔகார வீற்றுப் பெயரின் பின்னர்க் க ச த ப வரின், அல்வழிக் கண்ணும் வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத்து மிகுதல் நீக்கப்படாது. அவ் விரண்டு கூறுபாட்டின் கண்ணும் இடையில் உகாரம் வருதல் செவ்விதெனப் புலவர் கூறுவர்.*

# 8. புள்ளி மயங்கியல்

[மெய்யீறுகளின் புணர்ச்சி இலக்கணம்]

## 1. மெல்லொற்று ஈறுகள்

### இரு வழியிலும் ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்

ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்
அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகுமே
உகரம் வருதல் ஆவயி னான. 297

ஞகார இறுதித் தொழிற்பெயரின் பின்னர் வல்லெழுத்து வரின், அல்வழிப் புணர்ச்சிக்கண்ணும் வேற்றுமைப் புணர்ச்சிக் கண்ணும் அவ்வல்லெழுத்து மிகும். அவ்விடத்தில் உகரம் வருதல்வேண்டும். (எ-டு) உரிஞுக்கடிது; சிறிது, தீது, பெரிது எனவும்; உரிஞுக்கடுமை; சிறுமை, தீமை, பெருமை எனவும் வரும்.

### மேலும் ஒரு முடிபு

ஞநமவ இயையினும் உகரம் நிலையும். 298

ஞகார ஈற்றுத் தொழிற்பெயரின்பின் ஞநமவ இவை வரினும், இருவழிக் கண்ணும் உகரம் நிலைபெறும். (எ-டு) உரிஞு ஞான்றது, நீண்டது, மாண்டது எனவும்; உரிஞு ஞாற்சி; நீட்சி, மாட்சி எனவும்; உரிஞு வலிது, வலிமை எனவும் வரும்.

### அல்வழியில் நகர ஈறு

நகர இறுதியும் அதனோ ரற்றே. 299

நகரவீற்றுப் பெயரும், வருமொழி முதலில் வல்லெழுத்தும், ஞநமவ இவையும் வருமிடத்து, இருவழிக்கண்ணும் ஞகரவீற்றுப் பெயரின் தன்மையை அடையும். (எ-டு) பொருநுக்கடிது; சிறிது, தீது, பெரிது எனவும்; ஞான்றது, நீண்டது, மாண்டது எனவும்; பொருநு வலிது எனவும் வரும்.

### வேற்றுமையில் நகர ஈறு

வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும். 300

நகர இறுதிப் பெயரின் பின்னர் வல்லெழுத்தும், ஞநமவ இவையும் வரின், வேற்றுமைக்கண் உகரம் கெட அகரம் வரும். (எ-டு) பொருநக் கடுமை; சிறுமை, தீமை, பெருமை எனவும், பொருந ஞாற்சி; நீட்சி, மாட்சி எனவும்; பொருந வலிமை எனவும் வரும்.

### வெரிந் என்னுஞ் சொல்

வெரிந்என் இறுதி முழுதுங் கெடுவழி
வருமிடன் உடைத்தே மெல்லெழுத் தியற்கை. 301

'வெரிந்' என்னுஞ் சொல்லின் இறுதி முழுவதுங் கெடும் போது, மெல்லெழுத்தும் வரும் இடம் உள்ளது. (எ-டு) வெரிங் குறை; செய்கை, தலை, புறம் என வரும்.

### மேலும் ஒரு முடிபு

ஆ வயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே. 302

அவ்விடத்தில் வல்லெழுத்து மிகுதலும் உரியதாகும். (எ-டு) வெரிக்குறை; செய்கை, தலை, புறம் என வரும்.

### வேற்றுமையில் ணகர ஈறு

ணகார இறுதி வல்லெழுத் தியையின்
டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே. 303

ணகார ஈற்றுப் பெயரின் பின்னர், வல்லெழுத்து வரின், வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண், ணகாரம் டகார மாகும். (எ-டு) மட்குடம்; சாடி, தூதை, பானை என வரும்.

### ஆண் பெண் என்னுஞ் சொற்கள்

ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை. 304

ஆண் பெண் இவை அஃறிணையாய் இருப்பின் பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமை வழி புணர்ச்சி இயல்பாகும். (எ-டு) ஆண்கை, பெண்கை; செவி, தலை, புறம் என வரும்.

### ஆண் என்னும் மரப் பெயர்

ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே. 305

'ஆண்' என்னும் மரத்தை உணர்த்துஞ் சொல், பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமைவழி, 'அரை' என்னும் மரத்தை

யுணர்த்துஞ் சொல்லைப்போல, அம் சாரியை பெறும். (எ-டு) ஆணங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

### விண் என்னுஞ் சொல்

விண்ணென வருஉங் காயப் பெயர்வயின்
உண்மையும் உரித்தே அத்தென் சாரியை
செய்யுள் மருங்கின் தொழில்வரு காலை. 306

வானை யுணர்த்தும் 'விண்' என்னுஞ் சொல்லின் பின்னர், வல்லெழுத்து முதலாகிய வினைச்சொல் வருங்காலத்துச், செய்யுளின்கண் அத்துச் சாரியை வருதலும் உண்டு. (எ-டு) விண்ணத்துக் கொட்கும் என வரும்.

### ணகர ஈற்றுத் தொழிற்பெயர்

தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல 307

ணகார வீற்றுத் தொழிற்பெயரெல்லாம், இருவழிக் கண்ணும், பின்னர் வல்லெழுத்து வரின், ஞகர வீற்றுத் தொழிற் பெயரைப்போல் உகரச் சாரியை பெற்று முடியும். (எ-டு) மண்ணுக்கடிது, மண்ணுக்கடுமை, மண்ணு ஞான்றது, மண்ணு வலிது, மண்ணு வலிமை என வரும்.

### ணகர ஈற்றுக் கிளைப்பெயர்

கிளைப்பெயர் எல்லாம் கொளத்திரி பிலவே. 308

ணகர வீற்று இனப்பெயரெல்லாம் வேற்றுமைவழி கொள்ளக்கூடிய திரிபை உடையன அல்ல (இயல்பாக முடியும்) (எ-டு) உமண் குடி; சேரி, தோட்டம், பாடி என வரும்.

### அல்வழியில் எள் என்னும் உணவுப்பெயர்

வேற்றுமை யல்வழி எண்ணென் உணவுப்பெயர்
வேற்றுமை யியற்கை நிலையலு முரித்தே. 309

வேற்றுமை அல்லாத விடத்து 'எண்' என்று சொல்லப் பெறுகிற உணவினை யுணர்த்தும் பெயர், பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமை அல்லாவிடத்து, வேற்றுமை வழிக்கண் உள்ள தன்மையைப் பெறுதலும் உண்டு. (எ-டு) எட்கடிது; சிறிது, தீது, பெரிது என வரும். உம்மையால் இயல்பாதலே பெரும்பான்மை.

### இருவழியிலும் முரண் என்னும் தொழிற்பெயர்

முரணென் தொழிற்பெயர் முதலியல் நிலையும். 310

'முரண்' என்னும் தொழிற் பெயரின் பின்னர், வல்லெழுத்து வரின், அது முதலிற் கூறப்பட்டபடி இயல்பாகவும் திரிபாகவும் முடியும். (எ-டு) முரண்கடிது; சிறிது, தீது, பெரிது எனவும், முரட்கடுமை; சேனை, தானை, பறை எனவும் வரும்.

## வேற்றுமையில் மகர ஈறு

மகர இறுதி வேற்றுமை யாயின்
துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே. 311

வேற்றுமை வழி மகரஇறுதிப் பெயரின் பின்னர் வல்லெழுத்து வரின், அவ் விற்று மகரம் முழுமையுங் கெட, வல்லெழுத்து மிகும். (எ-டு) மரக்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

## அதற்கு மேலும் இரு முடிபுகள்

அகர ஆகாரம் வருஉம் காலை
ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே. 312

வருமொழி முதலில் அ ஆ இவை வருமிடத்து, மகரவீற்றின் முன்னருள்ள அகரம் நீடலும் உளதாகும். (உம்மையான் நீளாமையே பெரும்பான்மை என்க.) (எ-டு) மரா அடி, குளா அம்பல் எனவும்; மரவடி, குளவாம்பல் எனவும் வரும்.

மெல்லெழுத் துறழும் மொழியுமா றுளவே
செல்வழி அறிதல் வழக்கத் தான. 313

மகரவீற்றுச் சொற்களுள், அவற்றின்பின்னர் வல்லெழுத்து வந்தபொழுது, மகரங்கெட்டு, மெல்லெழுத்து உறழ்ச்சியாக மிகுஞ் சொற்களும் உள. அவற்றை வழக்கத்தின்கண் வருகின்ற இடத்து நோக்கி அறிதல் வேண்டும். (எ-டு) குளங்கரை, குளக்கரை; சேறு, தாது, பூழி என வரும்.

## 'இல்லம்' என்னும் மரப் பெயர்

இல்ல மரப்பெயர் விசைமர வியற்றே. 314

'இல்லம்' என்னும் மரத்தினை உணர்த்தும் பெயர், பின்னர் வல்லெழுத்து வரின், விசை என்னும் மரத்தைப்போல் மெல்லெழுத்து மிகும். (எ-டு) இல்லங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

## அல்வழியில் மகர ஈறு

அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும். 315

மகர வீறு அல்வழிக்கண் எல்லாம் மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும். (எ-டு) மரங்குறிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

## 'அகம்' முன் 'கை'

அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே ஆசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான. 316

'அகம்' என்னும் நிலைமொழிக்குப் பின்னர் 'கை' வரின், அகரத்தைத் தவிர்த்துக் கரம் கெடுதலையும், அவ்விடத்தில் மெல்லெழுத்து மிகுதலையும் ஆசிரியர்கள் நீக்கமாட்டார்கள். (எ-டு) அங்கை, அகங்கை என வரும்.

## 'இலம்' முன் 'படு'

இலமென் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலும் உரித்தே செய்யு ளான. 317

"இலம்" என்னுஞ் சொல்லின் பின்னர், 'படு' என்பது வருமொழியாய் வருமிடத்துச், செய்யுளின்கண், மகரங்கெடாது நிற்றலும் உரியதாகும். (எ-டு) "இலம்படு புலவ ரேற்றகை நிறை" என வரும்.

## 'ஆயிரம்' என்னும் எண்ணுப் பெயர்

அத்தொடு சிவணும் ஆயிரத் திறுதி
ஒத்த எண்ணு முன்வரு காலை. 318

ஆயிரமாகிய மகரவிறுதி, தன் பின்னர்ப் பொருந்திய எண் வருமொழியாய் வருமிடத்து, அத்துச் சாரியையோடு பொருந்தும். (எ-டு) ஆயிரத்தொன்று, ஆயிரத்திரண்டு, மூன்று, நான்கு என வரும்.

## அடையடுத்த 'ஆயிரம்'

அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே. 319

'ஆயிரம்' என்னும் மகர விறுதி, அடைமொழியொடு தோன்றினும், முன் கூறியவாறு அத்துச்சாரியை பெறும். (எ-டு) பதினாயிரத்தொன்று, இரண்டு, மூன்று என வரும்.

## அதன்முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும்

அளவும் நிறையும் வேற்றுமை யியல. 320

'ஆயிரம்', அடையடுத்த ஆயிரம் என்னுஞ் சொற்களின் பின்னர், அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால், அவை வேற்றுமைப் புணர்ச்சியின் தன்மையைப் பெறும். (எ-டு) ஆயிரக்கலம்; சாடி, தூதை பானை; ஆயிரக் கழஞ்சு, தொடி, பலம்; பதினாயிரக்கலம் என வரும்.

## வேற்றுமையில் உயிர்திணைப் பெயரும் விரவுப் பெயரும்

படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும்
தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்
வேற்றுமை யாயின் உருபியல் நிலையும்
மெல்லெழுத்து மிகுத லாவயி னான. 321

எல்லாரும், எல்லீரும், தாம், நாம், யாம் என்னும் பெயர்களும், வேற்றுமைப் புணர்ச்சியில் உருபு புணர்ச்சியின் தன்மையைப் பெறும். அவ்விடத்திலே மெல்லெழுத்து மிகும். (எ-டு) எல்லார் தங்கையும், எல்லீர் நுங்கையும்; செவியும், தலையும், புறமும், எனவும்; தங்கை, நங்கை, எங்கை; செவி, தலை, புறம் எனவும் வரும்.

## அல்வழியில் அவை

அல்லது கிளப்பின் இயற்கை யாகும். 322

எல்லாரும் முதலிய சொற்கள் அல்வழியில் இயற்கையாகும். (எ-டு) எல்லாருங் குறியர்; சிறியர், தீயர், பெரியர் என வரும்: பிறவற்றையும் இவ்வாறே ஒட்டுக.

## 'எல்லாம்' என்னும்' விரவுப் பெயர்

அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா மெனும்பெயர் உருபியல் நிலையும்
வேற்றுமை அல்வழிச் சாரியை நிலையாது. 323

'எல்லாம்' என்னுஞ் சொல், இருவழிக்கண்ணும் உருபு புணர்ச்சியின் தன்மையைப் பெறும். அல்வழிக்கண் சாரியை நில்லாது. (எ-டு) எல்லாக் குறியவும்; சிறியவும், தீயவும், பெரியவும் எனவும்; எல்லாவற்றுக் கோடும்; செவியும், தலையும், புறமும் எனவும்; எல்லா ஞான்றன; நீண்டன, மாண்டன, எனவும்; எல்லா ஞானும்; நாலும், மணியும், யாப்பும் வலிமையும்; அடையும் எனவும் வரும்

## அதற்கு மேலும் ஒரு முடிபு

மெல்லெழுத்து மிகினும் மான மில்லை. 324

'எல்லாம்' என்னுஞ் சொல்லின் மேல், அல்வழிக்கண் மெல் லெழுத்து மிகினுங் குற்றமில்லை. (எ-டு) எல்லாங் குறியவும்; சிறியவும், தீயவும், பெரியவும் என வரும்.

## அதற்கு உயர்திணை முடிபு

உயர்திணை யாயின் உருபியல் நிலையும். 325

'எல்லாம்' என்பது உயர்திணையாயின், வேற்றுமை வழி உருபு புணர்ச்சியின் தன்மையைப் பெறும். (எ-டு) எல்லா நங்கையும்; செவியும், தலையும், புறமும் என வரும்.

## வேற்றுமையில் 'நும்' என்னும் பெயர்

நும்மெ னொருபெயர் மெல்லெழுத்து மிகுமே. 326

'நும்' என்னும் ஒரு பெயரின் பின்னர், வேற்றுமை வழி வல்லெழுத்துவரின் மெல்லெழுத்து மிகும். (எ-டு) நுங்கை; செவி, தலை, புறம் என வரும்.

## அல்வழியில் 'நும்' என்னும் பெயர்

அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக்கெட நின்ற மெய்வயின் ஈவர
இ இடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
அப்பான் மொழிவயி னியற் கையாகும். 327

'நும்' என்னுஞ் சொல், அல்வழிக் கண், நகரத்தின் மேல் நின்ற உகரங் கெட, அவ்விடத்து ஈ வர, நகார மகரங்கெட்டு, இடையில் இ வர மகர விறு கெட, அவ்விடத்தில் ரகரப்புள்ளி நிற்கும். அத்தகைய மொழிகளினிடையில் புணர்ச்சி இயல்பே யாகும், (எ-டு) நீயிர் குறியீர்; சிறியீர், தீயீர், பெரியீர் என வரும்.

## மகர ஈற்றுத் தொழிற் பெயர்

தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெய ரியல. 328

மகர விற்றுத் தொழிற் பெயரெல்லாம் இருவழிக் கண்ணும் ஞ கார வீற்றுத் தொழிற்பெயரின் தன்மையைப் பெறும். (எ-டு) செம்முக் கடிது; சிறிது, தீது, பெரிது எனவும்; செம்மு ஞான்றது; நீண்டது, மாண்டது வலிது எனவும்; செம்முக் கடுமை; சிறுமை தீமை, பெருமை எனவும்; செம்மு ஞாற்சி; நீட்சி, மாட்சி, வலிமை எனவும் வரும்.

### 'ஈம்,' 'கம்', 'உரும்' பெயர்க்கும் சாரியை

ஈமும் கம்மும் உருமென் கிளவியும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன. 329

ஈம், கம், உரும் என்னும் அம் மூன்று சொற்களும், தொழிற் பெயரோடு ஒருதன்மையாய் நடக்கும். (எ-டு) ஈமுக்கடிது, கம்முக்கடிது, உருமுக்கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது எனவும்: ஈமுக்கடுமை, கம்முக் கடுமை, உருமுக் கடுமை; சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை எனவும் வரும்.

### ஈம்', 'கம்' என்னும் இருபெயர்க்கும் சாரியை

வேற்றுமை யாயின் ஏனை இரண்டும்
தோற்றம் வேண்டும் அக்கென் சாரியை. 330

வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாயின், இறுதி 'உரும்' ஒழிந்த இரண்டும், 'அக்கு' என்னுஞ் சாரியை பெறுதல் வேண்டும். (எ-டு) ஈமக்குடம், கம்மக்குடம்; சாடி, தூதை, பானை என வரும்.

### மகரம் குறுகுமிடம்

வகார மிசையும் மகாரங் குறுகும் 331

வகாரத்தின் முன்னருள்ள மகரம், தன் அரை மாத்திரை யினின்றுங் குறுகும். (எ-டு) நிலம் வலிது என வரும்.

### மகர ஈற்று நாட்பெயர்

நாட் பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
அத்தும் ஆன்மிசை வரைநிலை இன்றே
ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர். 332

நாளையுணர்த்தும் மகரவீற்றுப் பெயர், முன் இகரவீற்று நாட் பெயர்க் கிளவிக்குக் கூறிய தன்மையதாம். ஆங்கு, ஆனின் முன்னர் அத்துச்சாரியையும் நீக்கார்; மகர வொற்றுக் கெடும் என்று கூறுவர் புலவர் (எ-டு) 'மகத்தாற் கொண்டான்; மகத்து ஞான்று கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

### வேற்றுமையிற் னகார ஈறு

னகார இறுதி வல்லெழுத்து இயையின்
றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே. 333

னகார ஈற்றுப் பெயரின் பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண், னகாரம் றகார மாகும். (எ-டு) பொற்குடம்; சாடி, தூதை, பானை என வரும்.

## சில 'னகர' ஈற்றுச் சொற்கள்

மன்னுஞ் சின்னும் ஆனும் ஈனும்
பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர். 334

மன், சின், ஆன், ஈன், பின், முன் இவையும்; வினையெச்சமும்; பின்னர் வல்லெழுத்துவரின், அவ்வாறு னகரம் றகர மாகும் என்று கூறுவர் புலவர். (எ-டு) அதுமற் கொண்கன் தேரே, காப்பும் பூண்டிசிற் கடையும் போகல் எனவும்; ஆற்கொண்டான், ஈற்கொண்டான், பிற்கொண்டான், முற்கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் எனவும்: வரிற்கொள்ளும்; செல்லும், தரும், போம் எனவும் வரும்

## 'வயின்' என்னுஞ் சொல்

சுட்டு முதல் வயினும் எகரமுதல் வயினும்
அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப. 335

சுட்டு எகரம் இவற்றின் பின்னர் வரும் வயின் என்பதும், பின்னர் வல்லெழுத்து வரின். னகரம் றகரமாகும் அப்பண்பினைக் கொள்ளுந் தன்மையுடையன என்று புலவர் கூறுவர். (எ-டு) அவ்வயிற் கொண்டான், இவ்வயிற் கொண்டான், உவ்வயிற் கொண்டான், எவ்வயிற் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

## 'குயின்' என்னுஞ் சொல்

குயினென் கிளவி இயற்கை யாகும். 336

'குயின்' என்னுஞ் சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின், அஃது இயல்பாகும். (எ-டு) குயின் குழாம்; செலவு, தோற்றம், பறைவு என வரும்.

## 'எகின்' என்னும் மரப் பெயர்

எகின்மர மாயின் ஆண்மர இயற்றே. 337

'எகின்' என்பது மரத்தைக் குறிப்பின், அஃது ஆண் மரத்தைப் போல அம் சாரியை பெறும். (எ-டு) எகினங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

### 'எகின்' என்னும் பிற உயிரின் பெயர்

ஏனை யெகினே அகரம் வருமே
வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும். 338

*மரத்தை யுணர்த்தாத எகின் என்னுஞ் சொல், நிலைமொழியாய் வருமிடத்து, அதன்கண் அகரம் வர, வல்லெழுத்து மிகுதல் வேண்டும். (எ-டு) எகினக்கால்; செவி, தலை, புறம் என வரும்.*

### கிளைப் பெயர்

கிளைப்பெய ரெல்லாங் கிளைப்பெய ரியல. 339

*'ன'கர வீற்றுக் கிளைப்பெயரெல்லாம், ணகர ஈற்றுக் கிளைப்பெயரைப் போலத் திரியாது இயல்பாய் முடியும். (எ-டு) எயினக்குடி; சேரி, தோட்டம், பாடி என வரும்.*

### 'மீன்' என்னுஞ் சொல்

மீனென் கிளவி வல்லெழுத் துறழ்வே. 340

*'மீன்' என்னுஞ் சொல் நிலைமொழியாயிருக்க, னகரம் திரிந்தும் திரியாதும் வரும். (எ-டு) மீன்கண், மீற்கண்; சினை, தலை, புறம் என வரும்.*

### 'தேன்' என்னுஞ் சொல்

தேனென் கிளவி வல்லெழுத் தியையின்
மேனிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்
ஆமுறை யிரண்டும் உரிமையு முடைத்தே
வல்லெழுத்து மிகுவழி இறுதி யில்லை. 341

*'தேன்' என்னுஞ் சொல் நிலைமொழியாயிருக்க, வருமொழி முதலில் வல்லெழுத்து வரின், அது, முற்கூறிய நிலையை ஒத்து உறழ்தலும், வல்லெழுத்து மிகுதலும் ஆகிய இருமுறையும் பொருந்தும்; வல்லெழுத்து மிகும்போது னகரவிறுதி கெடும், (எ-டு) தேன்குடம், தேற்குடம்; சாடி, தாழி, பானை: தேக்குடம்; சாடி, தாழி, பானை என வரும்.*

### அதற்கு மேலும் முடிபுகள்

மெல்லெழுத் துமிகினும் மான மில்லை. 342

*'தேன்' என்னுஞ் சொல்லுக்குப் பின்னர் வல்லெழுத்துப் புணருமிடத்து, மெல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை. (எ-டு) தேங்குடம்; சாடி, தாழி, பானை என வரும்.*

மெல்லெழுத் தியையின் இறுதியோ டுறழும். 343

என்னுஞ் சொல்லின் பின்னர், மெல்லெழுத்து வரின், அஃது இறுதி னகரத்தோடு கெடுதலும் கெடாமையு மாகிய இருவகை முடிபையும் பெறும்.

## 'தேன்' முன் 'இறால்'

இறாஅல் தோற்றம் இயற்கை யாகும். 344

'தேன்' என்னுஞ் சொல்லின் பின்னர், இறால் என்பது வரின், தோற்றத்துக்கண் புணர்ச்சி இயல்பாகும், (எ-டு) தேனிறால் என வரும்.

## அதற்கு மேலும் ஒரு முடிபு

ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்தே. 345

'தேன்' என்னுஞ் சொற்கு, இறால் என்னுஞ் சொல் பின் வரின், தேன் என்பது, த்த் என்பதனோடு நிற்றலையும் பொருந்தும். (எ-டு) தேத்திறால் என வரும்.

## மின், பின், பன், கன் என்னுஞ் சொற்கள்

மின்னும் பின்னும் பன்னுங் கன்னும்
அந்நாற் சொல்லும் தொழிற்பெய ரியல. 346

மின், பின், பன், கன் என்னும் நான்கு சொல்லும் இருவழிக்கண்ணும் தொழிற் பெயரைப் போல நடக்கும். (எ-டு) மின்னுக்கடிது, பின்னுக்கடிது, பன்னுக்கடிது, கன்னுக்கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது, யாது எனவும்; மின்னுக்கடுமை, பின்னுக்கடுமை, பன்னுக்கடுமை, கன்னுக்கடுமை; சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை, யாப்பு எனவும் வரும்.

## 'கன்' என்னுஞ் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

வேற்றுமை யாயின் ஏனையெகி னொடு
தோற்ற மொக்குங் கன்னென் கிளவி. 347

'கன்' என்னுஞ் சொல், வேற்றுமைவழித் தோற்றத்தின்கண், மரமுணர்த்தாத 'எகின்' என்னுஞ் சொல்லைப்போல, அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும். (எ-டு) கன்னக்குடம்; சாடி, தூதை, பானை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை என வரும்.

## இயற்பெயரின் முன்னர்த் 'தந்தை' என்னுஞ் சொல்

இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்
மெய்யொழித் தன்கெடும் அவ்வியற் பெயரே. 348

னகர இறுதி இயற்பெயரின் பின்னர்த் தந்தை என்னும் முறைப்பெயர் வரின், வருமொழி முதலில் உள்ள மெய்கெட, அகரம் நிலைபெறும். அவ் வியற்பெயரின்கண் மெய்யைத் தவிர்த்து, இறுதி அன் கெடும். (எ-டு) சாத்தன் தந்தை, சாத்தந்தை எனவும்; கொற்றன் தந்தை, கொற்றந்தை எனவும் வரும்.

## அதற்கு மேலும் ஒரு முடிபு

ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு
பெயரொற் றகரந் துவரக் கெடுமே. 349

'ஆதன்' 'பூதன்' என்னும் இயற்பெயர்களின் பின்னர்த் தந்தை வரின், ஆங்கு முற்கூறிய தன்மையோடு இயற்பெயரின் ஒற்றும், வருமொழியின் அகரமும் முற்றவும் கெடும். (எ-டு) இயல்பென்றதால் ஆதந்தை, பூதந்தை எனவும் வரும். ஆந்தை, பூந்தை என வரும்.

## அதற்கு வேறொரு முடிபு

சிறப்பொடு வருவழி இயற்கை யாகும். 350

இயற்பெயர் சிறப்புப்பெயராய் வருமிடத்துப், பின்னர்த் தந்தை வரின் இயல்பு ஆகும். (எ-டு) பெருஞ்சாத்தன் றந்தை, பெருங்கொற்றன் றந்தை என வரும்.

## இயற்பெயர் முன் மகன் முதலிய பிற பெயர்கள்

அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியும்
நிற்றலும் உரித்தே அம்மென் சாரியை
மக்கள் முறைதொகூஉம் மருங்கி னான. 351

அவ்வியற்பெயர் மெய்யைத் தவிர்த்து அன் கெடும்வழி மக்கள் என்னும் முறைமைக் காட்டுஞ் சொல்லோடு தொகையாமிடத்து, 'அம்' என்னுஞ் சாரியை நிற்றலும் உண்டு. (எ-டு) சாத்தங் கொற்றன், கொற்றங் கொற்றன்; சாத்தங்குடி, கொற்றங்குடி என வரும்.

## தான், பேன், கோன் என்னும் இயற் பெயர்கள்

தானும் பேனும் கோனும் என்னும்
ஆமுறை இயற்பெயர் திரிபிட னிலவே. 352

தான், பேன், கோன் என்பதற்குப்பின் அம்முறை யியற்பெயர் வரின், முற்கூறிய திரிபிற்கு இடம் இல்லை. (எ-டு) தான் றந்தை, பேன் றந்தை, கோன் றந்தை எனவும்; தான் கொற்றன், பேன் கொற்றன், கோன் கொற்றன் எனவும் வரும்.

## 'தான்' 'யான்' என்னுஞ் சொற்கள்

தான்யா னெனும்பெயர் உருபியல் நிலையும். 353

'தான்', 'யான்' என்னும் பெயர்கள் வேற்றுமைவழி உருபியலிற் கூறிய தன்மை பெறும். (எ-டு) தன்கை, என்கை; செவி, தலை, புறம் எனவும் ; தன்ஞாண், என்ஞாண்; நூல், மணி, யாழ், வட்டு, அடை, ஆடை எனவும் வரும்.

## அல்வழியில் அச் சொற்கள்

வேற்றுமை யல்வழிக் குறுகலுந் திரிதலும்
தோற்றம் இல்லை என்மனார் புலவர். 354

'தான்', 'யான்' என்பன, அல்வழிக்கண் தோன்றுமிடத்து, முறையே குறுகலும் திரிதலும் இல்லை என்று கூறுவர் புலவர். (எ-டு) தான் குறியன்; சிறியன், தீயன், பெரியன், ஞான்றான், நீண்டான், மாண்டான் எனவும்; யான் குறியேன், சிறியேன், தீயேன், பெரியேன், ஞான்றேன், நீண்டேன், மாண்டேன் எனவும் வரும்.

## 'அழன்' என்னுஞ் சொல்

அழனென் இறுதிகெட வல்லெழுத்து மிகுமே. 355

அழன் என்னுஞ் சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின், அதன் இறுதி னகரங் கெட, வல்லெழுத்து மிகும். (எ-டு) அழக்குடம்; சாடி, தூதை, பானை என வரும்.

## 'முன்' என்னுஞ் சொல்

முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்லென் கிளவிமிசை றகர மொற்றல்
தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே. 356

'முன்' என்னுஞ் சொல்லின் பின்னர் வரும், 'இல்' என்னுஞ் சொல்லின் முன்னர், றகர ஒற்று வருதல் பண்டைக்காலத்து மரபாகும். (எ-டு) முன்றில் என வரும்.

## 'பொன்' என்னுஞ் சொல்

பொன்னென் கிளவி யீறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
செய்யுள் மருங்கின் தொடரிய லான. 357

செய்யுளில், தொடராய் வருமிடத்தில், 'பொன்' என்னுஞ் சொல்லின் பின்னர் வல்லெழுத்து வரின், ன் கெட, லம் வரும்.

(எ-டு) "பொலம்படை பொலிந்த கொய்சுவற் புரவி" என வரும்.

## உ. இடையொற்று ஈறுகள்

### வேற்றுமையின் யகர ஈறு

யகர இறுதி வேற்றுமைப் பொருள்வயின்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே. 358

*யகரவிறுதிப் பெயர், பின்னர் வல்லெழுத்து வரின், வேற்றுமைப் பொருட் புணர்ச்சியில் அவ் வல்லெழுத்து மிகும். (எ-டு) நாய்க்கால்; செவி, தலை, புறம் என வரும்.*

### 'தாய்' என்னுஞ் சொல்

தாயென் கிளவி யியற்கை யாகும். 359

*'தாய்' என்பது நிலைமொழியாயிருக்க, வேற்றுமைப் புணர்ச்சியில் இயல்பாகும். (எ-டு) தாய்கை; செவி, தலை, புறம் என வரும்.*

### அதற்கு மேலும் ஒரு முடிபு

மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே. 360

*'தாய்' என்னுஞ் சொல், மகனது வினையைக் கூறின், முன்பு கூறியவாறு வல்லெழுத்து மிகும். (எ-டு) மகன்றாய்க்கலாம்; செரு, தார், படை என வரும்.*

### யகர ஈற்றிற்கு வேறு முடிபு

மெல்லெழுத் துறழும் மொழியுமா ருளவே. 361

*யகர விறுதிப் பெயர்கள் வல்லெழுத்து வருவழி மெல்லெழுத்து உறழும் மொழிகளும் உள்ளன. (எ-டு) வேய்ங்குறை; வேய்க்குறை; சிறை, தலை, புறம் என வரும்.*

### அல்வழியில் யகர ஈறு

அல்வழி யெல்லாம் இயல்பென மொழிப. 362

*யகர விறுதிப் பெயர், பின்னர் வல்லெழுத்துவரின், அல்வழியின்கண் இயல்பாகும் என்று கூறுவர். (எ-டு) நாய் கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.*

### வேற்றுமையில் ரகார ஈறு

ரகார இறுதி யகார இயற்றே 363

ரகர வீறுதிப்பெயர் இருவழியும் யகரத்தின் தன்மையைப் பெறும். (எ-டு) தேர்க்கால்; செய்கை, தலை, புறம் என வரும்.

## ஆர், வெதிர், சார், பீர் என்னுஞ் சொற்கள்

ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும். 364

ஆர், வெதிர், சார், பீர் என்பனவற்றின் பின்னர் வல்லெழுத்து மிக்கு வரின், வேற்றுமை மெல்லெழுத்து மிக்கு முடிதல் உண்மையாகத் தோன்றும். (எ-டு) ஆர்ங்கோடு, வெதிர்ங் கோடு, சார்ங்கோடு, பீர்ங்கோடு; செதிள், தோல் பூ என வரும்.

## 'சார்' முன் காழ்

சாரென் கிளவி காழ்வயின் வலிக்கும். 365

'சார்' என்னுஞ் சொல் நிலைமொழியாகவும், 'காழ்' என்னுஞ் சொல் வருமொழியாகவும் இருப்பின் இடையில் வல்லெழுத்து மிகும். (எ-டு) சார்க்காழ் என வரும்.

## 'பீர்' என்னுஞ் சொற்கு மேலும் ஒரு முடிபு

பீரென் கிளவி அம்மொடுஞ் சிவணும். 366

'பீர்' என்னுஞ் சொல்லின் பின்னர் வல்லெழுத்துவரின் அம் சாரியையோடும் பொருந்தும். (எ-டு) பீரங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

## வேற்றுமையில் லகார ஈறு

லகார இறுதி ணகார இயற்றே. 367

லகார வீறுதிப்பெயர் வேற்றுமைவழி ணகார இறுதிப் பெயரின் தன்மையை அடையும். (எ-டு) கற்குறை; சிறை, தலை, புறம் என வரும்.

## அதற்கு மேலும் ஒரு முடிபு

மெல்லெழுத் தியையின் ணகாரம் ஆகும். 368

லகார வீறுதிப்பெயரின் பின்னர் மெல்லெழுத்துவரின், லகரம் ணகர மாகும், (எ-டு) கன்ஞெரி; நுனி, முறி எனவும்; கன் ஞெரிந்தது; நீண்டது, மாண்டது எனவும் வரும்.

## அல்வழியில் லகார ஈறு

அல்வழி யெல்லாம் உறழெனமொழிப. 369

லகார விறுதி நிலைமொழியாயிருக்க, வருமொழி முதல் வல்லின மெல்லினங்களாயிருக்க, அல்வழியெல்லாம் உறழ்ச்சியாக முடியுமு என்பர். (எ-டு) கல்குறிது, கற்குறிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

## லகாரமெய் ஆய்தமாதல்

தகரம் வரும்வழி ஆய்தம் நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே.

வருமொழி முதல் தகரமாயிருக்க லகரமாகிய மர்க மாறுதலும் குற்றம் அன்று என்று கூறுவர் புலவர்.

## லகார ஈற்றிற்கு வேறு முடிபு

நெடியதன் இறுதி இயல்புமா ருளவே. 371

நெட்டெழுத்தைக் கொண்ட லகர விறுதி, வல்லெழுத்து வருமிடத்து இயல்பாயிருப்பனவும் உள. (எ-டு) பால்கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

## நெல் முதலிய சொற்கள்

நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்லது கிளப்பினும் வேற்றுமை யியல. 372

நெல், செல், கொல், சொல் இவை நான்கும் அல்வழிக் கண்ணும், வேற்றுமையைப்போல் லகாரம் றகாரமாகத் திரியும். (எ-டு) நெற்கடிது, செற்கடிது, கொற்கடிது, சொற்கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

## 'இல்' என்னும் இன்மைச் சொல்

இல்லென் கிளவி யின்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலும் ஐயிடை வருதலும்
இயற்கை யாதலும் ஆகாரம் வருதலும்
கொளத்தகு மரபின் ஆகிடன் உடைத்தே. 373

'இல்' என்னுஞ் சொல் பொருளின்மையைக் குறிப்பின்; பின்னர் வல்லெழுத்து வந்தவிடத்து, வல்லெழுத்து மிகுதலும், இடையில் "ஐ" வருதலும், இயல்பாய் நிற்றலும் இடையில் "ஆ" வருதலும், கொள்ளக்கூடிய தன்மையை உடையதாம். (எ-டு) இல்லைக் கல், இல்லை கல்; இல்கல், இல்லாக் கல்; சுனை, துடி, பறை, என வரும்.

## 'வல்' என்னுஞ் சொல்

வல்லென் கிளவி தொழிற்பெய ரியற்றே. 374

வல்' என்னுஞ்சொல், ஞகார வீற்றுத் தொழிற்பெயரின் தன்மையை உடையது. (எ-டு) வல்லுக் கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது எனவும்; வல்லுக்கடுமை; சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை எனவும் வரும்,

*அதற்கு வேறொரு முடிபு*

நாயும் பலகையும் வருஉங் காலை
ஆவயின் உகரங் கெடுதலும் உரித்தே
உகரம் கெடுவழி அகரம் நிலையும். 375

'வல்' என்னுஞ் சொல்லின் பின்னர், நாய் பலகை என்பன வருமிடத்து உகரங் கெடுதலுமுண்டு; அப்பொழுது, அகரம் வரும். (எ-டு) வல்ல நாய் வல்லப் பலகை எனவும்; வல்லக் கடுமை; சிறுமை, தீமை, பெருமை எனவும் வரும்.

*பூல், வேல், ஆல்*

பூல்வே லென்றா ஆலென் கிளவியொடு
ஆமுப் பெயர்க்கும் அம்மிடை வருமே. 376

பூல், வேல், ஆல் என்னும் மூப்பெயர்க்கும் 'அம்' இடையில் வரும். (எ-டு) பூலங்கோடு, வேலங்கோடு; ஆலங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

*லகர ஈற்றுத் தொழிற்பெயர்*

தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெயர் இயல 377

லகர வீற்றுத் தொழிற் பெயரெல்லாம் இருவழிக் கண்ணும் ஞகார வீற்றுத் தொழிற்பெயரின் தன்மையை அடையும். (எ-டு) கல்லுக் கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது எனவும்; கல்லுக்கடுமை சிறுமை, தீமை பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை எனவும் வரும்.

*வெயில் என்னுஞ் சொல்*

வெயிலென் கிளவி மழையியல் நிலையும். 378

'வெயில்' என்னுஞ் சொல் மழையென்னுஞ் சொல்லைப் போல அத்து இன் என்னுஞ் சாரியைகளைப் பெறும் (எ-டு) வெயிலத்துக் கொண்டான்; வெயிலிற் கொண்டான்; சென்றான் தங்கான், போயினான் என வரும்

### வேற்றுமையில் வகர வீறு

சுட்டு முதலாகிய வகர விறுதி
முற்படக் கிளந்த உருபியல் நிலையும். 379

சுட்டினை முதலாகவும் வகரவொற்றை இறுதியாகவு முடைய சொற்கள் நிலைமொழியாயிருக்க, வேற்றுமை வழியிலே, அவை முன் கூறப்பட்ட உருபு புணர்ச்சியைப்போல் வற்றுச் சாரியை பெறும். (எ-டு) அவற்றுக் கோடு, இவற்றுக்கோடு உவற்றுக் கோடு; செவி, தலை, புறம் என வரும்.

### அதற்கு அல்வழி முடிபு

வேற்றுமை அல்வழி ஆய்த மாகும். 380

அவ், இவ், உவ் இவற்றின் இறுதி பின்னர் வல்லெழுத்து வரின், அல்வழியில் ஆய்தம் ஆகும். எ-டு அஃகடிய, இஃகடிய, உஃகடிய; சிறிய, தீய, பெரிய என வரும்.

### அதற்கு வேறு முடிபுகள்

மெல்லெழுத் தியையின் அவ்வெழுத் தாகும். 381

அவ், இவ், உவ் இவற்றின் பின்னர் மெல்லெழுத்து வரின், அல்வழியில் வகரம் அவ்வம் மெல்லெழுத்தாகும். (எ-டு) அஞ்ஞாண்; இஞ்ஞாண், உஞ்ஞாண், நூல், மணி என வரும்.

ஏனவை புணரின் இயல்பென மொழிப. 382

சுட்டு முதலாகிய வகர விறுதிக்குப் பின்னர் வல்லெழுத்து மெல்லெழுத்து அல்லாதனவரின், அல்வழியில் இயல்பே புணர்ச்சி என்பர். (எ-டு) அவ்யாழ், இவ்யாழ், உவ்யாழ்; வட்டு, அடை, ஆடை என வரும்.

### வகர ஈற்று உரிச்சொல்

ஏனை வகரந் தொழிற்பெய ரியற்றே. 383

தெவ் என்பது இருவழிக் கண்ணும் வல்லெழுத்து மெல்லெழுத்து வருமிடத்து ஞகார வீற்றுத் தொழிற்பெயர் தன்மையைப் பெறும் (எ-டு) தெவ்வுக் கடிது, சிறிது, தீது, பெரிது ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது எனவும்; தெவ்வுக் கடுமை; சிறுமை, தீமை, பெருமை ஞாற்சி, நீட்சி மாட்சி, வலிமை எனவும் வரும்.

### வேற்றுமையில் ழகார ஈறு,

ழகார இறுதி ரகார இயற்றே. 384

முகர விறுதிப் பெயர் நிலைமொழியாயிருக்க, இருவழியிலும் ரகர விறுதிப் பெயரின் தன்மையை அடையும்; அதாவது வல்லெழுத்து மிக்கு முடியும். (எ-டு) பூழ்க்கால்; சிறகு, தலை, புறம் என வரும்.

## தாழென்னுஞ் சொல்

தாழென் கிளவி கோலொடு புணரின்
அக்கிடை வருதல் உரித்து மாகும். 385

தாழ் என்பதன் பின்னர்க் கோல் என்பது வரின், அக்கு என்பது இடையில் வருதல் உரிமையும் ஆகும். (எ-டு) தாழக் கோல் என வரும்.

## தமிழ் என்னுஞ் சொல்

தமிழென் கிளவியும் அதனோ ரற்றே. 386

தமிழ் என்னுஞ் சொல்லும் அக்குச்சாரியை பெறும் தன்மையைப் பெறும். (எ-டு) தமிழக் கூத்து என வரும்.

## குமிழ் என்னும் மரப் பெயர்

குமிழென் கிளவி மரப்பெய ராயின்
பீரென் கிளவியோ டோரியற் றாகும். 387

குமிழ் என்னுஞ் சொல் மரத்தை [illegible]ர்த்திறல், பீர் என்னும் எழுத்தைப்போல் மெல்லெழுத்தும் அம்முச்சாரியையும் பெறும். (எ-டு) குமிழங்கோடு; [illegible], தோல், பூ என வரும்.

## பாழ் என்னுஞ் சொல்

பாழென் கிளவி மெல்லெழுத் துறழ்வே. 388

'பாழ்' என்னுஞ் சொல்லின் பின்னர் வல்[illegible] வல்லெழுத்தோடு மெல்லெழுத்து உறழ்ந்து முடியும். (எ-டு) பாழ்க்கிணறு, பாழ்ங்கிணறு; சேரி, தோட்டம், பாடி என வரும்.

## ஏழ் என்னும் எண்ணுப் பெயர்

ஏழென் கிளவி உருபியல் நிலையும். 389

ஏழ் என்னுஞ் சொல், வேற்றுமைப் புணர்ச்சிக்கண் அன் சாரியை பெற்று, உருபு புணர்ச்சியின் தன்மையை அடையும். (எ-டு) ஏழன் காயம், சுக்கு, தோரை, பயறு என வரும்.

## ஏழ் முன் அளவு முதலிய பெயர்கள்

அளவும் நிறையும் எண்ணும் வருவழி
நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலும்
கடிநிலை யின்றே ஆசிரி யர்க்க. 390

'ஏழ்' என்பதன் பிறகு, அளவுப் பெயர், நிறைப் பெயர், எண்ணுப் பெயர் இவை வரின், அதன் நெடு முதல் குறுகி, இறுதியில் உகரம் வருதலையும் ஆசிரியர்கள் விலக்க மாட்டார்கள். (எ-டு) ஏழுகலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு, பலம் எனவும்; ஏழு கழஞ்சு; தொடி, பலம் எனவும்; எழு மூன்று, எழு நான்கு எனவும் வரும்.

பத்தென் கிளவி ஒற்றிடை கெடுவழி
நிற்றல் வேண்டும் ஆய்தப் புள்ளி 391

'ஏழ்' என்னுஞ் சொல்லின் பின்னர், பத்து என்னுஞ் சொல் வரின் அங்குள்ள இடையொற்றுக்கெட ஆய்தம் வரும். (எ-டு) எழுபஃது என வரும்.

ஆயிரம் வருவழி உகரங் கெடுமே. 392

'ஏழ்' என்பதன் பின்னர் ஆயிரம் வரின், இறுதியில் வந்த உகரங்கெடும். (எ-டு) ஏழாயிரம் என வரும்.

நூறூர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்குக்
கூறிய நெடுமுதல் குறுக்கம் இன்றே. 393

'ஏழ்' என்பதன் பின்னர் நூறாயிரம் என்பது வருமாயின், கூறப்பட்ட நெடுமுதற் குறுக்கம் இல்லை. (எ-டு) ஏழ் நூறாயிரம் என வரும்.

ஐஅம் பல்லென வரூஉம் இறுதி
அல்பெய ரெண்ணினு மாயியல் நிலையும். 394

'ஏழ்' என்பதன் பின்னர் ஐ, அம், பல் என்பவற்றை ஈற்றிற் கொண்ட பொருட்பெயரல்லாத எண்ணுப்பெயர்கள் வரின் உகரம் பெறாது அவ்வியல்பின்கண்ணே நின்று முடியும். (எ-டு) ஏழ் தாமரை, ஏழ் வெள்ளம், ஏழாம்பல் என வரும்.

உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது. 395

'ஏழ்' என்பதன் பின்னர் உயிர்வரினும் நெடுமுதலுங் குறுகாது; உம்மும் பெறாது. (எ-டு) ஏழ்கல், ஏழுழக்கு, ஏழொன்று, ஏழிரண்டு என வரும்.

## 'கீழ்' என்னுஞ் சொல்

**கீழென் கிளவி உறழத் தோன்றும்.** 396

'கீழ்' என்னுஞ் சொல்லின் பின்னர் வல்லெழுத்துவரின் இருவகையாகவும் முடியும். (எ-டு) கீழ்குளம், கீழ்க்குளம் என வரும்.

## வேற்றுமையில் ளகர ஈறு

**ளகார இறுதி ணகார இயற்றே.** 397

'ளகார' இறுதிப் பெயர் வேற்றுமை வழிப், பின்னர் வல்லெழுத்து வரின் ணகார இறுதியின் தன்மையை அடையும். (ணகரம் டகரமாகத் திரியும்.) (எ-டு) முட்குறை; சிறை, தலை, புறம் என வரும்.

## அதற்கு வேறு முடிபு

**மெல்லெழுத் தியையின் ணகார மாகும்.** 398

ளகார விறுதிப் பெயரின் பின்னர் மெல்லெழுத்து வரின் வேற்றுமை வழி ளகரம் ணகர மாகும். (எ-டு) முண்ஞெரி; [illegible] முறி என வரும். முண்ஞெரிந்தது; முண்ணீண்டது; முண்மாண்டது எனவுங் கொள்க.

## அல்வழியில் ளகர ஈறு

**அல்வழி யெல்லாம் உறழென மொழிப.** 399

ளகார விறுதி அல்வழிகளெல்லாம் திரிந்தும் திரியாதும் முடியும் எனக் கூறுவர் புலவர். (எ-டு) முள்கடிது, முட்கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

## அதற்கு வேறு முடிபு

**ஆய்த நிலையலும் வரைநிலை யின்றே**
**தகரம் வரூஉங் காலை யான.** 400

'ளகர' விறுதிப் பெயரின் பின்னர், தகரம் வரும்போது, ளகரத்திற்குப் பதிலாக ஆய்தம் வருதலுங் கூடும். (எ-டு) முஃடீது, முட்டீது என வரும்.

## அதற்கு மேலும் ஒரு முடிபு

நெடியத னிறுதி இயல்பா குநவும்
வேற்றுமை யல்வழி வேற்றுமை நிலையலும்
போற்றல் வேண்டும் மொழியுமா ருளவே. 401

*நெடிலைக் கொண்ட ளகர வீற்று ஈரெழுத்தொரு மொழியுள் இயல்பாயிருக்கின்றனவும், அல்வழிக்கண் வேற்றுமை வழிச் செய்கை பெறுவனவும் உள்ள சொற்களும் உள; அவற்றைப் போற்றுதல் வேண்டும். (எ-டு) வாள் கடிது; கோள் கடிது; சிறிது, தீது, பெரிது எனவும்; தோட்கடிது, நாட்கடிது; சிறிது, தீது, பெரிது எனவும் வரும்.*

## ளகர ஈற்றுத் தொழிற்பெயர்

தொழிற் பெய ரெல்லாந் தொழிற் பெய ரியல. 402

*'ளகர' வீற்றுத் தொழிற்பெயரெல்லாம், ஞகார வீற்றுத் தொழிற் பெயரின் தன்மையைப் பெறும். (எ-டு) துள்ளுக் கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது எனவும்; துள்ளுக்கடுமை; சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை எனவும் வரும்.*

## 'இருள்' என்னுஞ் சொல்

இருளென் கிளவி வெயிலியல் நிலையும் 403

*'இருள்' என்னுஞ் சொல் அத்தும் இன்னும் பெற்று வெயி லின் தன்மையில் நிற்கும். (எ-டு) இருளத்துக் கொண்டான், இருளிற் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.*

## 'புள்' 'வள்' [illegible]

புள்ளும் வள்ளுந் தொழிற் பெய ரியல. 404

*புள், வள் என்பன இருவழியும் ஞகார வீற்றுத் தொழிற் பெயரின் தன்மையைப் பெறும். (எ-டு) புள்ளுக் கடிது, வள்ளுக் கடிது; புள்ளுக் கடுமை, வள்ளுக் கடுமை; புள்ளு ஞான்றது, வள்ளு ஞான்றது: புள்ளு ஞாற்சி, வள்ளு ஞாற்சி என வரும்.*

'மக்கள்' என்னுஞ் சொல்

மக்க ளென்னும் பெயர்நிலைக் கிளவியும்
தக்கவழி அறிந்து வலித்தலு முரித்தே. 405

'மக்கள்' என்னும் பெயர்ச் சொல்லின் ளகரம் தக்கவிடத்து ஆராயப்பட்டு டகரமாதலும் உண்டு. (எ-டு) மக்கட்கை; செவி, தலை, புறம் என வரும்.

## 3. புறனடை

இவ்வியலின் புறனடை

உணரக் கூறிய புணரியல் மருங்கின்
கணடுமசையற் குரியவை கண்ணினர் கொளலே. 406

இவ் வியலுள் அறியுமாறு கூறப்பட்ட புணர்ச்சிகளிற் கூறப்படாது, இலக்கியத்தில் வழங்கப்பட்டவற்றைக் காணின், அவற்றையும் கொள்ளுதல் வேண்டும்.

# 9. குற்றியலுகரப் புணரியல்

[குற்றியலுகர ஈறுகட்குரிய புணர்ச்சி இலக்கணம்]

## 1. குற்றியலுகரத்தின் இயல்பு

### குற்றியலுகரத்தின் பெயர், முறை, தொகை

ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்
ஆய்தத தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு மூன்றே உகரங் குறுகிடன். 407

*குற்றியலுகரம் குறுகுமிடம், ஈரெழுத்தொருமொழி, உயிர்த் தொடர்மொழி, இடைத்தொடர்மொழி, ஆய்தத் தொடர் மொழி, வன்றொடர்மொழி, மென்றொடர்மொழி ஆகிய ஆறுகும், (எ-டு) நாகு, வரகு, தென்கு, எஃகு, கொக்கு, குரங்கு என வரும்.*

### ஈரொற்றுத் தொடர்கள்

அவற்றுள்,
ஈரொற்றுத் தொடர்மொழி யிடைத்தொட ராகா. 408

*முற்கூறியவற்றுள் ஈரொற்றுத் தொடர்மொழி இடைத் தொடராகக் கருதப்பட மாட்டா. (எ-டு) ஈர்க்கு, மொய்ம்பு என வரும்.*

### இருவழியிலுங் குற்றுகரம்

அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா இறுதியும் உகர நிறையும். 409

*அல்வழி வேற்றுமை இரண்டிலும், அறுவகைப்பட்ட இறுதிக்கண்ணும் குற்றியலுகரம் குறுகாது, இயல்பாகிய அரை மாத்திரை பெற்று நிறைந்து நிற்கும். (எ-டு) நாகுகடிது, நாகு கடுமை; வரகுகடிது வரகுகடுமை என வரும்.*

### அதற்கு மேலும் ஒரு முடிபு

வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்
தொல்லை இயற்கை நிலையலு முரித்தே. 410

வல்லொற்றுத் தொடர்மொழியின் இறுதிக் குற்றியலுகரம் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வருமிடத்து, இயல்பின்கண் நிற்றலும் உண்டு. (எ-டு) கொக்குக்கடிது, கொக்குக்கடுமை என வரும்.

## 2. குற்றியலிகரம்

### குற்றியலிகரம் வருமாறு

**யகரம் வருவழி இகரங் குறுகும்**
**உகரக் கிளவி துவரத் தோன்றாது. 411**

வருமொழிமுதல் யகரமாயிருக்க, நிலைமொழி இறுதியாகிய உகரம் முற்றிலுங்கெட, அவ்விடத்திற், குற்றியலிகரம் வந்து குறுகும். (எ-டு) நாகியாது, வரகியாது, தெள்கியாது, எஃகியாது, கொக்கியாது, குரங்கியாது என வரும்.

## 3. குற்றுகரப் பொதுப்புணர்ச்சி

### நெடிற்றொடர், உயிர்த்தொடர்

**ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்**
**வேற்றுமை யாயின் ஒற்றிடை இனமிகத்**
**தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி. 412**

ஈரெழுத்து மொழியும், உயிர்த்தொடர் மொழியும் நிலைமொழியாய் இருக்க, வேற்றுமைக்கண், அவற்றின் இறுதிக் குற்றியலுகரத்தின் பற்றுக்கோட்டின் இனவொற்று இடையில் மிக, நிலைமொழியின் பின்னர், வல்லெழுத்து மிகுதியைத் தோற்றத்தின்கண் வேண்டுவர். (எ-டு) யாட்டுக்கால்; செவி, தலை, புறம் எனவும்; முயிற்றுக்கால்; சினை, தலை, புறம் எனவும் வரும்.

### அதற்கு வேறு முடிபு

**ஒற்றிடை யினமிகா மொழியுமா ருளவே**
**அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே. 413**

முற்சூத்திரத்தில் கூறப்பட்ட இடையில் இனவொற்று மிகுதியில்லா மொழிகளும் உள; அப்போது வல்லெழுத்து மிகுதியுமில்லை. (எ-டு) நாகுகால்; சினை, தலை, புறம் எனவும்; வரகுகதிர்; சினை, தலை, புறம் எனவும் வரும்.

## இடைத்தொடர், ஆய்தத்தொடர்

இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்
நடைஆ யியல என்மனார் புலவர். 414

இடையொற்றுத் தொடரும், ஆய்தத்தொடரும் வல்லெழுத்து வருவழி, நடையின்கண் இனவொற்று இடையில் மிகாதும், வல்லெழுத்து மிகுதி பெறுதும் நிற்குந் தன்மையை உடையன என்று புலவர் கூறுவர். (எ-டு) தெள்குகால்; சிறை, தலை, புறம் எனவும்; எஃகுகால்; சிறை, தலை, புறம் எனவும் வரும்.

## வன்தொடர், மென்தொடர்

வன்றொடர் மொழியும் மென்றொடர் மொழியும்
வந்தவல் லெழுத் தொற்றிடை மிகுமே
மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற் றெல்லாம்
வல்லொற் றிறுதி கிளையொற் றாகும். 415

குற்றியலுகர விறுதியாகிய வன்றொடர் மொழிக்கண்ணும், மென்றொடர் மொழிக்கண்ணும், பின்னர் வல்லெழுத்து வர, அவ் வல்லெழுத்தொற்று இடையில் மிகும். மென்றொடர் மொழி வல்லொற்றை இறுதியிற் கொண்ட கிளைப் பெயராயின், அவற்றின் மெல்லொற்றெல்லாம் கிளை வல்லொற்றாகும். (எ-டு) கொக்குக்கால்; சிறகு, தலை, புறம் எனவும்; குரக்குக்கால்; செவி, தலை, புறம் எனவும்; எட்டுக்குட்டு; செவி, தலை, புறம் எனவும் வரும்.

## மரப் பெயர்

மரப்பெயர்க் கிளவி கம்மே சாரியை. 416

குற்றியலுகர இறுதி மரப்பெயர்கள் வன்றொடர் மென்றொடராக இருப்பின், பின்னர் வல்லெழுத்து வரும்வழி, 'அம்' சாரியை இடையில் வரும். (எ-டு) தேக்கங்கோடு; செதிள், தோல், பூ என வரும்.

## அதற்கு மேலும் ஒரு முடிபு

மெல்லொற்று வலியா மரப்பெயரு முளவே. 417

மரம் உணர்த்தும் மென்தொடர் மொழியுள் மெல்லொற்று வல்லொற்று ஆகாத சொற்களும் உள்ளன. (எ-டு) குருந்தங்கோடு; செதிள், தோல், பூ எனவும்; புன்கங்கோடு; செதிள், தோல், பூ எனவும் வரும்.

### நெடிற்றொடர், வன்றொடர்

ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரும்
அம்மிடை வரற்கும் உரியவை உளவே
அம்மர பொழுகும் மொழிவயி னான. 418

*குற்றியலுகரத்து இறுதியாகிய ஈரெழுத்து ஒருமொழியும் வன்றொடரும் நிலைமொழியா யிருக்க, வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வர, அவற்றுள், இடையில் அம்முச் சாரியை வருதற்குரிய சொற்களும் உள. அவை, அவ் விலக்கணத்தோடு ஒழுகும் மொழிகளிடத்துக் காணப்படும். (எ-டு) ஏறங்கோள்; வட்டம், போர், புற்றம் பழம் என வரும்.*

### சில மென்றொடர் மொழிகள்

ஒற்றுநிலை திரியா தக்கொடு வரூஉம்
அக்கிளை மொழியும் உளவென மொழிப. 419

*அம் மென்றொடர் மொழியுள் வல்லெழுத்து வரும்வழி மெல்லொற்று வல்லொற்றாகாது அக்குச் சாரியை பெற்று வருவனவும் உள்ளன. (எ-டு) குன்றக்கூகை; மன்றப் பெண்ணை என வரும்.*

### எண்ணுப் பெயர்

எண்ணுப் பெயர்க் கிளவி உருபியல் நிலையும். 420

*குற்றியலுகர இறுதியாகிய எண்ணுப் பெயர்கள் மொழியாயிருக்க வல்லெழுத்து வரும்வழி, உருபியலிற் கூறியவாறு 'அன்' சாரியை பெறும். (எ-டு) ஒன்றன் காயம், இரண்டன் காயம்; கஃகு, தொரை, பயறு என வரும்.*

## 4. குற்றுகரச் சிறப்புப்புணர்ச்சி

### வண்டு, பெண்டு என்னுஞ் சொற்கள்

வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும். 421

*'வண்டு', 'பெண்டு' என்னுஞ் சொற்களின் பின்னர் வல்லெழுத்து வரும்வழி, அவை, 'இன்' சாரியையோடு பொருந்தும். (எ-டு) வண்டின்கால், பெண்டின்கால் என வரும்*

### பெண்டு என்னுஞ் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

பெண்டென் கிளவிக் கன்னும் வரையார். 422

*'பெண்டு' என்னுஞ் சொல்லுக்கு 'அன்' சாரியையும் நீக்க மாட்டார்கள். (எ-டு) பெண்டன் கை; செவி, தலை, புறம் என வரும்.*

### வினைப்பெயர் சுட்டுப்பெயர்

யாதென் இறுதியுஞ் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் உருபியல் நிலையும். 423

யாது, அஃது, இஃது, உஃது ஆகிய குற்றியலுகர ஈற்றுச் சொற்கள், வல்லெழுத்து வரும்வழி உருபியலிற் கூறிய தன்மை பெறும். அஃதாவது, முன்னையது 'அன்' பெறும்; ஏனை மூன்றும் அன் பெற்று ஆய்தக் கேட்டினைக் கொள்ளும். (எ-டு) யாதன் கோடு, அதன்கோடு, இதன்கோடு, உதன்கோடு என வரும்.

### அல்வழியிற் சுட்டுப் பெயர்

முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழி யான. 424

சுட்டு முதலாகிய ஆய்தத் தொடர்மொழியின் பின்னர் உயிர் வருமிடத்து, அல்வழிக்கண் ஆய்தம் நிலை பெறல் வேண்டும். (எ-டு) அஃதடை, இஃதடை, உஃதடை; ஆடை, இலை என வரும்.

### அல்வழியில் அதற்குமேலும் ஒரு முடிபு

ஏனைமுன் வரினே தானிலை யின்றே. 425

சுட்டு முதலாகிய ஆய்தத் தொடர்மொழியின் பின்னர் உயிரல்லாத எழுத்து வரின், அல்வழிக்கண் ஆய்தம் நிலையாது. (எ-டு) அதுகடிது, இதுகடிது, உதுகடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது; யாது, தீது, வலிது என வரும்.

### பொதுவாக அல்வழியில் குற்றுகர ஈறுகள்

அல்லது கிளப்பின் எல்லா மொழியும்
சொல்லிய பண்பின் இயற்கை யாகும். 426

குற்றியலுகர விற்று எல்லா மொழியும், பின்னர், வல்லெழுத்து வரும்வழி, அல்வழிக்கண் சொல்லப்பட்ட தன்மைய வாய் இயற்கையாகும். (எ-டு நாகு கடிது, வரகு கடிது, தெள்கு கடிது, எஃகு கடிது, குரங்கு கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

### வன்றொடர்

வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே. 427

குற்றியலுகர இறுதியாகிய வல்லொற்றுத் தொடரின் பின்னர், வல்லெழுத்துவரின் அல்வழிக்கண் அவ் வல்லெழுத்து

மிகும். (எ-டு) கொக்குக் கடிது; சிறிது, தீது, பெரிது என வரும்.

## ஆங்கு, யாங்கு முதலிய மென்தொடர் மொழிகள்

சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்
யாவினா முதலிய மென்றொடர் மொழியும்
ஆயியல் திரியா வல்லெழுத் தியற்கை. 428

சுட்டாகிய பகுதி நீண்ட மென்றொடர்க் குற்றியலுகர இறுதியும், வினாப்பொருளை யுணர்த்தும் யாவினை முதலாகக் கொண்ட மென்றொடர்க் குற்றியலுகர இறுதியும், பின்னர் வல்லெழுத்து இயற்கையாக வருமிடத்து, அவ்வழிக்கண், அத் தன்மையில் திரியா. (எ-டு) ஆங்குக் கொண்டான், ஈங்குக் கொண்டான், ஊங்குக் கொண்டான், யாங்குக் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

## யாங்கு என்பதற்கு மேலும் ஒரு முடிபு

யாவினா மொழியே இயல்பு மாகும். 429

'யா' என்னும் வினாவினை முதலாகக் கொண்ட மென்றொடர் மொழி, பின்னர் வல்லெழுத்து வருவழி, இயற்கையும் ஆகும். (எ-டு) யாங்கு கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

## அவற்றிற்கு நிலைமொழிச் செய்கை

அந்நான் மொழியும் தந்நிலை திரியா. 430

ஆங்கு, ஈங்கு, ஊங்கு, யாங்கு என்னும் நான்கு மொழிகளும்; வல்லெழுத்து வருமிடத்து, தம் நிலையினின்றும் திரியா. (எ-டு) அங்குக் கொண்டான், இங்குக் கொண்டான், உங்குக் கொண்டான், எங்குக் கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என வரும்.

## உண்டு என்னுஞ் சொல்

உண்டென் கிளவி உண்மை செப்பின்
முந்தை இறுதி மெய்யொடுங் கெடுதலும்
மேனிலை யொற்றே ளகாரம் ஆதலும்
ஆமுறை யிரண்டும் உரிமையும் உடைத்தே
வல்லெழுத்து வருஉங் காலை யான. 431

உண்மை என்னும் பொருளில் வரும், 'உண்டு' என்னுஞ் சொல்லின் பின்னர், வல்லெழுத்து வரின், டு கெட்டு, ணகரம்

ளகரமாய்த் திரிதற்கு உரிமையுமுண்டு. (எ-டு) உள்பொருள் உண்டு பொருள் எனவும்; உண்டு கானம், உண்டு சாக்காடு, உண்டு தாமரை எனவும், உண்டுஞாண்; நூல், மணி, யாழ், வட்டு, அடை எனவும் வரும்.

### திசைப் பெயர்

இருதிசை புணரின் ஏயிடை வருமே. 432

குற்றியலுகர இறுதியாகிய திசைப்பெயர் மற்றைத் திசைப் பெயரோடு புணரும்போது, இடையில் ஏகாரம் வரும். (எ-டு) வடக்கே தெற்கு, கிழக்கே மேற்கு என வரும்.

### திசைப்பெயர் முன் திசைப்பெயர்

திரிபுவேறு கிளப்பின் ஒற்றும் இறுதியும்
கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்
ஒற்றுமெய் திரிந்து னகார மாகும்
தெற்கொடு புணருங் காலை யான, 433

இரு திசைச்சொற்களும் இரு திசையைக் குறிக்காது, அவற்றினின்றும் திரிந்த கோணத்திசைகளைக் குறிப்பின், நிலை மொழியிறுதியும், தான் ஏறிநின்ற மெய்யும், அதன் முன்ன ருள்ள ஒற்றும் கெடும் என்று கூறுவர் புலவர். நிலைமொழி, 'தெற்கு' என்னுஞ் சொல்லாய் இருப்பின், இறுதி மெய்யுடன் கெட, ஒற்றுமெய் னகரமாகும். (எ-டு) வடக்கிழக்கு, வட மேற்கு; தென் கிழக்கு, தென்மேற்கு என வரும்.

## 5. குற்றுகர எண்ணுப் புணர்ச்சி

### பத்தொடு எண்ணுப் பெயர்

ஒன்றுமுத லாக எட்டன் இறுதி
எல்லா எண்ணும் பத்தன் முன்வரின்
குற்றிய லுகரம் மெய்யொடும் கெடுமே
முற்றஇன் வரூஉம் இரண்டலங் கடையே. 434

'பத்து' என்பதன் பின்னர், ஒன்று முதல் எட்டு இறுதி யாகவுள்ள எல்லா எண்ணுப் பெயர்களும் வரின், 'து' கெடும்; இரண்டல்லாத ஏனைய பெயர்கள் வருமிடத்து, இடையில் 'இன்' சாரியை வரும். (எ-டு) பதினொன்று, பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, பதினாறு, பதினேழு, பதினெட்டு என வரும்.

பத்தின் முன்

பத்தொற் றுக்கெட னகாரம் இரட்டல்
ஒத்த தென்ப இரண்டுவரு காலை. 435

*பத்து என்பதன் பின்னர் இரண்டு வரும்போது, (து கெட்ட பின்னர்) தகர வொற்றுக் கெட, அவ் விடத்து னகரம் இரட்டும் என்பர் ஆசிரியர் (எ-டு) பன்னிரண்டு என வரும்.*

பத்தின் முன் ஆயிரம்

ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது. 436

*பத்து என்பதன் பின்னா ஆயிரம் வரினும் அத்தன்மையி னின்றுந்திரியாது. (எ-டு) பதினாயிரம் என வரும்.*

பத்தின்முன் நிறை அளவுப் பெயர்கள்

நிறையு மளவும் வருஉங் காலையும்
குறையா தாகும் இன்னென் சாரியை. 437

*'பத்து' என்பதன் பின்னர் நிறைப்பெயரும் அளவுப் பெய ரும் வருமிடத்து, இடையில் 'இன்' என்னுஞ் சாரியை குறை யாது வரும். (எ-டு) பதின் கழஞ்சு; தொடி, பலம், எனவும்; பதின்கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும் வரும்.*

எண்ணுப் பெயரொடு பத்து

ஒன்றுமுத லொன்பான் இறுதி முன்னர்
நின்ற பத்தி னொற்றுக்கெட ஆய்தம்
வந்திடை நிலையும் இயற்கைத் தென்ப
கூறிய இயற்கைக் குற்றிய லுகரம்
ஆறன் இறுதி அல்வழி யான. 438

*ஒன்று முதல், ஒன்பது இறுதியாகவுள்ள குற்றியலுகர இறுதிச் சொற்கள், நிலைமொழியாகவும், பத்து வருமொழியாகவு மிருக்கப், பத்து என்பதில் தகரவொற்றுக் கெட, அவ்விடத்தில் ஆய்தம் வருதல் தன்மை உடையது. நிலைமொழிகளுள், "ஆறு", என்பதைத் தவிர்த்து, ஏனையவற்றுள், குற்றியலுகரம் முன்னர்க் கூறப்பட்ட தன்மைத்தாய் மெய்யொடுங் கெடும். (எ-டு) ஒரு பஃது, இருபஃது என வரும்.*

அதன்கண் ஒன்று இரண்டு என்னுஞ் சொற்கள்

முதலீ ரெண்ணினொற்று ரகரம் ஆகும்
உகரம் வருதல் ஆவயி னான. 439

முதலிரண்டு எண்ணாகிய ஒன்று இரண்டு ஆகியவற்றுடன் பத்து புணரும்போது, அவற்றின் ஒற்றாகிய னகரமும் ணகரமும், ரகரவொற்றாய்த் திரியும், அதன்பின் உகரம் வரும். (எ-டு) ஒருபஃது என வரும்.

## இரண்டு என்பதற்கு மேலும் ஒரு முடிபு

இடைநிலை ரகரம் இரண்டெனன் எண்ணிற்கும்
நடைமருங் கின்றே பொருள்வயி னான. 440

'இரண்டு' என்னும் எண்ணிற்குப், பொருளிடத்தின்கண் இடை நின்ற ரகரங் கெடும். (எ-டு) இருபஃது என வரும்.

## மூன்று, ஆறு

மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்
மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும். 441

மூன்று ஆறு இவற்றின் நெடு முதல் குறுகும்; மூன்றின் னகர வொற்றுப் பகர வொற்றாகும். (எ-டு) முப்பஃது என வரும்.

## நான்கு என்னுஞ் சொல்

நான்க னொற்றே றகாரம் ஆகும். 442

நான்கு என்பதன் னகர வொற்று றகர வொற்று ஆகும். (எ-டு) நாற்பஃது என வரும்.

## ஐந்து என்னுஞ் சொல்

ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும். 443

'ஐந்து' என்பதன் நகர வொற்று, மகர வொற்று ஆகும் (எ-டு) ஐம்பஃது என வரும்.

## எட்டு என்னுஞ் சொல்

எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும். 444

'எட்டு' என்பதன் டகர வொற்று, ணகர வொற்றாகும். (எ-டு) எண்பஃது என வரும்.

## 'ஒன்பது' என்னுஞ் சொல்

ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்
முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்
பஃதென் கிளவி யாய்தபக ரங்கெட

நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகாரம் ஆகும். 445

'ஒன்பது' என்னுஞ் சொல்லின் ஒகரத்திற்கு முன் தகர வொற்றுத் தோன்றும்; அதன் பின்னரிடத்துள்ள னகரவொற்று, இரண்டு ணகரவொற்றாக மாறும்; நிலைமொழி இரண்டிலு முள்ள பத்தென் கிளவியின் பகரமும் ஆய்தங் கெட, அவ் விடத்திலே ஊகாரந் தோன்றும்; வருமொழி இறுதிக் குற்றியலுகரத்து முன்னருள்ள தகர வொற்று, றகர வொற்றா கும். (எ-டு) தொண்ணூறு என வரும்.

## அவ் வெண்ணுப்பெயர்களின் முன் அளவு, நிறைப் பெயர்கள்

அளந்தறி கிளவியும் நிறையென் கிளவியும்
கிளந்த இயல தோன்றுங் காலை. 446

ஒன்று முதல் ஒன்பான்வரை நிலைமொழியா யிருக்க, அளவுப் பெயரும் நிறைப்பெயரும் வருமொழியாய் வருமிடத்து, அவை முற்கூறப்பட்ட தன்மையைப் பெறும். (எ-டு) ஒருகலம், இருகலம்; சாடி, தூதை, பானை, வட்டி எனவும்; ஒருகழஞ்சு, இருகழஞ்சு; தொடி, பலம் எனவும் வரும்.

## அதன்கண் 'மூன்று' என்னுஞ் சொல்

மூன்றன் ஒற்றே வந்த தொக்கும். 447

அளவுப் பெயரும் நிறைப் பெயரும் வருமொழியாய் வரின், மூன்று என்பதன் ஒற்று, வருமொழி முதலை ஒக்கும். (எ-டு) முக்கலம்; சாடி, தூதை, பானை என வரும்.

## ஐந்து என்னுஞ் சொல்

ஐந்த னொற்றே மெல்லெழுத் தாகும். 448

அளவுப் பெயரும் நிறைப் பெயரும் வருமொழியாய் வரின், 'ஐந்து' என்பதன் ஒற்று, வருமொழி முதலின் இன மெல்லெழுத் தாகும். (எ-டு) ஐங்கலம்; சாடி, தூதை, பானை எனவும்; ஐங்கழஞ்சு; தொடி, பலம் எனவும் வரும்.

## அவ்விரண்டன் மேன்முடிபுகட்கு வரையறை

கசதப முதன்மொழி வருஉங் காலை. 449

வருமொழி முதல் கசதபக்களா யிருக்க, நிலைமொழியா யுள்ள மூன்று, ஐந்து இவற்றின் னகர நகரவொற்றுக்கள் வந்த தொக்கும். (எ-டு) முக்கலம்; சாடி, தூதை, பானை எனவும்; ஐங்கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்.

### எட்டு என்னுஞ் சொல்

நமவ என்னும் மூன்றொடு சிவணி
அகரம் வரினும் எட்டன்முன் இயல்பே. 450

'எட்டு' என்பதன் முன்னர், முற்கூறப்பட்ட வல்லெழுத்துக் களோடு ந ம வ அ இவை வரின், 'எட்டன்ஒற்றே ணகர மாகும்' என்னுஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட தன்மையைப் பெறும். (எ-டு) எண்கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும்; எண்கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்.

### ஐந்து, மூன்று என்னும் இரண்டு சொற்களுக்கும் ஒத்த முடிபு

ஐந்தும் மூன்றும் நமவருங்
காலை வந்த தொக்கும் ஒற்றியல் நிலையே. 451

ஐந்து, மூன்று இவற்றின் பின்னர், வருமொழி முதலில் நம இவை வருங்காலத்தில், அவ்வற்றின் நகர னகரங்கள் ந ம வாக மாறும். (எ-டு) முந்நாழி, மும்மண்டை; ஐந்நாழி, ஐம்மண்டை என வரும்.

### மூன்று, நான்கு, ஐந்துமுன் வகர முதன்மொழி

மூன்றன் ஒற்றே வகாரம் வரும்வழித்
தோன்றிய வகாரத் துருவா கும்மே. 452

வகரம் வருமொழி முதலாய் வரும்வழி, 'மூன்று' என்பதன் னகர வொற்றுப், பின்னர்த் தோன்றிய வகரத்தின் வடிவாகும். (எ-டு) 'முவ்வட்டி' என வரும்.

நான்கன் ஒற்றே லகார மாகும். 453

வகரம் வருமிடத்தில், நான்கு என்பதன் னகர வொற்று லகர வொற்றாகும், (எ-டு) நால்வட்டி என வரும்,

ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே. 454

வகரம் வருவழி ஐந்தாம் எண்ணின்கண் நின்ற நகரவொற்று வடிவு கெடும். (எ-டு) ஐவட்டி என வரும்.

### ஒரு, இரு முன் உயிர் முதன் மொழி

முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீடல் ஆவயி னான. 455

றாகிய ஒன்று இரண்டன் பின்னர் உயிர் வருமிடத்து, உகரங் கெடுமென்று உரைப்பர்; அவ்விடத்தில், முதலெழுத்து நீடல் வேண்டும். (எ-டு) ஓரகல், ஈரகல்; ஓருழக்கு, ஈருழக்கு என வரும்.

## மூன்று, நான்கு, ஐந்துமுன் உயிர் முதன்மொழி

மூன்றும் நான்கும் ஐந்தென் கிளவியும்
தோன்றிய வகரத் தியற்கை யாகும். 456

மூன்று, நான்கு, ஐந்து இவற்றின்பின் உயிர் வருமிடத்து, அவை, வருமொழி முதலில் யகரம் வருவழிப் பெற்ற தன்மையைப் பெறும். (எ-டு) முவ்வகல், முவ்வுழக்கு எனவும்; நாலகல், நாலுழக்கு எனவும்; ஐயகல், ஐயுழக்கு எனவும் வரும்,

## அவற்றுள் மூன்று என்பதற்கு மேலும் ஒரு முடிபு

மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே
உழக்கென் கிளவி வழக்கத் தான. 457

உழக்கு வருமொழியாய் வழக்கின்கண் வருமிடத்தில், மூன்று என்பதன் முதலில் உள்ள உயிர் நீடலும் உரிமையாகும். (எ-டு) மூவுழக்கு என வரும்.

## ஆறு என்பதற்கும் அம் முடிபு

ஆறென் கிளவி முதனீ டும்மே. 458

ஆறு என்னும் எண்ணுப்பெயரின் பின், அகல் உழக்கு என்பவை வரின், முன்னர்க் குறுகி நின்ற முதலெழுத்து நீண்டு முடியும். (எ-டு) ஆறகல், ஆறுழக்கு என வரும்.

## ஒன்பது என்னுஞ் சொல்

ஒன்பா னிறுதி உருபுநிலை திரியாது
இன்பெறல் வேண்டுஞ் சாரியை மொழியே. 459

ஒன்பது என்பதன் இறுதியில் உள்ள, 'ன்பது' என்பது, தன் வடிவிற் கெடாது இன் என்னுஞ் சாரியை மொழியைப் பெறுதல் வேண்டும். (எ-டு) ஒன்பதின் கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி; அகல், உழக்கு எனவும்; கழஞ்சு, தொடி, பலம் எனவும் வரும்.

## ஒன்று முதல் ஒன்பது எண்முன் நூறு

நூறுமுன் வரினுங் கூறிய இயல்பே. 460

ஒன்று முதல் ஒன்பது இறுதியாகிய சொற்களின் பின்னர் நூறு வரினும், அவை பத்து என்பதன் பின் வரும்போதுள்ள தன்மையைப் பெறும் (எ-டு) ஒருநூறு, இருநூறு, அறுநூறு, எண்ணூறு என வரும்.

### அதன்கண் மூன்று என்னுஞ் சொல்

மூன்ற னொற்றே நகாரம் ஆகும். 461

மூன்று என்பதன் னகரம் நகரமாகும். (எ-டு) முந்நூறு என வரும்.

### அதன்கண் நான்கு ஐந்து

நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா. 462

நான்கு ஐந்து இவற்றின் ஒற்றுத் தன்னுருவத்தினின்றும் திரியா. (எ-டு) நானூறு, ஐந்நூறு.

### அதன்கண் ஒன்பது என்னுஞ் சொல்

ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை யொற்றே ளகாரம் இ ரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ வாகும் இயற்கைத் தென்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகாரம் ஒன்றும். 463

ஒன்பது நிலைமொழியாகவும், நூறு வருமொழியாகவும் இருக்குமிடத்து. 'ஒன்பது' என்பதன் முதலெழுத்து முற்கூறப்பட்ட தன்மையவாய், தன்முன் தகர வொற்றைப் பெறும். அதன் பின்னருள்ள, 'ன்ப' என்பது கெட, அதனிடத்து ஒற்றாகிய ளகரம் இரட்டும். நூறு என்பதன் நகரங் கெட, ஊ, ஆவாக ஆகும் தன்மையது. அவ்விடத்து, ஆகாரத்திற்கும் இறுதி எழுத்திற்கும் இடையில், 'இர' வருதல் வேண்டும். இறுதி மெய்யாகிய 'று' கெட்டு, அவ்விடத்தில் மகர வொற்று வரும். (எ-டு) தொள்ளாயிரம் என வரும்.

### ஒன்று இரண்டு முன் ஆயிரம்

ஆயிரக் கிளவி வருஉங் காலை
முதலீ ரெண்ணின் உகரங் கெடுமே. 464

ஆயிரம் என்பது வருமொழியா யிருக்க, ஒன்று இரண்டு இவற்றின் உகரம் கெடும். (எ-டு) ஓராயிரம், ஈராயிரம் என வரும்.

அவற்றிற்கு மேலும் ஒரு முடிபு

முதனிலை நீட்டினும் மான மில்லை. 465

ஒரு இரு இவற்றின் முதலெழுத்து நீண்டாலுங் குற்ற மில்லை (எ-டு) ஓராயிரம், ஈராயிரம் என வரும்.

மூன்று முன் ஆயிரம்

மூன்ற னொற்றே வகாரம் ஆகும். 466

'மூன்று' என்பதன் பின்னர் ஆயிரம் வரின், அதன் னகர வொற்று வகார மாகும். (எ-டு) மூவ்வாயிரம் என வரும்.

நான்கு முன் ஆயிரம்

நான்க னொற்றே லகாரம் ஆகும். 467

நான்கு என்பதன் பின்னர், ஆயிரம் வரின், அதன் னகர வொற்று லகர வொற்றாகும். நாலாயிரம் என வரும்.

ஐந்து முன் ஆயிரம்

ஐந்த னொற்றே யகாரம் ஆகும். 468

'ஐந்து' என்பதன் பின்னர் ஆயிரம் வரின், அதன் நகர வொற்று யகரமாகும், (எ-டு) ஐயாயிரம் என வரும்.

ஆறு முன் ஆயிரம்

ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும், 469

ஆறு என்பதன் பின்னர் ஆயிரம் வரின், அவ்வாறின் குற்றியலுகரம், தனக்குப் பற்றுக் கோடாகிய மெய்யை விட்டுத் தான் கெடுதல் வேண்டும் (எ-டு) ஆறாயிரம் என வரும்.

ஒன்பது முன் ஆயிரம்

ஒன்பா னிறுதி உருபுநிலை திரியாது
இன்பெறல் வேண்டுஞ் சாரியை மரபே. 470

ஒன்பது என்பதன் பின்னர் ஆயிரம் வரின், இறுதி யெழுத் துக்களின் வடிவந்திரியாது இன்னென்கிற சாரியையைப் பெறும். (எ-டு) ஒன்பதினாயிரம் என வரும்.

## ஒன்று முதல் ஒன்பது எண்முன் நூறாயிரம்

நூறா யிரமுன் வருஉங் காலை
நூற னியற்கை முதனிலைக் கிளவி. 471

*ஒன்று முதல் ஒன்பான் வரையுள்ள எண்ணின் பின்னர், நூறாயிரம் வருமொழியாய் வருமிடத்து, முதலிற் கூறப்பட்ட ஒன்று என்னுஞ் சொல், நூறு என்பது வருமொழியாய் வருமிடத்துப் பெறும் தன்மையைக் கொள்ளும்; அஃதாவது, என மாறும். (எ-டு) ஒரு நூறாயிரம், இரு நூறாயிரம், இரண்டு நூறாயிரம்; மூந்நூறாயிரம், மூன்று நூறாயிரம்; நா நூறாயிரம், நான்கு நூறாயிரம்; ஐந்நூறாயிரம், ஐந்து நூறாயிரம்; அறு நூறாயிரம், ஆறு நூறாயிரம்; எண்ணூறாயிரம், எட்டுநூறாயிரம்; ஒன்பது நூறாயிரம் என வரும்.*

## நூறு முன், ஒன்று முதல் ஒன்பது எண்கள்

நூறென் கிளவி ஒன்றுமுத லொன்பாற்கு
ஈறுசினை யொழிய இனவொற்று மிகுமே. 472

*'நூறு' என்பதன் பின்னர், ஒன்று முதல் ஒன்பான் வரை வருமொழியாய் வருமிடத்து, நிலைமொழி யீற்றின் சினையாகிய குற்றியலுகரம் நிற்க, அதன் பற்றுக்கோட்டின் இனவொற்று மிகும். (எ-டு) நூற்றொன்று; இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது என வரும்*

## நூறுமுன் ஒருபஃது முதலியன

அனவயூர் பத்தினும் அத்தொழிற் றாகும். 473

*ஒன்று முதல் ஒன்பது வரையுள்ள சொற்களைத் தழுவி வந்த பத்து என்னுஞ் சொல், நூறு என்பதன்பின் வரினும், அந் நிலை மொழிமுன் கூறப்பட்ட தொழிலைப் பெறும். (எ-டு) நூற்றொருபஃது; இருபஃது, முப்பஃது, நாற்பஃது, ஐம்பஃது, அறுபஃது, எழுபஃது எண்பஃது என வரும்.*

## நூறு முன் அளவுப்பெயர் நிறைப் பெயர்

அளவும் நிறையும் ஆயியல் திரியா
குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர். 474

*'நூறு' என்பதன் பின்னர் அளவுப் பெயர் நிறைப் பெயர் இவை வரின் அவ்வியலில் திரியா. அஃதாவது, இனவொற்று மிகும். குற்றியலுகரமும் வல்லொற்றுத் தொடரின் இயற்கை*

யர்கிய வல்லெழுத்து மிகுதியும் முற்கூறப்பட்டனவாம் எனக் கூறுவர் புலவர். (எ-டு) நூற்றுக்கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும், கழஞ்சு, தொடி, பலம்; எனவும் வரும்.

## ஒருபஃது முதலியவற்றின் முன் ஒன்று முதல் ஒன்பது எண்கள்

ஒன்றுமுத லாகிய பத்தூர் கிளவி
ஒன்றுமுத லொன்பாற் கொற்றிடை மிகுமே
நின்ற ஆய்தங் கெடுதல் வேண்டும். 475

ஒருபஃது, இருபஃது, முப்பஃது முதலிய சொற்களின் பின்னர், ஒன்று முதல் ஒன்பதுவரை வரின், அவ்விடத்து ஆய்தம் கெடும்; ஒற்று இடை மிகும். (எ-டு) ஒருபத்தொன்று முதலியன வாக வரும்.

## அவற்றின் முன் ஆயிரம்

ஆயிரம் வரினே இன்னென் சாரியை
ஆவயி னொற்றிடை மிகுத லில்லை. 476

ஒருபஃது, இருபஃது முதலியவற்றின் பின்னர் ஆயிரம் வரின், இன் சாரியை வரும்; அப்போது இடையில் ஒற்று மிகாது; ஆய்தம் கெடும். (எ-டு) ஒரு பதினாயிரம், இருபதினாயிரம் என ஒட்டுக.

## அவற்றின்முன் அளவுப்பெயர் நிறைப்பெயர்

அளவும் நிறையும் ஆயியல் திரியா. 477

ஒருபஃது இருபஃது முதலியவற்றின் பின்னர், அளவுப் பெயரும் நிறைப் பெயரும் வரின், அவை, முன்கூறிய தன்மையில் திரியா, அஃதாவது, ஆய்தம் கெட்டு ஒற்று மிகாது இன் சாரியை வரும். (எ-டு) ஒருபதின்கலம், இருபதின் கலம்; சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு எனவும்; ஒரு பதின் கழஞ்சு; தொடி, பலம் எனவுங் கொள்க.

## ஒன்றுமுதல் எண்முன் பொருட் பெயர்

முதனிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்
ஞநமத் தோன்றினும் யவவந் தியையினும்
முதனிலை இயற்கை என்மனார் புலவர். 478

ஒன்று என்னுஞ் சொல்லின் பின்னர் வல்லெழுத்து முதன் மொழிவரினும், ஞ், ந், ம், ய், வ், இவை வரினும், முற்கூறிய

இயற்கையைப் பெறும் என்று கூறுவர் புலவர். (எ-டு) ஒருகல், சுனை, துடி, பறை, ஞாண், நூல், மணி, யாழ், வட்டு என வரும், இரு கல், இரண்டு கல்; சுனை, துடி, பறை, ஞாண், நூல், மணி, யாழ், வட்டு எனவும் ஒன்பது வரை ஒட்டுக.

## அவற்றுடன் உயிர்முதல்மொழியும் யகரமும்

அதனிலை உயிர்க்கும் யாவரு காலை
முதனிலை ஒகரம் ஓவா குமமே
ரகரத் துகரந் துவரக் கெடுமே. 479

ஒன்று, உயிர்க் கண்ணும் யாவின் கண்ணும் அந்நிலையைப் பெற, ஒகரம் ஓவாகும்; ரகரத் துகரம் முழுமையும் கெடும். (எ-டு) ஓரடை, ஓராடை, எனவும்; இருவடை, இருவாடை; இரண்டடை, இரண்டாடை எனவும்; உயிர் முதல்மொழிகளை ஒட்டிக் கொள்க.

## இரண்டு முதல் ஒன்பது எண்ணின் முன் 'மா' என்னுஞ் சொல்

இரண்டுமுத லொன்பான் இறுதி முன்னர்
வழங்கியல் மாவென் கிளவி தோன்றின்
மகர அளபொடு நிகரலு முரித்தே. 480

இரண்டு முதல் ஒன்பது வரையுள்ள சொற்களின் பின்னர், வழக்கிலுள்ள மா என்னுஞ் சொல் வரின், மகர முதலளவுப் பெயரோடு, ஒரு தன்மைத்தாகலும் உரிமையானதேயாம். (எ-டு) இரண்டுமா, இருமா; மூன்றுமா, மும்மா என இவ்வாறு எல்லாவற்றோடும் ஒட்டுக.

# 6. அதிகாரப் புறனடை

## புள்ளி மயங்கியலுள் ஒழிந்துநின்ற மெய்யீறுகளின் செய்யுள் முடிபு

லனவென வருஉம் புள்ளி யிறுதிமுன்
உம்முங் கெழுவும் உளப்படப் பிறவும்
அன்ன மரபின மொழியிடைத் தோன்றிச்
செய்யுள் தொடர்வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள்வயி னான 481

ல், ன் இவற்றை ஈறாகக்கொண்ட மொழியின் பின்னர்ச், செய்யுட்கண் தொடர்வரின் இடையில் உம், கெழு, என்பனவும், பிற சாரியைகளும், வேற்றுமைப் பொருட்புணர்ச்சியின் கண்,

தோன்றும். (எ-டு) "வானவரி வில்லுந் திங்களும் போலும், எனவர், கலங்கெழு கானவர் நல்குறு மகளே" எனவும்" "மாங்கிக் கிழவனும் போ[illegible]ம் எனவும், 'கான்கெழு நாடு" எனவும் வரும்.

## எழுத்து அதிகாரத்திற் புணர்க்கப்படாத சொற்கள்

உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்
குறிப்பினும் பண்பினும் இசையினுந் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்
உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்
செய்யுஞ் செய்த என்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலுந் தொழில்தொகு மொழியும்
தம்மியல் கிளப்பின் தம்முற் றாம்வரூஉம்
எண்ணின் தொகுதி உ[illegible] பிறவும்
அன்னவை [illegible] மருங்கின் பாத்திய
புணரியல் நிலையிடை உணரத் தோன்றா. 482

உயிர், புள்ளி இ[illegible] ஆகிய[illegible] [illegible] உரிச் சொற்களும், உயர்திணை அஃறிணை இருபாற் சார்ந்த ஐம்பா லினையும் அறிவிக்கும் எழுத்துக்கள் [illegible] பண்புத்தொகைச் சொற்களும்; காலத்தைக் காட்டும் வினைப்பகுதி தொகும் வினைத்தொகைச் சொற்களும்; [illegible] குறிக்கத் தம் மின் [illegible] பெயர் [illegible] தொகைச் சொற்களும்; [illegible] வழங்கிவரப் பட்ட [illegible] தோன்ற[illegible] அவை [illegible] என்றுமேயன்றி, அவை புணரும் [illegible] கூறப்படவில்லை என்க

## எழுதது அதிகாரத்திற்குப் புறனடை

கிளந்த அல்ல செய்யுளுட் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர் 483

[illegible] சூத்திரங்களுள் கூறப்படாதனவாய்ச், செய்யுளின் கண் திரிந்து வருவனவும், வழக்கின்கண் மருவி வருவனவும், கூறப்பட்ட விதிகளுக்கு மாறுபடத் தோன்றின், வழக்கினை உணர்ந்து நடத்தல், நல்லறிவு உடையார்களது கடமையாம்.

# 1. கிளவியாக்கம்

[பொருள்தரும் முறையிலே எழுத்துக்கள்
சொற்கள் ஆகும் முறைமை]

## 1. உயர்திணை அஃறிணை

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே. 484

*'மக்கள்' என்று சுட்டப் பெறுபவர்களைப் புலவர் உயர்திணை என்று கூறுவர். மக்கள் அல்லாத பிறவற்றை எல்லாம் அஃறிணை என்று கூறுவர். அவ்விரு திணைகளின் மேலுஞ் சொற்கள் நிகழும்.*

## 2. பால்

*உயர்திணையுள் மூன்று பால்*

ஆடூஉ அறிசொல் மகடூ அறிசொல்
பல்லோர் அறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே. 485

*ஆண்மகனை அறியுஞ் சொல்லும், பெண்மகளை அறியுஞ் சொல்லும், பலரை அறியுஞ் சொல்லோடு பொருந்தி, அம் முப்பகுதிச் சொல்லும் உயர்திணையிடத்து வழங்குவனவாம்.*

*அஃறிணையுள் இரண்டு பால்*

ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று
ஆயிரு பாற்சொல் அஃறிணை அவ்வே. 486

*ஒரு பொருளை அறியுஞ் சொல்லும், ஒன்றிற்கு மேற்பட்ட பலவற்றை அறியுஞ் சொல்லும், ஆகிய இரண்டு பகுதியனவும் அஃறிணைச் சொல்லாம்.*

*பேடி முதலியன இப்பகுப்பில் அடங்கும் முறைமை*

பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்

தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென அறியுமந் தந்தமக் கிலவே
உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும். 487

*உயர்திணையிடத்துப் பெண்தன்மையை மேற்கொண்டு ஆண்மையில் திரிந்த பெயர்ச்சொல்லும், கடவுளைக் குறிக்கின்ற பெயர்ச்சொல்லும், இவையென்று தம் பொருளைத் தனியே உணரும் இறுதியினைக்கொண்டு இயலாது, உயர்திணையிடத்து அவ்வவற்றிற்குரிய பாலாய் மாறுபட்டு வழங்குவனவாம். (எ-டு) பேடி வந்தாள், பேடியர் வந்தார் எனவும்; தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார் எனவும் வரும்.*

### ஆண்பாலுக்கு உரிய ஈறு

னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல். 488

*னகரமாகிய மெய்யினை ஈற்றிலே உடைய சொல் ஆடவர்களை உணர்த்தும் சொல்லாம். (எ-டு) உண்டான், உண்ணாநின்றான், உண்பான், கரியான் என வரும்*

### பெண்பாலுக்கு உரிய ஈறு

ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல். 489

*ளகரமாகிய மெய்யினை ஈற்றிலே உடைய சொல் பெண்களை உணர்த்தும் சொல்லாம் (எ-டு) உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள், கரியள் என வரும்.*

### பலர்பாலுக்கு உரிய ஈறு

ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே. 490

*ரகரமாகிய மெய்யீறும் பகரமாகிய உயிர்மெய்யீறும், 'மார்' எனனும் இடைச்சொல்லீறும் ஆகிய இம்மூன்றும், பலரை அறியச் செய்யும் சொல்லாம். (எ-டு) உண்டார், உண்ணாநின்றார், உண்பார் கரியர், கொண்மார், கூறுப என வரும்.*

### ஒன்றன்பால் ஈறு

ஒன்றறி கிளவி, தறட ஊர்ந்த
குன்றிய லுகரத்து இறுதி யாகும். 491

*ஒன்றினை அறியும் சொல்லாவது, தறட என்னும் மெய்யெழுத்தின் மேல் ஏறிவருகின்ற, குற்றியலுகரத்தை இறுதியாக உடைய சொல்லாம். (எ-டு) வந்தது, கூயிற்று, குண்டுகட்டு என்பனபோல்வன.*

### பலவின்பால் ஈறு

அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே 492

*பலவற்றை அறியும் சொல்லாவன, அ, ஆ, வ என்று வரும் ஈற்றினையுடைய, அப்பகுதியவான மூன்று சொல்லாம். (எ-டு) உண்டன, உண்ணாநின்றன, உண்பன எனவும்; உண்ணா, தின்னா எனவும்; உண்குவ தின்குவ எனவும் வரும்.*

### வினையிலும் இந்த ஈறுகள் வருதல்

இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய
ஈற்றில் நின்றிசைக்கும் பதினோ ரெழுத்தும்
தோற்றம் தாமே வினையொடு வருமே. 493

*உயர்திணை அஃறிணை என்னும் இரண்டு திணையிடத்துமுள்ள 'ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல' என்னும் ஐந்து பாலும் அறிய, அவ்வச் சொல்லின் ஈற்றில் நின்று ஒலிக்கும் பதினோரெழுத்தும் தோன்றுதற்கண், வினைச்சொல்லிற்கு உறுப்பாய்த் தோன்றும்.*

### பெயரும் வினையும் ஒத்த பாலிலேயே வருதல்

வினையில் தோன்றும் பாலறி கிளவியும்
பெயரில் தோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே. 498

*மேற்கூறப்பட்ட பதினோரெழுத்தினையும் இறுதியிலே உடைய, வினைபற்றி வருகின்ற பாலினை உணர்த்தும் சொல்லும், 'அவன் இவன் உவன்' என்பனவற்றை முதலாகக்கொண்டு பெயர்பற்றி வரும் பாலினை உணர்த்தும் சொல்லும், தம்முள் இயைந்து நடக்குங்கால், ஒருபாற்சொல் பிறிதொருபாற் சொல்லோடு கலவாது; தப்பாற் சொல்லோடேயே இயைந்து நடக்கும். (எ-டு) அவன் வந்தான் என்பது போன்று ஐம்பாலுடன் பொருந்தி வருவனவும், நெருநல் வந்தான் என்பதுவும் ஆம். யான் வந்தான் என்பதுபோலக் கூறின் வழுவாம்.*

### பேடி என்ற சொல் பொருந்தும் வகை

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி
ஆண்மை அறிசொற்கு ஆகுஇடன் இன்றே. 495

*ஆண்மைத் தன்மை திரிந்த 'பேடி' என்னும் பெயர்ச்சொல், ஆண்மைத் தன்மையை அறியும் சொல்லுடன் சேர்ந்து பொருந்தும் தன்மையுடையது அன்று. (பேடி வந்தான் என்றாற் போல வருவதில்லை என்க.)*

## வினாவும் விடையும் அமைதல்

செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல். 496

*விடையினையும் வினாவினையும் வழுவாது போற்றிவருக.*

## வினாவும் விடையாதல்

வினாவும் செப்பே வினாவெதிர் வரினே. 497

*வினவிய பொருளை ஒரு வகையான் அறிவுறுத்தி, வினா வாய்ப்பட்டால் விடைவரினும், அதுவும் விடையேயாகும். (எ-டு) சாத்தா உண்டியோ? என்று வினவிய வழி, உண்ணேனோ என்று வருவதுபோல்வது அது.*

## பொருந்திய விடைவழுவும் விடையாதல்

செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான. 498

*ஓரளவிற்கு வினவிய பொருளுக்குப் பொருந்திய சொல்லாகுமிடத்து, நேர் விடையாகாது விடைவழுவி வரினும் நீக்கப்படாது. (எ-டு) சாத்தா உண்டியோ? என்று வினவியவிடத்து, 'நீ உண்' என்று வருவதுபோல்வது இது.*

## சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் பொருள் வினா விடையில் ஒத்திருத்தல்

செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு
அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே. 499

*விடையின்கண்ணும் வினாவின்கண்ணும், சினைச்சொல்லுக்கும் முதற்சொல்லுக்கும் ஒப்புமை ஆகாப்பொருளும், ஒப்புமை ஆகும் பொருளும், அவ்வப்பொருளுக்கு அவ்வப் பொருளே வரும். (எ-டு) 'இவள் கண்ணின் இவள் கண் பெரிய, நும் அரசனின் எம் அரசன் முறை செய்யும்' எனவும்; இவள் கண் ஒக்கும் இவள் கண், எம் அரசனை ஒப்பன் நும் அரசன்' எனவும் வரும்.*

## இயல்பு தகுதி வழக்குகள் அமைதல்

தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை இலவே. 500

*தகுதி வழக்குப் பற்றியும் உலக வழக்கு பற்றியும் நடக்கின்ற இலக்கணத்தின் பக்கச்சொல் நீக்கப்படாது. (எ-டு)*

*சுடுகாட்டை நன்காடு எனவும், பண்பு குறியாது பெயராய் வரும் வெள்யாடு எனவும் வருவனபோல்வது.*

## இனச் சுட்டில்லாப் பண்புகொள் பெயர்

இனச் சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்காறு அல்ல செய்யுள் ஆறே. 501

*இனமாகிய பொருளைச் சுட்டுவதல்லாமல், பண்பு காரணமாக வழங்கப்படும் பெயர், உலகவழக்கின்கண் அமைவது அல்ல; செய்யுள் வழக்கின்கண்ணே வழங்குவதாம். (எ-டு) 'செஞ் ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்' (புறம் 38) என வரும்.*

## இயற்கைப் பொருளைச் சொல்லும் முறை

இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல். 502

*தன் தன்மையில் மாறுபடாது நின்ற பொருளை, அதன் தன்மையைக் கூறுமிடத்து, ஆக்கமும் காரணமும் கொடுக்காது, இத்தன்மைத்து என்றே சொல்லுக. (எ-டு) நிலம் வலிது, நீர் தண்ணிது என்பன போல்வன.*

## செயற்கைப் பொருளைக் கூறுதல்

செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல். 503

*காரணத்தால் தன்மை திரிந்த பொருளை, அத் திரிபு கூறுமிடத்து, ஆக்கச் சொல்லைச் சேர்த்துச் சொல்லுக.*

## காரணத்தை முற்படக் கூறல்

ஆக்கம் தானே காரணம் முதற்றே. 504

*செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுமிடத்து, காரணத்தை முதற்கண் கூறிப், பின்னரே ஆக்கம் கூறுக. (எ-டு) 'இச் சார்தலால் நீர் பெய்தாயிற்று' என வரும்.*

## காரணமின்றியும் சொல்லப்படும்

ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கு இன்றென்ப வழக்கின் உள்ளே. 505

*காரணத்தை முதலாகக் கொண்டு வருமெனப்பட்ட ஆக்கச் சொல், காரணமின்றி வரினும் உலக வழக்கின்கண் குற்றமில்லை. (எ-டு) 'மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின' என வரும்.*

## பால் மயங்கித் திணை துணிந்தவிடத்து

பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி
தான்அறி பொருள்வயின் பன்மை கூறல். 506

*திணை இன்னதென்று அறிந்து, பால் இன்னதென்று அறியப் படாத ஐயப்பொருளை அவ்வஃறிணைப் பன்மையால் கூறுக. (எ-டு) 'ஆண்மகன் கொல்லோ பெண்மகன் கொல்லோ இஃதோ தோன்றுவார்' எனவும், 'ஒன்றோ பலவோ வயலில் இறங்கின' எனவும் வரும்.*

உருபுஎன மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை. 507

*உருபு எனச் சொல்லுமிடத்தும், ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படும் அஃறிணைப் பொதுச்சொல்லிடத்தும், இவ்விரண்டு பகுதியினும், ஐயப்புலப் பொதுச்சொல்லாதல் உரித்து ஆகும். (எ-டு) 'ஆண் கொல்லோ பெண் கொல்லோ தோன்றுகின்ற உருவு' எனவும் 'ஒன்று கொல்லோ பல கொல்லோ' எனவும் வரும்.*

## உருபு எனும்போதும், அஃறிணைப் பிரிப்பினும்

தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான. 508

*ஐயப்பட்டுத் துணியுமிடத்து அன்மைச் சொல் துணியாப் பொருளிடத்து, அன்மைத் தன்மையைச் சுட்டி நிற்றலும் உண்டு என்று சொல்லுவர் புலவர். எனவே, துணிந்த பொருளின்மீது அன்மைச் சொல் சுட்டி வருதலும் உண்டு என்றவாறு (எ-டு) மகனென்று துணிந்த வழி குற்றியன்று மகன் எனவும், குற்றியல்லன் மகன் எனவும் முறையே வருமாறு உணர்க.*

## வண்ணச் சினைச்சொல்

அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல். 509

*வண்ணச் சொல்லுடன் இயைந்த சினைச்சொல்லினையுடைய முதற்சொல், பண்புச் சொல்லும், சினைச் சொல்லும், முதற்சொல்லும் என மூன்றும், கூறப்பட்ட முறைமை மாறுபடாது, வழக்கின்வழி நடக்கும். (எ-டு) செங்கால் நாரை, பெருந்தலைச் சாத்தன் என வரும்.*

*பால் வழுவமைதி*

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கின் ஆகிய உயர்சொல் கிளவி
இலக்கண மருங்கில் சொல்லாறு அல்ல. 510

*ஒருவனையும் ஒருத்தியையும் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும் உலக வழக்கின்கண் உயர்த்துச் சொல்லும் சொல்லாம்; இவை, இலக்கண முறைமையாற் சொல்லும் வழக்கல்ல. (எ-டு) யாம் வந்தேம், நீயிர் வந்திர், இவர் வந்தார் என வரும்.*

## 3 இடம்

*இடம் உணர்த்துவன*

செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ இடத்தும் உரிய என்ப. 511

*செலவு முதலாகிய நான்கு தொழிலிடத்தும், நிலையாகத் தோன்றுகின்ற அந்நான்கு சொல்லும் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூன்று இடத்திற்கும் உரியனவாய் வரும்.*

*தன்மை முன்னிலைக்கு உரியன*

அவற்றுள்,
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயி ரிடத்த. 512

*மேற்கூறப்பட்ட நான்கு சொல்லுள், தருசொல்லும் வருசொல்லும் ஆகிய இரண்டும், தன்மை முன்னிலை என்ற இரண்டிடத்திற்கும் உரியனவாம் (எ-டு) எனக்குத் தந்தான் எனவும், என்னுழை வந்தான், நினக்குத் தந்தான், நின்னுழை வந்தான் எனவும் வரும்*

*படர்க்கைக்கு உரியன*

ஏனை இரண்டும் ஏனை இடத்த. 513

*செலவுச் சொல்லும், கொடைச் சொல்லும் படர்க்கை இடத்திற்கு உரியனவாம். (எ-டு) அவனிடத்துச் சென்றான், அவனுக்குக் கொடுத்தான் என முறையே வந்தன காண்க.*

### யாது எவன் என்னும் சொற்கள்

யாது எவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும். 514

*யாது எவன் என்னும் இரண்டு சொல்லும், அறியாத பொருளிடத்து, வினாவாய்ப் பொருந்துமாறு தோன்றும். (எ-டு) இச் சொற்குப் பொருள் யாது? எவன்? என வரும்.*

### 'யாது' என்னும் சொல்

அவற்றுள்,
யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே. 515

*முதல் நூற்பாவினுள் கூறப்பட்ட இரண்டனுள், யாது என்னும் வினாச்சொல் அறியாத பொருளை வினாதலே அல்லாமல், அறிந்த பொருட்கண்ணும் ஐயம் போக்குதற்கு ஆய்ந்த சொல்லாதலும் உரித்து ஆகும். (எ-டு) இம் மரங்களுள் கருங்காலி யாது? என வரும்.*

### சினை முதற்சொல்

இனைத்துஎன அறிந்த சினைமுதல் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும். 516

*கேட்போரால் இத்துணை என்று அறியப்பட்ட சினைப் பொருளுக்கும் முதற் பொருளுக்கும், வினைத்தொகுதிப் பெயரோடு இடைதற்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக. (எ-டு) 'முரசு முழங்கு தானை மூவருங் கூடி' என வரும்.*

### இல்லாப் பொருட்கு

மன்னுப் பொருளும் அன்ன இயற்றே. 517

*இல்லாத பொருட்கு, இடம் காலம் பொருள் ஆகியவற்றுடன் சேர்த்து இல்லாமை கூறுமிடத்தும், உம்மை கொடுத்துச் சொல்லுக. (எ-டு) 'குருடு காண்டல் பகலுமில்லை' என வரும்.*

### இல்லாப் பொருளைக் கூறும் முறைமை

எப்பொருள் ஆயினும் அல்லது இல்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல். 518

*ஒருவன் யாதாயினும் ஒரு பொருளை அல்லது, இல்லென்னும் வாய்பாட்டான் இல்லையெனச் சொல்லுவானாயின், அப்*

பொருளையே கூறாது; அப்பொருள் அல்லாத பிறிது பொருளின் மேலிட்டுக் கூறுக என்பதாம். (எ-டு) 'பயறு உளவோ வணிகீர்?' என்று வினவிய வழி, 'உழுந்தல்லது இல்லை' எனக் கூறுவது போல்வது இது.

## சுட்டிக் கூறுதல்

அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல். 519

அல்லது இல்லென்னும் வாய்பாட்டால் கூறுவான், பிறிது பொருள் கூறாது, அப்பொருள் (கேட்ட பொருள்) தன்னையே கூறுமாயின், 'இப் பயறல்லது இல்லை' என்று சுட்டிக் கூறுக என்பதாம்.

## பொருட்பெயரும் சுட்டுப்பெயரும்

பொருளொடு உணராச் சுட்டுப்பெயர் ஆயினும்
பொருள் வேறுபடாது ஒன்று ஆகும்மே. 520

பொருளொடு புணர்ந்த சுட்டானன்றிப், பொருளொடு புணராச் சுட்டாயினும், கூறுங்கால், பொருள் வேறாகாது, இப் பயறெனச் சுட்டிக் கூறிய பொருளேயாம்.

## இயற்பெயரைக் கூறிச் சுட்டுப்பெயரைக் கூறுக

இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்
இயற்பெயர் வழிய என்மனார் புலவர். 521

இயற்பெயரும சுட்டுப்பெயரும் ஒன்றனை ஒன்று கொள்ளாது, இரண்டும் பிறிதொரு வினையைக் கொள்ளுதற்கு ஒருங்கு நிகழுங்காலம் உண்டாகுமாயின், உலகத்தார், சுட்டுப் பெயரை முன்னால் கூறாது, இயற்பெயரைக் கூறி, அதன் பின்னர்த்தான் சுட்டுப் பொருளைக் கூறுவர் என்று புலவர் சொல்லுவர். (எ-டு) 'சாத்தன் அவன் வந்தான்' என வரும்.

## செய்யுட்குச் சிறப்பு விதி

முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே. 522

இயற்பெயரும் சுட்டுப்பெயரும் வினையிடத்து ஒருங்கு பொருந்தி நடக்கும்வழிச், சுட்டுப் பெயரை முன்னால் கூறுதல் செய்யுளில் மட்டும் உரித்து ஆகும். (எ-டு) 'அவனணங்கு நோய் செய்தானாயிழாய்...' என்பது போன்று வரும்.

### சுட்டு முதலாகிய காரணச் சொல்

சுட்டுமுதல் ஆகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெயர் இயற்கையில் செறியத் தோன்றும். 523

சுட்டை முதற்கண் உடைய காரணப் பொருண்மையை உணர்த்தும் சொல்லும் சுட்டுப்பெயர் போலத் தன்னாற் சுட்டப்படும் பொருளை உணர்த்தும் சொல்லுக்குப்பின் சொல்லப்படுவதாம். (எ-டு) 'சாத்தன் கையெழுதுமாறு வல்லன் அதனால் தந்தை மகிழும்' என வரும்.

### சிறப்புப் பெயர் அமையும் வகை

சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார். 524

சிறப்புப் பெயரைக் கூறுமிடத்தும், உலகத்தார், இயற்கையாய் உள்ள பெயரை முன்னாற் கூறாது, பின்னரே கூறுவர். (எ-டு) 'நாவலர் சோமசுந்தர பாரதி' என வரும்.

### ஒருபொருள் குறித்த பலபெயர்ச் சொற்கள்

ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே. 525

ஒரு பொருளைப்பற்றி வரும் பல பெயர்களுக்கும், பல வினைகளைக் கொடுத்து முடித்தால், அஃது, ஒரு பொருளைப் பற்றியது ஆகாது. (எ-டு) ஆசிரியன் நகரக்கிழான் பண்டிதமணி கதிரேசன் வந்தான் என்றது, ஆசிரியன் வந்தான், நகரக்கிழான் உண்டான், பண்டிதமணி படித்தான் என்று, வெவ்வேறு வினைகளைக் கொடுத்து வருவன மரபன்மை காண்க.

### இடவழு அமைதி

தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்று
எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார். 526

உயர்திணைத் தன்மைப் பன்மைச்சொல்லும் அஃறிணைச் சொல்லும், எண்ணுமிடத்துக் கலந்து வருதல் நீக்கப்படாது; கலந்து வருதலைப் பெறுவனவாம் என்க. (எ-டு) 'யானும் என் குதிரையும் வந்தேம்' என வரும்.

## 4. எண் ஒருமைக்கு உரிய சொற்கள்

### ஒருவன் ஒருத்தி அமையும் வகை

ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது. 527

ஒருமை எண்ணினை உணர்த்தும், பொதுவாகிய பாலி லிருந்து பிரிந்த ஒருவன் ஒருத்தி என்னும் சொற்கள், ஒருமை யிடத்தல்லது இருவன் இருத்தி என்று பன்மையிடத்து வாராது.

## வியங்கோள் அமைதல்

**வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார். 528**

*வியங்கோளுடன் தொடரும் எண்ணுப்பெயர் திணை கலந்து வருதலை நீக்கார். (எ-டு) 'யானையும் பாகனும் செல்க' என வரும்.*

## பன்மைக்கு உரிய சொற்கள்

**வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார். 529**

*மாறுபட்ட தொழிலையுடைய பல பொருளுக்கும் பொது வாகிய சொல்லை ஒரு பொருளுக்குரிய வினையால் சொல்லார். (எ-டு) அணி அணிந்தார், படை வழங்கினர் என வரும்.*

## பன்மைக்குச் சிறப்பு விதி

**எண்ணுங் காலும் அதுஅதன் மரபே. 530**

*வெவ்வேறு வினைப் பொருள்களைப் பொதுச் சொல்லால் கூறுமிடத்துப் பிரித்துக் கூறினும், அவ்வாறின்றி ஒரு வினையால் சொல்லாது பொதுவினையால் சொல்லுதலாம். (எ-டு) 'யாழும் குழலும் இயம்பின' என வரும்.*

## இரட்டைக் கிளவி

**இரட்டைக் கிளவி இரட்டில் பிரிந்து இசையா. 531**

*இரட்டித்து நின்று பொருளை அறிவிக்கும் சொற்கள், இரட்டித்து நிற்குமிடத்துத் தனித்தனி பிரிதலில்லாது. (எ-டு) மொடுமொடுத்தது, சொறுசொறுத்தார் என வரும்.*

## பன்மைக்கு உரிய வழக்குகள்

**ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்**
**தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்**
**உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும். 532**

*உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும் ஒரு பெயராய்ப் பலபொருளுக்குப் பொதுவாகிய சொல்லினை, அதனது உட் பொருள் ஒழியுமாறு பிரித்துக் கொண்டு, பொதுவாகப் பிறிது ஒருவகையாகச் சொல்லுதல், தலைமை பற்றியும் பன்மை பற்றி*

யும் ஆகும். (எ-டு) வேளாளர் இருப்பு. மாந்தோப்பு என்றல் முறையே தலைமைக்கும், பன்மைக்கும் கொள்க.

## பெயரினும் தொழிலினும் பிரிபவை

பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன. 533

உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும், பெயரினாலும் வினையினாலும் பொதுவினின்றும் விலகிச், சிறப்பாக ஆண்மைக்கும் பெண்மைக்கும் உரியனவாய் வருவனவெல்லாம், குற்றமாகாது; வழக்கமாய் வழங்கி வருதலான். (எ-டு) தொடியோர் கொய் குழை...'. 'நம்பி நூறெருமை உடையன்' என்பதை முறையே இருதிணைக்கும் கொள்க.

## செய்யுளுள் அஃறிணைச் சொற்கொண்டு முடிதல்

பலவயினானும் எண்ணுத்திணை விரவுப் பெயர்
அஃறிணை முடிபின செய்யுள் உளவே. 534

திணை கலந்து எண்ணப்பட்ட பெயர், செய்யுளின்கண், பெரும்பாலும் அஃறிணைச் சொல்லைக் கொண்டே முடியும். (எ-டு) 'வடுக ரருவாளர், வான்கருநாடர், சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறும், குறுகா றறிவுடை யார்' என வரும்.

## பலபொருள் ஒருசொல் அமையும் முறை

வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல் என்று
ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல். 535

தொழில் வேறுபடும் பலபொருள் ஒருசொல், தொழில் வேறுபடாப் பலபொருள் ஒருசொல் என்று, பலபொருள் ஒரு சொல் இரண்டு வகைப்படும்.

## அவற்றுள், வினை வேறுபடுவன

அவற்றுள்,
வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே. 536

முதல் நூற்பாவில் கூறிய இரண்டுவிதமான பலபொருள் ஒரு சொல்லுள், வினைவேறுபடும் பலபொருள் ஒருசொல் ஒரு பொருளுக்கே சிறந்த வினையினாலும், இனத்தினாலும் சார்பினாலும், பொருளை அறியுமிடத்துப் பொதுத்தன்மை நீங்கித் தெளிவாகத் தோன்றும். (எ-டு) மாப்பூத்தது; மாவும்

பணியும் ஓங்கின, போர்க்கோலம் பூண்டு மக்கொண்டுவா; என்று கூறுவனவற்றை முறையே மூன்றற்கும் கொள்கை.

### அவற்றுள் வினை வேறுபடாதன

ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்
நினையும் காலைக் கிளந்தாங்கு இயலும். 537

வேறுபடாத வினையைக் கொண்டவிடத்து, வேறுபடாது தோன்றுகின்ற வினைவேறுபடாத பலபொருள் ஒருசொல், ஆராய்ந்து பார்க்குமிடத்து, விதந்து தெளிவாகச் சொல்லப் படும். (எ-டு) 'மாமரம் வீழ்ந்தது, விலங்குமா வீழ்ந்தது' என வரும்.

### மேற்குறித்ததற்கு வழுவமைதி

குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி. 538

ஒரு பொருளினது வேறுபாட்டை அறிவிப்பவன், அதனது ஆற்றல் முதலாயினவற்றால் விளங்காவிட்டால், அதனைத் தெளிவாகப் பிரித்து உணர்த்துக என்பதாம். (எ-டு) 'அரிதாரச் சாந்தங் கலந்தது போல, வுருகெழத் தோன்றி வருமே...' என்பது போன்று வரும்.

## 5. புறனடை

குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல்என்று
ஆவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்
அஃறிணை மருங்கில் கிளந்தாங்கு இயலும். 539

குடிமை முதலாக, விறற்சொல் இறுதியாகச் சொல்லப் பட்ட பதினெட்டும் அவை போன்ற வேறு பிறவும் சேர்த்து கணக்கிட்டுக், குறிப்பினால் உணரும் சொற்களெல்லாம், உயர்திணைப் பொருளை உணர்த்துவனவாக நிற்பினும், அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்றவிடத்து முடியுமாறுபோல, அஃறிணைச் சொல்லைக்கொண்டே முடியும். (எ-டு) குடிமை

நன்று, குடிமை தீது, ஆண்மை நன்று, ஆண்மை தீது என்பன போன்று வரும்.

## பாலுக்குப் புறனடை

காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்என வருஉம்
ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வருஉம் கிளவி எல்லாம்
பால்பிரிந்து இசையா உயர்திணை மேன. 540

காலம் முதலாகச் சொல்லப்பட்ட பத்தும், அத் தன்மையை யுடைய வேறு பிறவும் ஆகிய அப் பாகுபாட்டின்கண் வருகின்ற சொற்களெல்லாம், உயர்திணைச் சொல்லாயிருப்பினும், அத் திணைக்கண் பால் பிரிந்து ஒலியாது அஃறிணைப்பாலாய் ஒலிக்கும். (எ-டு) இவற்குக் காலமாயிற்று, உலகம் பசித்தது என்பன போன்று வருவனவாம்.

## இடத்துக்குப் புறனடை

நின்றாங்கு இசைத்தல் இவண்இயல் பின்றே. 541

காலம் முதலாகிய சொற்கள், இறுதி மாறுபடாது படியே நின்று உயர்திணையாக ஒலித்தல் இல்லை.

இசைத்தலும் உரிய வேறிடத் தான. 542

காலம் முதலாகிய சொற்கள்,இறுதி மாறுபட்டுச் சொல்லும் முறை வேறுபட்டவிடத்து உயர்திணையாக ஒலித்தலும் உரியன. (எ-டு) காலன் கொண்டான், உலகர் பசித்தார் என வரும்.

எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்து. 543

இனமாகிய பலபொருள்களில் ஒன்றனை எடுத்துக் கூறிய விடத்து, அச் சொல், தன் பொருளுக்கு இனமாகிய பிறபொரு ளினைக் குறிப்பால் உணர்த்துதலும் உரித்து. (எ-டு) 'குற்ற முடையான் ஒறுக்கப்படுவான்' என்றால், 'நல்லவன் ஒறுக்கப் படான்' என்று ஆவது போல்வன.

*எண்ணுக்குப் புறனடை*

கண்ணும் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறும் கடப்பாடு இலவே
தம்வினைக்கு இயலும் எழுத்தலங் கடையே. 544

*கண் முதலாகிய சொற்களும், பிறசொற்களும், பன்மைப் பொருளை உணர்த்தும் சினைச்சொற்கள்; அவை, பன்மையினாலேயே உணர்த்தப்பட வேண்டுமென்ற வரையறை கிடையாது; முதல் ஒருமையாயின் ஒருமையாலும், பலவாயின் பன்மையினாலும் கூறப்படலாம். (எ-டு) 'கண்ணல்லன், கண்ணல்ல;' என வரும்.*

# உ. வேற்றுமை இயல்

[பெயர், உருபேற்றுப் பொருள்வேற்றுமைப்படுகின்ற இயல்பு]

## 1. வேற்றுமையின் வகை

*ஏழு வேற்றுமைகள்*

**வேற்றுமை தாமே ஏழென மொழிப.** 545

*வேற்றுமையாவன, 'ஏழு' என்று சொல்லுவர் புலவோர்.*

*விளியுடன் வேற்றுமை எட்டு*

**விளிகொள் வதன்கண் விளியோடு எட்டே.** 546

*விளி கொள்ளுமிடத்து, விளி வேற்றுமையோடு கூட்ட, வேற்றுமை எட்டாம்.*

*பெயர் முறை*

**அவைதாம்**
**பெயர் ஐ ஒடு கு**
**இன் அது கண்விளி என்னும் ஈற்ற.** 547

*எட்டென்று சொல்லப்பட்ட வேற்றுமைகளாவன, இறுதிக்கண் வரும் விளிவேற்றுமை, பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்பனவாம்.*

## 2. முதல் வேற்றுமை

*எழுவாய் வேற்றுமை*

**அவற்றுள்**
**எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.** 548

*மேற்கூறப்பட்ட வேற்றுமை எட்டனுள், முதலில் பெயரென்று கூறப்பட்ட வேற்றுமையாவது, பெயர் தோன்றிய அளவாய் நிற்கும் நிலைமையதாம். (எ-டு) ஆ, அவன் என வரும்.*

## பெயர்ப் பயனிலைகள்

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை உரைத்தல் வினாவிற்கு ஏற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதல்என்று
அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே. 549

*பொருளின் உண்மைத் தன்மையைக் கூறுதல், ஏவுதலைக் கொள்ள வருதல், வினையின் நிலையை உணர்த்துதல், வினாப் பொருளோடு தொடர்தல், பண்புடைச் சொல்லைக் கொள்ள வருதல், பெயரினைக் கொண்டு முடிதல் என்ற அவ் ஆறு முடிபும், பெயர் வேற்றுமைப் பயனிலையாம்.*

## தொகைப்பெயரும் பயனிலை கொள்ளல்

பெயரின் ஆகிய தொகையு மாருளவே
அவ்வும் உரிய அப்பால் ஆன. 550

*பெயரும் பெயரும் தொக்க (சேர்ந்த) தொகையும் உள்ளன; அவையும், எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளுதற்கு உரியனவாம். (எ-டு) யானைக்கொம்பு கிடந்தது, பொற்றொடி வந்தாள் என வரும்.*

## எழுவாயும் தோன்றா எழுவாயும்

எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்விது என்ப. 551

*மூன்றிடத்துப் பெயரும் வெளிப்படையாகத் தோன்றிப் பயனிலை கொள்ளுதல் சிறந்தது என்று சொல்லுவர் ஆசிரியர்.*

## பெயரில் உருபுநிற்கும் இடம்

கூறிய முறையின் உருபுநிலை திரியாது
ஈறுபெயர்க்கு ஆகும் இயற்கைய என்ப. 552

*மேற்கூறப்பட்ட முறைமையினையுடைய பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்ற உருபுகள், தம்முடைய தன்மை மாறுபடாது பெயருக்கு இறுதியாகும் தன்மையை உடையன என்று சொல்லுவர் ஆசிரியர். (எ-டு) கந்தனை, கந்தனொடு, கந்தற்கு கந்தனின், கந்தனது, கந்தன்கண் என வரும்.*

## பெயரின் இயல்பு

பெயர்நிலைக் கிளவி காலம் தோன்றா
தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங் கடையே. 553

பெயர்ச்சொல் காலத்தைத் தோற்றுவிக்காது; தொழிற்பெயர் காலத்தைக் காட்டும். (எ-டு) 'உண்டல்' காலம் தோன்றா நிலைமை; 'உண்டான்' தோன்றும் நிலை.

## 3. இரண்டாம் வேற்றுமை

### 'ஐ' உருபின் பொருள்

இரண்டாகு வதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைகுறிப்பு
அவ்விரு முதலில் தோன்றும் அதுவே. 554

இரண்டாவது வேற்றுமை உருபாவது 'ஐ' என்னும் பெயரினையுடைய வேற்றுமைச் சொல். எவ்விடத்து வருமாயினும், வினையும் வினைக்குறிப்பும் ஆகிய அவ்விரண்டு இடத்தும் தோன்றுபவை பொருளாக வரும். (எ-டு) படத்தை வரைந்தான், குழையை உடையன் என வரும்.

### அதன் பாகுபாடுகள்

காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பின் புகழின் பழியின் என்று
பெறலின் இழவின் காதலின் வெகுளியின்
செறலின் உவத்தலின் கற்பின் என்று
அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்று
ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்று
அன்ன பிறவும் அம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார். 555

காப்பு முதலாகச் சிதைப்பு இறுதியாகக் கூறப்பட்ட இருபத்தெட்டுப் பொருளும், அவைபோன்ற மற்றையவும், அந்தச் செயப்படுபொருள் மேல் வருகின்ற எல்லாச் சொல்லும், இரண்டாம் வேற்றுமையின் பாற்படும் என்று சொல்லுவர் புலவர். எ-டு) ஊரைக் காக்கும், கடவுளை ஒக்கும் என்பன போன்று வரும்.

## 4. மூன்றும் வேற்றுமை

### 'ஒடு' உருபின் பொருள்

மூன்று குவதே
ஒடுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற்று அதுவே. 556

மூன்றும் வேற்றுமை உருபாவது ஒடு என்னும் பெயரினை யுடைய வேற்றுமைச் சொல். அது வினைமுதலும், கருவியு மாகிய இரண்டு பொருளையும் பொருளாக உடைத்து. (எ-டு) கொடியொ . துவக்குண்டான், வேலால் குத்தினன் என்ப வற்றை முறையே கொள்க.

அப்பொருளின் பாகுபாடுகள்

அதனின் இயறல் அதற்றகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனின் ஆதல்
அதனிற் கோடல் அதனொடு மயங்கல்
அதனோடு இ யந்த ஒருவினைக் கிளவி
அதனோடு இயைந்த வேறுவினைக் கிளவி
அதனோடு _ ந்த ஒப்பல் ஒப்புரை
இன்ஆன் ஏது ஈங்கென வருஉம்
அன்ன பிறவும் அதன்பால் என்மனார். 557

அதனின் இயறல் முதலாக, இன்ஆன் ஏது இறுதியாக இவ் விடத்து வருவனவும், இவைபோன்ற மற்றையவும், மூன்றும் வேற்றுமையின்பாற் படும். அஃதாவது மூன்றும் வேற்றுமையுள் அடங்கும் எனக் கூறலாம். (எ-டு) அதனின் இயறல்—பொன் னல் இயன்ற சிலை, அதற்றகு கிளவி—வாயால் தக்கது வாள் என்பன போன்று, மற்றையவற்றிற் ம் இயைத்துக் காண்க.

# 5. நான்காம் வேற்றுமை

‘கு’ உருபின் பொருள்

நான்கா குவதே
குஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எப்பொரு ளாயினும் கொள்ளும் அதுவே. 558

நான்காம் வேற்றுமை உருபாவது, ‘கு’ என்னும் பெயரினை யுடைய வேற்றுமைச் சொல். அது, எத்தகைய பொருளாக இருப்பினும் அதனை ஏற்று நிற்கும். (எ-டு) இரவலர்க்குப் பொருளைக் கொடுத்தான் என வரும்.

அப்பொருளின் பாகுபாடுகள்

அதற்குவினை உடைமையின் அதற்குஉடம் படுதலின்
அதற்குப்படு பொருளின் அதுவாகு கிளவியின்
அதற்குயாப் புடைமையின் அதற்பொருட்டு ஆதலின்
நட்பின பகையின் காதலின் சிறப்பின் என்று
அப்பொருள் கிளவியும் அதன்பால என்மனா. 559

அதற்கு வினையுடைமை முதலாகச் சிறப்பு இறுதியாக வருவனவும், அவைபோன்ற பிறவும், நான்காம் வேற்றுமையின் பாற்படும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு) அதற்கு வினையுடைமை—கரும்பிற்கு வேலி என்பது; சிறப்பு—சோழற்குச் சிறந்தார் பாண்டியர் என்பது, இது போன்று ஏனையவற்றிற்கும் இயைத்துக் காண்க.

## 6. ஐந்தாம் வேற்றுமை

### 'இன்' உருபின் பொருள்

ஐந்தா குவதே
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
இதனின் இற்றுஇது என்னும் அதுவே. 560

ஐந்தாம் வேற்றுமை உருபாவது, 'இன்' என்னும் பெயரினையுடைய வேற்றுமைச் சொல். அஃது, இப்பொருளைக் காட்டிலும் இப்பொருள் இத் தன்மையையுடையது என்னும் பொருளினை உடையது ஆகும் (எ-டு) 'சென்னையின் வடக்குத் திருவொற்றியூர்' என வரும்.

### அப் பொருளின் பாகுபாடுகள்

வண்ணம் வடிவே அளவே சுவையே
தண்மை வெம்மை அச்சம் என்று
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை என்று
முதுமை இளமை சிறத்தல் இழித்தல்
புதுமை பழமை ஆக்கம் என்று
இன்மை உடைமை நாற்றம் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதல்என்று
அன்ன பிறவும் அதன்பால என்மனார். 561

வண்ணம் முதலாகப் பற்றுவிடுதல் இறுதியாகக் கூறப்பட்டனவும், அவைபோன்ற மற்றையவும், ஐந்தாம் வேற்றுமையின்பாற் படும். (எ-டு) காக்கையிற் கரிது களம் பழம், காமத்திற் பற்று விட்டான் என்பனபோன்று இயைத்து உணர்க.

## 7. ஆறாம் வேற்றுமை

### 'அது' உருபின் பொருள்

ஆறா குவதே
அதுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினும் இதனது இதுஎனும்
அன்ன கிளவிக் கிழமைத்து அதுவே. 562

ஆறும் வேற்றுமை உருபாவது, 'அது' என்னும் பெயரினை யுடைய வேற்றுமைச் சொல். அது உடையதாய் நிற்கும். தன்னினும் பிறிதொன்றினும் இதனது இது என்னும்படி உண்டாகும் பொருளைத் தோற்றும் உரிமையைப் பொருளாக உடையது. அஃதாவது தற்கிழமை, பிறிதின்கிழமை என்னும் பொருளையுடையது என்பதாம்.

## அப்பொருளின் பாகுபாடுகள்

இயற்கையின் உடைமையின் முறைமையின் கிழமையின்
செயற்கையின் முதுமையின் வினையின் என்று
கருவியின் துணையின் கலத்தின் முதலின்
ஒருவழி உறுப்பின் குழுவின் என்று
தெரிந்துமொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்
திரிந்துவேறு படூஉம் பிறவும் அன்ன
கூறிய மருங்கில தோன்றும் கிளவி
ஆறன் பால என்மனார் புலவர். 563

இயற்கை முதலாக வாழ்ச்சி இறுதியாகச் சொல்லப்பட்டனவும், திரிந்து வேறுபடுகின்றனவும், அவை போல்வன பிறவும் ஆகிய, மேலே சொல்லப்பட்ட கிழமைப் பொருளின்கண் தோன்றும் சொற்களெல்லாம் ஆறும் வேற்றுமையின்பாற் படும். (எ-டு) முருகனது இயற்கை முருகனது தோட்டம் என்பன போன்று மற்றையவற்றிற்கும் இயைத்துக் காண்க.

# 8. ஏழாம் வேற்றுமை

## 'கண்' உருபின் பொருள்

ஏழாகு வதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பில் தோன்றும் அதுவே. 564

ஏழாம் வேற்றுமை உருபாவது 'கண்' என்னும் பெயரினை யுடைய வேற்றுமைச் சொல். அது வினை செய்யுமிடத்தும், நிலமாகிய இடத்தும், காலமாகிய இடத்தும், அம் மூன்றுவகைக் குறிப்பினிடத்தும் தோன்றும். (எ-டு) விளையாடற்கண் வந்தான், திண்ணையின்கண் இருந்தான், வேனிலின்கண் வந்தான் என வரும்.

அப்பொருளின் பாகுபாடுகள்

கண்கால் புறம்அகம் உள்உழை கீழ்மேல்
பின்சார் அயல்புடை தேவகை எனாஅ
முன்இடை கடைதலை வலம்இடம் எனாஅ
அன்ன பிறவும் அதன்பால என்மனார். 565

'கண்' முதலாக இடம் இறுதியாகச் சொல்லப்பட்டனவும், அவை போல்வன பிறவும், ஏழாம் வேற்றுமையின் பாற்படும். (எ-டு) 'கண்ணகன் ஞாலம்' எனவும், 'அவனிடத்து உண்டு' எனவும் வரும்; பிறவும் இவைபோன்று இயைத்துக் காண்க.

## 9. வேற்றுமையின் தொகைவிரி இயல்பு

வேற்றுமைப் பொருளை விரிக்கும் காலை
ஈற்று நின்று இயலும் தொகைவயின் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந்து இசைக்கும்
எல்லாச் சொல்லும் உரிய என்ப. 566

வேற்றுமைத் தொகையை விரித்துப் பொருள் மிடத்து, அன்மொழித் தொகையை விரிக்குங் காலத்துப் பொருள் விளங்கும் பொருட்டுச் சேர்க்கப்படும் சொற்களெல்லாம் ஈண்டும் சேர்த்து விரிக்கப்படுமென்று சொல்லுவர் புலவர்.

# 3. வேற்றுமை மயங்கு இயல்

[வேற்றுமையுருபுகள் தம்முள் மயங்கிப்
பொருள் வேறுபாடு கொள்ளுதல்]

## சார்பு பொருளில்

கருமம் அல்லாச் சார்புஎன் கிளவிக்கு
உரிமையும் உடைத்தே கண்என் வேற்றுமை. 567

*சார்பு கருமச்சார்பு எனவும், கருமம் அல்லாச் சார்பு எனவும் இருவகைப்படும். கருமம் அல்லாச் சார்பு என்னும் பொருளுக்கு, ஏழாம் வேற்றுமை உருபு வருதலாகிய உரிமையை உடையது. (எ-டு) ஆசிரியர்கண் சார்ந்தான் என வரும்.*

## சினைப் பெயரில்

சினைநிலைக் கிளவிக்கு ஐயும் கண்ணும்
வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர். 568

*சினைச் சொல்லிற்கு, வினை நிகழுமிடத்து, இரண்டாம் வேற்றுமையும், ஏழாம் வேற்றுமையும் ஒத்துவரும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு) கிளையை வெட்டினான், கிளையின்கண் வெட்டினான் என வரும்.*

## கன்றல் செல்லல் பொருளில்

கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே. 569

*கன்றல் பொருளிடத்தும் செலவுப் பொருளிடத்தும் வரும் சொற்கள், இரண்டாம் வேற்றுமைக்கும் ஏழாம்வேற்றுமைக்கும் ஒரு தொழிலாம். (எ-டு) சூதினைக் கன்றினான், சூதின்கட் கன்றினான்; நெறியைச் சென்றான், நெறிக்கண் சென்றான் என வரும்.*

## முதல் சினைப் பெயர்களில்

முதல்சினைக் கிளவிக்கு அதுஎன் வேற்றுமை
முதல்கண் வரினே சினைக்கு ஐ வருமே. 570

*முதற்சொல்லோடு இயைந்த சினைச்சொல்லிற்கு, ஆறாம் வேற்றுமை முதலின்கண் வருமாயின், சினைச் சொல்லின்கண்*

இரண்டாம் வேற்றுமையே வரும். (எ-டு) நாயது வாலை நறுக்கினான் என வரும்.

## முதல் முன் ஐ வரின்

முதல்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளிது என்ப. 571

முதல் சினைச்சொற்களில் முதலில் ஐகார வேற்றுமை உருபு வருமாயின், சினைச் சொல்லின்முன், 'கண்' என் வேற்றுமை உருபு வருதல் வெளிப்படையாம். (எ-டு) நாயை வாலின்கண் நறுக்கினான் என வரும்.

## முதலுஞ் சினையும் பொருள் வேறுபடா

முதலும் சினையும் பொருள்வேறு படாஅ
நுவலும்காலைச் சொற் குறிப்பினவே. 572

முதற்பொருளும் சினைப்பொருளும், தத்தம் பொருளில் மாறுபடாது. சொல்லுமிடத்துச், சொல்லுகின்றவனது சொற் குறிப்பினால், 'முதல்' என்றும், 'சினை' யென்றும் உணருமாறு வழங்கப்படும். (எ-டு) கிளையது நுனியைக் குறைத்தான், கிளையை நுனிக்கண் வெட்டினான் என வரும்.

## பிண்டப் பெயரில்

பிண்டப் பெயரும் ஆயியல் திரியா
பண்டுஇயல் மருங்கின் மரீஇய மரபே. 573

பிண்டப் பெயரும் முதல் சினைப் பெயர்கள் போன்றே அமைந்துள்ளது. ஆயினும், அவற்றைப் பண்டைய காலந் தொடங்கி இவ்வாறு வழங்கிவருதல் பொருந்திய இலக்கணமாக அமைந்துள்ளது. (எ-டு) குப்பையது தலையைச் சிதறினான், குப்பையைத் தலைக்கண் சிதறினான், குப்பையைத் தலையைச் சிதறினான் என வரும்.

## உயர்பு பொருளில்

ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே. 574

ஒருவினை ஒடுச்சொல் உயர்பொருளை உணர்த்தும் பெயரிடத்துத் தோன்றும். (எ-டு) அரசனொடு இளையர் வந்தார், ஆசிரியனொடு மாணாக்கர் வந்தார் என வரும்.

## ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி

மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கு ஓரனைய என்மனார் புலவர். 575

மூன்றும் வேற்றுமையிடத்தும் ஐந்தாம் வேற்றுமை யிடத்தும் விளங்குமாறு கூறப்பட்ட ஆக்கத்தோடு பொருந்திய காரணச்சொல், அக் காரணப்பொருளைக் காணும் காட்சி ஒரு தன்மையை உடைய என்று சொல்லுவர் புலவர். (எ-டு) வாணிகத்தால் ஆகிய பொருள், வாணிகத்தில் ஆகிய பொருள் என வரும்.

## நோக்கப் பொருளில்

இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம்அவ்
இரண்டன் மருங்கின் ஏதுவும் ஆகும் 576

*இரண்டாம் வேற்றுமைக்குரிய நோக்கல் நோக்கம் (மனத்தால் நோக்குதல்) அப்பொருள் ஐயே அன்றி, மூன்றும் வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் உரிய ஏதுப்பொருளை யும் உணர்த்தும். (எ-டு) 'வானோக்கி வாழும் உயிர்...' என்பது வானை நோக்கி வாழும் என்பதேயன்றி, வானால் நோக்கி வாழும், வானின் நோக்கி வாழும் எனவும் வருமென்பதாம்.*

## உடைமைப் பொருளில்

அதுஎன் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுஎன் உருபுகெடக் குகரம் வருமே. 577

*ஆறும் வேற்றுமைப் பொருளில் வரும் உயர்திணைத் தொகை யிடத்து, உருபினை விரிக்குங்கால், அது என்னும் உருபு கெட்டு, (அது ஆண்டு வாராமை) அப் பொருளை உணர்த்த நான்காம் வேற்றுமை உருபாகிய 'கு' என்பது வரும். (எ-டு) 'நம்பி மகன்' என்பதை, 'நம்பியது மகன்' என்று விரித்தால், திணை வழுவாமாகலின், 'நம்பிக்கு மகன்' என்று வரும்.*

## மாறு பொருளில்

தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்
கடிநிலை இலவே பொருள்வயின் ஆன. 578

*தடுமாறுகின்ற தொழிற்பெயருக்கு, இரண்டையும் மூன்றும் வேற்றுமையும் நீக்கப்படாது, அவ் வேற்றுமை தொகுமாறு அவற்றிடைப் பொருள் தொகை யினிடத்து நிற்கும் என்பதாம். (எ-டு) 'புலி கொன்ற யானை', 'புலி கொல் யானை' என்பதை 'புலியைக் கொன்ற யானை', 'புலியாற் கொல்லப்பட்ட யானை' எனவும் விரித்துக் காண்க.*

## ஈற்றுப் பெயர் முன்னர்

ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிய உணருமோரே. 579

தடுமாறுகின்ற தொழிலோடு சேர்ந்த பெயர்களுள், இறுதிப் பெயரின் முன்னால், பொருளின் வேறுபாட்டை உணர்த்தும் சொல் வருமானால், அச் சொல்லினால் அப் பொருளின் வேற்றுமையை அறியவல்லார் அறிவர். (எ-டு) புலி கொல் யானை ஓடியது', 'புலி கொல் யானைத் தந்தம் வந்தன' என வரும்.

## பாதுகாத்தற் பொருளில்

ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்
தாம்பிரி விலவே தொகைவரு காலை. 580

ஓம்படைப் (காத்தற்) பொருளுக்கு அவ்வேற்றுமை தொக்கு நின்ற விடத்து, ஐ உருபும் ஆன் உருபும் ஒத்த உரிமையை உடையன. (எ-டு) புலி போற்றிவா என்பது, புலியைப் போற்றிவா எனவும், புலியாற் போற்றி வா எனவும் வந்தவாறு காண்க.

## வாழ்தற் பொருளில்

ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு
ஏழும் ஆகும் உறைநிலத் தான. 581

ஆறும் வேற்றுமையிடத்துக் கூறிய வாழ்ச்சிக் கிழமைக்கு, வாழ்கின்ற நிலத்திடத்து ஏழாம் வேற்றுமையும் வரும். (எ-டு) காட்டு மாடு என்பது, காட்டது மாடு என விரிதலையன்றிக் 'காட்டின்கண் மாடு' எனவும் வரும்.

## கொடைப் பொருளிடத்து

குத்தொக வருஉம் கொடையெதிர் கிளவி
அப்பொருள் ஆறற்கு உரித்தும் ஆகும். 582

'கு' என்னும் உருபு தொருகின்ற நான்காம் வேற்றுமைக் கொடைப்பொருள், 'அது' என்னும் உருபினையுடைய ஆறும் வேற்றுமைக்கும் உரிமை உடைத்தாகும். (எ-டு) தேவர்பலி என்பது, தேவர்க்குப்பலி என்று விரிதலையன்றித் தேவரது பலி எனவும் வரும்.

## அச்சப் பொருளிடத்து

அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்
எச்சம் இலவே பொருள் வயினான. 583

அச்சப் பொருளுக்கு, வேற்றுமைத் தொகை அவற்றின் பொருள் நின்றவிடத்து, ஐந்தாம் வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் ஒத்த உரிமையை உடையன. (எ-டு) பழியஞ்சும் என்பது, பழியினஞ்சும், பழியையஞ்சும் என வரும்.

### தொல்நெறி பிழையாமை

அன்ன பிறவும் தொல்நெறி பிழையாது
உருபினும் பொருளினும் மெய்தடு மாறி
இருவயின் நிலையும் வேற்றுமை எல்லாம்
திரிபிடன் இலவே தெரியு மோர்க்கே. 584

*இதுவரையிலும் மயக்கம் கூறப்பட்ட வேற்றுமைகளே அல்லாமல், அவை போன்றன பிறவும் பழைமையாக வருகின்ற வழக்கத்தில் மாறுபடாது, உருபினாலும் பொருளினாலும் ஒன்று நிற்குமிடத்து வேறொன்று நின்று, தன் பொருளும் பிறிதொன்றன் பொருளும் ஆகிய இரண்டிடத்தும் நிலைபெறுகின்ற வேற்றுமை எல்லாம், ஆராய்ந்து உணர்பவர்களுக்கு மாறுபாடு உடைய அல்ல.*

## 2. உருபுகளின் இயல்புகள்

### உருபு தொடர்ந்து அடுக்கியவிடத்து

உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக் கிளவி
ஒருசொல் நடைய பொருள்செல் மருங்கு 585

*பல உருபும் தம்முள் சேர்ந்து அடுக்கி வந்த வேற்றுமைச் சொற்களெல்லாம் ஒன்றினால் பொருள் முடியுமிடத்து முடிக்கும் சொல் ஒன்றினால் முற்றுப்பெறும். (எ-டு) என்னாலும் ுயும் வாராது என வரும்.*

### இறுதியும் இடையும் உருபு நிற்றல்

இறுதியும் இடையும் எல்லா உருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார். 586

*வேற்றுமைத் தொடரின் இறுதியிடத்தும், அதன் இடை நிலத்தின்கண்ணும்; ஆறு உருபும் தத்தமக்கு உரிய பொருளின் நிற்றலை நீக்கார். (எ-டு) கடந்தான் நிலத்தை, நிலத்தைக் கடந்தான் எனவும்; சாத்தனொடு வந்தான், வந்தான் சாத்தனொடு எனவும் வரும்.*

### மற்றொன்று ஏற்றல் தொக்கு வருதல்

பிறிது பிறிது ஏற்றலும் உருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங்கு என்ப. 587

*பிறிதொரு உருபினை ஏற்று வருதலும், உருபு தொக்கு நிற்குமாறு வருதலும், பண்டு தொட்டு வழங்கி வருதலான், அவ்வாறே வழங்கலாம். (எ-டு) 'சாத்தனதனை, சாத்தனதனொடு,*

எனப் பிறிதொரு உருபேற்றும், சாத்தன் கை என உருபு தொக்கும் வந்தவாறு காண்க.

## தொக்கு நில்லா இடங்கள்

ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா அ இறுதி யான. 588

இரண்டாம் வேற்றுமை 'ஐயும்', ஏழாம் வேற்றுமைக் கண்ணும் அல்லாத, பிறபொருளை உணர்த்தி நிற்கும் உருபு, தொடர்மொழியின் இறுதியில் தொக்கு நில்லாது.

## வேற்றுமை சார்தல்

யாதன் உருபில் கூறிற்று ஆயினும்
பொருள்செல் மருங்கில் வேற்றுமை சாரும். 589

ஒரு தொடர், யாதானும் ஒரு வேற்றுமைஉருபு கொடுத்துக் கூறியிருந்தாலும், அவ்வுருபின் பொருளால், அத் தொடர் பொருள் அமையாவிடத்துப், பொருள் செல்லும் வழி வேற்றுமையின் பொருளும் செல்லும். (எ-டு) "கிளையரி நாணற் கிழங்கு மணக்கின்ற..." எனபுழி 'மணக்கின்ற' என்ற விடத்து, 'கு' உருபிற்கு உரிய கொடைப்பொருள் இயையாமையின், இடப்பொருள் உணர்த்தும் ஏழாம் வேற்றுமையாகக் கொள்ள வேண்டும் என்பதாம்.

## எதிர்மறுத்து மொழியினும்

எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபிற்
பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே. 590

நேராகக் கூறாது, எதிர்மறையாகக் கூறுமிடத்தும், தத்தம் இலக்கணப்படி வருகின்ற பொருளின் தன்மை மாறுபடாது விளங்குவது வேற்றுமை உருபு. (எ-டு) மரத்தை வெட்டான், வேலால் குத்தான் என வரும்.

## அகரத்தொடு பொருந்தும் உருபுகள்

கு ஐ ஆன்என வரூஉம் இறுதி
அவ்வொடு சிவணும் செய்யுள் உள்ளே. 591

'கு' 'ஐ' 'ஆன்' என்று வரும் மூன்று உருபும், செய்யுளில், தொடர் இறுதியில் நின்ற இடத்து அகரத்துடன் பொருந்தி நிற்றலும் உடைய. (எ-டு) 'கடிநிலை யின்றே யாசிரி யர்க்க' எனவும், 'புரைதீர் கிளவிப் புலவ ரான' எனவும் '...புள்ளியற் கலிமா உடைமையான' எனவும் வரும்.

## அகரத்தொடு பொருந்தாத இடங்கள்

'அஎனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்லென மொழிப. 592

*அஃறிணைப் பெயரிடத்து கு ஐ என்ற இரண்டு உருபும் அகரத்தொடு பொருந்தித் திரிதல் இல்லை என்று கூறுவர் புலவர்.*

## பல பொருள்களில் மயங்குதல்

இதனது இதுஇற்று என்னும் கிளவியும்
அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும்
அதனால் செயப்படற்கு ஒத்த கிளவியும்
முறைக்கொண்டு எழுந்த பெயர்ச்சொல் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பின் ஆக்கமும்
காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழிக் கிளவியும்
அன்ன பிறவும் நான்கன் உருபில்
தொல்நெறி மரபின தோன்றல் ஆறே. 593

*'இப்பொருளினது இந்தப்பகுதி இத்தன்மையை உடையது' என்னும் ஆறும்வேற்றுமைப் பொருளும், 'ஒன்றனை பொன்று ஏறுக் கொள்ளும்' என்னும் இரண்டாம் வேற்றுமைப் பொருளும், 'ஒன்றனால் ஒன்று தொழில் நிகழ்வதற்கு ஒப்புமை உடைத்து' என்னும் மூன்றும் வேற்றுமைப் பொருளும், முறைப்பொருளை உணர்த்திநின்ற பெயர்ச்சொல்லினது ஆறும்வேற்றுமைப் பொருளும், நிலத்தை வரையறுத்துக் கூறும் பொருளும், பண்பினிடத்துத் தோன்றிய ஒப்புணர்த்தும் ஐந்தாம் வேற்றுமைப் பொருளும், காலத்திடத்து உணரப்படும் ஏழாம் வேற்றுமைப் பொருளும், பற்று விடுகின்ற பொருளும் தீர்ந்துமொழிப் பொருளும் ஆகிய ஐந்தாம் வேற்றுமைப் பொருளும், அவைபோன்ற பிறபொருளும் நான்காம் வேற்றுமை உருபில் தோன்றுதல் பழமையான இலக்கணம். (எ-டு) 'யானைக்குக் கோட்டு கூர்மையுடையது' என்பனபோன்று வரும்; பிறவற்றிற்கும் வருமாறு உணர்க.*

## ஒரு சிறப்பு விதி

ஏனை யுருபும் அன்ன மரபின
மான மிலவே சொன் முறை யான. 594

*நான்காம் வேற்றுமை அல்லாத பிறவுருபும், தொகையல்லாத சொற்றொடரிடத்து ஒன்றனது பொருள் சிதையாமலிருக்கும் பொருட்டுப், பிறிதொன்று வந்து மயங்குதல் வழங்கும்*

முறை. (எ-டு) 'நாலது குற்றம் கூறினான்' என்னும் தொடர் மொழிக்கண், 'நாலைக் குற்றங் கூறினான்' என வரும்.

### வேற்றுமைக்கு ஏது

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்ற
இன்னதற்கு இதுபயன் ஆக என்னும்
அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ
ஆய்எட்டு என்ப தொழில்முதல் நிலையே. 595

வினை, வினைமுதல், செயப்படுபொருள், நிலம், காலம், கருவி ஆகிய ஆறுடன், 'இன்னதற்கு இது பயனாக' என்னும் இரண்டும் கூட்டத், தொழிலின் காரணங்கள் எட்டு என்று சொல்லுவர் புலவர்.

### குறைதலும் உண்டு

அவைதாம்,
வழங்கியல் மருங்கில் குன்றுவ குன்றும். 596

மேலே நூற்பாவில் கூறிய தொழிற்காரணங்கள் எட்டும், எல்லாத் தொழிலிடத்தும் வருமென்னும் வரையறை கிடையாது; வழக்கிடத்துச் சில தொழில்களிற் குறைய வேண்டியவை குறைந்து வருதலும் உண்டு. (எ-டு) கொடிப் பறந்தது, காற்று வீசிற்று என வரும்.

## 3. ஆகுபெயர் முடிவு

### ஆகு பெயர் இயல்பு

முதலில் கூறும் சினையறி கிளவியும்
சினையில் கூறும் முதல்அறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெயர் ஒட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனைய மரபினவே ஆகுபெயர்க் கிளவி. 597

முதற்சொல் கூறுமாற்றால் சினையை அறியும் கிளவியும் (சொல்), சினைச்சொல் கூறுமாற்றால் முதலை அறியும் சொல் லும், பொருளின் பெயர் அது தோன்றிய நிலத்தின்மேல் கூறும் சொல்லும், பண்புப்பெயர்ப் பண்புடைய பொருளை உணர்த்தும் சொல்லும், காரணப்பெயரால் காரியத்தைச் சொல்லுதலும், அன்மொழிப் பொருளிடத்து நின்ற இருபெயரொட்டும், செய் யப்பட்ட பொருள்மேல் செய்தானைக் கூறலும், ஆகிய, இவ்

விலக்கணத்தை யுடையன ஆகுபெயர் என்க. (எ-டு) 'கடுத் தின்றான்' என்பது, முதல் இனைமேல் வந்தது; இவ்வாறே பிற வற்றிற்கும் இயைத்துக் காண்க.

## இரண்டு வேறுபாடுகள்

அவைதாம்
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியால் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலும் காலை
வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும். 598

மேற்கூறப்பட்ட ஆகு பெயர், தத்தம் பொருளினை விட்டு நீங்காது, தத்தம் பொருளை ஒத்த பொருளொடு சேர்தலும், தம் பொருட்கு இயைபில்லாத பிறிதொரு பொருளைச் சுட்டி நிற்றலும் ஆகிய, இரண்டு வேறுபாட்டினைப் போற்றி அறியப் படும்.

## அளவும் நிறையும் ஆகுபெயராகக் கொள்ளப்படல்

அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே. 599

அளவுப்பெயரையும் நிறைப்பெயரையும் ஆகுபெயராகக் கொள்ளும் இடமும் உடையன என்று சொல்லுவர் புலவர்.

## அதற்குப் புறனடை

கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்த வற்றியலான் உணர்ந்தனர் கொளலே. 600

மேற்சொல்லப்பட்டனவே அன்றி வேறு ஆகுபெயர்கள் இருக்குமாறால், அவற்றையெல்லாம் மேற்கூறிய இலக்கணங்களால் உணர்ந்து கொள்க.

# 4. விளி மரபு

*[சொற்கள் விளியினை ஏற்கும் முறையினைக் கூறுவது]*

## 1. விளியின் இயல்பு

*விளி என்னவென்பது*

விளி எனப்படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய என்ப. 601

*விளி என்று சொல்லப்படுவன, தம்மை ஏற்கும் பெயரினோடு விளங்குமாறு தோன்றும் தன்மையை உடையவென்று ஆசிரியர் சொல்லுவர்.*

அவ்வே
இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப. 602

*விளிகொள்ளும் பெயரும் விளிகொள்ளாப் பெயரும் இவை என்று மாணவனுக்கு விளங்குமாறு, இவ்வியலின்கண் பொருள் தோன்றுமாறு சொல்லுகின்றார்.*

## 2. உயர்திணைப்பெயர் விளியேற்றல்

*விளியேற்கும் உயிர் ஈறுகள்*

அவைதாம்
இ உ ஐ ஓ என்னும் இறுதி
அப்பால நான்கே உயர்திணை மருங்கில்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே. 603

*சிறப்பாக எடுத்துச் சொல்லப்படுகின்ற பெயர்கள்தாம், இ உ ஐ ஓ என்னும் நான்கினையும், இறுதியாகவுடைய பெயர்கள் உயர்திணையில் விளி ஏற்கும். (எ-டு) 'சுடர்த்தொடீ கேளாய்' (கலி—51) எனவும், சாத்தி எனவும் வரும்.*

*இகர ஐகார ஈறுகள்*

அவற்றுள்
இ ஈ ஆகும் ஐ ஆய் ஆகும். 604

மேற்கூறிய நான்கு ஈற்றினுள் இகரம் ஈகாரமாகவும், ஐகாரம் ஆயாகவும் திரிந்து விளியேற்கும். (எ-டு) நம்பி, நம்பீ எனவும்; நங்கை, நங்காய் எனவும் வரும்.

ஓகார உகர ஈறுகள்

ஓவும் உவ்வும் ஏயொடும் சிவணும். 605

ஓகார இறுதியும் உகர இறுதியும் ஏயொடு பொருந்தி விளியேற்கும். (எ-டு) கோ, கோவே எனவும்; வேந்து, வேந்தே எனவும் வரும்.

உகரத்திற்குச் சிறப்பு விதி

உகரம் தானே குற்றிய லுகரம். 606

முற்கூறிய உகரமாவது குற்றியலுகரம் என்று அறிக.

முடிபு கூறல்

ஏனை உயிரே உயர்திணை மருங்கில்
தாம்விளி கொள்ளா என்மனார் புலவர். 607

மேற்கூறிய நான்கு இறுதியும் அல்லாத உயிரீறுகள் விளியினைக் கொள்ளா என்று சொல்லுவர் புலவர்.

அளபெடைப் பெயர்

அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய ஆகும் செயற்கைய என்ப. 608

இகர இறுதி அளபெடைப்பெயர், தன் அளவினும் மிக்கு ஒலித்து நிற்குமிடத்து, இகரம் ஈகாரமாகத் திரியாது இயல்பாய் நின்றே விளியேற்கும். (எ-டு) தோழீஇ என வரும்.

முறைப் பெயர்

முறைப்பெயர் மருங்கில் ஐஎன் இறுதி
ஆவொடு வருதற்கு உரியவும் உளவே. 609

முறையை உணர்த்தும் பெயரிடத்து, ஐயென்னும் இறுதி ஆயாகாது, ஆவொடு பொருந்தி வருவனவும் உள. (எ-டு) அன்னை, அன்னா என வரும்.

அவற்றுள், அண்மைவிளி

அண்மைச் சொல்லே இயற்கை யாகும். 610

இதுகாறும் கூறிவந்த நான்கிற்றுச் சொல்லும், அண்மை யிடத்து இயற்கையாய் விளியேற்கும். (எ-டு) நம்பி வாழி, வேந்து வாழி, நங்கை வாழி, கோ வாழி என வரும்.

## விளியேற்கும் புள்ளி ஈறுகள்

னரலள என்னும் அந்நான்கு என்ப
புள்ளி இறுதி விளிகொள் பெயரே. 611

மெய்யீற்று உயர்திணைப்பெயருள் ன ர ல ள என்னும் நான்கு புள்ளியையும் இறுதியாக உடைய சொற்களே விளி யேற்கும்.

## முடிவு

ஏனைப் புள்ளி ஈறுவிளி கொள்ளா. 612

மேற்கூறிய நான்கும் அல்லாத ஏனைய மெய்யீற்றுப் பெயர் கள் விளியினைக் கொள்ளா.

## அவற்றுள், னகர ஈறு

அவற்றுள்
அன்என் இறுதி ஆவா கும்மே. 613

மேற்கூறியவற்றுள் னகரத்தை இறுதியாக உடைய அன் என்னும் னகர இறுதி, ஆவாய்த் திரிந்து விளியேற்கும். (எ-டு) சோழன், சோழா என வரும்.

## அவற்றுள், அண்மை விளி

அண்மைச் சொல்லிற்கு அகரம் ஆகும். 614

அண்மை விளிக்கண் அன் இறுதி, அகரம் ஆகும். (எ-டு) துறைவன், துறைவ; ஊரன், ஊர என வரும்.

## 'ஆன்' என்னும் இறுதி

ஆன்என் இறுதி இயற்கை யாகும். 615

ஆன் என்னும் னகர இறுதி, இயல்பாய் விளியேற்கும். (எ-டு) சேரமான், மலையமான் என வரும்.

## வினையாலணையும் பெயர்

தொழிலிற் கூறும் ஆன்என் இறுதி
ஆயா கும்மே விளிவயி னான. 616

'தொழிலால் ஒரு பொருளைச் சொல்லும் இறுதிப் பெயர், விளியிடத்து ஆயாம். (எ-டு) வந்தான், வந்தாய் என வரும்.

### பண்புப் பெயர்

பண்புகொள் பெயரும் அதனோர் அற்றே. 617

'ஆன்' இறுதிப் பண்புகொள் பெயரும், ஆன் இறுதித் தொழிற்பெயர் போல ஆயாய் விளியேற்கும். (எ-டு) கரியான், கரியாய் என வரும்.

### அளபெடைப் பெயர்

அளபெடைப் பெயரே அளபெடை இயல. 618

'ஆன்' இறுதி அளபெடைப் பெயர், இகர இறுதி அளபெடைப் பெயரே போன்று, தன்னளவின் நீண்டு, இயல்பாய் நின்றே விளியேற்கும். (எ-டு) 'உழாஅஅன்' என வரும்.

### முறைப் பெயர்

முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே. 619

னகர இறுதி முறைப்பெயர், ஏகாரம் பெற்று விளியேற்கும். (எ-டு) மகன், மகனே என வரும்.

### விளி ஏலாத னகர ஈறுகள்

தான்என் பெயரும் சுட்டுமுதல் பெயரும்
யான்என் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி அனைத்தும் விளிகோள் இலவே. 620

'தான்' என்னும் பெயரும்; 'அவன்' 'இவன்' 'உவன்' என்னும் சுட்டினை முதலாக உடைய பெயரும்; 'யான்' என்னும் பெயரும்; 'யாவன்' என்னும் வினாப்பெயரும் ஆகிய இவை யாவும் னகரஇறுதியே ஆயினும், விளியினை ஏற்கா.

### ரகார ஈறு

ஆரும் அருவும் ஈரொடு சிவணும். 621

'ர'கர இறுதியுள், 'ஆர் அர்' என நின்ற இரண்டும் இறுதியாய் நின்று விளிகொள்ளும். (எ-டு) பார்ப்பார், பார்ப்பீர்; கூத்தர், கூத்திர் என வரும்.

### அதனிடத்து வினையாலணையும் பெயர்

தொழிற்பெய ராயின் ஏகாரம் வருதலும்
வழுக்கின்று என்மனார் வயங்கி யோரே. 622

ஆர், அர் என்னும் இரண்டு இறுதித் தொழிற்பெயர்க்கும், ஈர் வருதலே அன்றி ஏ வரினும் குற்றமில்லை. (எ-டு) வந்தார், வந்திரே என வரும்.

### பண்புப் பெயர்

பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே. 623

*அவ் இரண்டீற்றுப் பண்புகொள் பெயரும், அவ்வீறுதித் தொழிற்பெயர் போல ஈரோடு வருதலேயன்றிச், சிறுபான்மை ஈரோடு ஏகாரம் பெற்றும் விளிகொள்ளும். (எ-டு) கரியார், கரியீர், கரியீரே என வரும்.*

### அளபெடைப் பெயர்

அளபெடைப் பெயரே அளபெடை இயல. 624

*ரகர இறுதி அளபெடைப்பெயர், னகர இறுதி அளபெடைப்பெயர் போலவே தன் மாத்திரையின் மிக்கு ஒலிக்கு மிடத்துத், திரியாது, இயல்பாய் நின்றே விளிகொள்ளும். (எ-டு) சிருஅஅர் என வரும்.*

### ரகர ஈற்றுள் விளி ஏலாதவை

சுட்டுமுதல் பெயரே முற்கிளந் தன்ன. 625

*ரகர இறுதிச் சுட்டுப்பெயர், னகர இறுதிச் சுட்டுப் பெயரே போன்று விளிகொள்ளா.*

### 'நீயிர்' 'யாவர்' 'நும்மும்' என்பன

நும்மின் திரிபெயர் வினாவின் பெயரென்று
அம்முறை இரண்டும் அவற்றியலபு இயலும். 526

*நும்மின் திரிபாகிய நீயிர் என்னும் பெயரும்,யாவர் என்னும் வினாப்பெயரும் ஆகிய இரண்டும், முற்கூறிய சுட்டுப்பெயரைப் போல் விளிகொள்ளா.*

### லகர ளகர ஈறு

எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்றயல் நீட்டம வேண்டும். 627

*இதுகாறும் கூறுது வந்த லகரம் ளகரம் என்னும் இரண்டு மெய்யையும் இறுதியாக உடைய பெயர், ஈற்றின் அயல் எழுத்து நீண்டு விளி கொள்ளும். (எ-டு) குரிசில், குரிசீல்; மக்கள், மக்காள் என வரும்.*

### அயல் நெடிதாயின்

அயல்நெடி தாயின் இயற்கை ஆகும். 628

ஈற்றின் அயலெழுத்து நெட்டெழுத்தாயின், இயல்பாய் விளிகொள்ளும். (எ-டு) பெண்பால், கோமாள் என வரும்.

### ளகர ஈற்று வினைப்பெயரும் பண்புப்பெயரும்

வினையினும் பண்பினும்
நினையத் தோன்றும் ஆள்என் இறுதி
ஆய்ஆ குமமே விளிவயின் ஆன. 629

*வினையினிடத்தும் பண்பினிடத்தும் வரும், ஆள் என்னும் இறுதியை உடைய பெயர், இயல்பாகாது, ஆயாய் விளி ஏற்கும். (எ-டு) நின்றாள், நின்றாய் எனவும்; கரியாள், கரியாய் எனவும் வரும்.*

### முறைப் பெயர்

முறைப்பெயர்க் கிளவி முறைப்பெயர் இயல. 630

*ளகர இறுதி முறைப்பெயர், னகர இறுதி முறைப்பெயர் போல ஏகாரம் பெற்று விளிகொள்ளும். (எ-டு) மகள், மகளே என வரும்.*

### ளகர இறுதியுள் விளி ஏலாதவை

சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்
முற்கிளந்து அன்ன என்மனார் புலவர். 631

*ளகர இறுதிச் சுட்டுப்பெயரும், 'யாவாள்' என்னும் வினாப்பெயரும் முற்கூறிய சுட்டுப்பெயரும் வினாப்பெயரும் போல விளிகொள்ளா.*

### அளபெடைப் பெயர்

அளபெடைப் பெயரே அளபெடை இயல. 632

*லகர ளகர அளபெடைப்பெயர் முன்கூறப்பட்ட அளபெடைப் பெயர் போல, அளபு நீண்டு இயல்பாய் விளி கொள்ளும். (எ-டு) மாஅஅல், கோஒஒள் என வரும்.*

## 3. விரவுப்பெயர் விளியேற்குமாறு

கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்கும் காலை 633

*இதுகாறும் விளிகொள்ளும் என்று கூறப்பட்ட உயிரீறு புள்ளியீறு ஆகிய எட்டீற்றையும் இறுதியாக உடைய அஃறிணைக் கண் வரும் பொதுப்பெயர், மேற்கூறியவாறே விளி ஏற்கும்.*

*(எ-டு) சாத்தி, சாத்தீ எனவும்; மக்கள், மக்காள் எனவும் வருவனபோன்று வரும்.*

## 4. அஃறிணைப்பெயர் விளியேற்றல்

புள்ளியும் உயிரும் இறுதி ஆகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉம் காலம் தோன்றின்
தெளிநிலை உடைய ஏகாரம் வரலே. 634

*மெய்யீறும், உயிரீறும் ஆகிய அஃறிணைப்பெயர் எல்லாம் விளியேற்கும் காலம் உண்டாகுமிடத்து, ஏகாரம் பெற்றே வருமென்பதாம். (எ-டு) மரம், மரமே; அணில், அணிலே; நரி, நரியே என்பனபோன்று வரும்.*

## 5. புறனடை

### மூவகையினும் செய்மை விளி

உளஎனப் பட்ட எல்லாப் பெயரும்
அளபிறந் தனவே விளிக்கும் காலைச்
சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான. 635

*உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும் விளியேற்பனவாகச் சொல்லப்பட்ட எல்லாப் பெயரும், விளியேற்கும் இடத்துத் தூரத்திடத்து ஒலிக்கும் வழக்கத்திடத்து தத்தம் ஒலியளவில் மிக்கு ஒலித்தனவாம். (எ-டு) நம்பீஇ, சாத்தாஅ என வரும்.*

### 'அம்ம' என்னும் இடைச்சொல் விளி

அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெரியு மோரே. 636

*அம்ம என்னும் அசைச்சொல்லினது நீட்டம், விளிப்பெயருடன் வாராது, இடைச்சொல்லுடன் வரினும், விளியாகக் கொள்வர் அறிவோர். (எ-டு) அம்மா, சாத்தா என வரும்.*

## உயர்திணைப் பெயருள் விளி ஏற்காதவை

தநநு எஎன அவைமுதல் ஆகித்
தன்மை குறித்த னரளஎன் இறுதியும்
அன்ன பிறவும் பெயர்நிலை வரினே
இன்மை வேண்டும் விளியொடு கொளலே. 637

*த ந நு என்னும் உயிர்மெய்யையும், எ என்னும் உயிரையும் முதலாக உடையதாய், ஒருவனது உரிமைப்பொருளைக் குறித்து நின்ற ன ர ள என்னும் மூன்று மெய்யினையும் இறுதியாக உடைய சொல்லும், அவை போன்ற மற்றையவும்; ஆகிய பெயர்ச் சொல் வருமாயின் விளியுடன் சேர்தல் இல்லை. (எ-டு) தமன், தமர், தமள் எனவும்; எம்மான், எம்மார், எம்மாள் எனவும் வரும்; ஏனையவும் இவ்வாறே வருமாறு காண்க.*

# 5. பெயர் இயல்

[பெயர்ச்சொல்லின் இலக்கணம்]

## 1. சொற்களின் இயல்பு

### பொருள் குறித்தல்

எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே. 638

எல்லாச் சொற்களும் பொருள் உணர்த்துவனவே; பொருள் உணர்த்தாச் சொற்கள் எவையுமே இல்லையா.

### சொல்லும் பொருளும்

பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர். 639

சொல்லின் பொருளை அறிதலும், சொல் மட்டுமே அறிதலும் சொல்லினால் புலப்படுவது ஆகும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு) வந்தான் என்பது பொருளுணர்த்தியவாறும், கடி என் கிளவி என்பது சொல்லுணர்த்தியவாறும் காண்க.

### குறிப்பும் வெளிப்படையும்

தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற் தோன்றலும்
இருபாற்று என்ப பொருண்மை நிலையே. 640

சொல்லினைக் கொண்டே பொருளை உணர்தலும், சொல்லாலேயன்றிச் சொல்லுடன் கூடிய குறிப்பினால் பொருளை உணர்தலும் எனப், பொருள் உணரும் நிலை இரண்டு வகைப்படும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு) சாத்தன் வந்தான் எனவும், தெங்கு தின்றான் எனவும் முறையே வந்தவாறு காண்க.

### சொற்களின் பகுப்பு

சொல்எனப் படுப பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே. 641

'சொல்' என்று சொல்லப்படுவன, பெயர்ச்சொல் வினைச்சொல் என்று இரண்டுவகைப்படும்.

### இடைச்சொல் உரிச்சொல்

இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும்
அவற்றுவழி மருங்கில் தோனறும் என்ப. 642

*இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர் வினைச்சொற் களைச் சார்ந்து தோன்றுவனவாம்.*

## 2. பெயர்ச் சொல்

### பெயர்ச்சொல்லின் இலக்கணம்

அவற்றுள்
பெய[illegible]ரனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக்கு உரிமையும் அஃறிணைக்கு உரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ உருபின தோன்ற லாறே. 643

*மேற்கூறிய சொற்களுள் பெயர்ச்சொற்கள் உயர்திணைக் கண் வருவனவும், அஃறிணைக்[illegible]ண் வருவனவும், விரவுத் (பொது) திணைக்கண் வருவனவு[illegible] என மூன்று வகைப்படும், தோன்று மிடத்து.*

### இருதிணை ஐம்பாற்கும் உரியன

[illegible]ரப் பிரிந்த ஐம்பாற[illegible]ம்
உரியவை உரிய பெயர்வயி[illegible]னை. 644

*இருதிணையாகப் பிரிந்த ஐந்து பால் சொற்களுக்கும், பெயரிடத்து உரிய பொருள் உரியனவாம். (எ-டு) அவன், பெண் மகன்; அவள், மக்கள் என்பன போன்று வரும்.*

## 3. உயர்திணைப் பெயர்கள்

அவ்வழி
அவன்இவன் உவன்என வரூஉம் பெயரும்
அவள்இவள் உவள்என வரூஉம் பெயரும்
அவர்இவர் உவர்என வரூஉம் பெயரும்
யான்யாம் நாம்என வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவர் என்னும்
ஆவயின் மூன்றோடு அப்பதி னைந்தும்
பாலறி வந்த உயர்திணைப் பெயரே. 645

'அவன்' என்னும் சொல் முதலாக, 'யாவர்' என்னும் சொல் இறுதியாகக் கூறிய பதினைந்து பெயரும், பாலைத் தெளிவாக உணர்த்தி நிற்கும் உயர்திணைப் பெயர்களாம்.

ஆண்மை அடுத்த மகன்என் கிளவியும்
பெண்மை அடுத்த மகள்என் கிளவியும்
பெண்மை அடுத்த இகர இறுதியும்
நம்ஊர்ந்து வரூஉம் இகரஐ காரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயரும்
சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்
அவை முதலாகிய பெண்டுஎன் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன. 646

ஆண்மகன், பெண்மகள், பெண்டாட்டி, நம்பி, நங்கை, மகன், மகள், மாந்தர், மக்கள், ஆடூஉ, மகடூஉ, அவ்வாளன், அம்மாட்டான், அப்பெண்டு, பொன்னன்னான் என்னும் இப்பதினைந்தும் அத்தன்மையவாகிய பால் வெளிப்படையாக உணர்த்தும் உயர்திணைப் பெயராம்.

எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை அடுத்த மகன்என் கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர். 647

எல்லாரும், எல்லீரும், பெண்மகன் என்னும் மூன்று பெயர்களும் மேற்கூறியவை போன்று பால் உணர்த்தும் உயர்திணைப் பெயர்களாம்.

நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே
இன்றிவ ரென்னும் எண்ணியற் பெயரொடு
அன்றி யனைத்தும் அவற்றியல் பினவே. 643

'சோழியன்' போன்ற நிலப்பெயரும், 'மலையமான்' போன்ற குடிப் பெயரும், 'அவையத்தார்' போன்ற குழுவின் பெயரும், 'செல்வார்' போன்ற வினைப் பெயரும், 'வெற்பன்' போன்ற உடைப் பெயரும்; 'கரியான்' போன்ற பண்புகொள் பெயரும், 'தந்தையர்' போன்ற முறைநிலைப் பெயரும், 'பெருங்கையர்'

*போன்ற சினைநிலைப் பெயரும், 'ஆயர்' போன்ற திணைநிலைப் பெயரும், 'பட்டி புத்திரர்' போன்ற ஆடியற்பெயரும், 'ஒருவர்' முதலிய எண்ணியற்பெயரும், ஆகிய எல்லாம் பால் தெளியு மாறு வந்த உயர்திணைப் பெயர்களாம்.*

புறனடை

அன்ன பிறவும் உயர்திணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே. 649

*மேற் கூறப்பட்டன போன்றவான பிற பெயர்களும், உயர் திணையிடத்துப் பன்மையாகவும், ஒருமையாகவும் பாலை உணர்த்தி வரும் எல்லாப் பெயரும், உயர்திணைப் பெயராம்.*

## 4. அஃறிணைப் பெயர்கள்

அதுஇது உதுஎன வருஉம் பெயரும்
அவைமுத லாகிய ஆய்தப் பெயரும்
அவைஇவை உவைஎன வருஉம் பெயரும்
யாதுயா யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றொடு அப்பதி னைந்தும்
பாலறி வந்த அஃறிணைப் பெயரே. 650

*அது, இது, உது; அஃது, இஃது, உஃது; அவை, இவை, உவை; அவ், இவ், உவ்; யாது, யா, யாவை என்னும் இப் பதினைந்து பெயரும் பால்விளங்குமாறு வருகின்ற அஃறிணைப் பெயராம்.*

பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்
ஒப்பின் ஆகிய பெயர்நிலை உளப்பட
அப்பால் ஒன்பதும் அவற்றோ ரன்ன. 651

*பல்ல, பல, சில, உள்ள, இல்ல என்பனவும்; 'வருவது' போன்ற வினைப்பெயரும்; 'கரியது' போன்ற பண்பு கொள் பெயரும்; 'பத்து' என்பது போன்ற எண்ணுப் பெயரும்; 'பொன்னன்னது' போன்ற ஒப்புப்பெயரும் ஆகிய ஒன்பது பெயரும், பாலுணர்த்தி நிற்கும் அஃறிணைப் பெயராம்.*

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி உடைய பலவறி சொற்கே. 652

‘கள்’ என்னும் விகுதியுடன் சேர்தற்குரிய தன்மையை உடைய இயற்பெயர்கள், அவற்றுடன் சேர்ந்தவிடத்துப் பல வறி சொல்லாம். (எ-டு) குதிரை என்னும் இயற்பெயர், ‘கள்’ ளுடன் சேர்ந்து, குதிரைகள் என்று ஆவதுபோல் வருவன.

புறனடை

அன்ன பிறவும் அஃறிணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே. 653

மேற்கூறப்பட்ட பெயர்போன்ற பிற பெயர்களும், அஃறிணையிடத்துப் பன்மையும் ஒருமையுமாகிய பால் விளங்குமாறு வருகின்ற எல்லாப் பெயரும், அஃறிணைக்கு உரியவாம்.

விகுதியின்றிப் பாலுணர்த்தல்

தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே. 654

தெரிநிலை உடைய என்ற அஃறிணை இயற்பெயர் பன்மை விகுதியுடன் புணராது ஒருமை பன்மையை உணர்த்தும், அதற்குரிய வினையொடு வருமிடத்து. (எ-டு) குதிரை வந்தது, குதிரை வந்தன என வரும்.

## 5. விரவுப் பெயர்கள்

இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்
திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்தம் மரபின்
வினையொடு அல்லது பால்தெரிபு இலவே. 655

இரண்டு திணைக்கும் ஒத்த உரிமையையுடைய எல்லாப் பெயரும் உயர்திணைக்கண் அத்திணைப்பெயராயும், அஃறிணைக்கண் அத்திணைப்பெயராயும் வேறுபடுகின்ற பொதுப்பெயரெல்லாம், ஆராயுமிடத்துத், தத்தம் மரபினையுடைய வினையுடன் பொருந்தியல்லது திணை விளங்குமாறில்லை. (எ-டு) சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது என வரும்.

நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே
அன்ன மரபின் வினைவயி னான. 656

நிகழ்காலத்திடத்து வருகின்ற பலர்வரை கிளவியால், உயர்திணை ஒருமைப்பால் தோன்றுதலும் உரித்து; அப்பால்

தோன்றுதற்கு ஏற்றவிடத்து. (எ-டு) 'சாத்தி மாவரைக்கும்' என்பதில், சாத்தி என்பது பொதுப்பெயராயினும், வினையால் உயர்திணையாயிற்று.

## தொகையும் வகையும்

இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
எல்லாம் நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய அல்ல பிறவும் ஆஅங்கு
அன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே. 657

இயற்பெயர் முதலாக நீ என்பது இறுதியாகக் கூறப் பட்ட பெயர்களும், அவை போன்ற பிறவும், விரவுப்பெயர் களாம் (பொதுப் பெயர்களாம்).

## விரவுப்பெயர் விரி

அவற்றுள்
நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்
நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி இரண்டா கும்மே
ஏனைப் பெயரே தத்தம் மரபின. 658

மேலே கூறிய விரவுப்பெயருள், இயற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயர் ஆகியன ஒவ்வொன்றும் நான்காம்; முறையை உணர்த்தும் பெயர் இரண்டாம்; ஏனைய பெயர்கள் ஒவ் வொன்றும்.

## இயற் பெயர்

அவைதாம்
பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்
பன்மை இயற்பெயர் ஒருமை இயற்பெயரென்று
அந்நான்கு என்ப இயற்பெயர் நிலையே. 659

இயற்பெயர், பெண்மை இயற்பெயர் முதலாக நான்கு வகைப்படும்.

## சினைப் பெயர்

பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச் சினைப்பெயரென்று
அந்நான்கு என்ப சினைப்பெயர் நிலையே. 660

சினைப் பெயர், பெண்மைச் சினைப்பெயர் முதலாக நான்கு வகைப்படும்.

### சினை முதற்பெயர்

பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்று
அந்நான்கு என்ப சினைமுதற் பெயரே. 661

*சினை முதற்பெயர், பெண்மைச் சினைமுதற் பெயர் முதலாக நான்கு வகைப்படும்.*

### முறைப் பெயர்

**பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப்பெயரென்று**
**ஆயிரண்டு என்ப முறைப்பெயர் நிலையே. 662**

*முறைப்பெயர், ஆண்மை முறைப்பெயர் பெண்மை முறைப்பெயர் என இரண்டு வகைப்படும்.*

### பெண்மை சுட்டிய பெயர்

பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும
ஒன்றற்கும் ஒருத்திக்கும ஒன்றிய நிலையே. 663

*பெண்மைபற்றி வரும் இயற்பெயர் முதலாகிய நான்கு பெயரும், அஃறிணைப் பெண் ஒன்றற்கும், உயர்திணைப் பெண் ஒருத்திக்கும் உரிய என்பதாம். (எ-டு) சாத்திவந்தது, சாத்தி வந்தாள் என்பனபோன்று வரும்.*

### ஆண்மை சுட்டிய பெயர்

ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே. 664

*ஆண்மை பற்றி வரும் இயற்பெயர் முதலாகிய நான்கு பெயரும், அஃறிணை ஆண் ஒன்றற்கும், உயர்திணை ஆண் ஒருவனுக்கும் உரியனவாம். (எ-டு) சாத்தன் வந்தது, சாத்தன் வந்தான் என்பனபோன்று வரும்.*

### பன்மை சுட்டிய பெயர்

பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றே பலவே ஒருவர் என்னும்
என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே. 665

*பன்மைப் பொருளைச் சுட்டி வருகின்ற எல்லாப் பெயரும், அஃறிணை ஒருமைக்கும் அத்திணைப் பன்மைக்கும் உயர்திணைப் பன்மைக்கும் ஆகிய மூன்றுபாலுக்கும் உரியன. (எ-டு)*

*யானை வந்தது, யானை வந்தன, யானை வந்தான் என வரும். (எல்லாம் என்பது இயற்பெயர், சினைப்பெயர், சினை முதற் பெயர் ஆகியவை.)*

## ஒருமை சுட்டிய பெயர்

ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவர்க்கும் ஒன்றிய நிலையே. 666

*ஒருமைப்பொருளைச் சுட்டி வருகின்ற எல்லாப் பெயரும் அஃறிணை ஒன்றற்கும், உயர்திணை ஒருமைக்கும் உரியனவாம். (எ-டு) கோதை வந்தது, கோதை வந்தாள் என வரும்.*

## தாம் என்னும் பெயர்

தாம் என்கிளவி பன்மைக்கு உரித்தே. 667

*தாம் என்னும் பெயர் இருதிணையிடத்தும் பன்மைப் பாலுக்கு உரியது. (எ-டு) தாம் வந்தார், தாம் வந்தன என வரும்.*

## தான் என்னும் பெயர்

தான் என்கிளவி ஒருமைக்கு உரித்தே. 668

*தான் என்னும் பெயர் இரண்டு திணையிடத்தும் ஒருமைப் பாலுக்கு உரித்து. (எ-டு) தான் வந்தான், தான் வந்தாள் என வரும்.*

## எல்லாம் என்னும் பெயர்

எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி
பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே. 669

*எல்லாம் என்னும் பெயர், இரண்டு பன்மைப் பொருளை உணர்த்தி நிற்கும். (எ-டு) எல்லாம் வந்தார், எல்லாம் வந்தன என வரும்.*

தன்னு ளுறுத்த பன்மைக் கல்லது
உயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை. 670

*'எல்லாம்' என்னும் சொல், உயர்திணையிடத்து வருங்கால், தன்மைப் பன்மைக்கு வருதலல்லது, முன்னிலைப் பன்மைக்கும் படர்க்கைப் பன்மைக்கும் வாராது என்பதாம்.*

## நீயிர், நீ என்பன

நீயிர் நீயென வரூஉங் கிளவி
பால்தெரி பிலவே உடன்மொழிப் பொருள. 671

'நீயிர்', 'நீ' என்னும் இரண்டு சொல்லும், திணை விளங்குமாறு நில்லா; இருதிணையினையும் ஒருங்கே உணர்த்தும் பொதுநிலையுடையன. (எ-டு) நீயிர் வந்தீர், நீ வந்தாய் என வரும்.

அவ
நீயென் கிளவி ஒருமைக்கு உரித்தே. 672

மேற்கூறிய இரண்டனுள் நீ என்னும் பெயர் ஒருமைப் பொருளை உணர்த்தும். (எ-டு) நீ வந்தாய் என வரும்.

ஏனைக் கிளவி பன்மைக்கு உரித்தே. 673

நீயிர் என்னும் பெயர் பன்மைக்கு உரித்து என்பதாம். (எ-டு) நீயிர் வந்தீர் என வரும்.

## ஒருவர் என்னும் சொல்

ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை. 674

[illegible] சொல், உயர்திணை ஆண்மை [illegible] ஒருவன் ஒருத்தி என்னும் இரண்டு பாற்கும் பொதுவாக வரும். (எ-டு) ஒருவர் வந்தார் என்பது இருபாற்கும் பொதுவாய் நின்றவாறு காண்க.

தன்மை சுட்டின் பன்மைக்கு ஏற்கும். 675

ஒருவர் என்னும் பெயரின் தன்மையை அறியின், ஒருமைப் பொருளைக் [illegible], பன்மைச் சொல்லையே வைத்துக் காணப்படும். (எ-டு) ஒருவர் வந்தார் என வரும்.

இன்ன பெயரே இவையெனல் வேண்டின்
முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல். 676

இங்கே எடுத்துக் கூறிய நீயிர், நீ, ஒருவர் என்னும் மூன்று பெயர்களும், இன்ன பாலை உணர்த்தும் பெயர் என்று அறிய வேண்டுமாயின், சொல்லுவானது குறிப்புடன் சேர்த்து முறைமையாக உணர்தல் வேண்டும்.

## பால்திரிந்த பெயரின் வினைமுடிபு

மகடூஉ மருங்கின் பால்திரி கிளவி
மகடூஉ இயற்கை தொழில்வயி னான. 677

[illegible] பொருளிடத்துப் பால்திரிந்து வருகின்ற பெண்மகன் என்னும் பெயர், வினைகொள்ளுமிடத்துப் பெண்மைக்குரிய வினையினைக் கொள்ளும். (எ-டு) பெண்மகன் வந்தாள் என வ

### பெயரீறு திரிதல்

ஆவோ வாகும் பெயருமா ருளவே
ஆயிடன் அறிதல் செய்யு ளுள்ளே. 678

*ஆகாரம் ஓகாரமாகத் திரியும் இடமும் உள்ளன; அங்ஙனம் திரியும் இடம் செய்யுளுள் என அறிதல் வேண்டும். (எ-டு)*

*'கழனி நல்லூர் மகிழ்நர்க் கென்னிழை*
*நெகிழப் பருவரல் செப்பா தோயே'*

*என்னும் அடிகளின் இறுதிச்சீருள் ஆ ஓவாகினவாறு காண்க.*

### உயர்திணை ஈறு அமைந்த விரவுப் பெயர்கள்

இறைச்சிப் பொருள்வயின் செய்யு ளுட் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கில் தோன்றல் ஆன. 679

*செய்யுளில் கருப்பொருள்மேல் சொல்லப்படும் இரண்டு திணைக்கும் உரிய பெயர் உயர்திணை சுட்டாது; அந்தந்த நிலத்து அஃறிணைப் பொருளாய் வழங்கப்பட்டு வருதலான். (எ-டு)*

*'கடுவன் முதுமகன் கல்லா மூலற்கு*
*வதுவை அயர்ந்த வன்பறழ்க் குமரி'*

*என்புழி, கடுவன், மூலன், குமரி என்பன அஃறிணை உணர்த்தியவாறு காண்க.*

திணையொடு பழகிய பெயரலங் கடையே. 680

*கருப்பொருளை உணர்த்துகின்ற பொதுப்பெயர் உயர் திணையை உணர்த்தாது அஃறிணை உணர்த்துவது, அந்தந்தத் திணைக்கு உரியவாய் வழங்கிவருகின்ற பெயர் அல்லாத விடத்து என்பதாம். (எ-டு) 'செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளை' என்பதில், காளை என்பது உயர்திணை உணர்த்தியவாறு அறிக.*

# 6. வினை இயல்

[வினைச்சொல்லின் இலக்கணம்]

## 1. வினைச்சொல்லின் பொதுவியல்பு

*வினையின் விளக்கம்*

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும். 681

*வினை என்பது, வேற்றுமை ஏற்காது, ஆராயுமிடத்துக் காலத்தைக் காட்டி நிற்கும் சொல்லாம். (எ-டு) 'உண்டான்' என, வேற்றுமை கொள்ளாது காலத்துடன் வரும்.*

*மூவகைக் காலம்*

காலந் தாமே மூன்றென மொழிப. 632

*முதல் நூற்பாவில் கூறப்பட்ட காலம் மூன்று வகையின என்று சொல்லுவர் புலவர்.*

*பெயர் முதலியன*

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற
அம்முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே. 683

*இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்றுகாலமும் வினைச்சொற்கள் தோன்றும் நெறியிடத்து, குறிப்பு வினையுடனும் பொருந்தும் உண்மைத்தன்மையை உடையது. (எ-டு) உண்டான்; உண்ணா நின்றான், உண்பான் என வரும். இறப்பாவது தொழிலது கழிவு. நிகழ்வாவது தொழில் தொடங்கப் பட்டு முற்றுப்பெறாத நிலைமை. எதிர்வாவது தொழில் பிறவாமை.*

*வினைச்சொற்களின் வகை*

குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வருஉம் வினைச்சொல் எல்லாம்

உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே. 684

குறிப்புப் பொருளிடத்தும் வினைப்பொருளிடத்தும் தோன் காலத்துடன் வரும் எல்லா வினைச்சொற்களும், தோன்று மிடத்து உயர்திணைக்குரியனவாயும், அஃறிணைக்குரியனவாயும், இரண்டு திணைக்கும் ஒத்த உரிமையுடையனவாயும், ஆக மூன்று பகுதியாம். (எ-டு) உண்டான், கரியன்; சென்றது, செய்யது; வந்தனை, வெளியை என வரும்.

## 2. ...யா

### தன்மைப்பன்மை வினைமுற்று

அவைதாம்
அம்ஆம் எம்ஏம் என்னுங் கிளவியும்
உம்மொடு வருஉங் கடதற என்னும்
அந்நாற் கிளவியொடு ஆயெண் கிளவியும்
பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே. 685

உயர்திணை வினைகளுள், அம் ஆம் எம் ஏம் என்னும் நான் கீற்றுச்சொல்லும்; கும் டும் தும் றும் என்னும் நான்கீற்றுச் சொல்லும்; ஆகிய எட்டும், தன்மைப் பன்மைச் சொல்லாம். (எ-டு) அஞ்சினம், அஞ்சினும், உண்கும், உண்டும் என வரும்; மற்றையவும் வருமாறு காண்க.

### தன்மை ஒருமை வினைமுற்று

கடதற வென்னும்
அந்நான்கு ஊர்ந்த குன்றிய லுகரமோடு
என்ஏன் அல்என வருஉம் ஏழும்
தன்வினை உரைக்கும் தன்மைச் சொல்லே. 686

கு டு து று என்னும் நான்கு ஈற்றவாய சொல்லுடன், என் ஏன் அல் என்னும் மூன்றும் கூடிவருகின்ற ஏழும் தன்மை ஒருமைச் சொல்லாம். (எ-டு) உண்கு, உண்டு, வருது, சேறு, உண்டனென், உண்டேன், உண்பல் என வரும்.

### 'செய்கு' என்னும் வாய்பாட்டு வினை

அவற்றுள்
செய்குஎன் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர். 687

மேற்கூறிய தன்மை ஒருமைச்சொல் ஏழனுள், 'செய்கு' என்னுஞ் சொல் வினையுடன் முடியுமாயினும், தன்னுடைய முற்றுதல் ஆகிய தன்மையினின்றும் மாறுபடாது. (எ-டு) காண்கு வந்தேன் என வரும்.

## படர்க்கை ஒருமை வினைமுற்று

அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கில் படர்க்கைச் சொல்லே. 688

அன், ஆன், அள், ஆள் என்னும் நான்கு சொல்லும் உயர் திணை ஒருமையை யுணர்த்தும் படர்க்கைச் சொல்லாம். (எ-டு) உண்டனன், உண்டான், உண்டனள், உண்பாள் என வரும்.

## படர்க்கைப் பன்மை வினைமுற்று

அர் ஆர் பஎன வருஉம் மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே. 689

அர், ஆர், ப என்னும் மூன்று இறுதியையும் உடையன வாய் வரும் மூன்று சொல்லும், பன்மையுணர்த்தும் படர்க்கைச் சொல்லாம். (எ-டு) உண்டனர், உண்டார், உண்ப என வரும்.

## 'செய்மார்' எனும் வாய்பாட்டு வினை

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப. 690

'மார்' இறுதிச் சொல்லும், வினை கொண்டு முடியுமிடத்துப் பன்மை உணர்த்தும் படர்க்கைச் சொல்லாம். (எ-டு) எள்ளுமார் வந்தார் என வரும்.

## உயர்திணைக்கு உரிய வினைமுற்றுக்கள்

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அந்நா லைந்து மூன்றுதலை இட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே. 691

பன்மையும் ஒருமையுமாகிய பாலுணர்த்திவந்த இருபத்து மூன்று சொல்லும், முன்னுறக் கூறப்பட்ட உயர்திணையிடத்தன வாம்.

## தன்மைப் பன்மைக்கு ஒரு வேறுபாடு

அவற்றுள்
பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
எண்ணியல் மருங்கில் திரியவை உளவே 692

கூறப்பட்ட இருபத்துமூன்றனுள் பன்மையை உணர்த்தும் தன்மைச் சொல், என்றுகின்றவிடத்து, அஃறிணையையும் சேர்த்துத் திரிவனவும் உள்ளன. (எ-டு) 'யானுமென் எஃகமுஞ் சாறும்' என வரும்.

## யார் என்னும் குறிப்புமுற்று

யாஅர் என்னும் வினைவினை
அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே. 693

'யார்' என்னும் வினைப்பொருள் தரும் சொல், உயர்திணையிடத்து முப்பாற்கும் உரித்து ஆகும். (எ-டு) அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும்.

## வினைமுற்றுக்களின் ஈறு திரிதல்

பாலறி மரபின் அம்மூ வீற்றும்
ஆஓ ஆகும் செய்யு ளுள்ளே. 694

பாலைத் தெளிவாக உணர்த்தும் முதல்நூற்பாவில் கூறிய மூன்றீற்றும், செய்யுளிடத்து, ஆகாரம் ஓகார மாகும். (எ-டு) 'வினவி நிற்றந் தோனே' என வரும்.

ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும். 695

'ஆய்' என்னும் இறுதியும், செய்யுளிடத்து, ஆகாரம் ஓகார மாகத் திரியும். (எ-டு) 'வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப' என வரும்.

## குறிப்பு வினைமுற்று

அதுசொல் வேற்றுமை உடைமை யானும்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்
ஒப்பி னானும் பண்பி னானுமென்று
அப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும். 696

ஆறாம் வேற்றுமை உடைமைப் பொருளிடத்தும், ஏழாம் வேற்றுமை நிலப்பொருளிடத்தும், ஒப்புப் பொருளிடத்தும் பண்புப் பொருளிடத்தும். அப் பொருள் பற்றி வரும் சொல்லிடத்துக் காலம் குறிப்பினாலே தோன்றும். (எ-டு) கச்சினன், இல்லத்தன், புலிபோல்வான், கரியன் என முறையே வந்தவாறு காண்க.

அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம். 697

அன்மை, இன்மை, உண்மை, வன்மை என்னும் பொருளுணர்த்தி வருவனவும், அவை போன்ற பிறவும், குறிப்புப் பொரு

ளுடன் சேரும் எல்லாச் சொல்லும் கால குறிப்பினுல் அறியப்படுவதாம். (எ-டு) அல்லன், இலன், உளன், வல்லன் என வரும்; பிறவும் இயைத்துக் காண்க.

### ப்பு ன் ஈறு

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வருஉம்
காலக் கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே. 698

*பன்மையும் ஒருமையுமாகிய பால்வேறுபாட்டினை விளக்கிக் குறிப்புப்பொருளை உடையவாய் வரும் வினைச்சொல், மேல் வரும் உயர்திணையிடத்துக்கூறிய தெரிநிலைவினையுடன் ஒக்கும். (எ-டு) கரியம், கரியாம் என்பனபோன்று வரும்.*

## 3. அஃறிணை வினை

### *பன்மை வினைமுற்று*

அஆ வ என வருஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை. 699

*அ, ஆ, வ என்னும் மூன்று ஈற்றுச் சொற்களும் அஃறிணைப் பன்மைப் படர்க்கையாம். (எ-டு) தொக்கன, உண்ணா, செல்வ என வரும்.*

### *ஒருமை வினைமுற்று*

ஒன்றன் படர்க்கை தறட ஊர்ந்த
குன்றிய லுகரதது இறுதி யாகும். 700

*ஒன்றனை உணர்த்தும் படர்க்கை வினையாவது, து, று, டு என்னும் மூன்றனையும் இறுதியாகவுடைய சொல்லாம். (எ-டு) வந்தது, கூயிற்று, குண்டுகட்டு என்பனபோன்று வரும்.*

### *அஃறிணைப் பன்மை வினைமுற்றுக்கள்*

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே. 701

*பன்மை ஒருமை ஆகிய, பாலறியுமாறுவந்த மேலே கூறிய ஆறு ஈற்றுச் சொல்லும், அஃறிணையனவாம்.*

## 'எவன்' என்னும் குறிப்பு வினைமுற்று

அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினாவே. 702

'எவன்' என்னும் வினாச்சொல், அஃறிணை இரண்டு பாலுக்கும் உரிமையுடையது என்று சொல்லுவர் புலவர். (எ-டு) அஃதெவன், அவையெவன் என வரும்.

## குறிப்பு வினைமுற்று

இன்றில வுடைய என்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வருஉங் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும். 703

இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல கரிது போன்ற பண்புகொள் கிளவி, உள நெடுஞ்செவித்து முதலிய பண்பினாகிய சினைமுதற் கிளவி, பொன்னன்ன எனும் ஒப்புக் கிளவி ஆகிய பத்தும் வினைக்குறிப்புச் சொற்களாம்.

## குறிப்பு வினைமுற்றின் ஈறு

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வருஉங்
காலக் கிளவி அஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே. 704

பன்மை ஒருமை ஆகிய பாலினை விளக்கிக் குறிப்புப் பொருள் விளைத்துவரும் வினைச்சொல், மேற்கூறிய அஃறிணை வினையோடு ஒக்கும்.

# 4. விரவு வினை

## பெயர், முறை, தொகை

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த என்னும்
அம்முறை நின்ற வாயென் கிளவியும்
திரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய. 705

முன்னிலை, வியங்கோள், வினையெச்சம், இன்மை செப்பல், வேறு, செய்ம்மன, செய்யும், செய்த என்னும் எட்டுச்சொல்லும்

பொதுத்தன்மையில் பிரிந்து, ஒரு காலத்து உயர்திணை உணர்த்தியும், ஒரு காலத்து அஃறிணை உணர்த்தியும் வேறுபடுகின்ற தொழிலுடையவாய், இரண்டு திணைச்சொல்லாவதற்கும் ஒத்த உரிமை உடையனவாம்.

### முன்னிலை ஒருமை வினைமுற்று

அவற்றுள்
முன்னிலைக் கிளவி
இஐ ஆ யென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும். 706

மேற்கூறிய பொது (விரவு) வினைகளுள், முன்னிலைச் சொல்லினுள், இகரம் ஐகாரம் ஆய் என்னும் மூன்று இறுதியும், ஒருவனுக்கும் ஒருத்திக்கும் ஒன்றற்கும் பொருந்துமாறு வரும். (எ-டு) உண்டி, உண்டனை, உண்டாய் என வரும்.

### முன்னிலைப் பன்மை வினைமுற்று

இர் ஈர் மின்னென வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர். 707

இர், ஈர், மின் என்னும் மூன்று இறுதி சொல்லும், உயர்திணைப் பலர்பாலினிடத்தும், அஃறிணை பலவின்பாலிடத்தும், இருமிடத்தும், ஒத்த உரிமையை உடையனவாம். (எ-டு) உண்டனிர், உண்டீர், உண்ணுமின் என வரும்.

### ஏனை வினைகள்

எஞ்சிய கிளவி யிடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே. 708

முன்னர்க் கூறிய வினை எட்டனுள், முன்னிலை வினையொழிந்த ஏழும், தத்தம் பொருளிடத்துத் தோன்றுமிடத்து, மூன்றிடத்தும் ஐந்துபாலுக்கும் உரியனவாம்.

### வியங்கோள் வினை

அவற்றுள்
முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடும்
மன்னு தாகும் வியங்கோட் கிளவி. 709

மேற்கூறிய வினை எட்டனுள், வியங்கோள் கிளவி தன்மை முன்னிலை ஆகிய இரண்டிடத்தும், பெரும்பான்மையும் வாராதாம்; சிறுபான்மை வரினும் கொள்க.

## செய்யும் என்னும் வினை

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச்
செய்யு மென்னும் கிளவியொடு கொள்ளா. 710

*பலர்பால் படர்க்கை முன்னிலை தன்மை ஆகிய, இடமும் பாலுமாகிய எஞ்சிய வினைக்குரிய பொருளிடத்து மூன்றும், நிகழ்காலத்து வரக்கூடிய 'செய்யும்' என்னும் சொல்லுடன் இயையாது.*

## வினை எச்ச வாய்பாடுகள்

செய்து செய்யூ செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி. 711

*செய்து என்பது முதலாகக் கூறப்பட்ட ஒன்பதும் வினை எச்சம் ஆம்*

பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்
அன்ன மரபிற் காலங் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே. 712

*பின், முன், கால், கடை, வழி, இடம் என்னும் இறுதியை உடையனவாய் வருவனவும், அவை போன்று காலத்தைக் கருதி வருவன பிறவும், வினை எச்சங்களாகும்.*

அவற்றுள்,
முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின. 713

*மேற்கூறப்பட்ட பதினைந்து வினையெச்சங்களுள், முதற்கண் உள்ள செய்து, செய்யூ, செய்பு என்னும் மூன்றும், தம் வினைமுதல் வினையால் முடியும் தன்மையை உடையன. (எ-டு) உண்டு வந்தான், உண்ணூா வந்தான், உண்குபு வந்தான் என வரும்.*

அம்முக் கிளவியும் சினைவினை தோன்றில்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோ ரனைய வென்மனார் புலவர். 714

*வினைமுதல் வினைகொள்ளும் அம் மூன்று சொல்லும், சினைவினையானது சினைவினையோடு முடியாது, முதல் வினையுடன் முடியுமாயினும், வினையினால் ஒரு தன்மையை உடையனவாம். (எ-டு) காலிற்று வீழ்ந்தான், காலிறாஉ வீழ்ந்தான், காலிறுபு வீழ்ந்தான் என வரும்.*

## பிற வாய்பாடுகள்

ஏனை யெச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் வினைநிலை யானும்
தாமியன் மருங்கின் முடியும் என்ப. 715

கூறிய மூன்று எச்சங்கள் நீங்கலாக, ஏனைய எச்சங்கள், வினைமுதல் வினையினாலும், அவ்விடத்து வந்து பொருந்தும் பிற வினையினாலும், வரையறையின்றித் தாம் இயலும் வழியே முடியும். (எ-டு) மழை பெய்தென மரம் தளிர்த்தது எனவும்; மழை பெய்யியர் பலி கொடுத்தார் எனவும் வருமாறு இயைத்துக் காண்க.

## அடுக்கி முடியும் வினைஎச்சங்கள்

பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே. 716

ஒரு வாய்பாட்டானும் பல வாய்பாட்டானும் வினை எச்சம் தத்தம் சொல்லிடத்து முறையாகப் பொருள் முடியாது அடுக்கி வந்தாலும், முதற்கண் நின்ற எச்சம் முடியுமானால், ஏனைய வாய்பாட்டான் வந்தனவும் முடிந்தனவாம். (எ-டு) 'உண்டு தின்று ஓடிப் பாடி வந்தான்' என வரும்.

## பெயரெச்ச வாய்பாடுகள்

நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதல் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய
செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே. 717

'செய்யும்' 'செய்த' என்னும் சொற்கள், தொழிற் காரணங்கள் எட்டனுள், இங்குக் கூறிய ஆறுக்கும் உரிமையை உடையன. (எ-டு) வாழும் வீடு எனவும், புக்க வீடு எனவும் முறையே இரண்டுவினையும் வந்தன; பிறவும் காண்க.

## செய்யும் என்னும் வாய்பாடு

அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்று முரித்தே. 718

'நிலம்' முதலாகிய ஆறு பொருளுடனும் வருமிடத்து, 'செய்யும்' என்னும் வினைச்சொல், முன்னால் வரையறை செய்து விலக்கப்பட்ட, பலர்பால் படர்க்கை, முன்னிலை, தன்மை என்னும் மூவிடத்தும் உரித்தாம்.

### பெயரெச்சமும் வினை எச்சமும்

பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை திரியா. 719

*பெயரெச்சமும் வினையெச்சமும் செய்தற் பொருளை யன்றிச் செய்யாப்பொருளைப் பற்றி மறுத்துச் சொன்னாலும், அவ்வெச்சப் பொருள் உணர்த்தும் தம் தன்மையில் மாறுபடாது. (எ-டு) உண்ணாச்சோறு எனவும், உண்ணாது வந்தாள் எனவும் வருமாறு காண்க.*

### எச்சங்களிடையே பிற சொற்கள்

தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார். 720

*தத்தம் எச்சத்துடன் சேரும் குறிப்பினையுடைய எச்சொல்லாயினும் அவற்றை வரையறை செய்து நீக்கார். (எ-டு) உழுது முருகன் வந்தான் என வரும்.*

### 'செய்யும்' என்னும் பெயரெச்சம் ஈறு கெடுதல்

அவற்றுள்,
செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை உகரம்
அவ்விட னறிதல் என்மனார் புலவர். 721

*'செய்யும்' என்னும் பெயரெச்சத்து இறுதி உகரம் தான் ஏறிநின்ற யகர மெய்யுடனும் கெட்டுவிடும் என்று சொல்லுவர் புலவர் (சில விடங்களில்). (எ-டு) 'வாவும்புரவி' என்பது அவ்வாறு கெட்டு,'வாம் புரவி' என்று வருமாறு காண்க.*

### செய்து எனும் எச்சம்

செய்தெ னெச்சத் திறந்த காலம்
எய்திடன் உடைத்தே வாராக் காலம். 722

*இறந்த காலத்தின் கண்ணேயே பெரும்பாலும் வருதற்குரிய 'செய்து' என்னும் எச்சம், சிலவோர் காலத்தில் எதிர்காலத்தில் வருதலும் உண்டு. (எ-டு) நீ உண்டு வருவாய் என வரும்.*

### முக்காலங்களுக்கும் உரியதனை நிகழ்காலத்தாற் கூறுதல்

முந்நிலைக் காலமுந் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும். 723

*மூன்று காலத்திடத்தும் உளதாகிய தன்மையையுடைய எல்லாப் பொருளையும், நிகழ்காலத்துப் பொருள் நிலைமையை*

உடைய, 'செய்யும்' (பொதுச் சொல்) என்னும் சொல்லால் சொல்லுக. (எ-டு) மாலை நிற்கும், யாறு ஒழுகும் என வரும்

## விரைவுப் பொருளில் காலம் மயங்குதல்

வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்கு வருஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர். 724

எதிர்காலத்தும் நிகழ்காலத்தும் ஒருதன்மையாக வரும் வினைச்சொல்லின் பொருளை இறந்த காலத்தால் சொல்லுதல் விரைவுப் பொருளையுடையன என்று சொல்லுவர் புலவர் (எ-டு) உண்கின்ற ஒருவன், உண்டியோ? என்று கேட்பானை நோக்கி, உண்டேன் என்று கூறுதல், விரைவின் பொருட்டுக் கூறியவாறு காண்க.

## சிறப்புப் பொருளில் காலம் மயங்குதல்

மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வது இல்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே. 725

மிக்கதனிடத்து நிகழும் வினைச்சொல்லைக் கருதி, அம் மிக்கதாகிய பண்பினைக் குறித்துவரும் வினைமுதற்சொல், சுட்டிச் [illegible] இல்லாதவிடத்து, நிகழ் காலத்திற் [illegible] பொருளையுடைத்தாம். (எ-டு) 'இ[illegible]' என வரும்

## 'இது செயல் வேண்டும்' என்னும் முற்று

இதுசெயல் வேண்டு மென்னுங் கிளவி
இருவயி னிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும். 726

'இது செய்யவேண்டும்' என்பதுபட வரும் சொல், தன்னிடத்தாயினும் பிறரிடத்தாயினும் என்னும் இரண்டிடத்தும் நிலைபெறுகின்ற பொருளை உடைத்தாம். (எ-டு) 'படித்தல் வேண்டும்' என்பது, அது செய்வானுக்கும் அது செய்தலை விரும்பும் தந்தைக்கும் ஆகியவாறு காண்க.

## துணிந்து திட்பம் எய்துதற்கு வரும் வினா

வன்புற வருஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையு முடைத்தே. 727

வன்மை பொருந்த வரும் வினாவினைச்சொல் வினைநிகழ்வை உணர்த்தாது, எதிர்மறுத்து உணர்த்துதற்கும் உரித்தாதலை உடைத்து (எ-டு) வைதான் ஒருவனை, மீண்டும் வையப்பட்டான் வினவியவிடத்து, 'வைதான் வைதேனோ' என்று கூறுதல், 'வையவில்லை' என்னும் பொருளைத் தருதல் காண்க.

## இயற்கையும் தெளிவும் சொல்லுமிடத்து

வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்றும்
இயற்கையுந் தெளிவும் கிளக்குங் காலை. 728

எதிர்காலத்திற்கு உரிய வினைச் சொற்பொருளை, இயற்கையென்றும் தெளிவு என்றும் கூறுமிடத்து. இறந்தகாலச் சொல்லினும் நிகழ்காலச் சொல்லினும் விளக்கமாக கூறப்படும். (எ-டு) பொருளை இழவாமுன்னர் இயற்கையின்றிப் 'பொருளிழந்தான்' எனவும், மழை பெய்யாமுன் அதற்குரிய தெளிவான் 'மழைபெய்யும்' எனக் கூறலும்.

## செயப்படுபொருளை வினைமுதல்போலச் சொல்லுதல்

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே. 729

செய்த பின் உண்டாகும் பொருளைச், செய்ததுபோலவே தொழிலுண்டாகுமாறு சொல்லுதல், வழக்கின்கண் உள்ள மரபாகும். (எ-டு) 'எழுதுகோல் எழுதிற்று' என வரும்.

## காலம் வேறிடத்தும் மயங்கி வருதல்

இறப்பே யெதிர்வே யாயிரு காலமும்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி. 730

இறந்தகாலம் எதிர்காலம் என்னும் இரண்டும் மயங்கு மொழிப் பொருளாய் விளங்கத் தோன்றும். (எ-டு) 'இவர் முற்காலத்து இச் சோலையில் விளையாடுவர்' என வரும்.

ஏனைக் காலமும் மயங்குதல் வரையார். 731

இறந்தகாலமும் எதிர்காலமுமே யன்றி, நிகழ்காலமும் அவற்றுடன் மயங்கும். (எ-டு) 'இவன் முற்காலத்தில் இச் சோலையில் விளையாடும்' என வரும்.

# 7. டை இயல்

## 1. பொது இலக்கணம்

### *இடைச்சொல் இயல்பு*

**இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்**
**நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே. 732**

*'இடைச் சொல்' என்று சொல்லப்படுவன, பெயரொடும் வினையொடும் சேர்ந்து வருவன; தனியாக வரும் தன்மை உடையன அல்ல. (எ-டு) 'அது கொல் தோழி காம நோயே' என வரும்.*

### *இடைச்சொல்லின் பாகுபாடுகள்*

அவைதாம்
புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயி னுருபா குநவும்
அசைநிலைக் கிளவி யாகி வருநவும்
இசைநிறைக் கிளவி யாகி வருநவும்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியால் பொருள்செய் குநவுமென்று
அப்பண் பினவே நுவலுங் காலை. 733

*முதல் நூற்பாவில் கூறிய இடைச்சொற்கள்தாம், இரண்டு சொல் சேருமிடத்து அப் பொருள் விளங்கவருவனவும், வினைச் சொல்லை முடிக்குமிடத்துக் காலத்தை உணர்த்திவருவனவும், வேற்றுமைப் பொருளிடத்து உருபாய் வருவனவும், பொருளற்றுத் துணையாய் வருவனவும், ஒலியை நிறைத்தலை பொருளாக வருவனவும், தத்தம்முடைய குறிப்பால் பொருளை உணர்த்துவனவும், ஒப்புப்பொருள் தோன்றுமிடத்துத் தான் அப்பொருள் தருதலும் எனச், சொல்லுமிடத்து, அவ் வேழு வகையாகவும் வருவனவாம்.*

### நிற்குமிடமும் வேறுபாடும்

அவைதாம்
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்
தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்
அன்னவை யெல்லாம் உரிய வென்ப. 734

மேற்கூறிய இடைச்சொல், தான் சேரும் சொல்லின் இடையே வருதலுடன், முன்னும் பின்னும் வருதலும், தன்னுடைய இறுதி திரிந்துவருதலும், இரண்டு இடைச்சொல் சேர்ந்து வருதலும் ஆகிய தன்மைஎல்லாம் உடையனவாம். (எ-டு) 'அது மன்', 'கொன்றார்' என, முன்னும் பின்னும் வந்தவாறு காண்க; பிறவும் வரும்வழி அறிக.

## 2. சிறப்பு இலக்கணம்

### 'மன்' என்பதன் பொருள்

கழிவே யாக்கம் மொழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே. 735

'மன்' எனும் சொல் கழிவு, ஆக்கம், ஒழியிசைப்பொருள் என்னும் மூன்றுபொருளில் வருவனவாம். (எ-டு) 'சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே' (புறம்—235) என்பது கழிவுப் பொருள் கருதிற்று; பிறவும் வரும்வழிக் காண்க.

### 'தில்' என்னும் இடைச்சொல்

விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே. 736

'தில்' எனும் சொல், விழைவு, காலம், ஒழிந்துநின்ற சொற்பொருள் குறித்தல் என மூன்று வகைப்படும். (எ-டு) 'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப், பெறுகதில் லம்ம யானே' (குறு—14) என விழைவுகுறித்து வந்தது. பிறவும் வரும்வழிக் காண்க.

### 'கொன்' என்னும் இடைச்சொல்

அச்சம் பயமிலி காலம் பெருமையென்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே. 737

'கொன்' என்னும் சொல், அச்சம், பயனின்மை, காலம், பெருமை என்னும் நான்காம். (எ-டு) 'கொன்னே கழிந்தன்

றிளமை' (நாலடி—55) என்பது, பயனின்றிக் கழிந்தது என்னும் பொருளது; பிறவும் வருமாறு காண்க.

## 'உம்' என்னும் இடைச்சொல்

எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே. 738

எச்சம் முதலாக ஆக்கம் இறுதியாக உம்மை எட்டாம். (எ-டு) 'சாத்தனும் வந்தான்' என்பது, கொற்றனும் வந்தான் என்று பொருள்தருதலின் எச்ச உம்மை; பிறவும் வருமாறு காண்க.

## 'ஓ' என்னும் சொல்

பிரிநிலை வினவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன்று என்ப ஓகா ரம்மே. 739

பிரிநிலை முதல் சிறப்பு இறுதியாக ஓகாரம் அறுவகைப் படும். (எ-டு) 'சாத்தன் உண்டானோ' என்பது வினா ஓகாரம்; பிறவும் காண்க.

## 'ஏ' என்னும் சொல்

தேற்றம் வினவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை யிவ்வைந் தேகா ரம்மே. 740

தேற்றம் முதல் ஈற்றிசை இறுதியாக, ஏகாரம் ஐந்தாம். (எ-டு) 'நீயே கொண்டாய்' என்பது வினா ஏகாரம்; பிறவும் காண்க.

## 'என' என்னுஞ் சொல்

வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே யெனவென் கிளவி. 741

'என' என்னும் சொல், வினை முதலிய ஆறு பொருளும் உணர்த்தி வரும். (எ-டு) 'வெள்ளென வெளுத்தது' என்று பண்புப் பொருள் குறித்து வந்தது; பிறவும் காண்க.

## 'என்று' எனுஞ் சொல்

என்றென் கிளவியும் அதனோ ரற்றே. 742

'என்று' எனும் சொல்லும், 'என' என்பதுபோல அவ்வாறு பொருளையும் கருதிவரும். (எ-டு) 'நரையுரு மென்றெண்ணி' என வினைப்பொருள் உணர்த்தியவாறு காண்க.

## 'தில்லை' எனும் சொல்

விழைவின் தில்லை தன்னிடத் தியலும். 743

விழைவுப் பொருளிடத்து வரும் தில்லைச்சொல் தன்மை இடத்தல்லாது வராது.

## 'ஏ', 'ஓ' சொற்களுக்கு மேலும் ஒரு முடிபு

தெளிவின் ஏயுஞ் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய வென்ப. 744

தெளிவுப்பொருளில் வரும் ஏகாரமும், சிறப்புப் பொருளில் வரும் ஓகாரமும், அளபினால் மிக்க இசையினை உடைய வென்று சொல்லுவர் புலவர்.

## 'மற்று' எனும் சொல்

மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை
அப்பா லிரண்டென மொழிமனார் புலவர். 745

'மற்று' எனும் சொல், வினைமாற்றும் அசைநிலையும் என இரண்டாம். (எ-டு) 'மற்றறிவாம் நல்வினை...' என்பது வினைமாற்று.

## 'எற்று' எனும் சொல்

எற்றென் கிளவி இறந்த பொருட்டே 746

'எற்று' எனும் சொல், இறந்த என்னும் பொருளை உடைத்து. (எ-டு) 'எற்றென் னுடம்பின் னெழினலம்' என்பது இறந்தது (கழிந்தது) என்னும் பொருள்பட நின்றது காண்க.

## 'மற்றையது' எனும் சொல்

மற்றைய தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை யொழிய இனங்குறித் தன்றே. 747

மற்றையது என்று சொல்லப்படுகின்றதற்கு முதனிலையாய் வரும் மற்றை எனும் ஐகார இறுதி இடைச்சொல், சுட்டுபதை நீக்கி, அதனோடு ஒத்த பிறிதொன்றனை உணர்த்தும். (எ-டு) எழுதுகோல் கொண்டு வந்தவிடத்து, மற்றையது கொண்டுவா என்றால், 'பிறிது ஒரு எழுதுகோலை எடுத்துவா' என்று குறித்ததாம்.

## 'மன்ற' என்னும் சொல்

மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும். 748

'மன்ற' எனும் சொல் தெளிவுப்பொருளை உணர்த்தும். (எ-டு) 'கடவுளாயினுமாக; மடவை மன்ற வாழிய முருகே' என வரும். 'மடவனே' என்று தெளிவுபடுத்துக் கூறியதாம்.

'தஞ்சம்' என்னும் சொல்

தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே. 749

'தஞ்சம்' எனும் சொல், எளிது என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' (புற—73) என வரும்.

'அந்தில்' என்னும் சொல்

அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று
ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப. 750

'அந்தில்' எனும் சொல், 'ஆங்கு' என்னும் இடப்பொருளை உணர்த்துவதும், அசைநிலையாய் வருதலும் என இரண்டாம். (எ-டு) 'வருமே—சேயிழை அந்திற் கொழுநற் காணிய' என்றவிடத்து, ஆங்கு வரும் என்றும்; 'அந்திற் கச்சினன் கழலினன்' (அக—76) என்று அசையாயும் வந்தவாறு காண்க.

'கொல்' என்னும் சொல்

கொல்லே யையம். 751

'கொல்' எனும் சொல் ஐயப்பொருளை உணர்த்தும். (எ-டு) 'மரம் கொல்லோ மனி[illegible] கொல்லோ' என வரும்.

'எல்' என்னுஞ் சொல்

எல்லே இலக்கம். 752

'எல்' எனும் சொல், விளக்கம் என்னும் பொருளை உடையது. (எ-டு) 'எல்வளை' (புற—24) என வரும்.

'ஆர்' என்னும் சொல்

இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே. 753

இயற்பெயரின் முன்னால் வரும், 'ஆர்' என்னும் இடைச்சொல், உயர்திணைப் பலர்பாற் சொல்லான் முடியும். (எ-டு) தந்தையார் வந்தார் என வரும்.

அதற்கு மேலும் ஒரு விதி

அசைநிலைக் கிளவி யாகுவழி அறிதல். 754

'ஆர்' என்னும் சொல். அசை நிலையாக வரும் இடத்தை ஆராய்ந்து அறிக. (எ-டு) 'பெயரினாகிய தொகையுமார் உளவே' என வரும்.

## 'ஏ' 'குரை' எனும் சொற்கள்

ஏயுங் குரையு மிசைநிறை யசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய வென்ப. 755

'ஏ' என்னும் இடைச் சொல்லும், குரை என்னும் இடைச் சொல்லும், இசைநிறையும், அசைநிலையும் என, ஒவ்வொன்றும் இரண்டு பொருளை உணர்த்தும். (எ-டு) 'ஏஎ யிஃதொத்தன்' என்று ஏ இசை நிறைந்தவாறும், 'பல்குரைத் துன்பங்கள் சென்று படும்' (குறள்-1045) என்று குரை அசைநிலையாய் வந்தவாறும் காண்க.

## 'மா' என்னும் சொல்

மாவென் கிளவி வியங்கோள் அசைச்சொல். 756

'மா' எனும் இடைச்சொல், வியங்கோளைச் சேர்ந்து அசை நிலையாய் வரும். (எ-டு) 'புற்கை யுண்கமா கொற்கை யோனே' என வரும்.

## 'முன்னிலை' அசைச் சொற்கள்

மியாஇக மோமதி இகுஞ்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல். 757

மியா, இக, மோ, மதி, இகும், சின் என்னும் ஆறு சொல்லும், முன்னிலை மொழியைச் சார்ந்துவரும் அசைச் சொல்லாம். (எ-டு)'கேண்மியா எனவும்'; 'உரைமதி வாழியோ' எனவும் வரும்; பிறவும் காண்க.

## 'இகும்', 'சின்' எனும் சொற்கள்

அவற்றுள்
இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடும்
தகுநிலை யுடைய வென்மனார் புலவர். 758

மேலே சொல்லப்பட்ட ஆறனுள், இகும், சின் என்னும் இரண்டு சொல்லும், படர்க்கைத் தன்மைச் சொற்களோடும் பொருந்தும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு) 'கண்டிகு மல்லமோ' (ஐங்-121) என இகும் தன்மைக்கண்ணும்; 'யாரஃ தறிந்திசினோரே' (குறு-18) என்று சின் படர்க்கையிடத்தும் வந்தவாறும், பிறவும் காண்க.

## 'அம்ம' எனும் சொல்

அம்மகேட் பிக்கும். 759

'அம்ம' என்னும் இடைச்சொல், ஒருவரை ஒருவர் ஒன்றினைக் கேள் என்று சொல்லுமிடத்து வரும். (எ-டு) 'அம்ம வாழி தோழி'(ஐங்-31) என வரும்.

## 'ஆங்க' எனும் சொல்

ஆங்க வுரையசை. 760

'ஆங்க' என்னும் இடைச்சொல், கட்டுரையிடத்து அசைநிலையில் வரும். (எ-டு) 'ஆங்கக் குயிலும் மயிலுங் காட்டி' என வரும்.

## ஒப்பில் போலி

ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும். 761

ஒப்புமை உணர்த்தாத போலிச் சொல்லும் 'ஆங்க' என்பது போல உரையசையாம். (எ-டு) 'மங்கலம் என்பதோர் ஊருண்டுபோலும்' என வரும்.

## அசைநிலைச் சொற்கள்

யாகா
பிறபிறக் கரோபோ மாதென வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி. 762

யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது என்னும் ஏழு இடைச்சொல்லும் அசைநிலையாம். (எ-டு) யா பன்னிருவர் மாணாக்கருளர் அகத்தியனார்க்கு என வரும்; பிறவும் காண்க.

## பிரிவற்ற அசைநிலைகள்

ஆக வாக லென்ப தென்னும்
ஆவயின் மூன்றும் பிரிவி லசைநிலை. 763

ஆக, ஆகல், என்பது என்னும் மூன்றிடைச் சொல்லும் அசைநிலையாகுமிடத்து இரட்டித்து நிற்கும். (எ-டு) ஒருவன், அவன் இத்தன்மையன் என்று கூறியவிடத்து, அதனைக் கேட்டார் ஆக ஆக, ஆகல் ஆகல் என்றும், ஒருவன் ஒன்று கூற அதனைக் கெட்டான், என்பது என்பது என்றும் கூறுதல்.

## 'ஔ' என்னும் சொல்

ஈரள பிசைக்கும் இறுதியி லுயிரே
ஆயிய னிலையும் காலத் தானும்

அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வருங் காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பி னிசையா னெறிப்படத் தோன்றும். 764

*இரண்டு மாத்திரை ஒலியளவுடைய மொழிக்கு இறுதியில் வாராதென்று கூறிய ஔகாரம், மேற்கூறிய பிரிவிலசைநிலை போன்று இரட்டித்து நிற்கும் இடத்தும், இரட்டியாது அள பெடுத்து வருமிடத்தும், அளபெடுத்தலின்றித் தான் வருமிடத்தும், பொருள்வேறுபாடு அடைதல் உள்ளதாம். அப் பொருள் வேறுபாடு சொல்லுகின்றவனுடைய குறிப்பிற்குத்தக்க ஓசை வேறுபாட்டால் புலப்படும். (எ-டு) 'ஔஔ இனிச் சாலும்' என்ற விடத்து, மாறுபாடு தோன்றும்; பிறவும் காண்க.*

## குறிப்புச் சொற்கள்

நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற்று ஓவும் அன்னீற்று ஓவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும். 765

*நன்றே, அன்றே, அந்தோ, அன்னோ என்ற சொற்களும், இவைபோன்ற பிறவும் குறிப்பு ஓசையில் பொருள் உணர்த்தும். (எ-டு) ஒருவன் ஒன்று கூறியவிடத்து அதற்கு விரும்பாதான் நன்றே நன்றே, அன்றே அன்றே எனக்கூறுவது போன்றது.*

## 'உம்' மேலும் ஒரு முடிபு

எச்ச வும்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுண் மயங்கும் உடனிலை யிலவே. 766

*எச்ச உம்மை நின்றவிடத்து, எச்சப் பொருட்சொல்லாகிய எதிர்மறை உம்மைத் தொடர் வந்து தம்முள் மயங்குதல் இல்லை. (எ-டு) 'பாண்டியனும் வந்தான் சோழனும் வரலுரியன்' என்பது பொருந்தாமை காண்க.*

எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல். 767

*எச்சவும்மையால் தழுவப்படும் எஞ்சிய பொருட்சொல், உம்மையில்லாத சொல்லாக இருக்குமாறல், அவ் வும்மை யில்லாத சொல்லை, அவ் வும்மைத் தொடருக்குப்பின் சொல்லாது முற்படச் சொல்லுக. (எ-டு) பாண்டியன் வந்தான், சோழனும் வந்தான் என வரும்.*

### முற்று உம்மை எச்சமாதல்

முற்றிய வும்மைத் தொகைச்சொன் மருங்கின்
எச்சக் கிளவி யுரித்து மாகும். 738

முற்றும்மையின் பக்கத்து நின்ற தொகைச்சொல்லிடத்து, எச்சச் சொல் உரிமை யுடைத்தாம். (எ-டு) பத்தும் கொடுக்காதே என்றவிடத்துச் சில குறைத்துக் கொடு என்னும் பொருள் தோன்றியவாறு காண்க.

### 'ஏ' மேலும் ஒரு முடிபு

ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி
கூறறுவயின் ஓரளபு ஆகலு முரித்தே. 769

செய்யுள் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் ஈற்றசை ஏகாரம், கூற்றாக அமையுமிடத்து, ஒரு மாத்திரை அளவாக ஒலித்தலும் உரித்து ஆகும். (எ-டு) 'கடல்போற் றோன்றல காடிறந் தோரே' (அக-1) என்றவிடத்து, ஒரு மாத்திரையாயினவாறு காண்க.

## 3. எண் இடைச்சொற்கள்

### எண்ணில் வரும் உம்மும் எனவும்

உம்மை யெண்ணு மெனவெ னெண்ணும்
தம்வயிற் றொகுதி கடப்பா டிலவே. 770

உம்மையால் வரும் எண்ணும், எனவால் வரும் எண்ணும், இறுதியிடத்துத் தொகைபெறுதலைக் கடப்பாடாக உடையன அல்ல; பெற்றும் வரும் பெறாதும் வரும் என்பதாம். (எ-டு) 'நிலனென நீரெனத் தீயென வளியென நான்கும்' எனவும், 'உயிரென உடலென இன்றி யமையா' எனவும் முறையே பெற்றும் பெறாதும் வருவன காண்க.

### எண்ணில் வரும் ஏகாரம்

எண்ணே கார மிடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர். 771

சொல்தோறும் வராது, எண்ணேகாரம் இடையே விட்டு வரினும், எண்ணுதற் பொருளேயாம். (எ-டு) 'மலைநிலம் பூவே துலாக்கோ லென் றின்னர்' என வரும்.

எனுவும் என்ருவும்

உம்மை தொக்க எனுவென் கிளவியும்
ஆவீ ருகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன. 772

உம்மையானது தொக்குநின்ற என எனும் இடைச்சொல்லும், என்று என்னும் இடைச்சொல்லும், இரண்டும் எண்ணுகின்ற இடத்து வரும். (எ-டு) நிலனென, நீரென எனவும்; நிலனென்று, நீரென்று எனவும் வரும்.

தொகை பெற்றே முடிவன

அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குறி மரபிற் செவ்வெண் இறுதியும்
ஏயி னுகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகையின் றியலா. 773

மேற்கூறிய என என்று என்பனவற்றுள் வரும் எண்ணினுடைய இறுதியும், இடைச் சொல்லாலன்றிப் பெயரால் எண்ணப்படும் செவ்வெண் இறுதியும், ஏகாரத்தினுல் வரும் எண்ணின் இறுதியும், யாதாயினும் ஓரிடத்துவந்தாலும், தொகையின்றி நடவா. (எ-டு) நிலனென, நீரென விரண்டும் என வந்தது; நிலனென்று, என்று வந்தது.

எண்ணில் வரும் உம்முக்கு மேலும் ஒரு முடிபு

உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையார், 774

உம்மை எண்ணிடத்து உருபு தொக்கு வருதல் நீக்கப்படாது. (எ-டு) 'இசையினுங் குறிப்பினும் பண்பினும் தோன்றி' (சொல்-297) என உருபு தொக்கவாறு வரும்.

## 4. புறனடை

'உம்', 'உந்து' ஆதல்

உம்முந் தாகு மிடனுமா ருண்டே. 775

'உம்' இறுதி 'உந்து' என்று திரிதலும் உண்டு. (எ-டு) 'நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து' (புறம்-395) என வரும்.

வினைச்சொற்களிலும் எண்ணிடைச் சொற்கள் வருதல்

வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே. 776

வினையினுடன் நின்றாலும் எண்ணிடைச்சொல் தன் நிலைமையில் மாறுபடாது; அவற்றுடன் வருமிடத்து அவ்வவற்றினுடைய தன்மையை ஆராய்தல் வேண்டும். (எ-டு) உண்டும் தின்றும் பாடியும் ஆடியும் வந்தான் என வரும்.

## பிரிந்து சென்று ஒன்றுதல்

என்று மெனவு மொடுவுந் தோன்றி
ஒன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே. 777

என்று, என, ஒடு என்னும் மூன்றும் ஓரிடத்துத் தோன்றி எண்ணும்பொழுது, பிறிந்து சென்று பிறவிடத்துப் பொருந்தும் இடமும் உடைய. (எ-டு) 'வினைபகையென் றிரண்டினெச்சம்' எனவும், 'கண்ணிமை நொடியென' எனவும், 'பொருள் கருவி காலம் வினையிடனோ டைந்து' எனவும் வருமாறு காண்க.

## பொருளறியும் வகை

அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த வியல வாயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே. 778

இதுவரையிலும் கூறப்பட்ட இடைச்சொற்கள் அந்தந்தச் சொல்லிற்கு அவையவை பொருளென்று உண்மை விளங்கக் கூறிய தன்மையுடையனவாயினும், வினையுடனும் பெயருடனும் ஆராய்ந்து உணருமாறு தோன்றி, வேறுபொருள் உணர்த்துவனவாயுப், அசைநிலையாயும், திரிந்துவரினும் ஆராய்ந்து அவற்றையும் கொள்க.

## இந்த இயலுக்குப் புறனடை

கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலா உணர்ந்தனர் கொளலே. 779

மேற்கூறியவையன்றி அவை போல்வன பிற வரினும், அவற்றை விதந்தெடுத்துக் கூறும் இயல்பினால் உணர்ந்து கொள்க.

# 8. உரி இயல்

[உரிச்சொற்களின் இலக்கணம்]

## 1. பொது இலக்கணம்

உரிச்சொற் கிளவி விரிக்கும் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொற் பலபொருட்கு உரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் ஆயினும் பொருள்வேறு கிளத்தல். 780

*உரிச்சொல்லின் தன்மையை விரித்து உரைக்கும் காலத்து, இசை குறிப்பு பண்பு என்னும் பொருள்களை உணர்த்துமாறு தோன்றிப், பெயரிடத்தும் வினையிடத்தும் தம் உருபு தடுமாறி, ஒரு சொல் பலபொருளுக்கு உரிமையுடையதாய் வந்தாலும், பல சொல் ஒருபொருளுக்கு உரிமையுடையதாய் வந்தாலும், கேட்கின்றவனால் நன்கு அறியப்படாத சொல்லை நன்கு அறியப் பட்ட சொல்லோடு சேர்த்துப் பெயரும் வினையுமாகிய தத்தமக் குரிய இடத்து யாதாயினும் ஒரு சொல்லாக இருப்பினும், வெவ் வேறு பொருள் உணர்த்தப்படும் (குறிப்பு—மனத்தாற் குறித்து உணரப்படுவது. பண்பு—பொறியால் உணரப்படும் குணம்).*

வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன. 781

*வெளிப்படையாகத் தோன்றும் உரிச்சொற்களைச் சிறப் பாக எடுத்துச் சொல்வதனால் பயன் யாதும் இல்லாததனால் அவை இங்குச் சொல்லப்படா; வெளிப்படையாக வாராத உரிச் சொற்களையே இங்குச் சிறப்பித்துச் சொல்லப்படும்.*

## 2. சிறப்பு இலக்கணம்

*'உறு' 'தவ' 'நனி'*

அவைதாம்
உறுதவ நனியென வருஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப. 782

*வெளிப்பட வாராத உரிச்சொற்கள்தாம் உறு தவ நனி என்னும் மூன்றும் ஆகும். அவை, மிகுதி என்னும் குறிப்புப் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'உறுபுனல் தந்துல கூட்டி' எனவும், 'ஈயாது வீயும் உயிர்தவப் பலவே' எனவும், 'வந்து நனி வருந்தினை வாழியென் நெஞ்சே' எனவும் வருமாறு அறிக.*

*'உரு' 'புரை'*

உருவுட் காகும் புரையுயர்பு ஆகும், 783

*'உரு' என்னும் உரிச்சொல் அச்சம் என்னும் பொருளை உணர்த்துவதாம். 'புரை' என்னும் உரிச்சொல், 'உயர்வு' என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவதாம். (எ-டு) 'உருகெழு கடவுள்' எனவும், 'புரைய மன்ற புரையோர் கேண்மை' எனவும் வருமாறு அறிக.*

*'குரு' 'கெழு' என்பன*

குருவும் கெழுவும் நிறனா கும்மே. 784

*'குரு' 'கெழு' என்னும் இரண்டு உரிச்சொற்களும், நிறம் என்னும் பண்பினை உணர்த்துவனவாம். (எ-டு) 'குருமணித் தாலி', 'செங்கேழ் மென் கொடி' என வரும்.*

*'செல்லல்' 'இன்னல்' என்பன*

செல்லல் இன்னல் இன்னா மையே. 785

*'செல்லல்' 'இன்னல்' என்னும் சொற்கள் இரண்டும், இன்னாமை என்னும் குறிப்புப்பொருளை உணர்த்துவனவாம். (எ-டு) 'மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல்' எனவும், 'வெயில் புறந்தருஉம் இன்னல் இயக்கத்து' எனவும் வருமாறு காண்க. இன்னாமை என்பது, துன்பம்.*

*'மல்லல்' என்னும் சொல்*

மல்லல் வளனே 786

'மல்லல்' என்னும் சொல், வளன் என்னும் குறிப்புப் பொருளை உணர்த்தும். (எ-டு) 'மல்லன்மா ஞாலம்' என வருமாறு காண்க.

## 'ஏ' என்னும் சொல்

ஏ பெற் றாகும். 787

'ஏ' என்னும் சொல், பெருக்கம் என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவதாம். (எ-டு) 'ஏகல் அடுக்கம்' என வருமாறு அறிக.

## 'உகப்பு' 'உவப்பு' என்னும் சொற்கள்

உகப்பே உயர்தல் உவப்பே உவகை. 788

'உகப்பு' என்னும் சொல், உயர்தல் என்னும் பொருளை உணர்த்தும். 'உவப்பு' என்னும் சொல், உவகை என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'விசும்புகந் தாடாது' எனவும், 'உவந்து வந்தார்வ நெஞ்சமோடு' எனவும் வருவன காண்க.

## 'பயப்பு' என்னும் சொல்

பயப்பே பயனாம். 789

'பயப்பு' என்னும் சொல், பயன் என்னும் பொருளை உணர்த்துவதாம். (எ-டு) 'பயவாக் களரனையர் கல்லாதவர்' என வருமாறு அறிக.

## 'பசப்பு' என்னும் சொல்

பசப்புநிற னாகும் 790

'பசப்பு' என்னும் சொல்லானது, நிறவேறுபாடு என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'மையில் வாண்முகம் பசப் பூருமே' என்று வருதல் அறிக.

## 'இயைபு' என்னும் சொல்

இயைபே புணர்ச்சி. 791

'இயைபு' என்னும் சொல் புணர்ச்சிக் குறிப்பினை உணர்த்தும். இயைதல்-சேர்தல். (எ-டு) 'இயைந்து ஒழுகும்' என வரும்.

## 'இசைப்பு' எனும் சொல்

இசைப்பு இசையாகும். 792

'இசைப்பு' என்னும் சொல், இசைப் பொருண்மையினை உணர்த்துவதாம். (எ-டு) 'யாழிசையூப் புக்கும்' என வரும்.

'அலமரல்,' 'தெருமரல்'

அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி. 793

'அலமரல்' 'தெருமரல்' ஆகிய இருசொற்களும், சுழற்சி என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவனவாம். (எ-டு) 'அலமர லாயம்' எனவும், 'தெருமர லுள்ளமோ டன்னை துயிலும்' எனவும் வருமாறு காண்க.

'மழ' 'குழ'

மழவும் குழவும் இளமைப் பொருள. 794

'மழ' 'குழ' என்னும் சொற்கள் இரண்டும் இளமையாகிய குறிப்புப்பொருளை உணர்த்துவனவாம். (எ-டு) 'மழகளிறு' எனவும், 'குழக்கன்று' எனவும் வருதல் அறிக.

'சீர்த்தி'

சீர்த்தி மிகுபுகழ். 795

'சீர்த்தி' என்னும் சொல், மிகுதியான புகழுடைமை என்னும் குறிப்புப்பொருளினை உணர்த்தும். (எ-டு) 'வயக்கஞ் சால் சீர்த்தி' என வரும்.

'மாலை'

மாலை இயல்பே 796

'மாலை' என்னும் சொல், இயல்பு ஆகிய குறிப்புப்பொருளினை உணர்த்துவதாம். (எ-டு) 'இரவரன் மாலையனே' என வருமாறு அறிக.

'கூர்ப்பு' 'கழிவு'

கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும் 797

'கூர்ப்பும்' 'கழிவும்' ஆகிய சொற்கள் இரண்டும், முன் சிறவாது உள்ளதன் சிறப்பாகிய குறிப்புப் பொருளினை உணர்த்துவனவாம். (எ-டு) 'துனிகூர் எவ்வமொடு' எனவும், 'கழிகண்ணோட்டம்' எனவும் வந்தவாறு காண்க.

'கதழ்வு', 'துனைவு'

கதழ்வும் துனைவும் விரைவின் பொருளே. 798

'கதழ்வு', 'துனைவு' ஆகிய இருசொற்களும், விரைவாகிய குறிப்புப் பொருளினை உணர்த்துவனவாம். (எ-டு) 'கதழ்பரி

நெடுந்தேர்' எனவும், 'துணைபரி நிவக்கும் புள்ளின் மான' எனவும் வந்தவாறு அறிக.

## 'அதிர்வு', 'விதிர்ப்பு'

அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும். 799

'அதிர்வு', 'விதிர்ப்பு' என்னும் இருசொற்களும், நடுக்கமாகிய குறிப்புப்பொருளினை உணர்த்துவனவாம். (எ-டு) 'அதிர வருவதோர் நோய்' எனவும், 'விதிர்ப்புற வறியா ஏமக் காப்பினை' எனவும், வந்தவாறு உணர்க.

## 'வார்தல்', 'போகல்', 'ஒழுகல்'

வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள. 800

வார்தல் போகல் ஒழுகல் ஆகிய மூன்று சொற்களும், நேர்மையும் நெடுமையுமாகிய பண்புணர்த்தும் சொற்களாம். (எ-டு) 'வார்ந்திலங்கும் வைஎயிற்று', 'போகுகொடி மருங்குல்', 'ஒழுகு கொடி மருங்குல்' என்பனபோன்று நேர்மையாகிற பண்பையும்; 'வார் கயிற்று ஒழுகை', 'வெள்வேல் விடத்தேரொடு காருடை போகி', மால்வரை ஒழுகிய வாழை' என்பனபோன்று நெடுமைப் பண்பையும் உணர்த்துவனவாக வருவன காண்க.

## 'தீர்தல்', 'தீர்த்தல்'

தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டு ஆகும். 801

தீர்தலும் தீர்த்தலும் ஆகிய இரு சொற்களும், விடுதலை என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவனவாம். (எ-டு) 'துறையில் தீர்ந்த கடுங்கண் யானை' என்றாற்போல வருவன காண்க.

## 'கெடவரல்', 'பண்ணை'

கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு. 802

'கெடவரல்', 'பண்ணை' எனும் இரு சொற்களும் விளையாட்டாகிய குறிப்பினை உணர்த்துவன. (எ-டு) 'கெடவரல் ஆயமொடு' எனவும், 'பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்' எனவும் வருமாறு காண்க.

## 'தட', 'கய', 'நளி'

தடவும் கயவும் நளியும் பெருமை, 803

தட, கய, நளி ஆகிய மூன்று சொற்களும் பெருமையாகிய பண்பினை உணர்த்தும் சொற்களாம். (எ-டு) 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன்' எனவும், 'கயவாய்ப் பெருங்கை யானை' எனவும், 'நளிமலை நாடன்' எனவும் பெருமை உணர்த்தி வருதல் காண்க.

## 'தட'—மேலும் ஒரு பொருள்

அவற்றுள்
தடவென் கிளவி கோட்டமும் செய்யும். 804

மேற்கூறிய மூன்றனுள், 'தட' என்னும் பெருமை மட்டுமன்றி, வளைவு என்னும் பொருளையும் உணர்த்தும். (எ-டு) 'தடமருப்பு எருமை' என வருதல் அறிக.

## 'கய'—மேலும் ஒரு பொருள்

கயவென் கிளவி மென்மையும் ஆகும். 805

மேற்கூறிய 'கய' என்னும் சொல், பெருமை மட்டுமன்றி மென்மை என்னும் குறிப்புப் பொருளையும் உணர்த்தும். (எ-டு) 'கயந்தலை மடப்பிடி' என வரும்.

## 'நளி' —மேலும் ஒரு பொருள்

நளியென் கிளவி செறிவும் ஆகும். 806

மேற்கூறியவாறு நளி என்னும் சொல் பெருமை உணர்த்துவது மட்டுமன்றிச், செறிவாகிய குறிப்புப் பொருளையும் உணர்த்தும். (எ-டு) 'நளியிருள்' என வந்து, செறிந்த இருள் என உணர்த்தல் காண்க.

## 'பழுது'

பழுது பயன் இன்றே. 807

'பழுது' எனும் சொல், பயனில்லாமை என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'பழுது கழி வாழ்நாள்' என வருதல் காண்க.

## 'சாயல்'

சாயல் மென்மை. 808

'சாயல்' எனும் சொல், மென்மை என்னும் பொருளை உணர்த்துவது. (எ-டு) 'சாயன் மார்பு' என வரும்.

## 'முழுது'

முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே. 809

முழுது' எனும் சொல், எஞ்சாமையாகிய குறிப்புப் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'மண்முழுதாண்ட' என வரும்

'வம்பு', 'மாதர்'

வம்புநிலை இன்மை. 810

மாதர் காதல். 811

'வம்பு' எனும் சொல், நிலையில்லாமை என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'வம்புமாரி' என வருதல் அறிக. 'மாதர்' என்னும் சொல் காதல் என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'மாதர் நோக்கு' என வரும்.

'நம்பு', 'மேவு'

நம்பும் மேவும் நசையா குமமே. 812

'நம்பு', 'மேவு' ஆகிய சொற்கள், விருப்பம் எனும் குறிப்புப் பொருளினை உணர்த்துவன. (எ-டு) 'நயந்து நாம் விட்ட நன்மொழி நம்பி' எனவும், 'பேரிசை நவிரம், மேஎ உறையும், காரி யுண்டி' எனவும் வருவன காண்க.

'ஓய்தல்', 'ஆய்தல்', 'நிழத்தல்', 'சாஅய்'

ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம். 813

ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாய்தல் என்னும் நான்கு உரிச்சொற்களும், முன் நுணுகாது உள்ளதாக இருந்து 'நுணுகுதல்' ஆகிய குறிப்பினை உணர்த்துவனவாம். (எ-டு) 'வேனிலுழந்த வறிதுயங்கு ஓய் களிறு' எனவும், 'பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தாறு மைந்தினை' எனவும், நிழத்த யானை மேய் புலம் படர' எனவும், 'கயலறல் எதிரக் கடும்புற் சாஅய்' எனவும் வருமாறு காண்க,

'புலம்பு'

புலம்பே தனிமை. 814

'புலம்பு' என்பது, 'தனிமை' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'புலம்பிற் கோத்த புலம்புமணித் தாலி' என வரும்.

'துவன்று'

துவன்று நிறைவாகும். 815

'துவன்று' என்பது, 'நிறைவு' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்' என வரும்.

'முரஞ்சல்'

முரஞ்சல் முதிர்வே. 816

'முரஞ்சல்' என்பது, 'முதிர்வு' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'சூன் முரஞ்சு எழிலி' என வரும்.

'வெம்மை'

வெம்மை வேண்டல் 817

'வெம்மை' என்பது, 'விருப்பம்' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'வெங் காமம்' என வரும்.

'பொற்பு'

பொற்பே பொலிவு. 818

'பொற்பு' என்பது, 'அழகுடையது' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'பெருவரை யடுக்கம் பொற்ப' என வரும்.

'வறிது'

வறிது சிறிதாகும். 819

'வறிது' என்பது, 'சிறிதாயது' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'வறிது வடக்கு இறைஞ்சிய' என வரும்.

'ஏற்றம்'

ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும். 820

'ஏற்றம்' என்பது, நினைவும் துணிவும் ஆகிய பொருட்களை உணர்த்துவதாம். (எ-டு) 'கானலஞ் செல்வன் கொடுமை ஏற்றி' எனவும், 'ஏற்றேற்றம் இல்லாருள் யானேற்றம் இல்லாதேன்' எனவும் வரும்.

'பிணை', 'பேண்'

பிணையும் பேணும் பெட்பின் பொருள. 821

'பிணை', 'பேண்' என்பன, பெட்பின் பொருளாகிய புறந்தருதல் என்னும் குறிப்பினை உணர்த்துவனவாம் (எ-டு) 'அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்' எனவும், 'அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்'' எனவும் வரும்.

'பணை'

பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும். 822

'பணை' என்பது, பிழைத்தல் பெருப்பு ஆகிய பொருள்களைக் குறிப்பினாலே உணர்த்தும். (எ-டு) 'பணைத்து வீழ் பகழி' என்ற விடத்துப் பிழைத்தல் என்னும் பொருளையும், 'வேய் மருள் பணைத்தோள்' என்ற விடத்துப் பெருப்பத்தையும் உணர்த்துவது காண்க.

'படர்'

படரே உள்ளல் செலவும் ஆகும். 823

'படர்' என்பது, நினைத்தல் செல்லுதல் என்னும் பொருள்களைக் குறிப்பினாலே உணர்த்துவதாம். (எ-டு) 'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி' என்றவிடத்து நினைத்தலையும், 'கறவை கன்று வயிற் படர' என்ற விடத்துச் செலவையும் குறித்தல் காண்க.

'பையுள்', 'சிறுமை'

பையுளும் சிறுமையும் நோயின் பொருள. 824

'பையுள்', 'சிறுமை' என்னும் இரண்டு சொற்களும் நோய் என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவன. (எ-டு) 'பையுண் மாலை' எனவும், 'சிறுமை யுறுப செய்பறி யலரே' எனவும் வரும்.

'எய்யாமை'

எய்யா மையே அறியா மையே; 825

'எய்யாமை' என்பது, அறிவின்மையாகிய குறிப்புப் பொருளினை உணர்த்தும் (எ-டு) 'எய்யா மையலை நீயும் வருந்துதி' என வரும்,

'நன்று'

நன்றுபெரி தாகும். 826

'நன்று' என்பது, பெரிது என்னும் குறிப்பினை உணர்த்தும். (எ-டு) 'நன்று, மரிதுற் றனையாற் பெரும' என வரும்.

'தா'

தாவே வலியும் வருத்தமும் ஆகும். 827

'தா' என்பது, வலியும் வருத்தமும் ஆகியவற்றை உணர்த்தும். (எ-டு) 'தாவில் நன்பொன் தைஇய பாவை' எனவும், 'கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றென' எனவும் வரும்.

'தெவு'

தெவுக் கொளல் பொருட்டே. 828

'தெவு' என்பது, கொள்ளுதல் என்னும் பொருளை உணர்த்துவது. (எ-டு) 'நீர்த் தெவு நிரைத் தொழுவர்' என வரும்.

'தெவ்வு'

தெவ்வுப் பகை யாகும். 829

'தெவ்வு' என்னும் சொல், 'பகை' என்னும் பொருளைத் தருவது. (எ-டு) 'தெவ்வுப் புலம்' என வரும்.

'விறப்பு', 'உறப்பு', 'வெறுப்பு'

விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே. 830

'விறப்பு', 'உறப்பு', 'வெறுப்பு' ஆகிய சொற்கள், 'செறிவு' என்னும் பொருளை உணர்த்துவன. (எ-டு) 'விறந்த காப்போ டுண்ணின்று வலியுறுத்தும்' எனவும், 'உறந்த விஞ்சி' எனவும், 'வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' எனவும் வரும்.

'விறப்பு'—மேலும் ஒரு பொருள்

அவற்றுள்
விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும். 831

மேற்சொல்லியவற்றுள், 'விறப்பு' என்னுஞ் சொல் வெருவுதல் என்னும் பொருளையும் உணர்த்துவதாம். (எ-டு) 'அவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல' என வரும்.

'கம்பலை,' 'சும்மை', 'கலி', 'அழுங்கல்'

கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள. 832

கம்பலை, சும்மை, கலி, அழுங்கல் என்னும் சொற்கள் நான்கும் அரவமாகிய இசைப்பொருண்மையினை உணர்த்துவனவாம். (எ-டு) 'கம்பலை மூதூர்' எனவும், 'ஒரு பெருஞ் சும்மையொடு' எனவும், 'கலிகொளாய மலிபுதொகு பெடுத்த' எனவும், 'உயவு புணர்ந் தன்றிவ் வழுங்கலூரே' எனவும் வருமாறு காண்க.

'அழுங்கல்'—மேலும் இரு பொருள்

அவற்றுள்
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும். 833

மேற் கூறியவற்றுள், அழுங்கல் என்னும் சொல், இரக்கமும் கேடும் ஆகிய பொருள்களையும் உணர்த்துவதாம் (எ-டு) 'பழங்கண் ணோட்டமும் நலிய அழுங்கினன் அல்லனோ' என இரக்கமும், 'குணனழுங்கக் குற்ற முழைநின்று கூறுஞ் சிறியவர்கட்கு' எனக் கேடும், ஆகிய பொருட்களை உணர்த்தின காண்க.

'கழுமு'

கழுமென் கிளவி மயக்கம் செய்யும். 834

'கழுமு' என்னும் சொல், மயக்கமாகிய குறிப்புப் பொருளை உணர்த்தும். (எ-டு) 'கழுமிய ஞாட்பு' என வரும்.

'செழுமை'

செழுமை வளனும் கொழுப்பும் ஆகும். 835

செழுமை என்னும் சொல், வளமை செழுமை ஆகிய பொருட்களை உணர்த்தும். (எ-டு) செழும்பல் குன்றம்' என வளமையினையும், 'செழுந்தடி தின்றநாய்' எனக் கொழுமையினையும் குறித்தமை காண்க.

'விழுமம்'

விழுமஞ் சீர்மையும் சிறப்பும் இடும்பையும். 836

விழுமம் என்னும் சொல், சீர்மை, சிறப்பு, இடும்பை (துன்பம்) ஆகிய பொருட்களை உணர்த்தும்.(எ-டு)'விழுமியோர் காண்டொறும் செய்வர் சிறப்பு' எனச் சீர்மையினையும், 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' எனச் சிறப்பினையும், 'நின்னுறு விழுமம் களைந்தோன்' எனத் துன்பத்தினையும் குறிக்குமாறு வருதல் காண்க.

'கருவி'

கருவி தொகுதி. 837

'கருவி' என்பது, 'தொகுதி' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு) 'கருவி வானம்' என வரும். கருவி-மின்னும் முழக்கும் முதலாயவற்றின் தொகுதி.

'கமம்'

கமம்நிறைந் தியலும். 838

'கமம்' என்பது, 'நிறைவு' என்னும் பொருளை உணர்த்துவது. (எ-டு) 'கமஞ் சூல் மாமழை' என வரும்.

'அரி'

அரியே ஐம்மை. 839

'அரி' என்னும் சொல், 'அழகுடைமை' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'அரிமயிர்த் திரள் முன்கை' என வரும்.

'கவவு'

கவவகத் திடுமே. 840

'கவவு' என்னும் சொல், 'கட்டிக்கொள்ளுதல்' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'கழூஉ விளங்காரம் கவைஇய மார்பே' என வரும்.

'துவைத்தல்', 'சிலைத்தல்', 'இயம்பல்', 'இரங்கல்'

துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப் பொருட் கிளவி என்மனார் புலவர். 841

'துவைத்தல்', 'சிலைத்தல்', 'இயம்பல்', 'இரங்கல்' என்னும் சொற்கள் இசைப்பொருள் உணர்த்துவன எனப் புலவர்கள் கூறுவர். (எ-டு) 'வரிவளை துவைப்ப' எனவும், 'ஆமா நல்லேறு சிலைப்ப' எனவும், 'கடிமரந் தடியும் ஓசை, தன்னூர் நெடுமதில் வரைப்பிற் கடிமனை இயம்ப' எனவும், 'ஏறிரங் கிருளிடை' எனவும் வருமாறு காண்க.

'இரங்கல்' — மேலும் ஒரு பொருள்

அவற்றுள்
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும். 842

அவற்றுள், இரங்கல் என்பது, கழிவாகிய குறிப்புப் பொருளினையும் உணர்த்தும். (எ-டு) 'செய்திரங்கா வினை' என வரும். கழிந்த பொருள் பற்றி வருங் கவலையே 'கழிந்த பொருள்' என இங்குச் சுட்டப்பெற்றது.

'இலம்பாடு', 'ஒற்கம்'

இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை. 843

'இலம்பாடு, ஒற்கம்' எனும் இருசொற்களும், வறுமை என்னுங் குறிப்புப்பொருளை உணர்த்துவன. (எ-டு) 'இலம்படு புலவர் ஏற்றகை நிறைய' எனவும், 'ஒக்கல் ஒற்கம் சொலிய' எனவும் வரும். 'இலம்' என்னும் சொல் பெரும்பாலும் பாடென்னும் தொழில்பற்றியே வரும்.

'ஞெமிர்தல்', 'பாய்தல்'

ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள. 844

*ஞெமிர்தல் பாய்தல் என்பன பரத்தலாகிய குறிப்பினை உணர்த்துவனவாகும். (எ-டு) 'தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து' எனவும், 'பாய்புனல்' எனவும் அவை அப்பொருள் உணர்த்துவது காண்க.*

'கவர்வு'

கவர்வுவிருப் பாகும். 845

*'கவர்வு' என்னும் சொல், விருப்பு என்னும் பொருளினைக் குறிப்பான் உணர்த்தும். (எ-டு) 'கவர் நடைப் புரவி' என வரும்.*

'சேர்'

சேரே திரட்சி. 846

*'சேர்' என்னும் உரிச்சொல், திரட்சி என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு) 'சேர்ந்து செறி குரங்கு' என வரும்.*

'வியல்'

வியலென் கிளவி அகலப் பொருட்டே. 847

*'வியல்' என்னும் சொல், அகன்றது என்னும் பொருளினை உணர்த்துவதாம். (எ-டு) 'வியலுலகம்' என வரும்.*

'பேம்' 'நாம்' 'உரும்'

பேநாம் உருமென வருஉம் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள. 848

*'பேம்' 'நாம்' 'உரும்' என்னும் மூன்று சொற்களும், அச்சமாகிய குறிப்பினை உணர்த்தும். (எ-டு) 'மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்' எனவும், 'நாமநல்லார்' எனவும், 'உருமில் சுற்றம்' எனவும் வரும்.*

'வய'

வயவலி யாகும். 849

*'வய' என்பது, வலி என்னும் குறிப்புணர்த்துவதாம். (எ-டு) 'துன்னரும் துப்பின் வயமான்' என வரும்.*

**'வாள்'**

வாளொளி யாகும். 850

'வாள்' என்பது, ஒளி என்னும் பண்பினை உணர்த்துவதாகும். (எ-டு) 'வாண்முகம்' என வரும்.

**'துயவு'**

துயவென் கிளவி அறிவின் திரிபே. 851

'துயவு' என்னும் சொல், அறிவு வேறுபடுதலாகிய குறிப்பு உணர்த்துவதாம். (எ-டு) 'துயவுற்றேம் யாமாக' என வரும்.

**'உயா'**

உயாவே உயங்கல். 852

'உயா' என்பது, உயங்கல் என்னும் குறிப்புணர்த்தும். (எ-டு) 'பருந்திருந்து உயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை' என வரும்.

**'உசா'**

உசாவே சூழ்ச்சி. 853

'உசா' என்னும் சொல், சூழ்ச்சி என்னும் குறிப்பினை உணர்த்தும். (எ-டு) 'உசாத் துணை' என வரும்.

**'வயா'**

வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம். 854

'வயா' வென்னும் சொல், வேட்கைப் பெருக்கமாகிய குறிப்பினை உணர்த்தும். (எ-டு) 'வயவுறு மகளிர்' என வரும்.

**'கறுப்பு', 'சிவப்பு'**

கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள. 855

'கறுப்பு' 'சிவப்பு' என்னும் சொற்கள், வெகுளியாகிய குறிப்பினை உணர்த்துவனவாம். (எ-டு) 'நிற்கறுப்பதோர் அருங்கடி முனையள்' எனவும், 'நீ சிவந்திறுத்த நீரழி பாக்கம்' எனவும் வரும். கறுமை செம்மை என்பன, கறுப்பு சிவப்பு எனத் தொழிற்பட்டால் அல்லாமல், வெகுளிப் பொருளினை உணர்த்தா.

**'கறுப்பு', 'சிவப்பு'—மேலும் ஒரு பொருள்**

நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப. 856

மேற்கூறிய கறுப்பும் சிவப்பும் என்னும் சொற்கள், நிற வேறுபாடு உணர்த்துதற்கும் உரியனவாம். (எ-டு) 'கறுத்த

காயா', 'சிவந்த காந்தள்' என வரும். இவை பண்பாயவழி அல்லாது, தொழிலாயவழி நிறவேறுபா டுணர்த்த மாட்டா.

## நொசிவு, நுழைவு, நுணங்கு

நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை. 857

நொசிவு, நுழைவு, நுணங்கு ஆகியன மூன்றும், நுண்மையாகிய பண்பை உணர்த்துவனவாம். (எ-டு) 'நொசிமட மருங்குல்' எனவும், 'நுழைநூற் கலிங்கம்' எனவும், 'நுணங்கு துகில் நுடக்கம் போல' எனவும் வரும்.

## 'புனிறு'

புனிறென் கிளவி யீன்றணிமைப் பொருட்டே. 858

'புனிறு' என்பது, ஈன்றதன் அணிமையான காலக் குறுக்கத்தினைக் குறிப்பதாம். (எ-டு) 'புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி' என வரும்.

## 'நனவு'

நனவே களனும் அகலும் செய்யும். 859

'நனவு' என்பது, அவைக்களத்தையும், அகலமாகிய இடத்தையும் உணர்த்துவதாம். (எ-டு) 'நனவுப் புகு விறலியிற்றோன்றும் நாடன்' எனவும், 'நனந்தலை யுலகம்' எனவும் வரும்.

## 'மதவு'

மதவே மடனும் வலியும் ஆகும். 860

'மதவு' என்னும் சொல், மென்மையும் வன்மையும் ஆகிய பொருளைக் காட்டும். (எ-டு) 'மதவு மேய்ந்த மதவு நடை நல்லான்' எனவும், 'கயிற்று கதச்சேப் போல மதமிக்கு' எனவும் வரும்.

## மதவு—மேலும் இரு பொருள்

மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே. 861

'மதவு' என்னும் சொல், முற்கூறிய பொருளைக் காட்டலேயன்றி, மிகுதியையும் அழகையும் சிறுபான்மை உணர்த்துவதுமாம். (எ-டு) மதவிடை' எனவும், 'மாதர் வாண்முக மதைஇய நோக்கே' எனவும் வரும்.

## 'யாணர்'

புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி. 862

'யாணர்' என்னுஞ் சொல், புதிது என்னும் பொருளைக் காட்டும். (எ-டு) 'மீனொடு பெயரும் யாணரூர' என வரும்.

'அமர்தல்'

**அமர்தன் மேவல்.** 863

அமர்தல் என்பது, விரும்புதல் என்னும் பொருளைக் காட்டும். (எ-டு) 'அகனமர்ந்து செய்யா ளுறையும்' என வரும்.

'யாண்'

**யாணுக் கவினும்.** 864

'யாண்' என்பது, அழகென்னும் பொருளைக் காட்டும். (எ-டு) 'யாணது பசலை' என வரும்.

'பரவு' 'பழிச்சு'

**பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.** 865

பரவும், பழிச்சும் ஆகிய சொற்கள் வணங்குதலாகிய பொருளைக் காட்டும், (எ-டு) 'செல்லுக் குத்துப் பரவுங் கடவுளு மிலவே' எனவும், 'கைதொழூஉப் பழிச்சி' எனவும் வரும்.

'கடி' என்னும் சொல்

**கடியென் கிளவி**
**வரைவே கூர்மை காப்பே புதுமை**
**விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே**
**அச்ச முன்தேற் றுயீரைந்தும்**
**மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.** 866

'கடி' என்னும் உரிச்சொல், வரைவுமுதல் முன்தேற்று (தெய்வத்தின் முன் நின்று உறுதி செய்து தெளிதல்) இறுதியாக உள்ள பத்துக் குறிப்பும் உணர்த்தும். (எ-டு) 'கடிந்த கடிந் தொரார் செய்தார்க்கு' (குறள்—658) என வரைவுப்பொருளில் வந்தது; பிறவும் வருமிடத்துக் காண்க.

கடி—மேலும் இரு பொருள்

**ஐயமுங் கரிப்பும் ஆகலும் உரித்தே.** 867

கடி என்னும் சொல், மேற்கூறிய பொருளுணர்த்தலே யன்றி ஐயப் பொருளையும் கரிப்புப் பொருளையும் கொடுக்கும். (எ-டு) 'கடுத்தன ளல்லளோ அன்னை' எனவும், 'கடி மிளகு தின்ற கல்லா மந்தி' எனவும் வரும்.

### 'ஐ' என்னும் சொல்

யப் பாகும். 868

'ஐ' என்பது வியப்பைக் காட்டும் சொல்லாகும். (எ-டு) 'ஐதே காமம் யானே' என வரும்.

### 'முனைவு' என்னும் சொல்

முனைவுமுனி வாகும். 869

முனைவு என்பது வெறுப்பைக் காட்டும், (எ-டு) 'சேற்று நிலை முனைஇய செங்கட் காரான்' என வரும்.

### 'வை' என்னும் சொல்

வையே கூர்மை. 870

வை என்பது, கூர்மையைக் காட்டும் சொல்லாம், (எ-டு) 'வைநுனைப் பகழி' என வரும்.

### 'எறுழ்' என்னும் சொல்

எறுழ்வலி யாகும். 871

எறுழ் என்பது, வலிமையை உணர்த்தும் சொல்லாகும். (எ-டு) 'போரெறுழ்த் திணிதோள்' என வரும்.

## 3. சொல்லும் பொருளும்

### உரிச்சொல் பொருள்மரபை ஒத்தல்

மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபில் தோன்றுமன பொருளே. 872

'இச் சொல் இப்பொருளுக்கு உரித்து' என்று இதுகாறும் கூறிய உரிச்சொல் எல்லாவற்றையும், அவற்று முன்னும் பின்னும் வருகின்ற சொற்களை ஆராய்ந்து, அம் மொழிகளின் பொருள்களோடு சேர்த்தாலே அப் பொருளுணர்த்தும். இவ்வாறு உணர்த்திடல், தொன்றுதொட்டு வழங்கிவந்த முறைமையால், தத்தமக்குரியனவாய் அப்பொருள் விளங்கும்.

### அவை பிறபொருளும் உணர்த்தல்

கூறிய கிளவிப் பொருணிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடுங் கொளலே. 873

முன்னும் பின்னும் வருகின்ற சொற்களை ஆராயுமிடத்து, டரிச் சொல்லுக்குக் கூறிய பொருளையன்றிப் பிறபொருள் தோன்றுமாயினும், அவற்றையும் மேற்கூறியவற்றுடன் சேர்த்துக் கொள்க. (எ-டு) 'கடிகாறும் பூந்துணர்' என்பது, 'இயைபு நோக்க மேற்கூறிய பொருள் கொடாது, மணம் எனும் பொருள் பயந்தவாறு காண்க.

### கருத்துணர்தலின் நிலை

பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம் பின்றே. 874

பொருளுக்குப் பொருள் காணுதல் வரம்பில்லாது செல்லு மாகலின், அங்ஙனம் வரம்பு செய்தல் இன்றென்பதாம்.

### உணர்த்தும் ஆற்றல்

பொருட்குத்திரி பில்லை உணர்த்த வல்லின். 875

[illegible] அதனை யுணர்த்து
கேட்பான் [illegible] திறனுயின்.

[illegible]

உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே. 876

வெளிப்படையாகப் பொருள்கூறியும், காட்சி யளவாகப் பொருளைக் காட்டியும் உணரவில்லையாயின், அவனுக்கு உணர்த்தும் வழியில்லை; உணர்ச்சியின் வழியாக அறிகின்றவனது அறிவை வலியாக உடையது உணர்வு ஆகலான்.

### பொருள்கட்குக் காரணம் உளவாதல்

மொழிப்பொருள் காரணம் விழிப்பத் தோன்ரு. 877

இதுகாறும் கூறிய உரிச்சொற்களுக்குப் பொருள் கூறியது, தொன்றுதொட்டு வழங்கிவரும் முறைபற்றியே அன்றி, 'அப் பொருள்தான் அங்ஙனம் உணர்த்தும்' என்பதற்கு வேறு காரணம் விளங்குமாறில்லை.

### எழுத்துப் பிரிந் திசையா

எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல்பு இன்றே. 878

எழுத்துக்கள் முதலும் இறுதியுமாக வெவ்வேறாகப் பிரிந்து, வெவ்வேறு பொருள் உணர்த்துதல் உரிச்சொல்லிடத்துப் பொருந்தும் தன்மை இல்லை.

## 4. புறனடை

அன்னபிறவுங் கிளந்த வல்ல
பன்முறை யானும் பரந்தன வருஉம்
உரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கி னினைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர். 879

*இதுவரையிலும் கூறிய உரிச்சொற்களையன்றி, அவை போன்ற பிறவும், பலவகையிலும் பரந்துபட்டு வருகின்ற உரிச்சொற்களெல்லாம், பொருளுடன் சேர்ந்து உணர்த்த, இசை, குறிப்புப் பண்புபற்றித் தாம் வழங்கும் இடத்தின்கண், இத்துணை என்று வரையறுத்து உரைக்கும் அளவு தமக்கு இல்லாமையினால், கூறிய வழியில் தப்பாதுசென்று, இதன்கண் கூறப்பட்ட பாதுகாவலான ஆணையின் வழியால் சிறப்பித்தவற்றின் தன்மையோடு சேர்ந்து, முறைப்பட அறிதல் வேண்டும் என்று சொல்லுவர் புலவர்.*

# 9. எச்ச இயல்

[எச்சச் சொற்களின் இலக்கணம்]

## 1. சொற்களின் வகை

*நான்கு வகையான சொற்கள்*

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே. 880

*இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகிய நான்குமே செய்யுள் இயற்றற்குரிய சொற்களாம்.*

*இயற் சொல்*

அவற்றுள்
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே. 881

*மேலே கூறிய நான்கு சொற்களுள், இயற்சொல் என்று சொல்லப்பட்ட சொற்களாவன, செந்தமிழ் வழங்கும் பகுதியில் வழங்குஞ் சொல்லாய்ப் பொருந்தித் தம் பொருளை மாறுபடாமல் உணர்த்துகின்ற சொற்களாம். (எ-டு) நிலம் நீர்; சோறு, பால், தயிர் என்பன.*

*திரி சொல்*

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி 882

*திரிசொல் என்பது, ஒரு பொருளை உணர்த்திவரும் பல சொல்லும் பல பொருளையும் உணர்த்திவரும் ஒரு சொல்லும் என இரண்டு வகைப்படும். (எ-டு) விலங்கல், வெற்பு எனவும்; எகினம், உந்தி எனவும் வருமாறு காண்க.*

*திசைச் சொல்*

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி 883

*செந்தமிழ் வழங்கும் நிலத்துடன் சேர்ந்த பன்னிரண்டு நிலத்தும், தாம் குறித்த பொருளை விளக்கும் எனத் திசைச்சொல்*

என்பதாம். (எ-டு) பாண்டி நாட்டார் ஆ(பசு) எருமை இவற்றைப் பெற்றமென்று வழங்குதல் போன்று வரும். பன்னிரு நிலமாவன, பொங்கர் நாடு, ஒளிநாடு, தென்பாண்டி நாடு, குட்ட நாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழிநாடு, மலைநாடு, அருவா நாடு, அருவாவடதலை நாடு ஆகியன என்பர்.

## வட சொல்

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே. 884

வடசொல் என்பது, வடமொழிக்கே உரிய சிறப்பெழுத்தல்லாமல், வடமொழி தென்மொழி ஆகிய இரண்டுக்கும் பொதுவாகிய எழுத்தால் அமைந்த சொல்லாம். (எ-டு) குங்குமம், மணி என்பனபோன்று வருவன.

சிதைந்தன வரினும் இயைந்தன வரையார். 885

பொதுவெழுத்தான் அமைந்த சொல்லேயன்றி, வடவெழுத்தாலேயே அமைந்த சொல் சிறிது மாறுபட்டு வந்தாலும், பொருத்தமுடையனவாயின் நீக்கமாட்டார்கள். (எ-டு) 'அரமிய வியலகத் தியம்பும்' (அகம்—124) என வரும்.

## சொற்கள் விகாரம் அடைதல்

அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலுந் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர் 886

இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நான்கு சொற்களாலும் செய்யுள் செய்யுமிடத்து, மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்க வேண்டுமிடத்து வல்லெழுத்தாக்கியும், வல்லெழுத்தை மெல்லெழுத்தாக்க வேண்டுமிடத்து மெல்லெழுத்தாக்கியும், குறைகின்றவற்றை விரிக்கவேண்டுமிடத்து விரித்தும், மிக்கு வருவனவற்றைத் தொகுக்கவேண்டுமிடத்துத் தொகுத்தும், குற்றெழுத்து நீளவேண்டுமாயின் நீட்டியும், நெடியதனைக் குறுக்கவேண்டுமிடத்துக் குறுக்கியும் கூறலாகிய ஆறு விகாரமும், செய்யுளின்பம் பெறச் செய்வாருடைய நாட்டத்தை (கருத்தை) வன்மையாக உடையதாம். (எ-டு) 'தடக்கை யிருபுலி' எனவும், 'சிறுமன் பாவை' எனவும், 'தண்ணந் துறைவன்' எனவும், 'மழவரோட்டிய

எனவும், 'வீடுமின்' எனவும், 'அழுந்து படு விழுப்புண்' எனவும் வலித்தல் விகாரம் முதலிய ஆறனையும் கூறியவாறு காண்க.

## 2. பொருள்கோள்

### பொருள்கோள் நால்வகை

நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான் கென்ப மொழிபுண ரியல்பே. 887

செய்யுளிடத்துச் சொற்கள் தம்முள் சேர்ந்து நிற்கும் முறைமை, நிரல் நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நான்கு வகைப்படும்.

அவற்றுள்
நிரனிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல். 888

மேற்கூறிய நான்கனுள், நிரனிறையாவது, வினையினும் பெயரினும் ஆராயத்தோன்றிச், சொல்வேறு நிற்கப், பொருள் வேறுபெற நிற்றலாம் (எ-டு) 'மாசு போகவுங் காய்பசி நீங்க வுங் கடிபுனன் மூழ்கி யடிசில் கைதொட்டு' என வரும்.

### சுண்ணம்

சுண்ணந் தானே
பட்டாங் கமைந்த ஈரடி யெண்சீர்
ஒட்டுவழி யறிந்து துணித்தன ரியற்றல். 889

சுண்ணம் என்பது, இயல்பாக அமைந்துள்ள இரண்டு அடிகளின் எட்டுச் சீர்களையும், தனித்தனியாக எடுத்துப், பொருந்தும் இடம் அறிந்து கூட்டிச் செய்யப்படுவதாம். (எ-டு) 'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப, கானக நாடன் சுனை' என வரும்.

### அடிமறி

அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே. 890

அடிமறிச் செய்யுளாவது, சீர்கள் யாவும் நின்றவாறே நிற்க, அடிகள் மட்டும் தம்மிடம் விட்டுப் பிறிதொன்றன் இடத்துச் சென்று நிற்றலாம்.

(எ-டு) 'மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே' என வரும்.

### அடிமறி—மேலும் ஒரு முடிவு

பொருடெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரிபும்
தோற்றமும் வரையார் அடிமறி யான. 891

பொருளை ஆராயுமிடத்து, அடிமறிச் செய்யுளிடத்து, இறுதி அடியின் இறுதிச்சீர் எருத்தடியிற் (இரண்டாமடியில்) சென்று திரிதலும் நீக்கப்படாது.

### மொழிமாற்று

மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல். 892

மொழிமாற்றுச் செய்யுளினது இயல்பாவது, பொருள் எதிர்வந்து பொருந்துமாறு சொல் நிற்குமிடத்தை மாற்றி, முன்னும் பின்னும் சேர்க்கவேண்டிய விடத்துச் சேர்த்தலாம்.

(எ-டு) 'ஆரிய மன்னர் பறையின் எழுந் தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை—காரி
விறன்முள்ளூர் வேங்கைவீ நாறுந் தோளா
ளிறனுள்ளூ ருள்ள தலர்.' என வரும்.

## 3. தொகைச்சொல் வகைதொகை

### பிரிக்கப் படாதன

த ந நு எ எனும் அவைமுத லாகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா. 893

த ந நு எ என்னும் எழுத்துக்களை முதலாகவுடையனவாய், உறவை உணர்த்திவரும் பெயரும் பிரிக்கப்படாது. (எ-டு) தமன், நமன், நுமன், எமன் என்பன போன்று வரும்.

### தொகைபோல் அடுக்கி வருவன

இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்று
அவைமூன் றென்ப வொருசொல் லடுக்கே. 894

இசை நிறைத்தலும், அசைநிலையாய் நிற்றலும், பொருள் வேறுபாட்டுடன் சேர்தலும் என்று, ஒருசொல் அடுக்கு மூன்று வகைப்படும். (எ-டு) 'ஏ ஏ ஏ ஏ யம்பல் மொழிந்தனள்' என்பது இசைநிறை; 'மற்றோ மற்றோ' என்பது அசைநிலை; 'பாம்பு பாம்பு' என்பது பொருளொடு புணர்த்தல்; இங்ஙனம் முறையே வரும்.

## தொகை மொழிகள்

வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்று
அவ்வாறென்ப தொகைமொழி நிலையே. 895

வேற்றுமைத்தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்று தொகை ஆறு வகைப்படும்.

## வேற்றுமைத் தொகை

அவற்றுள்
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல. 896

வேற்றுமைத் தொகையாவது, முன்பு வேற்றுமை இயலில் கூறியவாறு விரித்துப் பொருளுணர்த்தவேண்டியவை விரியாது தொக்கு (சேர்ந்து) நின்று பொருளுணர்த்துவதாம். (எ-டு) 'சாத்தன் கைத்தான்' என [illegible] இரண்டாம் வேற்றுமைத்தொகை முதலாக இது ஆறு வகைப்படும்.

## உவமத் தொகை

உவமத் தொகையே உவம இயல. 897

உவமத்தொகை, உவமவுருபுத் தொடர்ப்பொருள் போலப் பொருளை உணர்த்தும். (எ-டு) 'பொனமேனி' என வரும்.

## வினைத்தொகை

வினையின் தொகுதி காலத் தியலும். 898

வினைத்தொகையானது, காலத்தை இடமாகக் கொண்டு வரும். (எ-டு) அரிவாள், ஆடரங்கு, செய்குன்று என வரும்

## பண்புத் தொகை

வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையினென்று
அன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்ன திதுவென வரூஉ மியற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே. 899

வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவும்; அவைபோல்வன பிறவுமாகிய குணத்தை உணர்த்தி. பின் தொக்கவிடத்துக் குணமுடைய சொல் குணமுடைய பொருளை உணர்த்துதலால், இன்னது இது என ஒன்றனையொன்று சிறப்பித்து, இரண்டும் ஒரு பொருளின்மேல் வரும் தன்மையை உடைய [illegible] பண்புத்தொகையாம். (எ-டு) கருங்குதிரை, வட்டப்பலகை, நெடுங்கோல், தீங்கரும்பு என்பன [illegible] முறையே வண்ணம் முதலிய நான்கும் வந்தன. இங்ஙனம் பிறவிடத்து வருமாறும் அறிக.

## உம்மைத் தொகை

இருபெயர் பல்பெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோடு அவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே. 900

இருபெயர் சேர்ந்து ஆகும் உம்மைத்தொகை, இரண்டுக்கு மேற்பட்ட பல பெயரினாலாகிய உம்மைத்தொகை, முகத்தல் அளவுப் பெயரான் வரும் உம்மைத்தொகை, எண்ணைக் குறித்து வரும் பெயரால் ஆகிய உம்மைத்தொகை, என்றாகிய இயல்பு பற்றிப் பொருளுணர்த்தும் பெயரானாகிய உம்மைத்தொகை ஆகிய, ஆறும் உம்மைத்தொகையின் சார்பாக வரும். (எ-டு) உவாப் பதினான்கு எனவும், புலிவிற்கெண்டை எனவும், தூணிப்பதக்கு எனவும், முப்பத்துமூவர் எனவும், தொடியரை எனவும், பன்னிரண்டு எனவும் முறையே ஆறு பெயர்களின் [illegible]மைத்தொகையும்

## அன்மொழித் தொகை

[illegible] பானும்
தொக்க பெயர்வயி [illegible]ம்
வேற்றுமை தொக்[illegible] [illegible]யர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே. 901

பண்புச்சொல் தொகும் சொல்லிலும், உம்மைத்தொக்க பெயரிடத்தும், வேற்றுமைதொக்க பெயரிடத்தும், இறுதிச் சொல்லிடத்து நின்று நடக்கும் அன்மொழித்தொகை என்க. (எ-டு) வெள்ளாடை, தகரஞாழல், பொற்றொடி, என முறையே மூன்றும் வந்தன. அஃதாவது வெள்ளை ஆடையுடுத்தாள் என வருவதுபோன்று விரித்துப் பொருள் காணவேண்டும்.

## பொருள் நிற்கும் இடம்

அவைதாம்
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருள்நிலை மரபே. 802

அந்த அன்மொழித்தொகைதாம், முன்மொழியில் பொருள் சிறத்தலும் பின்மொழியிற் சிறத்தலும், இருமொழியின்மேல் சிறத்தலும், இரண்டுமல்லாத பிறதொரு மொழியின்மேல் பொருள் சிறத்தலும் எனப், பொருள் நிற்கும் முறைமை நான்கென்று சொல்லுவர் புலவர். (எ-டு) வேங்கைப்பூ, அடைகடல், உவாப் பதினான்கு, வெள்ளாடை என்பன முறையே நான்கிடத்தும் பொருள்சிறந்து வந்தன காண்க. 'வேங்கைப்பூ நறியது' என்பது, பூ நறியது என்று, பூ என்னும் முதன் மொழிப் பொருள் சிறந்தவாறும் காண்க.

## தொகை மொழிகளின் தன்மை

எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய. 903

ஆறுவகைத் தொகைச்சொல்லும் ஒரு சொல்லாய் (ஒரு சொல் தன்மையாய்) நடத்தலை யுடையன. அஃதாவது, சொல்லின் முன்மொழி பெயராயின், பெயர்ச்சொல் நடையாகவும்; வினையாயின், வினைச்சொல் நடையாகவும் அவை நடக்குமென்பதாம். (எ-டு) [illegible] குன்றத்திருந்தான் என வரும்.

## உம்மைக்கு மேலும் முடிபு

உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொன் நடைத்தென மொழிமனார் புலவர். 904

உயர்திணையிடத்து வரும் உம்மைத்தொகை பலர்க்குரிய ஈற்றுல் வரும். (எ-டு) இராம கதிரேசர் என வரும்.

## பொருள் கொள்ளும் குறிப்பு

வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை யெல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன வென்னுங் குறிப்புரை யாகும். 905

*வாராத இயல்பை யுடையனவற்றை வருவனவாகச் சொல்லுதலும், என்று கூறாத இயல்பினவற்றைக் கூறுவனவாகச் சொல்லுதலும், அத்தன்மையை உடையனவெல்லாம் அந்தந்தப் பொருளின் இயல்பால் இத்தன்மையை உடையனவென்று சொல்லும் குறிப்புச் சொல்லாம். (எ-டு) 'அந்நெறி யீண்டு வந்து கிடந்தது' எனவும், 'மழை மழை என்கின்ற பயிர்' எனவும் இரண்டும் முறையே வந்தன காண்க.*

## இசைநிறை அடுக்கு

இசைப்படு பொருளே நான்குவரம் பாகும். 906

*மேற்கூறிய ஒருசொல் அடுக்கினுள், இசை நிறைந்துவரும் சொற்கள் நான்குமுறை வரும்; அதற்குக் குறைந்துவரினும் வரும்; மிகுந்து வராது. (எ-டு) 'பாடுகோ, பாடுகோ, பாடுகோ, பாடுகோ' என வரும்.*

## பொருளொடு புணர்தல் அடுக்கு

விரைசொல் அடுக்கே மூன்றுவரம் பாகும். 907

*விரைவுப் பொருள்பட அடுக்கி வருகின்ற சொல்' மூன்று முறையே அடுக்கி வரும். (எ-டு) 'தீத்தீத்தீ' என வரும்.*

## அசைநிலை அடுக்கு

கண்டீர் என்றா கொண்டீர் என்றா
சென்றது என்றா போயிற் றென்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி அசைக்கும் கிளவி என்ப. 908

*கண்டீர், கொண்டீர், சென்றது, போயிற்று என வரும் நான்கு வினைச்சொல்லும், வினாவினோடு பொருந்தி நின்ற விடத்து அசைநிலை அடுக்காம். (எ-டு) ஒருவன் ஒன்று கூறிய விடத்து, அதனைக் கேட்பவன் ஒப்புக்கொள்ளாத விடத்துக், கண்டீரே கண்டீரே என்பான்; பிறவும் இவ்வாறு வருவன வந்துழிக் காண்க.*

### கேட்டை முதலிய சொற்கள்

கேட்டை என்று நின்றை என்று
காத்தை என்று கண்டை என்று
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்னுறக் கிளந்த இயல்பா கும்மே. 909

*கேட்டை, நின்றை, காத்தை, கண்டை என வரும் நான்கு சொல்லும், முன்னிலையில் வாராதவிடத்து மேற்கூறியாங்கு அசையேயாகும்.*

## 4. வினைமுற்றின் வகை

### வினைமுற்றின் இயல்பு

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மு விடத்தான் வினையினுங் குறிப்பினும்
மெய்ம்மை யானும் இவ்விரண் டாகும்
அவ்வா றென்ப முற்றியன் மொழியே. 910

*முற்றுச் சொல்லாவது, இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலமும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்தும், உயர்திணை அஃறிணை பொதுத்திணை ஆகிய பொருள் தோறும், வினையினாலும், குறிப்பினாலும் ஆகிய இரண்டாக வரும் அந்த ஆறுவகைச் சொல்லும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு) சென்றனன், கரியன் எனவும்; சென்றது, கரிது எனவும், சென்றன, கரிய எனவும் முத்திணைப் பொருளினும் இறந்தகாலத்தில் வந்தன காண்க.*

### வேறு விதி

எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும். 911

*மேற்கூறிய விதியுள் அடங்காது, பிறவிடங்களில் வரும் வினையும், முற்றுத்தன்மையாய் நிலைபெற்று வரும். (எ-டு) யார், எவன், இல்லை, வேறு, என்பன பிறண்டும் வேறிடங்களில் வந்தனவாம்.*

### அதற்கு முடிபு

அவைதாம்
தத்தம் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர்முடி பினவே. 912

மேலே கூறிய முற்றுச்சொற்கள் தாம், தத்தம் சொற்கள் பல அடுக்கி வந்தாலும், தம்முள் இயையாது, எவ்வகையாலும் பெயரைக்கொண்டே முடியும். (எ-டு) உண்டான் தின்றான் ஓடினான் முருகன் என வரும்.

## 5. எச்சச்சொற்களின் வகை

### பாகுபாடுகள்

பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே யாயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி. 913

*எச்சமானது, பிரிநிலை எச்சம், வினை எச்சம், பெயரெச்சம், ஒழியிசை எச்சம், எதிர்மறை எச்சம், உம்மை எச்சம், என வென்னெச்சம், சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் எனப் பத்துவகைப்படும்.*

### பிரிநிலை எச்சம்

அவற்றுள்
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின. 914

*மேற்கூறப்பட்ட பத்து எச்சங்களுள், பிரிநிலை எச்சம் ஏகாரப் பிரிநிலை, ஓகாரப் பிரிநிலை என்று இருவகைப்படும். அவ்விரண்டு பிரிநிலை யெச்சமும், பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும் சொல்லுடன் முடிவன. (எ-டு) 'தானே கொண்டேன்' என வந்து, பிறர் கொண்டிலரெனப் பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும் சொல்லான் முடிந்தவாறு காண்க.*

### வினை எச்சம்

வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
யாவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே. 915

*வினையெச்சத்திற்குத் தெரிநிலைவினையும் குறிப்பு வினையும் கொண்டு முடியும்; அங்ஙனம் முடியுமிடத்துக், குறிப்பு வினை ஆக்க வினையுடன் வரும். (எ-டு) உழுது வந்தான்; மருந்துண்டு, நல்லனாயினான் என, வினையெச்சம் வினைப் பெயரோடு முடிதல், நினையத் தோன்றிய என்றதனால் கொள்ளுக.*

## பெயர் எச்சம்

பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே. 916

பெயரெச்சம் பெயரைக்கொண்டு முடியும் (எ-டு) 'உண்ட முருகன்' என வரும்.

## ஒழியிசை எச்சம்

ஒழியிசை எச்சம் ஒழியிசை முடியின. 917

'மன்' ஒழியிசையும், 'தில்' ஒழியிசையும், 'ஓகார' ஒழியிசையும் ஆகிய ஒழியிசை எச்சம் மூன்றும், ஒழியிசையால் முடியும். (எ-டு)'கூரியதோர் வாள்மன்', 'வருகதில் லம்ம வெஞ்சேரி சேர' 'கொளலோ கொண்டான்' என மூன்றும் முறையே வந்தன காண்க. 'கூரியதோர் வாள்மன்' என்பது, வலிமையற்ற வாள் என்று ஒழிந்தபொருளைக் குறித்தவாறு; பிறவும் இயைத்துக் காண்க.

## எதிர்மறை எச்சம்

எதிர்மறை எச்சம் எதிர்மறை முடியின. 918

மாறுகொள் எச்சமென்று முற்கூறிய ஏகார எதிர்மறை எச்சமும், ஓகார எதிர்மறை எச்சமும், உம்மை எதிர்மறை எச்சமும் ஆகிய மூன்றும், எதிர்மறையாலேயே முடியும். (எ-டு) 'யானே கொள்வேன்', 'யானோ கள்வேன்' 'வரலு முரியன்' என முறையே வரும் மூன்றும், கொள்ளேன், கள்ளேன், வாராமையு முரியன் என்றும் எதிர்மறையால் முடிந்தன.

## உம்மை எச்சம்

உம்மை எச்சம் இருவீற் றுனும்
தன்வினை யொன்றிய முடிபா கும்மே. 919

உம்மை எச்சத்தால் பெறப்படும் பொருளும், அவ்வெச்சச் சொல்லால் முடிவதுமாகிய உம்மையெச்சமும், ஆகிய இரண்டிடத்தும், தன்வினை உம்மையுடன் தொடர்ந்த சொல்லுப் பொருந்திய முடிபாகும். (எ-டு) சாத்தனும் வந்தான்; கொற்றனும் உண்டான்; என வேறுபட்டவிடத்துப் பொருந்தாமையும் காண்க.

## உம்மை—மேலும் முடிவு

தனமேற் செஞ்சொல் வருஉங் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான. 920

*உம்மை எச்சத்தின் முன்னர் எச்சச்சொல் உம்மையில்லாத சொல்லாய் வருமிடத்து, நிகழ்காலத்துடன் எதிர்காலமும் இறந்தகாலத்தோடு எதிர்காலமும் மயங்கிவரினும் நீக்கப்பட மாட்டாது. (எ-டு) கூழுண்ணு நின்றான் சோறு முண்பன் எனவும், கூழுண்டான் சோறு முண்பன் எனவும் முறையே வந்தன.*

## 'என' எனும் எச்சம்

எனவென் எச்சம் வினையொடு முடிமே 921

*'என' என்னும் எச்சம், வினையைக் கொண்டு முடியும். (எ-டு) ஒல்லென வொலித்தது என வரும்.*

## ஏனை மூன்று

எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப. 922

*பத்து எச்சங்களுள், கூறிய ஏழும் நீங்கலாக, எஞ்சிய சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் ஆகிய மூன்றும். தமக்கு மேல் வந்து முடிக்கும் எச்சச்சொல்லை உடையனவல்ல என்று கூறுவர் புலவர்.*

## குறிப்பு இசை எச்சங்கள்

அவைதாம்
தத்தங் குறிப்பின் எச்சஞ் செப்பும். 923

*அம்மூன்று எச்சங்களும் சொல்லுவான் குறிப்பினால் எஞ்சி நின்ற பொருளை உணர்த்தும், (எ-டு) 'இளைதாக முண்மரம் கொல்க' என்பது, தியாரைக் காலத்தால் (தொடக்கத்திலேயே) அழித்து விடுக என்னும் குறிப்புப் பொருளைக் கொடுத்தது. 'அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு' என்பது, 'அது போல' என்றொரு சொல் எஞ்சிய இசைப்பொருள் உணர்த்தியது.*

## சொல் எச்சம்

சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்
சொல்லள வல்லது எஞ்சுதல் இன்றே. 924

*சொல்லெச்சம் என்பது, ஒரு சொல்லின் முன்னும் பின்னும் சொல் மாத்திரம் எஞ்சிவரும்; எனவே தொடராய் எஞ்சுதல் இன்றென்பதாம். (எ-டு) 'உயர்திணை யென்மனார்' என்றவிடத்து ஆசிரியர் என்னும் சொல் முன்னும், 'மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே' என்றவிடத்து, 'எமக்கு' என்னும் சொல், பின்னும் எஞ்சியவாறு காண்க.*

# 9. சில மரபுவகைகள்

## இடக்கர்ச் சொல்

அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல். 825

அவையிடத்து கூறப்படாத சொல்லை, அவ் வாய்பாட்டால் கூறாது, பிறிதொரு வாய்பாட்டால் சொல்லுக. (எ-டு) கால் மேல் நீர்பெய்து வருதும். செம்பினேற்றை, கருமுகமந்தி என வரும். (குறிப்பு) செம்பினேற்றை—ஆண்குறி; கருமுகமந்தி—பெண்குறி.

## மறைக்கப் படா

மறைக்குங் காலை மரீஇய தொராஅல். 926

அவையல் கிளவியை மறைத்துச் சொல்லுமிடத்து, பண்டு தொட்டு வழங்கி வருவனவற்றை மறைத்துக் கூறக்கூடாது. (எ-டு) 'யாட்டுப் பிழுக்கை,' 'ஆனையிலண்டம்' என வருவன காண்க.

## ஈ, தா, கொடு

ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி யாகிட னுடைய. 927

ஈ, தா, கொடு என்று கூறப்படும் மூன்றும், ஒருவன் ஒன்றை இரக்குமிடத்து (யாசித்தல்) வரும் சொல்லாம்.

## 'ஈ' எனும் சொல்

அவற்றுள்,
ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே. 928

'ஈ' என்னும் சொல்லைக் கூறுதல், கொடுக்கின்றவனைவிட மிகவும் இழிந்தவன் (தாழ்ந்தவன்) கூறுதலாம். (எ-டு) 'சோறு ஈ' என வரும்.

## 'தா' எனும் சொல்

தாவென் கிளவி ஒப்போன் கூற்றே. 929

'தா' என்னும் சொல்லால் கூறுதல், ஒத்த நிலையில் உள்ளவன் கேட்கும் முறையாம். (எ-டு) 'ஆடை தா' என வரும்.

### 'கொடு' எனும் சொல்

கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே. 930

'கொடு' என்னும் சொல்லாற கூறுதல், கொடுக்கின்றவனை விட உயர்ந்தவன் கேட்டலாம். (எ-டு) 'பணம் கொடு' என வரும்.

### 'கொடு'—மேலும் ஒரு முடிபு

கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பில்
தன்னிடத் தியலும் என்மனார் புலவர். 931

'கொடு' என்று கூறுதல் படர்க்கை இடத்திற்கு உரிய தாயினும், தன்னைப் பிறனொருவன்போலக் கருதும் கருத்துள்ள விடத்துத், தன்னிடத்தும் வரும்.

### பெயர்கள் முதலியவை

பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுந்
திசைநிலைக் கிளவியி னாஅ குநவுந்
தொன்னெறி மொழிவயி னாஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கி னாஅ குநவும்
மந்திப் பொருளவயி னாஅ குநவும்
அன்றி யனைத்துங் கடப்பா டிலவே. 932

ஒரு திணைப்பெயர் வேறொரு திணைக்காய் வருவனவும், திசைச்சொல்லிடத்துச் சொல்லும் முறை மாறுபட்டு வருவன வும், பழைய சொல்லாகிய செய்யுள் வேறுபாட்டிடத்து இயை பில்லாதவை இயைந்தனவாய் வருவனவும், பொருள் மயக்க மாகிய பிசி (கொடி)ச் செய்யுளிடத்துத் திணை முதலாயின திரிந்து வருவனவும், மந்திரப் பொருளினிடத்து அப் பொருட்கு உரிமை யுடையதல்லாத சொல் வருவனவும் ஆகிய, அவ்வனைத் தும், வழங்கியவாறே வழங்குவதல்லது இலக்கண வரையறை எதுவும் இல்லை.

### 'செய்யாய்' என்னும் சொல்

செய்யா யென்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி யாகிட னுடைத்தே. 933

'செய்யாய்' என்னும் வாய்பாட்டால் வரும் முன்னிலை வினை முற்றுச்சொல், 'ஆய்' என்னும் இறுதி கெட, 'செய்' என்னும்

சொல்லாய் நிற்கும். (எ-டு) 'உண்ணுப், போவாய்' என்பன 'உண், போ' என நின்றன.

## 'ஈ', 'ஏ' ஆகிய முன்னிலை ஈறுகள்

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே. 934

முன்னிலை வினைச்சொல்லின் முன்னால் வரும் ஈகாரம், ஏகாரம் ஆகிய இரண்டும் அம் முன்னிலைச் சொல்லுக்குப் பொருந்திய மெய்யின்மேல் ஏறி வரும். (எ-டு) 'சென்றீ பெரும சிற்றகைக்குநர் யாரே' (அகம்—46) எனவும், 'அட்டிலோலை தொட்டனை நின்மே' (நற்—300) எனவும் முறையே வந்தன.

## புதிய சொற்கள்

கடிசொல் இல்லைக் காலத்துப் படினே. 935

காலவேறுபாட்டிற்கு ஏற்றவாறு தோன்றி வழங்கும் சொற்களை, இவை பழைமையான சொல்லல்லவென்று நீக்குதல் கூடாது. (எ-டு) 'சம்பு, சள்ளை, சட்டி, சமழ்ப்பு' என வரும்.

## முதற்குறை முதலியவை

குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல். 936

குறைக்கும் சொற்களைக், குறைக்கும் இடமறிந்து குறைக்க வேண்டும். (எ-டு) தாமரை என்பது, 'மரையிதழ்புரையும் அஞ்செஞ்சீறடி' என முதற்குறைந்தது காண்க.

## குறையும் நிறைப்பெய ரியல

குறைத்தன வாயினும் நிறைப்பெய ரியல. 937

குறைத்தாலும், அச் சொற்கள் குறையாது நிற்கும் முழுப் பெயர்களின் தன்மையையே உடையன; ஏனெனில் 'மரையிதழ்' என்றாலும், தாமரை என்னும் பொருளையே தருதலான் என்பதாம்.

## இடைச்சொல் மரபு

இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே. 938

இடைச்சொற்களெல்லாம் பிறிதோர் சொல்லை வேறுபடுக்கும் (வேறுபாடு தோன்றச் செய்யும்) சொற்களேயாம்.

## உரிச்சொல் மரபு

**உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய. 939**

*உரிச்சொல்லிடத்தும் வேறுபடுக்கும் சொல்லாதற்கு உரியன உரியவாம்.*

## வினை எச்சங்கள்

**வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய 940**

*மேற்கூறிய வினையெச்சமும் வேறுபாடுடைய பல இலக்கணங்களை உடையன. (எ-டு) 'உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய' (குறு—232) என்பதில், செய்து என்னும் எச்சம் வினை முதல் கொள்ளாது (தன்னிலக்கணப்படி) பிறிதின்வினை கொள்ளுதலும்; கண்ணியன் வில்லன் வரும் என்பது முற்றுச் சொல்லல்லாது திரிபாய் வருதலும் பிறவுங், காண்க.*

## தொடர் மொழிகள்

**உரையிடத் தியலும் உடனிலை அறிதல். 941**

*வழக்கிடத்துச் சேர்ந்து நிற்றற்குரியன அவல்லாதனவும், சேர்ந்து நிற்பின், தள்ளாது கொள்ளுக. (எ-டு) 'இப்பானைக் கிப்பானை சிறிது பெரிது' என்னுமிடத்துச் சிறிதும் பெரிதும் உடன் நின்றவாறு காண்க.*

## குறிப்பால் உணர்வன

**முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே**
**இன்ன வென்னும் சொன்முறை யான. 942**

*'இப்பொருள் இத்தன்மையை உடையன' என்று சொல்லு மிடத்துச், சொல்லாலன்றிச் சொல்லுகின்றவனுடைய குறிப் பினல் பொருளறியப்படும் சொற்களும் உள்ளன. (எ-டு) 'செஞ்செவி' என்று கூறியவுடன், பொன் முதலிய உயர்பொருள் அணிகள் தொடுத்து விளங்கும் செவி என்னும் பொருள் காட்டியது காண்க.*

## இருசொல் ஒருபொருள்

**ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார். 943**

*பொருள் வேறுபாடில்லாது ஒரு பொருளின்மேல் வரும் இரண்டு சொல், பிரிந்து நில்லாது தொடர்ந்து வந்தால், அவற்றை நீக்குதல் கூடாது. (எ-டு) 'நிவந்தோங்கு பெருமலை'*

என்பதில், நிவத்தல் ஓங்குதல் இரண்டும் ஒரு பொருளவாய் வந்து பிரியாது நின்றன காண்க.

### ஒருமை, பன்மைக்கு ஆதல்

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமா றுண்டே. 944

*ஒருமைக்குரிய பெயர்ச்சொல், பன்மைக்கு ஆகும் இடமும் உண்டு. (எ-டு) 'ஏவ விளையர் தாய்வயிறு கரிப்ப' என்றவிடத்துத், 'தாய்' என்னும் ஒருமை சுட்டிய பெயர்; 'இளையர்' என்பதனால், 'தாயர்' எனப் பன்மை உணர்த்தியவாறு காண்க.*

### முன்னிலை ஒருமை பன்மையொடு முடிதல்

முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே
ஆறுபடை மருங்கிற் போற்றல் வேண்டும் 945

*முன்னிலையை உணர்த்திநின்ற ஒருமைச்சொல், பன்மைச் சொல்லுடனே முடிந்ததாயினும் நீக்கப்படாது. அவ்வாறு கொள்ளுதல் ஆற்றுப்படைச் செய்யுளிடத்து என்பதாம். (எ-டு) 'கலம்பெறு கண்ணுளர் ஒக்கற் றலைவ' என ஒருமைச்சொல், 'இருபேரொக்கலொடு பதயிகப் பெறுகுவிர்' என்னும் பன்மைச்சொல்லுடன் முடிந்தவாறு காண்க.*

## 7. சொல்லதிகாரத்திற்குப் புறனடை

### நூல் வழக்கின் முதன்மை

செய்யுள் மருங்கினும் வழக்கியன் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல். 946

*செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இவ்வதிகாரத்தில் பொருள் தோன்றுமாறு கூறிய சொற்கள் எல்லாவற்றையும், பல்வேறு செய்கை விதியையுடைய பழைமையான நூல்வழியிற் பிழையாது, சொல்லை வேறுபடுத்து உணரும் வகையால், பிரித்துக் காட்டுக.*

# 1. அகத்திணை இயல்

[அகத்திணைக்கு எல்லாம் பொதுஇலக்கணம்]

## ஏழு திணைகள்

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப. 947

*கைக்கிளை என்று சொல்லப்பெறும் பொருள் முதலாகப், பெருந்திணை என்று சொல்லப்பெறும் பொருள் இறுதியாக, ஏழுபொருள் முற்படக் கூறப்பட்டன என்று புலவர்கள் கூறுவர். பிற்படக் கிளக்கப்படுவன எழுதிணையும் உள. அவை வெட்சி முதலாகப் பாடாண்திணை ஈறாக ஏழாம்.*

## அவற்றுள் நிலம் பெறுவன

நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே. 948

*மேற்கூறப்பட்ட ஏழு திணையுள், நடுவென்று சொலப்பட்ட பாலைத்திணை யொழியக், கைக்கிளை பெருந்திணைக்கு நடுவாகி நின்ற ஐந்திணைகளால், உலகம் பகுக்கப்பட்டிருக்கின்ற இயல்புடையதாம்.*

## நடுவண் ஐந்திணையின் பகுப்பு

முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை. 949

*பெரியோர்களுடைய செய்யுளிடத்துப் பொருந்திய பொருளை ஆராயுங்கால், முதற்பொருள் எனவும், கருப்பொருளெனவும், உரிப்பொருள் எனவும் கூறப்பட்ட மூன்று பொருள்களுமே காணப்பெறும். சொல்லுங்காலத்தில், அவை முறைமையாற் சிறந்தனவாம்.*

## முதற் பொருள்

முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே. 950

உலகவியலை நன்குணர்ந்தவர்கள், 'முதல் என்று சொல்லப் பெறுவது, நிலமும் காலமுமாகிய அவ்விரண்டினது இயற்கை' என்று கூறுவார்கள்.

### நிலத்தால் திணை ஆகுமாறு

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே. 951

திருமாலின் காதலைக்கொண்ட காடாகிய இடமும், முருகவேளின் காதலைக்கொண்ட உயர்ந்த மலையாகிய இடமும், இந்திரனின் காதலைக்கொண்ட நன்னீர் பொருந்திய வயலாகிய இடமும், வருணனின் காதலைக்கொண்ட மிகுந்த மணல்பொருந்திய இடமும், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று முன் சொற்களால் சொல்லப்பெற்ற பெயர்முறையாற் கூறப்பெறுவனவாம்.

### முல்லைக்குக் காலம்

காரும் மாலையும் முல்லை. 952

காரும் (ஆவணியும் புரட்டாசியும்) மாலைப்பொழுதும் முல்லைத்திணைக்குக் காலமாம். மாலை—இரவின் முற்கூறு.

### குறிஞ்சிக்குக் காலம்

குறிஞ்சி,
கூதிர் யாமம் என்மனார் புலவர். 953

குறிஞ்சித்திணைக்குக் காலமாவது, கூதிரும் (ஐப்பசியும் கார்த்திகையும்) யாமமும் என்று கூறுவர் புலவர். யாமம்—இரவின் நடுக்கூறு

பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப. 954

குறிஞ்சித்திணைக்கு முன்பனிக் காலமும் (மார்கழியும் தையும்) உரியதென்று கூறுவர் ஆன்றோர்.

### மருதத்திற்குக் காலம்

வைகறை விடியல் மருதம். 955

*வைகறைக் காலமும் விடியற்காலமும் மருதத்திற்குக் காலமென்று கூறுவர். வைகறை—இரவின் பிற்கூறு; விடியல்—பகற்பொழுதின் முற்கூறு.*

## நெய்தற்குக் காலம்

எற்பாடு
நெய்தல்ஆதல் மெய்பெறத் தோன்றும். 956

*எற்படுபொழுது நெய்தல்திணைக்குக் காலமாதல் உண்மை பெற விளங்கும். எற்பாடாவது, பகலின் பிற்கூறு.*

## ப காலமும் ம

நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே. 957

*நடுவுநிலைத் திணையாவது, நண்பகற் பொழுதொடும் வேனிற் காலத்தோடும் சேர்ந்து நிற்கும் தன்மையை உடையது. வேனில், இளவேனிலும் முதுவேனிலும் ஆம். அவை சித்திரை வைகாசியும், ஆனி ஆடியும்.*

பின்பனி தானும் உரித்தன மொழிப. 958

*பின்பனிக்காலமும் பாலைக்கு உரியதென்று கூறுவர். பின்பனியாவது, மாசியும் பங்குனியும்.*

## பாலைக்குரிய பொருள்

இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றலும்
உரியதாகும் என்மனார் புலவர். 959

*தலைமகளைப் பிரிதலும், தலைமகளை உடன்கொண்டு தமர் வரைப் பிரிதலும் ஆகிய இருவகைப் பிரிவும், நிலைபெறுமாறு தோன்றுதலும் பாலைக்குரிய பொருளாகும் என்று புலவர்கள் கூறுவர்.*

## திணைமயக்கம் உறுதல்

திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே
நிலன்ஒருங்கு மயங்குதல் இல்லென மொழிப
புலன்நன குணர்ந்த புலமை யோரே. 960

*அறிவுத்திறனை நன்குபெற்ற புலவர்கள், ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றொரு திணைக்குரிய முதற்பொருளோடு சேர்ந்து நிற்றலும் ஒதுக்கப்பட மாட்டாது; ஆயின், அவ்விடத்தில் நிலம் சேர நிற்றல் இல்லை என்று கூறுவர். எனவே, காலம் மயங்கும் என்க.*

## முதலும் கருவும் மயங்கும்

உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே. 961

உரிப்பொருள் அல்லாத கருப்பொருளும் முதற்பொருளும், தந்நிலமல்லாத பிறநிலத்துக் கருப்பொருள் முதற்பொருளோடும் கலந்து வரப்பெறும்.

## உரிப்பொருள் வகை

புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே. 962

திணைக்கு உரிய உரிப்பொருளை ஆராயுமிடத்துப், புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்குதல், ஊடுதல், இவற்றின் காரணங்கள் என்பனவையாம். இருத்தல்—ஆற்றியிருத்தல். இரங்கல்—ஆற்றாமை.

## ஒருசார் உறுப்புப் பொருள்

கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும்
உண்டென மொழிப ஓரிடத் தான. 963

கொண்டு தலைக்கழிதலாவது தலைவியை உடன் அழைத்துக் கொண்டு செல்லுதல்; அஃது பாலைத்திணையிடத்து நிகழும். பிரிந்தவண் இரங்குதலாவது, தலைவனும் தலைவியும் பிரிந்த விடத்துப் பிரிவினைப் பொறுக்கும் ஆற்றலின்றி வருந்துவது; அஃது ஒருவழித் தணந்தவிடத்து நிகழும்.

## கலந்த பொழுதும் காட்சியும்

கலந்த பொழுதும் காட்சியும் அன்ன. 964

தலைவனைக் கண்டவிடத்துத் தலைவிக்கு மனநிகழ்ச்சி உள்ள நிலைமையும், பின்னர் குறிப்பு அறியும் வரையிலும் தலைவியின் உள்ள நிலையும், தலைவன் தலைவியை எதிரே வந்து காணுதலும், ஆகிய நிகழ்ச்சிகள் கைக்கிளையிடத்து நிகழும்.

## முதலின் இருவகை

முதல்எனப் படுவது ஆயிரு வகைத்தே. 965

முதற்பொருள் என்பது, மேலே கூறப்பட்ட நிலம் காலம் என்னும் இரண்டும் ஆகும். எனவே, பிறவெல்லாம் உரிப்பொருள் என்றனர்.

## கருப்பொருள் ஆமாறு

தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப. 966

*தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை யென்னும் முழக்குக் கருவி, தொழில், பண் (இசை) முதலியனவும், பிறவும் கருப்பொருள் என்று கூறுவர்.*

## மேலதற்குப் புறனடை

எந்நில மருங்கில் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த ஆகும். 967

*ஏதாயினும் ஒரு நிலத்திற்குரிய மலரும், பறவையும் அந்த நிலத்திற்கும் அதற்குரிய காலத்திற்கும் பொருந்தாது, பிறிதொரு நிலத்திடத்து வரினும், வந்த நிலத்திற்குரிய கருப்பொருளாகவே கொள்ளப்படும்; இஃது திணைமயக்கம் என்று பெயர்பெறும்.*

## மக்கள் திறம்

பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய
திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே. 968

*ஒவ்வொரு திணையிடத்தும் பொருந்திவருகின்ற பெயர், குலப்பெயரும் தொழிற்பெயரும் என, படும்.*

## முல்லைக்கு மக்கட்பெயர்

ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே. 969

*ஆண்களை உணர்த்தும் திணைப்பெயர் ஆயர், வேட்டுவர் என்பனவாம். அவ்விடத்து, ஆட்சிபற்றி வரும் கிழவர் (உரிமையாளர்) குறும்பொறை நாடன் எனவும்; குலம்பற்றி வரும் பொதுவர், ஆயர் என்பனவும் உளதாம். இவை முல்லைத் திணைக்கு உரியன.*

## திணைதோறும் வரும் பெயர்கள்

ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை
ஆனு வகைய திணைநிலைப் பெயரே. 970

மேற்கூறிய முல்லைக்குரியார் போன்று, ஏனை நிலத்திடத்தும் உள்ளவர் அந்தந்த நிலத்திற்குரிய நிலப் (திணை) பெயரால் வழங்கப்படுவர்.

அஃதாவது, குறிஞ்சிக்கு மக்கட்பெயர் குறவன், குறத்தி எனவும், தலைமக்கட்பெயர் வெற்பன், சிலம்பன் எனவும்; பாலைக்கு மக்கட்பெயர் எயினர், எயிற்றியர் எனவும், தலைமக்கட் பெயர் மீளி, விடலை எனவும்; மருதத்திற்கு, மக்கட்பெயர் உழவர், உழத்தியர் எனவும், தலைமக்கட் பெயர் ஊரன், மகிழ்நன் எனவும்; நெய்தற்கு மக்கட்பெயர் நுளையர், நுளைச்சியர் எனவும், தலைமக்கட் பெயர் சேர்ப்பன், துறைவன் எனவும் வருவனவாம்.

## அடியோர் வினைவலர் பாங்கில்

அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
கடிவரை இலபுறத் தென்மனார் புலவர். 971

பிறந்த அடித்தொண்டு செய்து வாழ்வோரும், பிறர் ஏவல்வழி நின்று வினைபுரிவோரும், ஐந்திணை ஒழுக்கத்திற்கு உரியராகார்; புறத்திணையாகிய பெருந்திணை கைக்கிளைக்கு உரியர் என்பதாம்.

ஏவல் மரபின் ஏனோரும் உரியர்
ஆகிய நிலைமை அவரும் அன்னர். 972

அடியோரும் வினைவலரும் அன்றிப், பிறரால் ஏவற்குரிய பிறரும் அத் தன்மையராதலான், புறத்திணையாகிய கைக்கிளை பெருந்திணைக்கு அவரும் உரியராவர்.

## பிரிவின் வகை

ஓதல் பகையே தூதுஇவை பிரிவே. 973

கற்றற்குச் செல்லுதல், பகை காரணமாகப் பிரிதல், தூது போதல் ஆகிய இவைதாம் பிரிவிற்குரிய காரணங்கள் ஆகும்.

## உயர்ந்தோர்க்குரிய பிரிவு

அவற்றுள்
ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன. 974

மேற்கூறிய மூன்றனுள், கல்வி பயிறலுக்காகப் பிரிதலும், தூது போவதற்காகப் பிரிதலும், மக்கள் தொகுதியில் உயர்ந்தோராகிய பகுதியினர்க்கே உரியவாம்.

## பகைவயிற் பிரிதல்

தானே சேறலும் தன்னொடு சிவணி
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே. 975

*அரசன பகைகாரணமாகப் பிரியுமிடத்துத், தான் மட்டும் போதலும் உண்டு; தன்னொடு பொருந்திய படையுடன் போதலும் உண்டு இதனுள், தான் தலைமைமேற்றுச் செல்வது பகைதணிவினை யெனவும், பிறர் தலைமையிற் கீழ்ப் போதல் வேந்தர்க்குற்றுழிப் பிரிவு எனவும் கொள்ளப்படும்.*

## பிற வகையாற் பிரிவுகள்

மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே. 976

*மேற்கூறியவற்றிற்காகப் பிரிதலேயன்றி, நால்வகை நிலத்திலும் சிறப்புடன் பொருந்திய மக்களையல்லாத தெய்வங்களது திருவிழாக் காரணமாகவும்; முல்லை முதலிய நிலத்தின்கண் வாழ்கின்ற மக்கள் அறநெறி தவறி ஒழுகியவிடத்து, அவற்றை நீக்கி அறத்தைக் கடைப்பிடித்து நிறுத்துதற் பொருட்டும்; பொருளீட்டுவதற்காகவும் தலைமகன் பிரிவான்.*

## மேலோர் முறைமைக்கு உரியவர்

மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே. 977

*தெய்வ வழிபாட்டை நிலைபெறுத்துதற் பொருட்டுப் பிரியும் பிரிவு, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என வாழும் நால்வர்க்கும் உரிமையுடையது என்பதாம்.*

## நாடுகாவலுக்கு உரியவர்

மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப. 978

*மன்னன் செய்தற்குரிய காவல் தொழிலை (அறக்காவல், நாடு காவல்) அவனுக்கு உறுதுணையாக நின்று வாழும் வணிகரும் வேளாளரும் செய்வதற்கு உரிமை உடையவராவர்,*

## வணிகர்க்கு ஓதற் பிரிவு

உயர்ந்தோர்க் குரிய ஓத்தி னான. 979

*வணிகர் வேளாளர் ஆகிய இருவரில், உயர்ந்தோராகிய வணிகர்கள் கற்றற்காகப் பிரிதலும் உண்டு.*

## தூதிற்கு உரியவர்

வேந்துவினை இயற்கை வேந்தன் ஒரீஇய
ஏனோர் மருங்கினும் எய்திடன் உடைத்தே. 980

*வேந்தனுக்குரிய தூதுபோதல் தொழில், வணிகர், வேளாளர் ஆகிய இருவர்க்கும் உரித்து; மன்னனால் அதற்கு அவரும் உரியவராக்கப்படின்.*

## பொருளீட்டவும் பிரிவர்

பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே. 981

*பொருளீட்டுவதற்காகப் பிரியும் பிரிவும், வணிகர் வேளாளர் ஆகிய இருவருக்கும் உரிமையுடையதாம்.*

## ஒழுக்கம் பேணும் உயர்ந்தோர்

உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத் தான. 982

*அந்தணர்கள் பொருள்காரணமாகப் பிரியுமிடத்துத், தமது ஒழுக்கத்தில் வழுவாது, அதனையே பற்றுக்கோடாகக் கொண்டு பிரிவர்.*

## பெண்கள் கடல் கடத்தலில்லை

முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை. 983

*தலைமகன் பிரியுமிடத்துத், தலைவியையும் உடன் அழைத்துக் கொண்டு கடல்கடந்து செல்வது என்பது கிடையாது.*

## பெண்கள் மடலேறலும் இல்லை

எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்
பொற்புடை நெறிமை இன்மை யான. 984

*அழகுதரும் செயல் அல்லாமையினால், எக்குலப்பெண்களும், மடலேறுதல் என்னும் ஒழுகலாற்றினை மேற்கொள்வது கிடையாது.*

## பிரிவிடத்து நற்றாய்க்குச் சொல் நிகழும் இடம்

தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சஞ் சார்தலென்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய கால மூன்றொடு விளக்கித்
தோழி தேஎத்துங் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய. 985

தன்னையும் தலைவன் தலைவியையும் குறித்துக் கூறுதலும்; நிலைபெற்ற நிமித்தமாகிய பல்லி முதலியவற்றின் ஒலியைத் தன் கருத்திற்கு ஏற்றவாறு கொள்ளுதலும்; பிறர் தம்முள் பேசுகின்ற சொற்களைத் தனக்குரிய நிமித்தமாகக் கொண்டு கூறுதலும்; இயக்கர் முதலாயினோர் கோபமுற்றுக் கூறுகின்ற சொல்லைப் பற்றுக்கோடாகக் கொண்டு கூறுதலும்; தனக்கும் தலைமக்களுக்கும் வரும் நன்மை, தீமை, அச்சம் முதலியனபற்றிக் கூறுதலும்; அவர்கள் தன்னிடம் வந்து சேர்தலைக் குறித்துக் கூறுதலும்; அவை போன்ற பிற கூற்றுக்களும் சேர்த்து, மூன்று காலத்துடனும் ஒருங்கு தோற்றுவித்துத், தோழியிடத்தும், கண்டோரிடத்தும், தலைவி தலைவனுடன் உடன்போக்குப் போகியவிடத்துப் பெற்ற தாய் வருந்துதலும்; ஆகிய கூற்றுக்கள் அவ்விடத்து உண்டு.

## பிரிவினிடத்துச் செவிலியின் கடமை

ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லுந் தாயரும் உளரே. 986

பாதுகாவலான பெரிய ஊரிடத்துச் சேரியிடத்தும், ஊரினின்றும் நீங்கிய பாலை (வெட்டவெளி) யிடத்தும், செவிலித் தாயானவள், தனியாகத் தலைவியைத் தேடிச்செல்லுதலும் உண்டு என்பதாம்.

(எ-டு) "செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்தாள்
மையணற் காளையொடு பைய இயலிப்
பாவை அன்னஎன் ஆய்தொடி மடந்தை
சென்றனள் என்றிர் ஐய
ஒன்றின வோஅவள் அஞ்சிலம் படியே." (ஐங்-389,

என வருமாறு காண்க.

## பாலைக்கு உரியதோர் இயல்பு

அயலோர் ஆயினும் அகற்சி மேற்றே. 987

சேரியிடத்தும், சுரத்திடத்தும் பிரிந்து போதலேயன்றித் தன் வீட்டினின்றும் அயல்வீட்டுக்குச் சென்றாலும் அதுவும் பிரிவென்றே கொள்ளப்படும்.

## பிரிவினிடத்துத் தோழிக்குச் சொல் நிகழும் இடம்

தலைவரும் விழும நிலையெடுத் துரைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்
நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்
வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைபெயர்த்துக் கொளினும்
நோய்மிகப் பெருகித்தன் னெஞ்சு கலுழ்ந்தோளை

வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு
என்றிவை எல்லாம் இயல்புற நாடின்
ஒன்றித் தோன்றும் தோழி மேன. 988

*தலைவன் தலைவியை விட்டுப் பிரியுமிடத்துத் தலைவிக்குப் பின்வரும் வருத்தத்தை எடுத்துக்கூறுதலும்; தலைவியையும் அழைத்துக் கொண்டு போவாயாக என்று தலைவனிடத்துக் கூறுதலும்; தலைவியைத் தலைவனுடன் அனுப்பிக் கூறுதலும்; தலைமகள் தங்கள் சுற்றத்தைவிட்டு நீங்குவதால் தனக்கு நேரும் நோயிடத்துங் கூறுதலும்; உண்மைக்கும், பொய்யிற்கும் இடமான தலைவனைக் குறித்தும், தலைவியின் தாயினுடைய நிலைமையினை அறிந்தும், தலைவியை அனுப்பாது மீண்டு இருக்கச் செய்யுமிடத்தும்; தலைவனின் பிரிவைப் பொறுக்க லாற்றாது வருந்திய தலைவியை, வருந்தாது இருப்பாயாகவென்று தலைவன் கூறிய சொற்களைக்கூறி வற்புறுத்துமிடத்தும்; ஆகிய இவையெல்லாம் தோழிக்குரிய கூற்று நிகழும் இடங்களாகும்.*

*கண்டோர் கூற்று நிகழும் இடம்*

பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்
ஊரது சார்பும் செல்லுந் தேயமும்
ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்தெதிர் கூறி விடுப்பினும் ஆங்கத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்
சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்டது என்ப. 989

*நேரமும் (பொழுதும்) வழியும் அச்சந்தரத்தக்கது என்று, அவற்றினது குற்றத்தைக் கூறுதலும்; எங்கள் ஊர் மிகவும் அண்மையில் உள்ளது என்றும், நீங்கள் செல்லும் தேசம் மிகவும் தூரத்தில் உள்ளது என்றும், அன்புள்ளத்தோடு கூறியவிடத்தும்; சேர்ந்துவரும் தலைமக்களைக் கண்டு, அன்பினால் இரங்கிக் கூறி அனுப்புதலும்; தேடிவரும் செவிலியைக் கண்டு, நல்வழியே சென்றனர் நீ போகவேண்டாம் என்று தடுத்துக் கூறலும்; தடுக்காது சென்றாரின் நிலையை உணர்த்தி அனுப்புதலும்; தூரத்தில் போய்க்கொண்டிருக்கும் தலைமக்களைப் பற்றிக் கூறுதலும்; திரும்பிவருகின்ற பொழுது கூறுதலும் ஆகிய இவை எல்லாம், கண்டோர் சொல் நிகழும் இடங்கள்.*

*பிரிவினிடத்துத் தலைமகனுக்கு சொல் நிகழும் இடம்*

ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும்
ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும்
இடைச்சுர மருங்கில் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்தலில் கலங்கஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட
அப்பாற் பட்ட ஒருதிறத் தானும்—

*தலைவன், தான் விரும்புமாறு தலைவியை மணஞ்செய்து கொடுக்க உடன்படாத தலைவியின் பெற்றோர்களிடத்தும்; பிரிவிற்குரிய காலம் ஒவ்வாதவிடத்தும்; தலைவியை உடன் கொண்டுசெல்லும் பொழுது பாலையாகிய வழியிடத்தும்; தலைமகளுக்குப் பொருந்துமாறு சொற்களைச் சொல்லி உடன் அழைத்துப் போகுமிடத்தும்; அல்லது தலைவியை விட்டுப் போகும் பொழுதும்; தலைவனும் தலைவியும் உடன்போக்குப் போய்க் கொண்டிருக்கும்பொழுது தலைமகளின் பெற்றோர்கள் வந்து தலைமகளை மீட்டுக்கொண்டு செல்வுழி வருத்தம் உறுகின்ற இயைபுடன் கூறிய அலர் நிகழ்வுழியும், தலைமகன் கூறுவான்.*

நாளது சின்மையும் இளமையது அருமையும்
தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும்
இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும்
அன்பினது அகலமும் அகற்சியது அருமையும்
ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்...

*யாக்கை அழியக்கூடியது என்னும் கருத்தை விடத்தும்; பெறுதற்கரிய இளமை நிலையானதல்ல கருத்தை உணராதவிடத்தும்; முயற்சியால் வருகின்ற பத்தை எண்ணிப் பாராதவிடத்தும்; பொருள்மேல் பேராசை கூடாது என்னும் கருத்தை நினையாதவிடத்தும்; இல்லாமை யான் ஏற்படுகின்ற இழிவினை எண்ணிப்பாராத விடத்தும்; பொருளுடையார்க்கு வேண்டிய அமைவு இல்லாதவிடத்தும்; சிறந்தாரிடத்து அன்பு செலுத்தாவிடத்தும்; பிரிவின் அருமையை நினையாவிடத்தும்; தலைமகன் மாட்டுக் (மேலனவாய்) கூற்று நிகழும்.*

வாயினும் கையினும் வகுத்த பக்கமொடு
ஊதியம் கருதிய ஒருதிறத் தானும்
புகழும் மானமும் எடுத்துவற் புறுத்தலும்
தூதுஇடை யிட்ட வகையி னானும
ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்
மூன்றன் பகுதியும் மண்டிலத்து அருமையும்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும

பாசறைப் புலம்பலும் முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்
காவற் பாங்கின் ஆங்கோர் பக்கமும்
பரத்தையின் அகற்சியிற் பிரிந்தோள் குறுகி
இரத்தலும் தெளித்தலும் எனஇரு வகையோடு
உரைத்திற நாட்டம் கிழவோன் மேன. 990

*ஓதற் (கல்வி பயிறல்) பிரிவிடத்தும்; படைக்கலம் பயிறல் சிற்பங் கற்றல் முதலியவிடத்தும்; அறக்காவல் காரணமாகப் பிரியுமிடத்தும்; பிரிவால் வரும் புகழும், பிரியாமையான் வரும் குற்றமும் கூறித் தலைமகளைத் தான் வரும்வரையிலும் ஆற்றியிருக்குமாறு கூறுகின்றவிடத்தும்; முரண்பட்ட அரசர் இருவரையும் பகைநீக்கி உறவுவளர்த்தற் பொருட்டுத் தூதாகச் செல்லுமிடத்தும்; தனக்கு வேண்டிய அரசர்களுக்கு உதவியாகச் செல்லும் பிரிவிடத்தும்; தன்வலி, வினைவலி, துணைவலி ஆகிய மூன்றையும் ஆராயுமிடத்தும்; பகைவர் தம்மை வளைத்துக் கொண்ட அரிய விடத்தும்; மிகுதியை உடைய பகைவரது உட்கையை [illegible]மிடத்தும்; பாசறையிடத்துத் தலைமகன் தனிமையாகக் கூறுமிடத்தும்; [illegible]கொண்ட வினைமுடிந்த [illegible] பாகனிடம் விருப்பம் பொருந்திய வினையின் திறப் வகையைக் கூறுமிடத்தும்; கொடிய விலங்குகளை*

[illegible]

*[illegible] தலைமகன் பாட்டு (மேலனவாய்) கூற்று நிகழும்.*

*(எ-டு) "பொய்யெல்லாம் ஏற்றித் தவறு தலைப்பெய்து கையொடு கண்டாய் பிழைத்தேன் அருள்இனி"*

*என [illegible] கூறுதல் காண்க; பிறவும் வந்துழிக்காண்க.*

*எஞ்சியோர் கூற்று*

எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே. 991

*இதுவரையிலும் நற்றாய், செவிலி, கண்டோர், தோழி, தலைமகன் ஆகியோர் கூற்று நிகழுமிடம் கூறினார். கூறுதொழிந்த தலைவி, பாங்கன், பார்ப்பார், பாணர், கூத்தர், உழையோர் முதலியோரின் கூற்று நிகழும் இடங்களை, இந்நூற்பாவால் அடக்கிக் காண்க என்பதாம்.*

*தலைமகள் கூற்று நிகழும் இடம்:—தலைமகன் பிரிய விரும்பும் தலைமகனின் எண்ணம் அறிந்து கூறுதலும்; பிரிவைத் தெளிவாக அறிந்து கூறுதலும்; பிரியப்போகிறான் என்பதை உணர்த்திய*

தோழியிடத்துக் கூறுதலும்; தானும் தலைவனுடன் போக வேண்டுமென்று கூறுதலும்; போகும் இடைவழியில் தன் தோழிகளுக்குச் சொல்லியனுப்புமிடத்தும்; தன்னை மீட்டற்குத் தன் உறவினர்கள் வந்தவிடத்துக் கூறுதலும்; சென்று திரும்பிவருங்கால் தோழியர்களுக்குக் கூறுமாறு சொல்லுமிடத்தும்; பிரிவினைப் பொறாதவிடத்தும்; ஆற்றேன் என்று கூறுமிடத்தும்; தெய்வத்தை வழிபடுங்காலத்தும்; பருவம் உணர்ந்த வழிக் கூறுதலும்; பிரிவின்கண் வற்புறுத்தித் தெளிவிக்கும் தோழியின் சொல்லுக்கு உடன்படாது உளமழிந்து கூறுதலும் முதலாயின.

## நிகழ்ந்தது நினைத்தல்

நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும். 992

முன்பு தலைவனிடத்து நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி, பின்பு தலைவி நினைத்தற்கும்; முன்பு தலைவியினிடத்து நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி பின்பு தலைவன் நினைத்தற்கும் நிமித்தமாம். (எ-டு) 'அறியாய் வாழி தோழி யிருளற' (அகம்-53) என்பது தலைவன் தான் நிகழ்ந்தது நினைந்து தோழிக்குக் கூறியது; பிறவும் வரும்வழிக் காண்க.

## நிகழ்ந்தது கூறி நிலைத்தல்

நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே. 993

முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றனைக் கூறிப், போகாது ஒழிதலும் (இருத்தலும்) பாலைத்திணையாம்.

## பொருள் விரவி வருதல்

மரபுநிலை திரியா மாட்சிய ஆகி
விரவும் பொருளும் விரவும் என்ப. 994

தொன்மையாக வழங்கிவருகின்ற, மாறுபடாத மாட்சிமையுடையவாகிய விரவுவதற்குரிய பொருள்கள், விரவிவரப் பெறும் என்பதாம். அஃதாவது பாலைத்திணைக்குரிய பாசறைப் புலம்பல், வினைமுடிந்தவிடத்துத் தேர்ப்பாகர்க்குக் கார்ப்பருவங்கண்டு கூறல் முதலிய முல்லைக்குரிய முதற் பொருளும் கருப்பொருளும் விரவுதலாம்.

## உள்ளுறையும் உவமமும்

உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்
தள்ளாது ஆகும் திணையுணர் வகையே. 995

உள்ளுறை உவமம், ஏனைய உவமம் என்னும் இரண்டானும் மையை உணரலாம்; அதனினால் உணரும் வகை தப்பாதாகும்.

### உள்ளுறை

உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலம்எனக்
கொள்ளும் என்ப குறிஅறிந் தோரே. 996

உள்ளுறைப் பொருளாவது, கருப்பொருளில் ஒன்றாகிய தெய்வம் நீங்கலாக, ஏனைய பொருளை இடமாகக் கொண்டு வருமென்று சொல்லுவர், இலக்கணம் வல்லார்.

### உள்ளுறை உவமம்

உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம். 997

உள்ளடக்கிக் கூறப்பட்ட கருப்பொருளை, கூறிய பொருள் இதனோடு ஒன்றுபட்டு ஒத்து முடிக என்று உள்ளடக்கிக் கூறுவதே உள்ளுறை உவமமாம். ஏனையே, வினை, பயன், மெய், உரு என்பவற்றின் அடிப்படையில் உவமைபோலல்லாமல், பொருளால் உவமைகொண்டு உணர்த்துவது இது என்க.

(எ-டு) "வெறிகொள் இனச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடுதேன் வேட்டுங் குறுகும்-நிறைமதிசேர்ந்து
உண்டாடுந் தன்முகத்தே செவ்வி உடையதோர்.
வண்டாமரை பிரிந்த வண்டு.

இதனுள், வண்டுபோல்வர் ஆடவர் எனக் கூறுதலான், உவமிக்கப்படும் பொருள் தோன்றாமையின் உள்ளுறை உவமம்.

### ஏனை உவமம்

ஏனை உவமம் தானுணர் வகைத்தே. 998

உள்ளுறையொழிந்த உவமம், வண்ணம், வடிவு, பயன், தொழில் ஆகிய நான்கினுள் ஒன்றால் உவமிக்கப்படும் பொருளொடு பொருந்த வருவதாம். (எ-டு) 'பவளம்போலும் வாய்' என்பது, வண்ணம் பற்றி உவமையாக வந்து பொருளினது தன்மையைக் காட்டிற்று; பிறவும் வரும்வழிக்காண்க

### கைக்கிளை இலக்கணம்

காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தான்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொலஎதிர் பெருஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே. 999

காம உணர்ச்சி தோன்றாத இளையவளிடத்துப் பாதுகாவல் இல்லாப் பாங்கியைப் பற்றிப், புகழ்தலும் பழித்தலும் ஆகிய இருதிறத்தினாலும், தனக்கும் அவளுக்கும் ஒப்புமையுடையன வற்றைச் சேர்த்து, அவளிடமிருந்து சொற்கேளாமல் தானே சொல்லி இன்பமடைதல், பொருந்தித்தோன்றும் கைக்கிளைக் குறிப்பு ஆகும்.

## பெருந்திணை இலக்கணம்

ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே. 1000

தலைமகனுக்கே உரிய மடலேறுதலும், இளமை நீங்க முதுமையுற்ற காலத்தும் ஆசை தவிராராய்த் தம்முள் கூடி இன்பம் துய்த்தலும், தெளிவித்தற்கரிய நிலையில் காமத்தின்கண் மிகுதிப்பட்டு நிற்றலும், ஐந்திணையாகிய ஒத்த காமத்தின் மாறுபட்டு வரும் நிகழ்ச்சியும், பெருந்திணை எனப்படும்.

## முன்னைய நான்கும்

முன்னைய நான்கும் முன்னதற்கு என்ப. 1001

மேற்கூறிய, ஏறிய மடற்றிறம் முதலிய நான்கிற்கும் முந்திய பயான, ஏறாமடற்றிறம், இளமை தீராத்திறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறுகாத்திறம் ஆகிய நான்கும், பெருந்திணைக்கு முன்னால்கூறிய, கைக்கிளைக்கு உரியவாம்.

ஏறாமடற்றிறம் என்பது வெளிப்படையாக இரந்து நிற்றல். இளமை தீராத் திறமாவது தலைவியின் அழகினைச் சிறப்பித்துக் கூறுதல். தேறுதலொழிந்த காமத்து மிகாத் திறமாவது பொருந்தாவிடத்து இரங்கி நிற்றல். மிக்க காமத்தின் மாறுகாத் திறமாவது, தன்னுடைய எல்லைகடந்த விருப்பினைக் கூறுதல்.

## அகப்பொருள் கூறற்குப் பாவகை

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர். 1002

நாடக வழக்கிடத்தும், உலகியல் வழக்கிடத்தும் உள்ள அகப்பொருள் கருத்துக்களாகிய கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதியாக அமைத்துக் கூறுபவைகளைக், கலி,

*பரிபாடல் என்னும் இரண்டு பாவாலும் கூறுதல் சிறப்புடைத்து என்று சொல்லுவர் புலவர்.*

*சுட்டி உரையார்*

மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர். 1003

*மக்களின் அகவொழுக்கத்தை வரையறுத்து உணர்த்தும் அகப்பொருள் விளக்கம், ஐந்திணையிடத்தும் கூறப்படும் புணர்தல் முதலிய ஒழுக்கத்தில் தலைப்பட்டாரைப் பொதுப் பெயரான் கூறுதலன்றிச், சிறப்பாக ஒருவர் பெயரையும் அமைத்துக் கூறுதல் என்பது கிடையாது.*

*[illegible]வர்*

புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே. 1004

*ஒருவரின் பெயரைச் சுட்டிக்கூறுதல் புறத்திணை இடத்து வரப்பெறும்; அகத்திணையிடத்து யாண்டும் வரப்பெறாது என்பதாம்.*

# ௨. புறத்திணை இயல்

[புறப்பொருள் இலக்கணம் உணர்த்துவது]

*வெட்சிக்கு இடமும் துறையும்*

அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே. 1005

*அகத்திணை இலக்கணத்தைத் தெளிவாக உணர்ந்தோர், புறத்திணை இலக்கணத்தைத் திறம்பட உணர்த்துங்கால், 'வெட்சி' என்னும் புறத்திணை குறிஞ்சி என்னும் அகத்திணைப் புறனாக அமையும்; அஃது பகைவர்கள் அஞ்சுமாறு தோன்றும் பதினான்கு துறைகளை உடையது என்பர்.*

*வெட்சித்திணை யாது ?*

வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும். 1006

*வெட்சித்திணை என்பது, பகையரசர்கள் (மக்களுக்குப் பகையாவார்) மீது படையெடுத்துச் செல்லுதற்கு முன்னாலேயே, அரசனின் ஆணைப்படி, அந்நாட்டுப் பசுக்கூட்டங்களை வீரர்கள் சென்று, அவர்கள் அறியாதபடி ஓட்டிக்கொண்டு வந்து பாதுகாத்தல் என்பதாம்.*

*வெட்சித்திணைக்கு உரிய ப[illegible] துறைகள்*

படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
ஒற்றின் ஆகிய வேயே வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்துஇறை முற்றிய
ஊர்கொலை ஆகோள் பூசல் மாற்றே
நோயின்று உய்த்தல் நுவல்வழித் தோற்றம்
தந்துநிறை பாதீடு உண்டாட்டுக் கொடையென
வந்த ஈரேழ் வகையிற்று ஆகும். 1007

*பசுக்கூட்டங்களைக் கவர்தலுக்கு எழுகின்ற படையின் பேரொலி; செல்லுங்கால் வெற்றியை விரும்பிப் பக்கத்து நிகழ்*

கின்ற நற்சொல்லைக் கேட்டல்; பக்கத்துள்ளார்கள் அறியா வண்ணம் செல்லுதல்; பகை வேந்தர்கள் அறியாதபடி ஒற்றர்களால் அறிந்துகொள்ளுதல்; அறிந்து கொண்டபின் பகை வேந்தரின் பக்கத்திடத்துச் சென்று தங்குதல்; தங்கிய பின்னர் பக்கத்து ஊர்களை அழித்தல்; பசுக்கூட்டங்களைக் கவர்தல்; கவர்ந்து வருங்கால் வந்து எதிர்ப்போருடன் போரிட்டு வென்று மீளுதல்; பசுக்கூட்டங்களை வருந்தாது மெதுவாக ஓட்டி வருதல்; வீரர்களின் உறவினர்கள் கவலையுடன் நின்றவிடத்து வந்துசேர்தல்; பசுக் கூட்டங்களைத் தம் ஊரிடத்துக் கொண்டு வந்து அடைத்தல்; பிறகு எல்லோரும் அப் பசுக்களைப் பங்கிட்டுக் கொள்ளுதல்; வெற்றியின் மகிழ்வால் மது அருந்தி இருத்தல்; பசுவினை இரந்து நிற்பார்க்குக் கொடையாகக் கொடுத்தல் ஆகியனவாம்.

மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே. 1008

மறக்குடியின் பழைமையாகும் தூய்மையது பெருமையைக் கூறுதலும்; சிறப்புப் பொருந்திய வீரமகளின் தன்மையை எடுத்துக் கூறுதலும்; ஆகிய இவையும் குறிஞ்சிக்குப் புறனாகிய வெட்சித்திணையாம்.

## கரந்தைத் திணைக்கு உரிய துறைகள்

வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட்டு அயர்ந்த காந்தளும் உறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
போந்தை வேம்பே ஆரென வருஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவர் ஏத்திய
ஓடாக் கழல்நிலை உளப்பட ஓடா
உடல்வேந்து அடுக்கிய உன்ன நிலையும்
மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்
ஆரமர் ஓட்டலும் ஆபெயர்த்துத் தருதலும்
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்து உரைத்தலும்
தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்
மனைக்குரி மரபினது கரந்தை அன்றியும்
வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்று
இருவகைப் பட்ட பிள்ளை நிலையும்
வாள்மலைந்து எழுந்தோனை மகிழ்ந்துபறை தூங்க
நாடவற்கு அருளிய பிள்ளை யாட்டும்
காட்சி கல்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்த மரபில் பெரும்படை வாழ்த்தலென்று

இருமூன்று மரபிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட எழுமூன்று துறைத்தே. 1009

கடவுளுக்குச் செய்யும் கடமைகளை அறியும் சிறப்பினையும் உயிர்க்கொலை செய்யுமாறு கூறுகின்ற கொடிய வாயினையும் உடைய வேலன், காந்தள் மாலையணிந்து, தெய்வமேறி ஆடுகின்ற காந்தளும்; மிக்க பகையினையுடைய அரசன், பகைவர்களுக்கும் தன் படைக்கும் வேறுபாடு காணவேண்டி அடையாளமாக அணிந்த, உயர்ந்த புகழையுடைய பனம் பூ, வேப்பம் பூ, ஆத்திப் பூ ஆகியவும்; வாடுகின்ற கொடியல்லாத வள்ளி யென்னும் கூத்தும்; வீரர்களால் புகழப்பட்ட கெடாத வீரக்கழல் நிலையும்; புறங்காட்டி ஓடாது எதிரூன்றி நிற்கும் பகைமன்னனது எண்ணத்தை உன்னமரத்தோடு பொருத்திக் காண்கின்ற உன்ன நிலையும்; திருமாலுடைய காத்தற் புகழையும், ஏனோர்க்கும் உரியவாகப் பொருந்திய பெரிய தலைமையிற் குறைபாத படைத்தல் அழித்தல் என்னும் புகழையும், அரசர் தொழிலுக்கு உவமையாகக் கூறப்படும் பூவை நிலையும்; அரிய போரின்கண் பகைவரைப் புறங்காட்டி ஓடச் செய்தலும்; வெட்சியார் கவர்ந்துசென்ற பசுக்கூட்டங்களை மீட்டலும்; சிறப்புப் பொருந்திய அரசனது மேம்பாட்டை எடுத்துக் கூறுதலும்; தன்னிடத்துள்ள போர்த்தொழிலின் முயற்சியாலே வஞ்சின மொழிகளைத் தன்னுடன் கூட்டிக் கூறுதலும்; தன்மேல் வருகின்ற கொடிப்படையை எதிர்த்து நிற்றல், தன்னுடைய வாள்வன்மையால் பகைவரையும் வீழ்த்தித் தானும் வீழ்ந்து படுவது, ஆகிய இரண்டு பாகுபாடுடைய போரில், மறவர்கள் தாமே செய்யும் அஞ்சாமையும்; வாட்போரால் பகைவரை வென்று மேம்பட்ட அரசிளங்குமரனை அந்நாட்டு மக்கள் பாராட்டி, அவனுக்கு பறை முதலிய ஒலிக்கருவிகள் முழங்க அரசு கொடுத்து, அப் பிள்ளைப் பருவத்தோனைக் கொண்டாடிய ஆட்டமும்; போர்க்களத்து இறந்துபட்ட வீரர்களின் நினைவுக் குறியாகக் கல் நிறுத்தற் பொருட்டுக் கல்லைப் பார்த்தலும்; கண்ட கல்லை எடுத்துக் கொணர்தலும்; கொணர்ந்த கல்லை நீரினால் கழுவித் தூய்மைப்படுத்தலும்; பின்னர் அக் கல்லினை ஓரிடத்து நடுதலும்; நட்டபின் கோயிலாக எழுப்பி, அதில் அவன் பீடுகளைத் தீட்டி, அக்கல்லிற்குப் பெருஞ் சிறப்புக்களைச் செய்தலும்; பின்னர் நடப்பட்ட கல்லினைத் தெய்வமாக்கி வாழ்த்துதலும்; ஆகிய, இருபத்தொரு துறையும் கரந்தைத்திணைக்கு உரிய துறைகளாம்.

## வஞ்சித்திணை இலக்கணம்

வஞ்சி தானே முல்லையது புறனே
எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்

பட்டு அழிந்தவர்களைத், தாம் நேரில் சென்று பொருள் கொடுத்தும் விருவியப் தழுவிக் கொள்ளுதலும்; ஆகிய, மிகப் பெருஞ் சிறப்பினையுடையவாகிய துறைகள் பதின்மூன்றும் வஞ்சித் திணைக்கு உரியனவாம்.

## உழிஞைத் திணை

உழிஞைதானே மருதத்துப் புறனே
முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற்று ஆகும் என்ப. 1012

'உழிஞை' என்னும் புறத்திணை, மருதம் என்னும் அகத்திணைக்குப் புறமாகும். அது, முழுமையான தன்மையையுடைய பகைவரின் மதிலைக் கைப்பற்றுதலும், அழித்தலுமாகிய வழக்கினை இலக்கணமாக உடையது.

அதுவே தானும் இருநால் வகைத்தே 1013

அந்த உழிஞைத்திணைதான் எட்டுத் துறைகளை உடையது.

## உழிஞையின் துறைகள்

கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்
தொல்எயிற்று இவர்தலும் தோலது பெருக்கமும்
அகத்தோன் செல்வமும் அன்றி முரணிய
புறத்தோன் அணங்கிய பக்கமும் திறப்பட
ஒருதான் மண்டிய குறுமையும் உடன்றோர்
வருபகை பேணார் ஆரெயில் உளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே. 1014

தன்னை அரசனென்று ஏற்றுக்கொள்ளாதாரும் தன் ஆணைவழி நில்லாதாருமாகிய பகைவரது நாட்டைக் குறித்த வெற்றியும்; நினைத்தவற்றை முடித்துக்காட்டும் அரசனது மேன்மையும்; பகைவரது பழமையான மதிலின்மீது ஏறிப் பரந்து நிற்றலும்; அங்ஙனம் மதில்மேல் நின்றவுடன் பகைவரால் எறியப்படுகின்ற அம்பு முதலியவற்றைத் தடுத்தற்குரிய இடுகு, கேடயம் முதலிய படைக்கருவிகளின் மிகுதியும்; மதிலின் உட்புறத்தே உள்ள அரசனது செல்வமிகுதியும்; மதிலகத் திருப்பான் புறத்தே உள்ளவனைத் தன் செல்வமிகுதியானன்றிப் போர்த்தொழிலான் வருத்தியதைக் கூறலும்; மதிலின் உள்ளே இருப்பவன், தன் மதில் அழியத்தொடங்கியவிடத்துப் புறத்தே (வெளியே) உள்ளவனுடன் போர் செய்யும் சிறுமையும்; மதிலின் வெளியே உள்ளவன், உள்ளே உள்ளவன்மேல் வந்தவிடத்து, அவன், பகையினைப் பொருட்படுத்தாது, அகத்தோன்

இகழ்ந்திருத்தற்கு ஏதுவாகிய மதிலாகிய அரண் உளப்பட; உழிஞைத்திணைத் துறைகள் எட்டு வகையினவாம்.

குடையும் வாளும் நாள்கோள் அன்றி
மடையமை ஏணிமிசை மயக்கமுங் கடைசிச்
சுற்றமர் ஒழிய வென்றுகைக் கொண்டு
முற்றிய முதிர்வும் அன்றி முற்றிய
அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்
நீர்ச்செரு வீழ்நத பாசியும் அதாஅன்று
ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்
மதில்மிசைக் கிவர்ந்த மேலோர் பக்கமும்
இகல்மதிற் குடுமிகொண்ட மண்ணு மங்கலமும்
வென்ற வாளின் மண்ணொடு ஒன்றத
தொகைநிலை என்னுந் துறையொடு தொகைஇ
வகைநான் மூன்றே துறையென மொழிப. 1015

தம் நாட்டு மக்களைக் காத்தற்பொருட்டுக் குடையினை நன்னாளிலே புறப்படச் செய்தலன்றிப், பகைவரது கேட்டினைக் கருதி, வாளையும் நன்னாளிலே புறப்படச் செய்தலும்; மதிலின் மீது நன்கு பொருந்துமாறு அமைந்த ஏணியின்மீது ஏறி நின்று, மதிலின் அகத்தோனும் புறத்தோனும் போர் செய்தலும்; புறத்தோன் தன் படையைச் செலுத்திப் புறத்தில் போரின்றி, அகத்தோன் படையை வென்று புறமதிலைக் கைக்கொண்டு, உளமதிலையும் வளைத்த வினை முதிர்ச்சியும்; புறமதிலன்றி, உள் மதிலிடத்தும் புறத்தோனால் கைக்கொள்ளப்பட்ட அகத்தோன் வீழ்ப்பின மதிற்காவலும்; அகத்தோனால் காத்துநின்ற இடை மதிலைப், பின்னர், அம்மதிலின் புறத்திருந்தோன் விரும்பிக் கைக்கொண்ட புதுமையும்; மதிலைக்கொண்ட புறத்தோனும் மதிலைக்காத்த அகத்தோனும், அகழியின் இருகரை மதிலிலும் நின்றுகொண்டு, நீரின்கண் பாசிபோல் கிடங்கினிடத்துப் போரிட்ட பாசியும்; அவ்வகழியின் போரேயன்றி, ஊரின் நடுவே நடைபெறும் போரினை விரும்பிய பாசி மறனும்; ஊரின் நடுவண் அமைந்த மதிலும், புறத்தே அமைந்த மதிலு மன்றிக், கோயிலின் மதிலின்மேல் ஏறிநின்று, போர் செய்தற்குப் பரந்து சென்றோன் கூறுபாடும்; அங்ஙனம் போரிட்ட மதி லிடத்து, ஒருவனை ஒருவன் கொன்று, அவன் முடிக்கலம் முதலியன கொண்டு, இறந்துபட்டவன் பெயராலேயே முடி புனைந்து நீராடும் மங்கலமும்; இருபெரு வேந்தருள்ளும், வென்றவன் வாளினை வெற்றத் திருவின்மேல் நிறுத்தி நீராட்டு தலும்; வாளுக்கு நீராட்டிய பின்னர், வென்றவன் படைகட் கெல்லாம் சிறப்புச் செய்தற்பொருட்டு, ஒருங்கு வருகெனத்

தொகுத்தல் என்னும் துறையுடன்; உழிஞை பன்னிரண்டு துறைகளாம் என்று கூறுவர் புலவர்கள்.

## தும்பைத் திணை

தும்பை தானே நெய்தலது புறனே
மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்கும் சிறப்பிற்று என்ப. 1016

தும்பை என்னும் புறத்திணை, நெய்தல் என்னும் அகத்திணைக்குப் புறனாகும். அது, தன்னுடைய வலிமையே பொருளாகக் கொண்டு வந்த அரசனை எதிர்த்து, அவனுடைய வலியினை அழித்த சிறப்பினையுடையது.

கணையும் வேலும் துணையுற மொய்த்தலிற்
சென்ற உயிரின் நின்ற யாக்கை
இருநிலந் தீண்டா அருநிலை வகையோடு
இருபாற் பட்ட ஒருசிறப் பின்றே. 1017

பகைவரால் எறியப்பட்ட அம்பும் வேலும் ஒன்றன்மேல் ஒன்றாக வந்து பாய்ந்ததால் உயிர்போகிய மறவனின் உடலானது, தனது மறப்பண்பினால் பூமியின்கண் வீழ்ந்துபடாது, அட்டையானது (சீரவாழ் சாதி) தனது உடல் இரண்டு கூறுபட்டவிடத்தும் இயங்குமாறு போல நின்றுகொண்டு ஆடியது என்னும் சிறப்புப் பொருந்திய, ஒப்பற்ற இலக்கணத்தையுடையதும் தும்பைத் திணையாகும்.

## தும்பைத் திணையின் துறைகள்

தானை யானை குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும்
வேல்மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன்
தான்மீண்டு எறிந்த தார்நிலை அன்றியும்
இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்
ஒருவன் ஒருவனை உடைபடை புக்குக்
கூழை தாங்கிய பெருமையும் படையறுத்துப்
பாழி கொள்ளும் ஏமத் தானும்
களிறெறிந்து எதிர்ந்தோர் பாடுங் களிற்றொடு
பட்ட வேந்தனை அட்ட வேந்தன்
வாளோர் ஆடும் அமலையும் வாள்வாய்த்து
இருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமும்
ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக் கண்ணும்
செருவகத்து இறைவன் வீழ்வுறச் சினைஇ
ஒருவனை மண்டிய நல்லிசை நிலையும்

> பல்படை ஒருவற்கு உடைதலின் மற்றவன்
> ஒள்வாள் வீசிய நூழிலும் உளப்படப்
> புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே. 1018

பகைவர் அஞ்சும்படியாக, காலாட்படை யானைப்படை குதிரைப்படை என்னும் முப்படையின் நிலைமையும்; வெற்றிப் போரில் மிக்குநின்ற மன்னனைப், பகைவர் பலர் வளைத்துக் கொண்ட விடத்து, அரசர்க்குத் துணையாவான் ஒருவன் விரைந்து சென்று பகைவர்மீது வேல்களை வீசியெறிந்த தார் (முதற்) படையாளனின் நிலையும்; இருபக்கத்துத் தலைவர்களும் தம்முள் போரிட்டு இறந்து படுதலும்; சிதறுண்ட படையில் உள்ளான் ஒருவன், தன் பகைப் படைஞர்களின் முன்னர்த் தான் ஒருவனேயாக நின்று எதிர்த்த நிலைமையும்; கையிலுள்ள படைக்கருவிகள் நீங்கவிட்டு, மெய்யினாலேயே போர் செய்து வெற்றியடைதலும்; பாலையின்மீது வருகின்ற பகைவனை எதிர்த்து, [illegible] கொன்று, அவனுடன் போரிட்டு [illegible]; அவ்வாறாம் களிற்றுடன் [illegible] அரசனுடைய மறவர்கள் [illegible] ஆடுகின்ற ஆட்டமும்; வா[illegible] வேந்தர் உள்ளிட்ட படைஞர்கள் யாவரும் [illegible] கொண்ட நிலையும்; போரிடைத் தன் தலைவன் பகைவரின் வஞ்சகத்தால் கொல்லப்பட்டான் என்று நினைந்து, போரிட்டுப், புகழ்பெற்ற நிலைமையும்; வஞ்சகத்தால் கொல்லப்பட்ட [illegible] தன் [illegible] மறவன், [illegible] வீசிய நூழிலும்; ஆகிய, பன்[illegible] உடையது தும்பைத் திணையாகும்.

## வாகைத் திணை

> வாகை தானே பாலையது புறனே
> தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
> பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப. 1019

வாகை என்னும் புறத்திணை, பாலை என்னும் அகத்திணைக்குப் புறனாகும். அது, குற்றமற்ற கொள்கையை உடைய தத்தம் கூறுபாடுகளை (இயல்பை), மற்றவரினும் வேறுபாடு உண்டாகுமாறு மிகுதிப்படுத்தல் என்று சொல்லுவர் புலவர்.

## வாகையின் பாகுபாடுகள்

> அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
> ஐவகை மரபின் அரசர் பக்கமும்
> இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
> மறுவில் செய்தி மூவகைக் காலமும்

நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்
நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்
பாலறி மரபின் பொருநர் கண்ணும்
அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையில்
தொகைநிலை பெற்றது என்மனார் புலவர் 1020

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறு திறனுடைய அந்தணர் பக்கமும்; ஓதலும், வேட்டலும், படை வழங்குதலும், குடிகாத்தலும் ஆகிய ஐவகைப் பண்புடைய அரசர் பக்கமும்; கற்றல், வேள்வி செய்தல், கொடுத்தல், உழவுத்தொழில் புரிதல், வாணிபம் செய்தல், நிரை (பசுக்கள்) வளர்த்துக் காத்தல் ஆகிய ஆறு பகுதியினையுடைய வணிகர் பக்கமும்; உழுதல், பிறதொழில்கள் செய்தல், விருந்தினரைப் பாதுகாத்தல், விலங்குகளை வளர்த்தல், வழிபடுதல், வேதம் நீங்கிய கல்வியைக் கற்றல் என்னும் ஆறு பகுதியினையுடைய வேளாளர் பக்கமும்; குறைவற்ற செயலையுடைய மழை, பனி, வெயில் முதலிய மூன்று காலத்தையும் திரிபின்றி உணரும் கணியன் பக்கமும்; நீரில் குளித்தல், தரையில் உறங்குதல், தோலை ஆடையாக உடுத்துக் கொள்ளுதல், சடை முடியை வளர்த்தல், தீயை வளர்த்தல், ஊர்ப்புறங்களுக்குச் செல்லாமை, காட்டு உணவினை உட்கோடல், கடவுளரையும் ஞானிகளையும் வணங்குதல் முதலிய எட்டு வகையினையுடைய தவமேற்கொண்டாரின் பக்கமும்; பாகுபாடு அறிந்த இலக்கணத்தினையுடைய பொருநர் (வாள் வென்றி தோள் வென்றி முதலியன) பக்கமும்; அவையன்றியும், அவை போன்ற சொற்போர், பாட்டுப் போட்டி, ஆடற்போட்டி, சூதாட்டப் போர் முதலியவற்றில் வெல்லுதலும்; ஆகிய, ஏழு வகையானும் மேம்படுதலாகிய தொகையை வாகைத்திணை உடையதென்று சொல்லுவர் புலவர்.

## வாகைத் திணையின் துறைகள்

கூதிர் வேனில் என்றிரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய வகையினும்
ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும் தேரோர்
வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்
ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும்
பெரும்பகை தாங்கும் வேலி னானும்
அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்
ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்துத்

தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்
ஒல்லார் இடவயிற் புல்லிய பாங்கினும்
பகட்டி னானும் ஆவி னானும்
துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்
கடிமனை நீத்த பாலின் கண்ணும்
எட்டுவகை நுதலிய அவையகத் தானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
பிழைத்தோர்த் தாங்கும் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகறசி யானும்
காமம் நீத்த பாலி னானுமென்று
இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே. 1021

கூதிர்ப்பாசறை வேனிற்பாசறை என்னும் இரண்டிடத்தும், போர்மேற் கொண்ட வேட்கையால் தங்கிப் போர்செய்த போர் நிலைமையும்; உழவர்கள் நெற்களத்திலே செய்யும் தொழில் [illegible] செய்து [illegible] செய்யுமாறு போல, அரசன் போர்க் களத்துப் பகைவரைக் கொன்று கைக்கொண்ட பொருள் [illegible]பரிசிலர்க்கு அளிக்கும் திறத்தினைப் புலவர்கள் களவழி யாகப் பாடுதலும்; தேர்ப்படை அரசனை வென்ற அரசனுடைய தேரின் முன்னர் ஆடுகின்ற குரவைக் கூத்தும்; பொருந்திய மரபுடன் தேரின் பின்னால் ஆடுகின்ற பின்தேர்க் குரவையும்; பெரிய படையினை எதிர்த்து நின்று வேலினைப் புகழும் இடமும்; பேரிடர்ப் படுத்த பெரிய படைக் கூட்டத்தினையும் எதிர்த்து நிற்கும் [illegible]; [illegible] [illegible]மையையுடைய வலிய ஆண்மையைப் போற்றும் பகுதியும்; பகைவர்கள் நாணுமாறு தன் தலைவனின் பொருட்டு, முன்பு சொன்ன உறுதிமொழியை மெய்ப்பித்தற் பொருட்டு, தொன்மைத்தாகிய தன் உயிரையே வழங்கிய அவிப்பலியும்; பகைவரின் இடத்தைப் பொருந்திய பகுதியும்; பகடு (எருது) புறந்தருகின்ற வேளாளரும், ஆ (பசு) வினைப் பாதுகாக்கும் வணிகரும் ஆகிய, குற்றம் தீர்ந்த சிறப்பினையுடைய சான்றோர் பகுதியும்; பிறன்மனை விரும்பாமை யாகிய பகுதியும்; குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, அழுக்காறுமை, அவாவின்மை ஆகிய எட்டுப் பாகுபாட்டினையுடைய அவை (அறமன்றம்) யகமும்; வரையறையுடன் அமைந்த ஒழுக்கத்தினையுடைய இல்லறத்தின் பகுதியும்; இடையீடுபடுதலின்றி மிக்க புகழினைத்தரும் கொடையும்; தன்னிடத்துப் பிழைசெய்தோரைப் பொறுத்தருளும் பாதுகாவலும்; மெய்ப்பொருளோடு பொருந்திய பகுதியும்; அருளுடனே பொருந்தின துறவும்; ஆசையை நீக்கிய பகுதியும் உளப்படப் பதினெட்டுத் துறைகளை உடையது வாகைத் திணை.

## காஞ்சித் திணை

காஞ்சி தானே பெருந்திணைப் புறனே
பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே. **1022**

காஞ்சி என்னும் புறத்திணை, பெருந்திணை என்னும் அகத்திணைக்குப் புறனாகும். அது, துணையாதற்கரிய சிறப்பினால், பலவாற்றானும் நிலையில்லாத உலகத்தைப் பொருந்திய நெறியையும் உடையது; அஃதாவது நிலையாமைப் பொருளது.

(எ-டு) அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழெனின் செல்வமொன்று
உண்டாக வைக்கற்பாற் றன்று. (நாலடி—செல்—க)

எனச் செல்வநிலையாமை வந்தது; பிறவுங் காண்க.

## காஞ்சித் திணையின் துறைகள்

மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்
கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
பண்புற வருஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியும் மறத்தி னானும்
ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோனைப்
பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்
இன்னனென்று இரங்கிய மன்னை யானும்
இன்னது பிழைப்பின் இதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்
இன்னகை மனைவி பேஎய் புண்ணோனைத்
துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்
நீத்த கணவன் தீர்த்த வேலின்
பெயர்த்த மனைவி வஞ்சி யானும்
நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பாடு அஞ்சிய மகட்பா லானும்
முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன்
தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
ஈரைந் தாகும் என்ப பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
மாய்ந்த பூசல் மயக்கத் தானும்
தாமே எய்திய தாங்கரும் பையுளும்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதானந் தானும்
நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையும்

கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்
காதலி இழந்த தபுதார நிலையும்
காதலன் இழந்த தாபத நிலையும்
நல்லோள் கணவனொடு நளியழல் புகீஇச்
சொல்லிடை இட்ட மாலை நிலையும்
அரும்பெருஞ் சிறப்பில் புதல்வன் பயந்த
தாய்தப வருஉம் தலைப்பெயல் நிலையும்
மலர்தலை உலகத்து மரபுநன்கு அறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பின் துறையிரண்டு உடைத்தே. 1023

*எவராலும் தடுத்தற்கரிய எமன் வருவான் என்று சொல்லப் பட்ட பெருங்காஞ்சி என்னும் துறையும்; அறிவுடையோர் அறிவில்லார்க்குக் கூறிய முதுகாஞ்சியும்; நற்குணம் பொருந்தி வருகின்ற பகுதியை நோக்கித் தன் மறப்பண்பினாலே புண்ணைக் கிழித்துக்கொண்டு இறந்துபடும் மறக்காஞ்சியும்; போர்க்களத்துப் பாறுகாக்குஞ் சுற்றம் இல்லாத புண்பட்ட மறவனைப் பேய்கள் காக்கின்ற பேய்க் காஞ்சியும்; 'இன்ன தன்மையை உடையான் இறந்து பட்டனன் கொல்' என்று உலகத்தார் இரங்கும் மன்னைக் காஞ்சியும்; இச் செயலைச் செய்யாது ஒழிவேனாயின், யான் இன்ன கேட்டினை அடையக் கடவேன்' என்று, கூறிய, ஒப்பிடற்கரிய சிறப்பினையுடைய வஞ்சினக் காஞ்சியும்;*

*இன்பமயக்கமுடைய நகை பொருந்திய மனைவி, புண்பட்டுக் கிடக்கும் தன் கணவனைப், பேய்கள் நெருங்காதவாறு காத்த தொடாக் காஞ்சியும்; தன் கணவன் உயிரைப் போக்கிய வேலாலேயே தன் உயிரையும் நீத்த வஞ்சிக்காஞ்சியும்; பெண் கொள்ளுவதற்குரிய தகுதியினால் ஒத்திருந்தும் மறுத்தலின், பகையாகும் வலிந்து பெண் கொண்டுவிடலாமென்று வந்த அரசனுக்கு, முதுகுடித் தலைவராகிய வணிகரும் வேளாளரும், தத்தம் மகளை மணம் செய்வித்தற்கு அஞ்சிய, மகட்பாற் காஞ்சியும்; தன்னை வாழ்க்கைத் துணையாகக் கொண்டோன் இறந்து பட்டவிடத்து, அவன் தலையொடு தன் முலைகளையும் முகத்தையும் சேர்த்து இறந்த நிலையும் கூட்டிப் பத்தாகும் என்பர் சிலர்,*

*பெரிய புகழினை நிலைநிறுத்தி இறந்துபட்டவனைச் சுற்றிக் கூடிய உறவினர்கள், அவன் இறந்துபட்டமைக்கு அழுத மயக்கமும்; சுற்றத்தார் வருந்தியதேயன்றி, மனைவியர், தாமே தத்தம் கணவரைக் கட்டிக்கொண்டு அழுதது கண்டோர், பொறுத்தற்கரிய வருத்தமும்; கணவனோடு இறந்துபட்ட மனைவியின் இறப்பைக் குறித்துக் கண்டோர் பிறர்க்குணர்த்திய முதானந்தமும் (ஒன்றுபட்ட அன்பினால் வந்த சாக்காடு);*

கொடுமைமிக்க பாலைநில வழியில் தன் கணவனை இழந்து, தமியளாய் நின்று வருந்திய முதுபாலையும்; இறந்தோரைக் குறித்து இனி இறக்குமவர் வருத்தமுற்றுப் புலம்பிய கையறு நிலையும்; மனைவியை இழந்த கணவனது தபுதார நிலையும்; காதலனை இழந்த மனைவி தவம் புரிந்து ஒழுகிய நிலையும்; கற்புடைய மனைவி, தன் கணவன் இறந்துபட்ட விடத்து, அவனோடு எரிபுக்கு மாய்தற்கு எரிமூட்டிய விடத்து, விலக்கிஞ ரோடு மாறுபட்டுக் கூறிய புறங்காட்டு நிலையும்; போரிடத்து விழுப்புண்படாது புறமுதுகிட்டதால் இறந்துபடுகின்ற, அரும் பெருஞ் சிறப்பினையுடைய மகனைப்பெற்ற தாய், அவனைத் தழுவிக்கொள்ளும் நிலையும்; இடமகன்ற உலகத்தின் நிலை யாமைப் பண்பு நன்கு விளங்குமாறு, தன்கண் தோன்றிய பலரும் இறந்துபடவும், தான் இறந்து படாது ஊரின் புறத்தவாகிய சுடுகாட்டை வாழ்த்துதலும் ஆகிய நிறையும், அருஞ் சிறப்பும் உடைய, ஆண்பற்றி வருவனவும் பெண் பற்றி வருவனவும் ஆகிய இரண்டு துறைகளை உடையது மாகும்.

## பாடாண் பகுதி

பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே. 1024

பாடாண்திணை என்னும் புறத்திணை, கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனாகும். அஃது, ஆராயுமிடத்துக் கடவுள் வாழ்த்து வகை; வாழ்த்தியல் வகை; மங்கல வகை; செவியறி வுறுத்தல்; ஆற்றுப்படை வகை; பரிசிற்றுறை வகை; கைக்கிளை வகை; வசை வகை என்னும் எட்டு வகையினை உடையதாம்.

## பாடாண் பாட்டிற்குரிய பொருண்மை

அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப. 1025

கடவுளிடத்து (தேவர்களிடத்து) முடியும் கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்பன வற்றினும்; குற்றந்தீர்ந்த காமத்தைப் பொருந்திய வகையினும்; அவையிற்றின் ஒரு கூற்றின் பாகுபாடு கடவுட் புகழ்ச்சியாய் வருதலேயன்றிப், பாட்டுடைத் தலைவனைச் சார்த்திப் பாடாண் திணையாதற்கும் பொருந்தும் என்று சொல்லுவர் புலவர்.

## சில பொருட்கண் வரும் வேறுபாடு

வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே. 1026

ஒரு தலைவன், தன்னைப் பிறர் வாழ்த்துதலும் புகழ்ந்துரைத்தலும் கருதிய பக்கத்திடத்தும்; அறம் பொருள் இன்பங்களின் கூறுபாடுதோன்ற, முன்னோர்கள் கூறிய குறிப்புப் பொருளிடத்தும்; செம்மையாகக் கூறும் துறைநிலை பெற்று வழங்குதல் இயலுமிடத்துக், கொடிநிலை முதலிய ஆறு வகையானும் கடவுளைப் பாடும் வாழ்த்தினையன்றி, உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களைப் பாடுதலும்; வரையறுத்து நீக்கப்படாதனவாம்.

(எ-டு) "பூந்தண்டார்ப் புலர்சாந்தில் தென்னவன் உயர்கூடல்
தேம்பாய அவிழ்நீலத் தலர்வென்ற அமருண்கண்
ஏந்துகோட் டெழில்யானை ஒன்னாதார்க் கவன்வேலில்
சேந்துநீ இனையையால் ஒத்ததோ சின்மொழி."
(கலி-குறி-21)

இது காமத்தின்கண் வந்தது; பிறவும் வரும்வழிக் காண்க.

## கடவுள்மாட்டு வரும் பாடாண்பக்கம்

காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர். 1027

கடவுளை விரும்பும் காமப்பகுதி, தெய்வ மகளிரிடத்தும் உண்டு; அதே போன்று, மானிடப் பெண்டிரிடத்தும் உண்டு என்று சொல்லுவர் புலவர்.

(எ-டு) "அரிகொண்ட கண்சிவப்ப அல்லினென் ஆகம்
புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி வரிவண்டு
பண்ணலங் கூட்டுண்ணும் பனிமலர்ப் பாசூர்என்
உண்ணலங் கூட்டுண்டா னூர (புறப்-பாடாண்-19)

இது மானிடப் பெண்டிர் விரும்பிய பகுதி; தெய்வப் பெண்டிர் நயந்த பக்கம் வருமிடத்துக் காணக.

## குழவிப் பருவத்தும் காமப்பகுதி

குழவி மருங்கினும் கிழவ தாகும். 1028

குழவிகளிடத்தும், காமப் பகுதி கூறப்படும் (அவர் விளையாட்டு மகளிருடன் கூடிய விடத்து). இம்முறைதான், பின்னர், இன்றுள்ள பிள்ளைத்தமிழாயிற்று என்பர்.

(எ-டு) "வரிப்பந்து கொண்டொளித்தாய் வாள்வேந்தன்
அரிக்கண்ணி அஞ்சி அலற—எரிக்கதிர்வேல் [மைந்தா
செங்கோலன் நுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினும்
எங்கோலம் தீண்டல் இனிது."
என வரும்.

## ஊரோடு தோற்றமும் உரித்து

ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
வழக்கொடு சிவணிய வகைமை யான. 1029

ஊரிடத்துக் காமப்பகுதி நிகழ்த்தலும் (உலாப்போதல்) உண்டு. அது நிகழுமிடத்து வழக்குடன் பொருந்தி நடக்கும் வகைமையையும் உடையது என்று சொல்லுவர் புலவர்.

## பாடாண்பாட்டிற்கு உரியதோர் மரபு

மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே. 1030

மேற்கூறப்பட்டனவும் இனிக் கூறப்படுவனவும், காரணப் பெயரானன்றி, இயற்பெயரின் பக்கத்து நெறிப்பட வைத்தனர்.

## சார்ந்துவரும் முறை

கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே. 1031

குற்றம் தீர்ந்த சிறப்பினையுடைய கொடிநிலை, கந்தழி, வள்ளி எனச் சொல்லப்படும் முற்பட்டவான மூன்றும், பாட்டுடைத் தலைவனைச் சார்ந்திவரும் காலத்துக், கடவுள் வாழ்த்தோடு பொருந்தி வரும்.

(எ-டு) சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்
சார்பெனநின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ
வாய்மொழியின் மெய்யான் மனத்தான் அறிவிறந்த
தூய்மையா மைதீர் சுடர்.

இது கந்தழி வாழ்த்து; பிறவும் காண்க.

## கொற்றவள்ளையும் பாடாண் ஆகும்

கொற்ற வள்ளை ஓரிடத் தான. 1032

கொற்றவள்ளையும், புகழ்தற் கருத்தாகுமிடத்துப் பாடாண் திணையாம்.

பாடாண்திணைக்குத் துறைகள்

கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
அடுத்தூர்ந் தேத்திய இயல்மொழி வாழ்த்தும்
சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானும்
கண்படை கண்ணிய கண்படை நிலையும்
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலை நோக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்தும் செவியறி வுறூவும்
ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்
கைக்கிளை வகையோடு உளப்படத் தொகைஇத்
தொக்க நான்கும் உளவென மொழிப. 1033

தனக்கு ஒன்றைக் கொடுத்தோரைப் புகழ்தலும் கொடுக்காதவரைப் பழித்தலும்; வெற்றியினாலும் குணச்சிறப்பினாலும் உயர்ந்து நிற்போரைப் புகழ்ந்து கூறும் இயல்மொழி வாழ்த்தும்; தூரத்திலிருந்து வருகின்ற வருத்தம் தீரும்பொருட்டு வாயிலைக் காத்து நிற்போர்க்கு உரைத்த வாயில் நிலையும்; அரசன் இனிதாகத் துயின்றது (உறங்குவது) கூறிய கண்படை நிலையும்; சிவந்தநிறப் பசுவினைக் கொடுக்கக் கருதிய கொடையினைக் கூறுதலும்; விளக்கு எரியும் திறத்திற்கேற்ப வேலின் வெற்றியைக் கூறுதலும்; கடுஞ்சொற்களை நீக்குதலின்றிப் பின்னால் விளையும் நன்மைகருதி வேப்பங்காயும் கடுக்காயும் தின்னுங்கால் கசப்பாய் இருப்பினும், உண்டபின்னர் நோய் நீக்கி இன்பம் தருமாறு போல, நன்மையுண்டாதற்கு பாதுகாவலான சொற்களாலே உண்மையைக் கூறுதலும்; பெரியோர் கண்டித்து அடங்கி நடக்கவேண்டுமென்று நன்னெறிகளை அறிவுறுத்துதலாகிய செவியறிவுறூவும்; 'அரசனிடத்தவாகி இனிது வாழ்வாயாக!' என்று வரும் புறநிலை வாழ்த்தும்; ஆண்பாற் கூற்றுக் கைக்கிளையும், பெண்பாற் கூற்றுக் கைக்கிளையும் ஆகிய, இவை நான்கும் உள்ளிட்ட யாவும், பாடாண் துறையாம்.

தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்
சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்

நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்
மாணார்ச் சுட்டிய வாள்மங் கலமும்
மன்எயில் அழித்த மண்ணுமங் கலமும்
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி
நடைவயின் தோன்றிய இருவகை விடையும்
அச்சமும் உவகையும் எச்சம் இன்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலங் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வருஉம் நடக்கையது குறிப்பின்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே. 1034

உறங்கியவர்க்குக் கேடில்லாத நற்புகழை உண்டாக்கற் பொருட்டுச் சூதர் என்பார், துயிலெழுப்பிய துயிலெடை நிலையும்; கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகிய நால்வரும் தாங்கள் வருகின்ற வழியிலே கண்ட தங்களை ஒத்தோரிடம், தாம் பெற்ற பெருஞ் செல்வம் போல அவருக்கும் கிடைத்தற் பொருட்டு, 'இன்ன வழியே சென்று இன்னானை அடைவீர்களாயின் எம்போன்று பெருஞ்செல்வம் பெறுவீர்' என்று, ஆற்றுப் படுத்துவதும் (இஃது ஆற்றுப் படை இலக்கணம்); நாள்தோறும் செய்துவந்த பகைத்திறம் வளர்க்கும் செயல்களை நீக்கி, அரசன் பிறந்தநாள் விழாக் கொண்டாடுதலும்; ஆண்டு தோறும் முடிபுனையுங்கால் நிகழும் புண்ணிய நீராட்டு விழாவும்; ஒழுக்கத்தை மிகுத்துப் புகழப்பட்ட வெண்கொற்றக் குடை நிழல் மரபினைக் கூறுதலும்; பகைவரைக் கருதிய வாள் மங்கல விழாவும்; பகைவருடைய நிலைபெற்ற வன்மையான மதிலை அழித்து முடிபுனைந்து நீராடும் விழாவும்; தன்பால் வந்த பரிசிலர்களை வினவி அவர்களுக்கு வேண்டும் சிறப்புச் செய்தலும்; பரிசில் பெற்றோர் தாம் பெற்ற பெரும் பொருள் குறித்து மிகுத்துச் சொல்லித், தாம் போகல் வேண்டும் என்று விடை கேட்டலும், அரசன் விடுப்பப் போதலுமாகிய இருவகை விடையும்; அச்சமும் உவகையும் ஒழிவும் இன்றி, நன்னாள் தீநாள், பறவை குறுக்கிடுதல் முதலிய சகுனங்களாலும், காலத்தைக் கருதிய பாதுகாவலும்; ஆகிய, இவை யாவும் அடங்கத், தோன்றும் வழக்கினது கருத்தினானே, காலம் மூன்றனோடும் பொருத்திக் காணுமாற்றான் வரும், இதுகாறும் கூறிவருகின்ற பாடாண்கிணை என்க. (எ-டு) கூத்தராற்றுப்படை வருவதனை,

'திருமழை தலைஇய' எனும் மலைபடுகடாம் பாட்டுள் காண்க. துயிலெடை நிலையினை,

> 'அளந்த திறையார் அகலிடத்து மன்னர்
> வளந்தரும் வேலோய் வணங்கக் — களந்தயங்கப்
> பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
> தாமலர்க்கண் ஏற்க துயில்'

எனும் வெண்பாவான் உணர்க. 'பாணன் சூடிய பசும்பொன் தாமரை' எனும் புறநானூற்றுச் (141) செய்யுளான் பாணாற்றுப் படை வருமாறும், 'சிலையுலாய் நிமிர்ந்த' எனும் புறச்செய்யுளால் (புறம் 391) பொருநராற்றுப் படை வருமாறும், 'மெல்லியல் விறலி' (புறம் 133) எனுஞ் செய்யுளால் விறலி யாற்றுப்படை வருமாறும் அறிக.

சிறந்த கீர்த்தி மன்னுமங்கலம் வருமாறு: 'அந்தணர் ஆவொடு' எனும் முத்தொள்ளாயிரச் செய்யுளானும், மாற்றார்ச் சுட்டிய வாள்மங்கலம், 'திங்களைப் போற்றுதும்' என வரும் சிலப்பதிகாரச் செய்யுளானும், மதில்வெயில் அழித்த மண்ணு மங்கலம், 'பிறர் வேல் போலாதாகி' எனும் (புறம் 332) செய்யுளானும், 'பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையினை' 'ஆடுநனி மறந்த' (புறம் 164) எனும் செய்யுளானும், வளன் ஏத்தியதனைத் 'தென்பரதவர் மிடல்சாய' (புறம் 378) எனும் செய்யுளானும் அறிந்து கொள்க.

தான் பிறர்க்கு வேண்டிக் கூறியதற்கு, 'ஊனும் ஊனும்' (புறம் 381) எனும் செய்யுளானும், அரசன் விடை கொடுப்பக் கூறியதற்கு, 'நின்நயந்து உறைநர்க்கும்' (புறம் 163) எனும் செய்யுளானும் காண்க.

'ஆடியல் அழற்குட்டத்து' (புறம் 229) எனும் செய்யுள் பிறவாறு நிமித்தம் கண்டு அஞ்சியதாகும். 'புதுப்புள் வரினும்' என வரும் (புறம் 20) செய்யுட்பகுதி புள்பற்றி வந்ததாம். 'காலனும் காலம் பார்க்கும்' (புறம் 41) என்றது நிமித்தம்பற்றி வந்தது. 'நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்' (புறம் 195) என்பது ஓம்படைபற்றி வந்தது. பிறவும் வருமாறு அறிக.

# 3. களவு இயல்

[களவு ஒழுக்கம் உணர்த்துவது]

## கந்தர்வ மணமும் களவுக் கூட்டமும்

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே. 1035

'இன்பம் பொருள் அறம்' என்று சொல்லப்பட்ட அன்புடன் சேர்ந்த (கைக்கிளை பெருந்திணை நீங்கிய) ஐந்து யிடத்தும் நிகழும் காமக்கூட்டத்தினை ஆராயுமிடத்து, மறையோரால் வரையறைசெய்யப்பட்ட எண்வகை மணத்துள், அமையும் ஆற்றன் அமைந்த யாழினையுடைய காந்திருவரது கூட்டத்தை ஒக்கும் எனலாம். மணம் எட்டாவன, பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன.

## எதிர்ப்படும் திறனும் காரணமும்

ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோ னாயினும் கடிவரை இன்றே. 1036

ஒருவனும் ஒருத்தியுமாக இல்லறம் நடத்துமிடத்து, அவ்விருவரையும் மறுபிறப்பிலும் கூட்டுவித்தலும் வேறாக்குதலு மாகிய இருவகை ஊழிடத்தும், இருவருள்ளமும் பிறப்புத் தோறும் ஒன்றுபட்டு நல்வினைக்கண்ணே நிகழ்ந்த ஊழினது ஆணையினால், பிறப்பு, முதலிய பத்துக் குணங்களினாலும் ஒன்றுபட்ட கிழவனும் கிழத்தியும் எதிர்ப்படுவர். ஒத்தலின்றித், தலைவன் அக் குணங்களால் மிக்கு விளங்கினாலும் அதனாற் குற்றமில்லை.

## ஐயம் நிகழும் இடம்

சிறந்துழி ஐயஞ் சிறந்த தென்ப
இழிந்துழி இழிவே சுட்ட லான. 1037

எதிர்ப்பட்ட கிழவன் கிழத்தி ஆகிய இருவருள்ளும், சிறந்த தலைவனுக்கு ஐயம் தோன்றுதல் சிறந்ததென்று சொல்லுவர் புலவர். அத் தலைவனிலும் குறைந்த தலைவிக்கு ஐயம் உண்டாகுமாயின், இன்பம் நிகழாது தடைப்படும் இழிபும் உண்டாகும்.

(எ-டு) "அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு."

இக் குறளுள், தலைமகனுக்கு ஐயம் நிகழ்ந்தது காண்க.

## ஐயுற்றோன் துணிதற்குக் கருவி

வண்டே இழையே வள்ளி பூவே
கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று
அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ
நின்றவை களையும் கருவி என்ப. 1038

வண்டு மொய்த்தலும், அணிகள் அணிந்திருத்தலும், உடலின்கண் கொடி (பசைக் குத்திக் கொள்ளுதல்) முதலியன எழுதியிருத்தலும், மாலை வாடியிருத்தலும், கண் பிறழுதலும், அசைவுடைமையும், கண் இமைத்தலும், ஆண் மக்களைக் கண்டு அஞ்சுதல் முதலியனவும், அவைபோன்ற பிறவாகிய கால் நிலம் தோய்தல் வியர்த்தல் நிழலாடுதல் முதலியனவும், ஐயத்தைப் போக்கித் துணிவினைக் கொடுக்கும் கருவிகளாம்.

## கண் நோக்கம்

நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும். 1039

தலைவன் தலைவி இருவருக்கும் துணியப்படாது நின்ற அறிவை ஒருப்படுத்தற் பொருட்டு, அவர்தம் அவாவோடு கூட்டிக் கூறும் காமக்குறிப்புச்சொல் இருவருடைய கண்களாலும் நிகழ்வதாம்

(எ-டு) 'பானலந் தண்கழிப் பாடறிந்து தன்ஐமார்
நூனல நுண்வலையாற் கொண்டெடுத்த
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் நோக்கம்
கடிபொல்லா என்னையே காப்பு,''

(திணைமாலை நூற்—32)

எனக், கண்ணினால் அறிந்தவாறு காண்க.

## கண்நோக்கம்—ஒரு புறனடை

குறிப்பே குறித்தது கொள்ளு மாயின்
ஆங்கவை நிகழும் என்மனார் புலவர். 1040

ஒருவருடைய குறிப்பு மற்றொருவர் குறித்த பொருளை அறிந்து கொள்ளுமாயின், அவ்விடத்துக் கண்ணினால் வரும் குறிப்புரை நிகழும் என்பர்.

(எ-டு) ''நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர்.'' (குறள், 1093)

எனவும்,

அசையியற்கு உண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும். (குறள். 1098,

எனவும் வரும்.

## தலைமகன் இலக்கணம்

பெருமையும் உரனும் ஆடூஉ மேன. 1041

பழிபாவங்களைக் கண்டு அஞ்சுதலும் (அஃதாவது குற்றந் தரும் செயல்களைச் செய்யாமை), அறிவுடையவனாக இருத்தலும் ஆண் மகனுக்குரிய இயல்பாகும். (எ-டு) 'வேயெனத் திரண்ட தோள்' எனும் கலி 57-வது செய்யுளும், 'உறுகழி மருங்கின்' எனும் அகம் 230-வது செய்யுளும் காண்க.

## தலைமகள் இலக்கணம்

அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப. 1042

அச்சம், நாண், பேதைமை ஆகிய இம்மூன்றும் எப்போதும் முதன்மைபெற்று நிற்றல் பெண்டிர்க்கு உரிய இலக்கணமாகும்.

## மெய்யுறு புணர்ச்சி நிகழும் காலம்

வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றிச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப. 1043

'அடையப் பெறவேண்டும்' என்னும் பேரவாவும்; இடைவிடாது நினைத்தலும்; தன் எண்ணம் கைகூடாது வருதலின் உண்ணாமையால் உடல் மெலிதலும்; தூங்காதிருத்தலும்; தன் எண்ணத்திற்கேற்பத் தானே கூறிக்கொள்ளுதலும்; நாணம் நீங்குதலும்; தான் காணும் பொருள் யாவற்றையும் முன்பு கண்டதொரு பொருளாகவே நினைத்தலும்; அதுவே நினைவாகப் பித்தாதலும்; அது காரணமாக மயக்கமுறுதலும்; கைகூடாதவிடத்து இறந்துபடுதலும்; ஆகிய இவை, சிறப்புப் பொருந்திய இலக்கணத்தை உடைய களவென்று சொல்லுவர் புலவர்.

வேட்கை-பெறவேண்டுமென்னும் உள்ள நிகழ்ச்சி; மெலிதல்-உண்ணாமையான் வருவது; ஆக்கஞ்செப்பல்-உறங்காமையும் உறுவ ஓதலும் முதலியவை மறத்தல்-பித்தாதல்; மயக்கம்-மோகம். சாக்காடு-சாவு.

## இயற்கைப் புணர்ச்சிக்கு உரிய திறன்

முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்தல்
நன்னயம் உரைத்தல் நகைநனி உறாஅ
அந்நிலை அறிதல் மெலிவுவிளக் குறுத்தல்,
தன்னிலை யுரைத்தல் தெளிவகப் படுத்தலென்று
இன்னவை நிகழும் என்மனார் புலவர். 1044

முன்னிலையாகாத வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கொள்ளுதல்; அவை சொல்லாதவற்றைச் சொல்லுவன போலக் கூறுதல்; அவை தன்னிடம் பேசுவதாக நினைத்து அவற்றிற்குத் தன் உள்ளக்கிடக்கையை எடுத்துக் கூறுதல்; தலைவி மிகவும் மகிழ்ச்சி எய்தாமற் புணர்ச்சிக்கு இனமாகிய பிரிவு நிலை கூறி, அவள் ஆற்றும் தன்மையை அறிதல்; இப் பிரிவினால் தனக்குள்ள வருத்தத்தைத் தலைவி அறியுமாறு கூறுதலும், தலைவி வருத்தத்தைக் குறிப்பால் உணர்ந்து அது தீரக் கூறுதலும்; 'நின்னொடு கொண்ட தொடர்பு எழுமையும் வருகின்றதென்று தமது நிலையை உரைத்தலும்; "நின்னை விட்டுப் பிரிந்து போகமாட்டேன், பிரிந்து சென்றாலும் ஆற்றியிருத்தல் இயலாது, எனவே, பிரிந்தால் அறமுடைய செயற்பொருட்டே பிரிவேன்' என்று தலைவி மனம் தெளியும்படி கூறுதலும்; ஆகிய இவ்வேழும், மிக்குவரும் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் தலைவற்கு உரியது என்பதாம்.

(எ-டு) "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே." (குறுந்-2)

இதனுள் 'தும்பி' என்றது முன்னிலையாக்கல்; 'கண்டது மொழிமோ' என்றது சொல்வழிப்படுத்தல்; 'கூந்தலின் நறியவும் உளவோ' என்றது நன்னயம் உரைத்தல்; 'பயிலியது நட்பின்' என்றது தந்நிலை உரைத்தல். பிறவும் வந்துழிக்காண்க.

## களவிற் கூட்டத்துத் தலைவன்

மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந்து இரங்கல் கூடுத லுறுதல்

சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்—

*வேட்கை மிகுதியினால், தலைமகன், தலைவியின் மெய்யைத் தீண்டிப் பழகுதலும்; அங்ஙனம் மெய்தொட்ட தலைமகன் அவள் கூந்தல் நுதல் முதலியவற்றை நீவிப் (தடவி) பொய்யாக நின்று புனைந்து கூறுதலும்; பொய் பாராட்டியதைப் பற்றுக்கோடாகக் கொண்டு தலைவியிடம் நெருங்கிய நட்புப்பூண்டு, தழுவவேண்டுமெனக் கூறுதலும்; தலைவி பெருநாணம் உடையவளாகலின் இங்ஙனம் தலைமகன் கூறியதைக் கேட்டதனால் புணர்ச்சிக்கு இடையூறாகச் சில நிகழ்த்தியவற்றைத் தலைவன் கூறுதலும்; புணர்ச்சி நிகழாது காலம் நீட்டித்தலுக்கு இரங்கி, இரக்கந் தோன்றக் கூறுதலும்; காலம் நீட்டித்தது பற்றி வருந்தினான் என்பதை அறிந்த தலைவி, பொறுக்கும் தன்மையில்லனாய் இறந்துபடுவனென்று கருதிய அளவில், நாண் விரைந்து நீங்குதலும்; தலைவன், தான் முற்கூறிய நுகர்ச்சியை விரைவாகப் பெறுதலும்; எக்காலத்தும் பிரியாமைக்குக் காரணமாகிய சூள் மொழிதல் உளப்படக் குறையாச் சிறப்பினையுடைய இவ் வெட்டும் 'இயற்கைப் புணர்ச்சிக்கும் இடந்தலைப் பாட்டுக்கும் உரியன)—*

பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்
நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைபபினும்
குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்—

*முற்கூறிய நுகர்ச்சி விரைந்து கிடைத்தவிடத்து அவன் மனம் மகிழும் மகிழ்ச்சியும்; அங்ஙனம் கூடிப் பிரிந்தவிடத்து, அன்பு மிகுதியால் மறைந்துநின்று, தலைவி, தன் தோழியர் கூட்டத்தில் புகுதலைக் கண்டு, இனிக் கூடுதல் மிகவும் அரியது என்று இரங்குதலும்; அது கேட்ட பாங்கன், உலகத்து நிலைநிற்கின்ற நற்குணங்களைத் தலைமகனுக்கு எடுத்துக் கூறினும், அங்ஙனம் கூறியவற்றை மறுத்துந், தலைவன் தன் நெஞ்சில் நிகழும் வருத்தங்களைப் பாங்கற்குக் கூறுதலும்; தலைவற்கு நிகழும் குற்றங்களைப் பாங்கன் எடுத்துக் காட்டிய விடத்தும் தெளியாத தலைமகனைப், பாங்கன், அத் துன்பத்திலிருந்தும் மீட்டற்கு விரும்பினும் (இது பாங்கற் கூட்டம்)—*

பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும்
ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
நீரிற் குறிபபின் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியும் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்
தண்டா திரப்பினும் மற்றைய வழியும

சொல்லவட் சார்தலிற் புல்லிய வகையினும்
அறிந்தோள் அயர்ப்பி னவ்வழி மருங்கில்
கேடும் பீடும் கூறலும் தோழி
நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி
மடல்மா கூறும் இடனுமா ருண்டே. 1045

முன்பு உடன்பட்ட பாங்கனால் தலைவியைப் பெற்றும், பின்னும் மணஞ் செய்துகொள்ளாது களவுப் புணர்ச்சியை விரும்பித், தோழியை இரந்து நின்று, அவள் துணையாகத் தலைவியைக் கூடுவோம் என்னும் எண்ணத்தனாய், அவ்வெண்ணத்தினை வலியுறுத்திக் கூறினும்; தலைவியின் ஊரையும் பெயரையும், வினவியும், இங்கு அம்புபட்ட மானொன்று வந்ததோ? என்று வினவியும், ஒன்றற்கும் பதில்கூறாத் தோழியை நோக்கிப் 'பேசினால் குற்றமுண்டோ?' என வினவியும், பொருந்துமாறு தன் குறிப்பினைப் புலப்படுத்திக் கூறித், தலைமகன், தோழியின் மாட்டுத் தன் குறையைச் சொல்லியும்; தோழி 'இவன் கூறுகின்ற குறையானது தலைவியிடத்தே போலும்' எனக் கருதி, அவன் மேலே சேர்த்து அதனை உண்மையென்று உணருமாறு, தலைவன் கூறுதலும்; தலைமகன் இயற்கைப்புணர்ச்சி முதலிய கூட்டங்களான் அமையாது, பின்னும் இரவுக்குறி பகற்குறி ஆகியவற்றை விரும்பினும்; குறிப்பிட்ட இடத்திலே தலைவியையும் தோழியையும் கண்டும், அவன் கொண்டுவந்த கையுறை பொருளைப் பெற்றுக்கொள்ளாது, தோழியால் மறுக்கப்பட்டும், பிறகு தோழி ஏற்றுக்கொண்டும், இவ்வாறு இரந்து நின்றான் பிறகு அவ்விருவரையும் எதிர்ப்படுதலின்றி வருத்தமுற்று, இரந்து நிற்கும் நிலையின்றி மாறுபட்டவிடத்தும்; தான் வருந்திக் கூறுகின்ற சொற்களெல்லாம் தலைவியுடன் சேர்த்துத் தலைவன் கூறுதலான், 'இவ்வாறு பொறுக்கும் ஆற்றலின்றி இங்ஙனம் அஞ்சிக் கூறினான்' என்று தலைவி அச்சமுற்றுத், தோழி அறியாதவாறு, தானே தலைவனைக் கூடிய பகுதியினும்; மதியுடம்பட்ட தோழி, 'நீர் கூறிய குறையை யான் மறந்து விட்டேன்' என்று கூறுமிடத்து, அவ்விடத்துத், தன்னுடன் கூடாமையால் தலைவிக்கு நேர்ந்த துன்பத்தையும், அவள் அதனை ஆற்றியிருந்த பெருமையையும் கூறுதலும்; தோழி, 'இவ்விடத்துக் காவலர் வருவர், மிகவும் கொடியர்' என்று கூறித், தலைமகனைச் சேய்மைக்கண் நிறுத்துதலால், தனக்கு உண்டாகிய வருத்தத்தையும் எண்ணி, 'மடலேறுவேன்' என்று அத் தலைவன் கூறும் இடனும் உண்டு.

### எய்தியது விலக்குதல்

பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்
அன்பற்று நகினும் அவட்பெற்று மலியினும்
ஆற்றிடை யுறுதலும் அவ்வினைக் கியல்பே. 1046

*தோழி, தலைவியின் இளமை முதலிய பண்பினைக் கூறித் தலைமகனைப் பெயர்க்கினும்; தலைவியை எண்ணியவனாய் அவன் உளம் வருந்தி மெலியினும்; தோழி தலைவன் குறையை மறுத்த விடத்து, அன்பு தோன்றுமாறு நகினும்; தோழியின் உடன் பாட்டைப்பெற்று உளம் மகிழ்ந்தாலும்; தலைவன் செல்லும் வழியிடை இடையூறு தோன்றியவிடத்தும், அத் தோழியிற் கூட்டத்திடத்துத் தலைவன் கூற்று நிகழ்வதாகிய இலக்கணமாம்.*

### பாங்கர் நிமித்தம்

பாங்கர் நிமித்தம் பன்னிரண் டென்ப. 1047

*பாங்கராயினோரைத் துணையாகக் கொண்டு கூடும் கூட்டம், அறன் நிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம், யாழோர் கூட்டமாகிய களவு, உடன் போக்கு, கற்பின் பகுதியாகிய இற்கிழத்தி, காமக்கிழத்தி, காதற்பரத்தை, அரும்பொருள் வினை, இராக்கதம், பேய்நிலை என்னும் பன்னிரண்டு வகையினையுடையது ஆகும்.*

### கைக்கிளைப்படுவன மூன்று

முன்னைய மூன்றும் கைகிளைக் குறிப்பே; 1048

*எண் வகைமணத்துள், முன்னையவாகிய அசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் மூன்றும் கைக்கிளைப்பாற்படும்.*

பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே. 1049

*எண்வகை மணத்துள்ளும் பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம் தெய்வம் என்னும் நான்கும் பெருந்திணைப்பாற்படும்.*

### ஒத்த அன்பின் வரும் கூட்டம்

முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே. 1050

*ஐந்திணையும் முதலாகக்கொண்டு அவற்றொடு பொருந்தி வரும் யாழோர் கூட்டம், கெடுதற்கரிய சிறப்புடன் பொருந்திய ஐவகை நிலத்தையும் பெறுதலின், அவை (யாழோர் கூட்டம்) ஐந்தெனப் படும். முதல் என்பது நிலமும் காலமும். ஐவகைக் கூட்டமாவன, களவு, கற்பு, உடன்போக்கு, இற்கிழத்தி, காமக் காதற் பரத்தை என்பனவாம்.*

*வரைந்து எய்துங்காறும் தலைவன்*

இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்தும்
காணா வகையிற் பொழுதுநனி இகப்பினும்
தானகம் புகாஅன் பெயர்தல் இன்மையிற்
காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்
புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளாண் எதிரும் விருப்பின் கண்ணும்
வாளாண் எதிரும் பிரிவி னானும்
நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய எதிரும்
வரைவுடம் படுதலும் ஆங்கதன் புறத்தும்
புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்
கிழவோன் மேன என்மனார் புலவர். 1051

*பகற்குறி இரவுக்குறி ஆகிய இரண்டும் பிழைத்தவிடத்தும்; தலைமகளைக் காணாது பொழுது மிகக் கழிந்தவிடத்துக், காண வேண்டும் என்ற ஆசையினால் குறியிடத்துச் சென்று, ஆண்டும் காணாது வருத்தமுற்று, வேட்கைமிகுதியால் மயக்கமடைந்து செயலற்று நிற்கும் இடத்தும்; தான் செல்லுவதற்குத் தகுதியில்லாத காலத்துச் சென்று எதிர்ப்பட்டவிடத்து, தமரால் நீக்கப்படாத விருந்தினன் ஆகியவிடத்தும்; அவ்வாறு விருந்தாகியமையின்றித் தலைவனுக்குத் தலைவி உபகாரஞ் செய்ய விரும்புவதால், தோழி அவனை விருந்தாக ஏற்றுக் கொள்ளுமிடத்தும்; வாள் வன்மையைக் காட்டுதற்குப் பிரிவுதோன்றியவிடத்தும்; நாணம் தலைவி நெஞ்சத்தை வருத்துதலான் நீக்கியிருந்தவிடத்தும்; மணம் செய்துகொள்ளவேண்டும் என்பதை விரும்பித் தோழியால் கூறப்பட்ட குற்றமற்ற சொற்களுக்குப் பதில் கூறுமிடத்தும்; தோழியின் வேண்டுகோட்படி மணஞ் செய்து கொள்ள விரும்பிக் கூறுமிடத்தும்; மணம் செய்து கொள்ளும் நிகழ்ச்சிக் கண்ணும்; மணஞ் செய்வதற்குத் தலைவியின் தமர் மறுத்தவிடத்தும், தலைமகனுக்குக் கூற்று நிகழும். பொதுப்படக் கூறலால் உள்ள நிகழ்ச்சியும் கொள்ளப்படும்.*

*தலைவி தலைவனைக் கண்ணுற்றவிடத்து*

காமத் திணையில் கண்நின்று வரூஉம்
நாணும் மடனும் பெண்மைய ஆகலின்
குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள்வயின் ஆன. 1052

காம வொழுக்கத்தினிடத்து நிலைபெற்று வருகின்ற நாணம், மடம் இரண்டும் பெண்மைக்கு உரியவாகலின், தலைவியிடத்து வேட்கையானது குறிப்பினாலும் இடத்தினாலும் புலப்படுமே யன்றி, வெளிப்படையாகப் புலப்படாது.

(எ-டு) "உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று" (குறள்—1090)

என வருமாறு காண்க.

## மேலதற்கு ஒரு புறனடை

காமஞ் சொல்லா நாட்டம் இன்மையின்
ஏமுற இரண்டும் உளவென மொழிப 1053

வேட்கையை உணர்த்தாத கண் உலகத்து இன்மையினால், தலைவனுக்குப் பாதுகாவலாக இருத்தற்பொருட்டு நாணும் மடனும் உளவாம் என்று சொல்லுவர் புலவர்.

(எ-டு) "கண்ணொடு கண்இணை நோக்கொக்கின்
வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல." (குறள்—1 00)

என்றவிடத்து, அகத்துநிகழ் வேட்கையினைக் கண்ணினால் அறியக் கிடந்தமை கூறப்பட்டது.

## அறியாதார்போற் கூறுதல்

சொல்லெதிர் மொழிதல் அருமைத் தாகலின்
அல்ல கூற்றுமொழி அவள்வயி னான. 1054

தலைவன் கருதிக் கூறும் புணர்ச்சிக்குத் தலைவி வேட்கை யுடையளாயினும், உடன்பட்டுக் கூறுதல் அருமையுடைய தாகலின், அவன் கூறியதை அறியாதவள்போன்று வேறொன் றைப்பற்றிக் கூறுதலும் தலைவியிடத்து உளதாம்.

## தலைவிக்குக் கூற்று நிகழும் இடம்

மறைந்தவற் காண்டல் தற்காட் டுறுதல்
நிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தல் மறுத்தெதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைப்பட்டுக் கலங்கினும் நாணுமிக வரினும்
இட்டுப்பிரி விரங்கினும் அருமைசெய் தயர்ப்பினும்
வந்தவழி எள்ளினும விட்டுயிர்த் தழுங்கினும்
நொந்துதெளி வொழிப்பினும் அச்சம் நீடினும்
பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும்
வருந்தொழிற் கருமை வாயில் கூறினும்
கூறிய வாயில் கொள்ளாக் காலையும
மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு
நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்

உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல
வேற்றுவரைவு வரின்அது மாற்றுதற் கண்ணும்
நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்
பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி
ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்தோள்
அருமை சான்ற நாலிரண்டு வகையிற்
பெருமை சான்ற இயல்பின் கண்ணும்
பொய்தலை அடுத்த மடலின் கண்ணும்
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்
குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்
வரைவுதலை வரினும் களவறி வுறினும்
தமர்தற் காத்த காரண மருங்கினும்
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்
வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்
பொழுதும் ஆறும் புரைவ தன்மையின்
அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்
காமஞ் சிறப்பினும் அவனளி சிறப்பினும்
ஏமஞ் சான்ற உவகைக் கண்ணும்
தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தலையும்
அன்ன இனவே ஓரிடத் தான. 1055

*மறைந்து நின்று தலைவனைக் காணுதலும்; தன்னை அவன் காணுமாறு நிற்றலும்; நிரம்பிய ஆசை மிகுதியினால், தலைவன் கூறிய சொல்லைக்கேட்டு எதிர்மொழி கூறாது வாளாநிற்றலும்; தலைவன் கூடுதற்கு நெருங்கியவிடத்து, அதற்கு உடன்படாது நிற்றலும்; மறுத்துக் கொண்டே இராது, மீண்டும் உடன் படலும்; குற்றமற்ற மகிழ்வைச் சிறிதுபொழுது தோற்று வித்தலும்; தலைவன் கையகத்தளாய பின்னர், 'என் செய்தோம்?' என்று கலக்கமுறுதலும்;*

*நாணம் மிகுதியாகத் தோன்றினும்; தலைவன் தன்னை விட்டுப் பிரிந்து போவான்கொல் என வருந்தினும்; தலைவன் வரவியலாதவாறு காவல் மிக்கதனால் அவன் வராதவிடத்தும்; தலைவன் தொடர்ந்து வந்தவிடத்துப் பழியாகும் என நினைத்து அச்சமுற்று இகழ்ந்தவிடத்தும்; வெளிப்படையாகச் சொல்லி வருத்தமுறினும்; தலைவன் தெளிவிப்பதனை ஏற்றுக் கொள்ளாது வருத்தமுற்று நீக்கினும்; தலைவன வரவு இடையீடுபட்ட விடத்து அச்சம் மிக்குழியும்; தலைவன் தன்னைப் பிரிந்தவிடத்துக் கலக்கமுறினும்; தலைவனோடு கூடியவிடத்து மகிழ்வெய்தினும்; தலைவன் வரவியலாதவாறு காவலர் தம் தொழில் புரிதலான்*

'அவன் ஈண்டு வருதல் அரிது' என்று, தோழி தலைவிக்குச் சொல்லு மிடத்தும்; தோழி இவ்வாறு கூறியதனைத் தலைவி ஒப்புக் கொள்ளாத விடத்தும்; வெளியிற் சென்று விளையாடுதலை விட்டு, வீட்டுக்குள்ளேயே அடைபட்டு வருந்திச் சிதைந்த விடத்துத், தோழிக்குத் தான் ஈடுபட்டிருந்த மறைவொழுக்கத்தைக் கூறினும்;

இவ்வாறு கூறுதொழியின் உயிர் செல்லுமாறு சொல்லு தலும்; பிறர் தன்னை மணம் முடித்தற்குவரின் அதை மாற்று மிடத்தும்; கூட்டமுண்மை பிறர் அறியுமாறு மெய் வேறு பட்டுக் காட்டுமிடத்து மறைப்பினும்; ஊழ்வலியினால் கூடிய புணர்ச்சியைக் குறித்து ஒன்றுபட்ட நட்பினாலே தலைவன் மணம்செய்து கொள்வதற்குக் குறையுற்று நிற்பதனை அறிந்த தலைவி, செய்தறகரிய எட்டுவகையினால் பெருமை பொருந்திய தன்மையளாய் நிற்குமிடத்தும்; தலைமகன், பொய்யாக, 'மட லேறுவேன்' என்று கூறிய விடத்தும்; தோழி, தலைவியின் கண்ணீரைத் துடைத்த விடத்தும்; தலைவிக்கு உடல் வேறுபாடு எதனாலே ஆயிற்று என்று, செவிலி வெறியாடச் செய்ய வரும் அச்சத்தினிடத்தும்; தலைவன், செய்வன போன்ற குறியை, அவன் செய்தனவாகக் கருதிக் குறிவழிச்சென்று, அவனால் நிகழாமை கண்டு மருளுமிடத்தும்; தலைவன், வரைந்து கொள்வ தற்கு வரும் காலம் அண்மையிலிருக்கும் இடத்தும்; களவொழுக் கத்தினைப் பிறர் அறிந்து கொண்ட விடத்தும்; தன்னைத் தம்மவர் காவல்செய்த விடத்தும்; தலைவி, தான் குறியிடம் செல்ல முடி யாதவாறு இற்செறிப்பு நிகழ்ந்ததை அறியாத தலைமகன், வழக்கம்போல் வந்து, வெற்றிடத்தை கண்டு உளம் வருந்தித், தான் வந்தமைக்கு அடையாளம் செய்துவிட்டுப் பெயர்ந்ததைப், பிற்றை நாள் தோழியின் வாயிலாக உணர்ந்த தலைவி, தான் முற் கூட்டியே தலைவனுக்கு உணர்த்தாமைக்கு வருந்தித் தோழியுடன் கூடித் தெளிந்தவிடத்தும்; குற்றப்படுதலின்றி நின்ற இயற் பட மொழியுமிடத்தும்; தலைவியும் தோழியும், தலைவன் இரவுக் குறியிடத்தே வருமிடத்து, வருங்காலமும் வழியும் குறற முடையதாய்ப்பொருந்தமில்லாது இருப்பதனால், 'தலைமகனுக்கு அழிவு நேரின் என் செய்யக்கடவது?' என்று தோன்றிய சிறந்த ஆராய்ச்சியிடத்தும்; தலைமகன் மாட்டு வேட்கை மிக்க விடத்தும்; தலைவன், தலைவிக்குச் செய்யும் தலையளி மிகுதிப் பட்ட விடத்தும்; இன்பத்திற்குப் பாதுகாவல் அமைந்த உவகையினைத் தலைவி அடைந்தவிடத்தும் ;ஆகிய, இக் கூற்றுக் களுள், சிலவிடங்களில் தன்பால் அன்பிற்கு உரிமை உண்டாக வும்,தலைவன்பால் பரத்தமை ஒழுக்கம் உண்டாகவும், தலைவிபாற் கூற்று நிகழ்தலுளதாம். இவைபோல்வன பிறவும் உளவாம்.

### தலைவி தானே கூறுதல்

> வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்
> வரையா நாளிடை வந்தோன் முட்டினும்
> உரையெனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்
> தானே கூறும் காலமும் உளவே. 1056

தலைவியை வரைந்து கொள்வதற்குரிய காலத்தை இடையே வைத்துப் பொருள் காரணமாகப் பிரிந்தவிடத்துத் தலைவி வருந்தினும்; வரைந்து கொள்ளாது களவிலேயே ஒழுகும் தலைவன், ஒரு நாள், தோழியையாயினும் செவிலியையாயினும் திடீரென எதிர்ப்படினும்; நொதுமலர் வரைவு வேண்டிவந்த விடத்தும், பிறவிடத்தும் தோழியிடம் கூட்டமுண்மையைக் கூறித், தமர் அறியக் கூறென்றும், தலைவன் நம் வருத்தம் அறியுமாறு கூறென்றும் கூறுமிடத்தும்; ஆகிய, இம் மூன்றிடத்தும் தோழி வினவாமல், தலைவி, தானே கூறும் காலமும் உண்டு.

(எ-டு) "என்னை கொல்தோழி அவர்கண்ணும் நன்கில்லை
அன்னை முகனும் அதுவாகும்—பொன்னலர்
புன்னையம் பூங்கானற் சேர்ப்பனைத் தக்கதோர்
இன்னல்ல நல்லென் றுரை." (ஐந்திணை எழுபது-54)

என வரும். பிறவும் வரும்வழி அறிக.

### தலைவிக்குக் கூற்று நிகழுமிடம்

> உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
> செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்
> தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
> காமக் கிழவன் உள்வழிப் படினும்
> தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்
> ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே. 1057

"உயிரைக் காட்டினும் நாணம் சிறந்தது; நாணினும் குற்றம் தீர்ந்த காட்சியினையுடைய கற்புச் சிறந்தது" என, முன்னோர் கூற்றை உட்கொண்டு, தலைவன் உள்ளவிடத்துச் செல்லுதலும், வருத்தமில்லாத சொல்லைத் தலைவி சொல்லுதலும் ஆகிய, அவ்வகைப் பிறவும் பொருளாகத் தோன்றும்.

### தோழிக்குரிய பேச்சுக்களின் தொகுப்பு

> நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
> செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
> புணர்ச்சி எதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉம்
> உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
> மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது

பல்வேறு கவர்பொருள் நாடடத் தானும்
குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினும் உலகுரைத் தொழிப்பினும்
அருமையின் அகற்சியும் அவளறி வுறுத்துப்
பின்வா வென்றலும் பேதைமை யூட்டலும்
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்
அஞ்சியச் சுறுத்தலும் உரைதருழிக் கூட்டமொடு
எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும்—

*பூவினாலும், சாந்தினாலும், தலைவனுடன் கூடிய கூட்டத்தாலும் தலைவியிடத்து உளதாகிய நறுநாற்றத்தால்; கூட்டத்தினால், அடைந்த நிறவேறுபாடு: தோழியர் கூட்டத்துடன் முன்போல் சேர்ந்தொழுகாது தன்னைத் தனியாகப் பேணியொழுகுதலும்; உண்ணும் அளவில் குறைதலும்; தான் செய்கின்ற பூப்பறித்தல் நீராடல் முதலிய வினைகளைத் தோழி அறியாதவாறு மறைத்துத் தனியே செய்தலும், அன்றியும் தலைவன் செய்த கூட்டக் கருமத்தினைப் புலப்படாதவாறு தோழியை மறைத்தலும்; எத்திசையினும் சென்று விளையாடுபவள், இப்பொழுது குறிப்பிட்ட ஓரிடத்திற்கே செல்லுதலும்; ஓரிடத்தேயே அதிகமாகப் பழகுதலும்; புணர்வதற்கு முந்துற்ற காலத்தை உட்கோடலும் ஆகிய மா நிகழ்ச்சி ஏழும் துணையாக அறிதலோடு— மெய்யினாலும் பொய்யினாலும் நெறிமுறை பிழையாதவாறு பல்வேறு வகைப்பட்ட இருபொருள் பயக்கும் சொற்களாலே ஆராய்தலும்; களவொழுக்கிலே ஒழுகுதற்கு விரும்பி வந்த தலைமகனை, அவனது பெருமையைக் கூறி நீக்குதலும்; ‘உலகத்தார் பெண்கொள்ளும் முறைபோல் கொள்ளுக’ என்று கூறுதலும்; தலைவியை அடைவதற்குள்ள அருமையைக் கூறி நீக்குதலும்; தலைவியிடத்துச் சென்று அறிவித்துப் பின்னர் என்மாட்டு வாவென்று கூறுதலும்; தோழி உடன்பட்டாலும், தலைவி அதனை அறியும் தன்மையள் அல்லள் எனத் தலைவனுக்குக் கூறுதலும்; முன்னுறல் அடையப்பெற்ற கூட்டத்தை முறையே நிறுத்திக் கூறுதலும்; தான் அச்சமுற்று அஞ்சிய தன்மையைத் தலைவற்கு அறிவித்தலும்; ‘நீ காதலிப்பது யாரையோ?’ என்று வினவியவிடத்துத், தலைவன், ‘இன்னாள்’ எனச் சொல்லக் கேட்ட தோழி, ‘அவளும் நின்போன்றே உள்ளாள்’ என, இவரோடு கூட்டி உரைத்தலும் ஆகிய ஒழிவின்றிக் கூறிய எட்டுக் கூற்றும் (குறையுறவுணர்தலின் பகுதி); தோழியின்பால் நிகழ்வனவாம். மேலும்—*

வந்த கிழவனை மாயஞ் செப்பிப்
பொறுத்த காரணம குறித்த காலையும்
புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணும்

குறைந்தவட் படரினும் மறைந்தவ ளருகத்
தன்னொடும் அவளொடும் முன்னமுன் தளைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்
நன்னயம் பெற்றுழி நயம்புரி இடத்தினும்
எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தினும்
புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும்
ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்
செங்கடு மொழியால் சிதைவுடைத் தாயினும்
என்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
அன்புதலை யடுத்த வன்புறைக் கண்ணும்
ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்
காப்பின் கடுமை கையற வரினும்
களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதல் மிகுதி உளப்படப் பிறவும்
நாடும் ஊரும் இல்லும் குடியும்
பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி
அவன்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ
அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்
ஐயச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்
அவன்விலங் குறினும் களம்பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினும் அவன்வரைவு மறுப்பினும்
முன்னிலை அறனெனப் படுதலென் றிருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்
வரைவுடன் பட்டோர்க் கடாவல் வேண்டினும்
ஆங்கதன் தன்மையின் வன்புறை உளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையினும்
தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன. 1058

*தன் முன்னர் வந்துநின்ற தலைவனைத், தோழி பார்த்து நின்றே, வாராதான் போல மாயமேற்றி, அதனைப் பொறுத்த காரணம் குறிப்பினால் கொள்ளக் கூறுமிடத்தும் (அஃதாவது, தலைவன் வரும் அருமையைக் கருதி ஏற்றுக்கோடலும்); கூட்டம் முடிந்த பின்னர்த் தோழி தலைவனை வணங்குமிடத்தும்; தலைவன் குறையுற்று நிற்பதற்கு மனம் நெகிழ்ந்து, தான் தலைவியிட குறையுறுமிடத்தும்; நாண் மிகுதியினால் வேட்கை மறைத்து நிற்கும் தலைவியிடத்தும், தலைவனோடும் தலைவியோடும் முன்னர் நிகழ்ந்த இயற்கைப்புணர்ச்சி முதலிய கூட்டம் மூன்றனையும் தான் அறிந்தமையைக் குறிப்பால் உணர்த்தி, இரந்து நிற்றல் பலவகையாக வேறுபட்ட விடத்தும்; அவ்வழித், தோழியின்*

கூற்றைத் தலைவி ஏற்றுக்கொண்டவிடத்து, அதனைத் தலைவற்குக் கூறுதற்கு விரும்பும் இடத்தும்; எண்ணுதற்கரிய பல நகையாட்டுக்களைத் தலைவனிடம் குறித்த வகையும்; பலவாறு, தோழி எடுத்துக் கூறிய பின்னரும், தலைவன், புணர்ச்சியை விரும்பும் இடத்தும்; தலைவன் புணர்ச்சியை விரும்பாது பிரிவை விரும்பிய விடத்தும்; தலைவற்குத் தாம் சில கொடுத்தலைத் தலைவி விரும்பிய விடத்தும்; தலைவனொடு தலைவி கூடிய விடத்து அல்லகுறிப்படுதலாகிய அறிவு மடம்பட்ட சிறப்பினிடத்தும்; தலைவனிடம், 'தலைவியைப் பாதுகாத்துக் கொள்வாயாக' என்று கூறிய விடத்தும்; தோழி, செம்மையாகக் கூறும் கடுஞ்சொற்களால் தலைவி நெஞ்சு சிதைவுடைத்தாயினும்; தலைவன் பிரிவால் என்பும் உருகுமாறுள்ள தலைவிக்குத், தன் கடன் செவ்வன் செய்து, தலைவனது அன்பு மிகுதியை வற்புறுத்திக் கூறுமிடத்தும்;

தலைவன் வருகின்ற வழியின் ஏதப்பாட்டினைக் கேட்டு அஞ்சுதற்கண்ணும்; காவலின் கடுமை களவொழுக்கத்திடையே எல்லையற்று வருமிடத்தும்; குறியிடமும், காலமும் தாங்கள் வரையறுத்தபடியில்லாது நீக்கித், தலைவி காதல் மிகுதி உளப்படப் பிறவும், தலைவனது நாடும், ஊரும், வீடும், குடியும், பிறப்பும், சிறப்பும், மிகுதியும் எண்ணித் தலைவனிடம் சொல்லும் சொற்களோடே கூட, அத் தன்மைத்தாகிய நிலவகையினுலே வரைந்து கொள்ளுதலை விரும்பிய விடத்தும்; 'தலைவிக்குக் கூட்டம் உண்டு கொல்' என்று தாய் ஐயப்பட்டவிடத்து, அவ் ஐயத்தைத் தாய்க்கு எதிரே நின்று மறுத்து, அதனைப் பொய்யெனவே கருதும்படிசெய்து, பொய்யான சிலவற்றை மெய்யென்னுமாறு கூறினும்;

தலைவனுல் கூட்டத்திற்கு இடையூறு தோன்றினும்; செவிலியானவள், தலைவியின் மெய்வேறுபாட்டைக் கண்டு, 'இஃது எற்றினுல் ஆயிற்று?' என்று அறிவரை விஞவுமிடத்துத், தலைவியை அவருக்கு வெளிப்படக் காட்டினும்; நொதுமலர் வரைவுவந்த விடத்தும்; தலைவியின் சுற்றத்தார் தலைவனுக்கு மணஞ் செய்து கொடுக்க மறுத்தவிடத்து, அறம் என்று சொல்லப்படும் தன்மைத்தாய இருவரது எதிர்ப்பாட்டினையும் செவிலியிடத்துக் கூறினும்; தலைவியின் சுற்றத்தார் வரைந்து கொள்வதற்கு உடன்பட்ட பின்னர்த் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள் காரணமாக நீட்டித்த விடத்து, இனி 'நீட்டித்தல் கூடாது' என்று கடுஞ்சொற் கூறி, வரைவுகடாவல் வேண்டிய விடத்தும்; அங்ஙனம், கடாவிய விடத்து, வரைந்து கொள்ளுதல் மெய்யாயினமையின், மணம் முடியுமளவும் பொறுத்திருப்பதற்கு வற்புறுத்திக் கூறுதல் உட்படத் தோழியிடத்துச் சிறப்பக்கூறிய முப்பத்திரண்டும்; இன்னும் வேறுபட

வருவனவும்; மிக்க செவிலியுடைய தோழியிடத்து நிகழும் கூற்றுக்களாம்.

## செவிலியால் நிகழும் கூற்றுக்கள்

களவல ராயினும் காமமேற் படுப்பினும்
அளவுமிகத் தோன்றினும் தலைப்பெய்து காணினும்
கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டிய திறத்தால் செய்திக் கண்ணும்
ஆடிய சென்றுழி அழிவுதலை வரினும்
காதல் கைம்மிகக் கனவில் அரற்றலும்
தோழியை வினாவலும் தெய்வம் வாழ்த்தலும்
போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்
பிரிவின் எச்சத்து மகள்நெஞ்சு வலிப்பினும்
இருபாற் குடிப்பொருள் இயல்பின் கண்ணும்
இன்ன வகையிற் பதின்மூன்று கிளவியொடு
அன்னவை பிறவுஞ் செவிலி மேன. 1059

தலைவியின் களவொழுக்கம் அயலார்க்குத் தெரிந்து பழி தூற்றப்பட்ட விடத்தும்; தலைவியினுடைய வேட்கை மிக்க விடத்தும்; கண்ணும், தோளும், முலையும், பிறவும் முன்னினும் பருத்து அழகுடன் விளங்கும் அளவு வேறுபாடு தோன்றுமிடத்தும்; தலைவனொடு தலைவி ஒன்றுபட்டு நிற்றலைக் கண்டவிடத்தும்; கட்டுவிச்சியும் வெறியாடும் வேலனும், 'தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாவிடத்து இத்துன்பம் தீராது' எனக் கூறித், தம் தொழில் புரியுமிடத்தும்; வெறியாட்டு நிகழ்ந்த பின்னரும் தலைவிக்கு வருத்தம் மிக்குத் தோன்றினும்; காதல் மிகுதியினால், தலைவனை எண்ணிக் கனவிலே பிதற்றுமிடத்தும்; தலைவிக்கு இவ் வேறுபாட்டுத் தோற்றம், எதனால் உண்டாயிற்று எனத் தோழியை வினவுமிடத்தும்; கூட்டமுன்மையைத் தோழியால் அறிந்த பின்னர், நற்றாய் முதலியோர்க்குக் கூறவியலாது, தெய்வத்தை வணங்குமிடத்தும்; தலைவி உடன்போக்கிற் சென்றுவிட்டாள் என்பதை அறிந்த செவிலி, தானும் தோழியுடன் பொருந்தி, இல்லறத்தின்கண் நிலைபெறச் செய்தற்கண்ணும்; தலைவி, உடன் போயகாலத்துத், தானும் பின் செல்லாது தங்கிய விடத்தும்; 'உடன் போக்கிற்குத் தன் மகள் துணிந்தனளோ' என்று எண்ணியவிடத்தும்; தலைவன் குடிமை தன குடிமையோடு பொருந்துமென்று ஆராயுமிடத்தும்; ஆகிய, இத் தன்மைத்தாகிய கூறுபாட்டினையுடைய பதின்மூன்று கூற்றுடன், அவை போல்வன பிறவாய் வருவனவும், செவிலிக்குரிய கூற்றுக்களாம்.

## நற்றாய்க்கு உரியதோர் இலக்கணம்

தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே. 1060

*செவிலி, கூட்டமுண்மை நய உணர்ந்தவாறு, நற்றாயும் உணருமாயின், செவிலிக்குக் கூறிய பதின்மூன்று சிளவியும், அவை போல்வனவாய பிறவும், நற்றாய்க்கும் உண்டு.*

## நற்றாயும் செவிலியும் துணியும் வகை

கிழவோன் அறியாள் அறிவினள் இவளென
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவியின் அறிதலும் உரித்தே. 1061

*'நம் குலத்திற்கு ஒத்த தலைவனை அறிந்து நட்புக் கொள்ளாத அறிவினையுடைய தலைவி' எனத், தான் ஐயப்பட்டுப் பிறரோடும் வினவும் சொல்லைக் குற்றமற்ற சான்றோரிடத்துக் கூறி, 'அதுவும் முறையேயாகும்' என்று அவர் கூறியபின் அறிதலும் உண்டு.*

## தலைவிக்கு உரியதோர் இயல்பு

தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்
பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்
பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப. 1062

*தலைவி, தனது வேட்கைமிகுதியைத் தலைவன்முன் நின்று சொல்லுதல். ஆராயுமிடத்துத், தலைவிக்கு இல்லை. அங்ஙனம் கூறுதவிடத்தும், புது மட்கலத்துள் பெய்த நீர்போலப் உணர்வினையும் உடைத்து அவ்வேட்கை புறத்தே புலப்படுத்தும் என்பதாம்.*

## களவிற் புணர்ச்சிக்கு உரியதோர் வேறுபாடு

காமக் கூட்டம் தனிமையிற் பொலிதலின்
தாமே தூதுவ ராகலும் உரித்தே 1063

*இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு முதலிய கூட்டங்களுள், பாங்காயினார் ஒருவருமின்றித், தலைவனும் தலைவியும் தாமே கூடுதலான், தாங்களே தமக்குத் தூதுவரும் ஆவர்.*

## தலைவி குறியிடம் கூறுதல்

அவன்வரம்பு இறத்தல் அறம்தனக் கின்மையின்
களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்
தான்செலற் குறியவழி யாக லான. 1064

தலைவனுடன் கூடிய பின்னர், அவன் எண்ணத்திற்கு மாறுபட்டு நடத்தல் தலைவிக்கு அறமாகாமையின், அவன் விருப்பிற்கு இணங்கிக் குறியிடம் கூறுதலே தலைவியின் செயலாம். ஏனெனில், தான் சென்று வரவேண்டிய இடமாக அது இருத்தலான் என்றவாறு.

### தோழியும் குறியிடம் கூறுவள்

தோழியின் முடியும் இடனுமார் உண்டே. 1065

*பேற்கூறிய களவிற் புணர்ச்சியானது நிகழ்தற்கண், தோழி குறியிடம் குறித்தலும் உண்டு.*

### பாங்கற கூட்டம் நிகழுமிடம்

முந்நா ளல்லது துணையின்று கழியாது
அந்நா ளகத்தும் அதுவரை வின்றே. 1066

*மூன்று நாளல்லது பாங்கனின் துணையில்லாமற் கழியாது. அந்த மூன்று நாட்களினுள்ளும் அவன் துணை கொள்ளப் படலும் உளதாம்.*

### தலைவிக்கு உரியதோர் இயல்பு

பன்னூறு வகையினும் தன்வயின் வருஉம்
நன்னய மருங்கின் நாட்டம் வேண்டலின்
துணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்
துணையோர் கரும மாத லான. 1067

*பலவகையானும் தன்னிடத்துவரும் நல்ல விருப்பம் பொருந்திய பகுதிகளை ஆராய்தல் தலைவனிடத்து வேண்டுமாதலால், பாங்கன் முதலிய துணையாவாரைச் சுட்டிக் கூறும் சொல் தலைமகனுடையதாம்; தான் கூறும் செயல் துணையாவாரால் செய்யப் படும் செயலாகலான்.*

### செவிலிக்கு உரியதோர் சிறப்பு

ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் படுவாள் செவிலி யாகும். 1068

*நல்ல பெரிய சிறப்பினையுடைய உணர்தற்கரிய மறைப் பொருள் யாவற்றையும் கூறும் கடப்பாடு உடையவளாதலால், செவிலியாவாள், தாய் என்றே சொல்லப்படுவாள்.*

### தோழி செவிலியின் மகளே

தோழி தானே செவிலி மகளே. 1069

*தலைவியின் தோழியாக இருப்பவள், செவிலியின் மகளே யாவாள்.*

## தோழிக்குரிய இயல்பு

சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே. 1070

தோழியாவாள், தலைவிபற்றிய நிகழ்ச்சிகளை ஆராய்தற்கும், வி தன் எண்ணப்படி விழைவுமிடத்துத் துணையாகியும், வரும் நிலைமையினால் அழகுபெறுபவளாய் இருப்பாள்.

## தலைவன் புணர்ச்சியுண்மை தோழி அறியும் திறன்

குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென
மதியுடம் படுதல் ஒருமூ வகைத்தே. 1071

தலைவன், தோழியை இரந்து குறையுற்றவிடத்து உணர்தல்; தலைவியின் குறிப்புக் கண்டு உணர்தல்; தலைவனும் தலைவியும ஒருங்கிருந்த விடத்துத் தலைமகன் கையுறைப் பொருளுடன் வந்து நின்று குறையுறுமாற்றான் உணர்தல்; என்ற மூன்றும், தோழி மதியுடம்படுதல் ஆகும்.

## தோழிக்கு உரியதோர் திறன்

அன்ன வகையான் உணர்ந்தபின் அல்லது
பின்னிலை முயற்சி பெறுஉள்என மொழிப. 1072

இருவர்தம் கருத்தையும், தோழி, மேற்கூறியவாறு உணர்ந்து கொண்டால் அன்றி, வழிபாட்டு முறைமையால் புணர்ச்சிக்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யாள் தோழி என்றவாறு.

முயற்சிக் காலத்து அதற்பட நாடிப்
புணர்த்த லாற்றலும் அவள்வயி னான. 1073

தலைவன் தலைவியைக் கூடுவதற்கு முயலுங்காலத்து, தலைவியின் உள்ளக் கருத்தினையும் அறிந்துகொண்டு, அக் கூட்டத்தைக் கூட்டுவித்தலும் தோழியிடத்து உண்டென்றவாறு.

## குறியிடம் என்னவென்பது

குறியெனப் படுவது இரவினும் பகலினும்
அறியக் கிளந்த ஆற்ற தென்ப. 1074

'குறி' என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, இரவுக் குறி, பகற்குறி என்னும் இரண்டு நெறியை உடையதென்று சொல்லுவர் புலவர்.

## இரவுக்குறிக்குரிய இடம்

இரவுக் குறியே இல்லகத் துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே
மனையகம் புகாஅக் காலை யான. 1075

இரவுக்குறியின் இடம், இல்லகவரைப்பில் மனையகம் புகா விடத்து வீட்டிலுள்ளார் பேசுவனவற்றைக் கேட்கும்படியாக அமைந்த அண்மைத்தாகிய இடமாகும்.

## பகற்குறிக்குரிய இடம்

பகற்புணர் களனே புறனென மொழிப
அவளறி வுணர வருவழி யான. 1076

பகற்குறியின்கண் எதிர்ப்பட்டுப் புணர்வது, மதிற் புறத்தே என்று சொல்லுவர்; அவ்விடமும் தலைவி நன்கு அறிந்த இடமாகவிருத்தல் வேண்டும் என்பதும் சொல்லப் படும்.

## அல்லகுறிப் படுதலும் உரித்தாவது

அல்லகுறிப் படுதலும் அவள்வயின் உரித்தே
அவன்குறி மயங்கிய அமைவொடு வரினே. 1077

தலைவன், தான் வந்தமைக்கு அறிவிக்கும் குறிபோன்ற குறி நிகழ்ந்தவிடத்து, அல்லகுறிப்படுதலும் தலைமகளுக்கு **உரித்து.**

ஆங்காங்கு ஒழுகும் ஒழுக்கமும் உண்டே
ஓங்கிய சிறப்பின் ஒருசிறை யான. 1078

'ஓங்கிய சிறப்பினையுடைய ஒரு பக்கத்து' (ஒரு சிறை என்றது மனத்தானும் மொழியானும் மெய்யானும் அவ்வவ் விடத்து) ஒழுகும் ஒழுக்கமும் தலைவியிடத்தே உளதாம், கற் புடை மகளிர் ஒழுகும் ஒழுக்கத்தில், மனத்தால் ஒழுகும் ஒழுக் கமும் உண்டு என்பதனால்.

## நன்றும் நற்பொழுதும் களவிலும் உண்(

1079

களவொழுக்கத்திடத்தும் நன்றும் நற்பொழுதுமன்றி ஒழுகும் ஒழுக்கம் தலைமகனுக்கு இல்லை.

## தலைவனிடம் நிகழாதவை

ஆறின தருமையும் அழிவும் அச்சமும்
ஊறும் உளப்பட அதனோ ரற்றே. 1080

வழியினது அருமை நினைதலும், உளமழிதலும், அஞ்சுதலும், இடையூறும், தலைவனிடம் நிகழப்பெறும்.

## தந்தையும் தமையன்மாரும் அறிதல்

தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப. 1081

*தலைவியின் களவொழுக்கத்தை அவள்தம் தந்தையும், உடன் பிறந்தாரும், குறிப்பினாலே அறிந்துகொள்வர்.*

## தாய் களவினை அறிதல்

தாய் அறிவுறுதல் செவிலியோ டொக்கும். 1082

*நற்றாய் (பெற்ற தாய்) களவொழுக்கினை அறிதல், செவிலி அறியுமாற்றை ஒப்புடையதாகும்.*

## அம்பல் அலருக்கு முதல்வன்

அம்பலும் அலரும் களவுவெளிப் படுத்தலின்
அங்கதன் முதல்வன் கிழவனாகும். 1083

*அம்பல், அலர் எனும் இரண்டும் களவொழுக்கை தெளிவுப் படுத்தலால், அவ்வாறு நிகழ்வதற்குக் காரணம் தலைவனாவான் என்பர். அம்பல்—முகிழ்த்தல்; அது ஒருவரொருவர் முகக்குறிப்பினாலே தோற்றுவித்தல். அலர்—சொல்லுதல்.*

## வரைதல் நிகழ்கின்ற காலம்

வெளிப்பட வரைதல் படாஅமை வரைதல் என்று
ஆயிரண் டென்ப வரைதல் ஆறே. 1084

*தலைவியை மணஞ்செய்து கொள்வது களவு வெளிப்பட்ட பின்னரும், களவு வெளிப்படா முன்னரும், ஆகிய இரண்டிடத்தும் வரைதல் நிகழும் என்று சொல்லுவர்.*

## வரையாது பிரிதல் நிகழ்தல்

வெளிப்படை தானே கற்பினொ டொப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோற் கில்லை. 1085

*மேல் நூற்பாவில் கூறிய வெளிப்படை தானே, கற்பினுள் தலைவியுடன் உரிமையாய் வாழ்வதைப் போன்றதாயினும், முற் கூறிய ஓதற்பிரிவு, தூதுப்பிரிவு, பகை காரணமாகப் பிரியும் பிரிவு ஆகிய மூன்றும் காரணமாக, வரைவிடை வைத்துப் (மணம் முடித்துக் கொள்ளாது) பிரிதல் தலைவனுக்கு இல்லையாம். எனவே, பொருள்வயிற் பிரிதலும், வேந்தர்க் குற்றுழிப் பிரிதலும், காவற்பிரிதலும் நிகழப்பெறும் எனக் கொள்க.*

# 4. கற்பு இயல்

[கற்புக்கு இலக்கணம் உணர்த்துவது]

### கற்பு என்னவென்பது

கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே. 1086

*கற்பென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, சடங்கொடு பொருந்திக், கொள்ளுதற்குரிய மரபினையுடைய தலைவன், கொள்ளுதற்குரிய மரபினையுடைய தலைவியைக் கொடுத்தற் குரிய தலைவியின் தமர் மணஞ்செய்து கொடுப்ப மணந்து கொள்வது ஆகும்.*

### கொடுப்போர் இல்லாதும் மணம் நிகழும்

கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான. 1087

*தலைவி தலைவனுடன் சேர்ந்து உடன்போக்கிற் சென்ற விடத்துக், கொடுத்தற்குரிய தலைவியின் தமர் இல்லாதவிடத்தும், சடங்கொடு கூடிய மணம் நடைபெறுதல் உளதாம்.*

### சடங்குகட்கு உரியவர்

மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே. 1088

*அந்தணர் அரசர் வணிகர் ஆகிய மூவர்க்கும் உரிய சடங் குடன் கூடிய மன்றல் விழவு, நான்காமவராகிய வேளாண் மாந்தர்க்கும் ஆகிய காலமும் உண்டு.*

### கரணம் வகுக்கக் காரணம்

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப. 1089

*பொய் கூறுதலும் குற்றப்பட ஒழுகுதலும் தோன்றிய பின்னர், தமிழகச் சான்றோர், (தலைமையுடையோர்) சடங்குகளை வரையறை செய்தனர் என்று சொல்லுவர் புலவர். பொய் யாவது செய்ததனை மறைத்தல்; வழுவாவது, செய்ததன்கண் முடியவில்லாது தப்பி யொழுகுதல். கரணத்தொடு முடிந்த காலையின் அவை யிரண்டும் நிகழாவாம். ஆதலாற் கரணம் வேண்டுவதாயிற்று என்க.*

### தலைவற்கு உரிய கிளவிகள்

கரணத்தின் அமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்
எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும்
அஞ்ச வந்த உரிமைக் கண்ணும்
நன்னெறிப் படரும் தொல்நலப் பொருளினும்

பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக்
குற்றஞ் சான்ற பொருளெடுத்து உரைப்பினும்
நாமக் காலத்து உண்டெனத் தோழி
ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும்
அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச்

சொல்லுறு பொருளின் கண்ணுஞ் சொல்லென
ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது
வானோர் அமிழ்தம் புரையுமால் எமக்கென
அடிசிலும் பூவும் தொடுதற் கண்ணும்
அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்

அந்தமில் சிறப்பில் பிறர்பிறர் திறத்தினும்
ஒழுக்கங் காட்டிய குறிப்பினும் ஒழுக்கத்துக்
களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி
அலமர லுள்ளமொடு அளவிய இடத்தும்
அந்தரத்து எழுதிய எழுத்தின் மான

வந்த குற்றம் வழிகெட ஒழுகலும்
அழியல் அஞ்சலென்று ஆயிரு பொருளினும்
தான்அவள் பிழைத்த பருவத் தானும்
நோன்மையும் பெருமையும் மெய்கொள அருளிப்
பனனல் சான்ற வாயிலொடு பொருந்தித்

தன்னி னுகிய தகுதிக் கண்ணும்
புதல்வன் பயந்த புனிறுதீர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி
ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்

பயங்கெழுப் துணையணை புல்லிப் புல்லாது
உயங்குவனள் கிடந்த கிழத்தியைக் குறுகி
அல்கல் முன்னிய நிறையழி பொழுதின்
மெல்லென் சீறடி புல்லிய இரவினும்
உறலருங் குரைமையின் ஊடன்மிகுத் தோளைப்

பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்
பிரிவின் எச்சத்துப் புலம்பிய இருவரைப்

பிரிவு நீக்கிய பகுதிக் கண்ணும்
நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும்
சென்றுகை இகந்துபெயர்த்து உள்ளிய வழியும்

காமத்தின் வலியும் கைவிடின் அச்சமும்
தானவள் பிழைத்த நிலையின கண்ணும்
உடன்சேறற் செய்கையொடு அன்னவை பிறவும்
மடம்பட வந்த தோழிக் கண்ணும்
வேற்றுநாட்டு அகல்வயின் விழுமத் தானும்

மீட்டுவர ஆய்ந்த வகையின் கண்ணும்
அவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும்
பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்
காமக் கிழத்தி மனையோள் என்றிவர்
ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்

சென்ற தேஎத்து உழப்புநனி விளக்கி
இன்றிச் சென்ற தன்னிலை கிளப்பினும்
அருந்தொழில் முடிந்த செம்மற் காலை
விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும்
மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும்

கேளிர் ஒழுக்கத்துப் புகற்சிக் கண்ணும்
ஏனைய வாயிலோர் எதிரொடு தொகைஇப்
பண்ணமை பகுதிப் பதினொரு மூன்றும்
எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன. 1090

*தலைமக்களோர் மனையறம் செய்க திருமண முறைப்படி மன்றல்விழா முடிந்த பிறகு, களவுப் புணர்ச்சியில் இருவர் மாட்டும் உளதாய பழியஞ்சும் துணைமேம்பாட்டினால், கட்டப் பட்டிருந்த (மனவடக்கம் செய்திருந்த) வேட்கையானது கட்டவிழ்ந்து கூடிக்களித்த விடத்தும்; கூட்டத்தினாலாகும் மகிழ்ச்சி இடையீடின்றி மிக்குவருமிடத்தும்; தலைவியின் கற்பு நெறி கண்டு, தானும் பிறரும் அஞ்சுமாறு உரிமை தோன்றிய விடத்தும்; தொன்மையான குடிமரபு வழுவாது உறுதிப் பொருளின் உயர்வழி நடக்கும் தலைவியின் வாழ்க்கைநிலை கண்ட விடத்தும்; தலைவியை அடைந்து சிறந்த பெருமையின்கண் தான் களவொழுக்கில் அடைந்த அருமையை எடுத்துக்கூறு மிடத்தும்; 'அஞ்சிய காலத்துத் துணைசெய்தது' என்று, தலைவி கடவுளை வணங்குமிடத்தும்; களவிற்பட்ட இடையூறின்றித் துய்க்கும் இன்பமிகுதியினிடத்தும்; அமுதிற்கு மாறுபட்ட நஞ்சினை உண்ணுமிடத்தும், தலைவியிடம், 'நீ கைதொட்டதனால் அப்பொருள் எனக்கு அமிழ்தாக இருக்கிறது' என்று அதற்குக் காரணம் என்னென அவள் சமைக்குங்காலும், பூத்தொடுக்குங்*

காணும் வினவுகின்ற விடத்தும்; அந்தணரிட (தலைமையோர்) த்
தும், சான்றோரிடத்தும், சிறப்புமிக்க மற்றையோர்களிடத்தும்
ஒழுகுமாற்றைக் குறிப்பினாற் காட்டியவிடத்தும்; கற்பொழுக்
கத்தில் களவுக்காலத்து நிகழ்ந்த அருமையை நினைந்து வருந்திக்,
கலவும் உள்ளத்துடன், அளவளாவுமிடத்தும்; களவுக்கால
ஒழுக்கக் குறைபாட்டினை விண்ணில் எழுதிய எழுத்துத்
தோன்றாதவாறுபோலத் தோன்றச் செய்யாது ஒழுகுமிடத்தும்;
'நிகழ்ந்துவந்த குற்றத்திற்காக நீ வருந்தாதும் அச்சப்படாதும்
இருப்பாயாக' என்று, தான் அவளுக்கு இழைத்த குற்றத்
தினைக் கூறும் காலத்திடத்தும்; பொறுமையும் பெருமையும்
உண்மையென்று தெளியுமாறு கூறி, ஆராய்ச்சி பொருந்திய
வாயிலுடன் ஒன்றுபட்டு, தன்னால் ஆகியதனை ஒப்புக்கொள்ளு
மிடத்தும்; புதல்வனைப் பெற்று ஈன்றணிமையுடைய நெய்
முழுக்காடிய தலைவியின் பொருட்டுத் தலைமையோருக்கும்,
கடவுளுக்கும் செய்யும் சிறப்பினிடத்தும்; தலைவன், பரத்தையிற்
பிரிந்தவிடத்து அதனைப் பொருது ஊடல் கொண்ட
தலைவி, வேட்கை மிகுதியினால் பலவிதமான அணைகளை
(படுக்கை)த் தழுவியவிடத்து, அவை தம்மைத் தழுவாமையான்
வருந்தி நிறையழிந்து நிற்கும் நிலைமையின்கண், அவளுடைய
மெல்லிய அடிகளை வருடித் தலைமகன் இரந்து நிற்குமிடத்தும்;
தலைவன் தன்னால் அடைய முடியாதவாறு மிகுதியான ஊடல்
கொண்டவளாகிய தலைவியினிடத்து, வேறு சில பெண்டிர்கள்
அதுபோன்ற ஊடலின் காரணமாக அடைந்த இடுக்கட்
பாட்டினை உணர்த்துதற் கண்ணும்; தான் பிரியப்போகும்
நிலைமையின்கண் அது குறித்து வருந்தாநின்ற தலைவி, காமக்
கிழத்தி ஆகிய இருவரையும், அவ் வருத்தம் நீக்குதற்கண்ணும்;
நீண்டநாள் பிரிந்துநின்ற விடத்து, அப் பிரிவு குறித்துத்
தானே வருந்தும் நிலைமையின்கண்ணும்; நெடிது பிரிந்து நின்ற
செலவினையே, மீட்டுமொருகால் எண்ணியவிடத்தும்; 'பொரு
ளினும் காட்டில் காமம் மிகவும் வலியுடையது' என நினைத்த
விடத்தும்; தலைவியைத் தனித்திருக்கச் செய்துவிட்டுத், தான்
பிரிவதற்கு அஞ்சியவிடத்தும்; தலைவியினிடத்துத் தலைவன்
முற்கூறியாங்குப் பிரியாதொழுகாது பிரிந்த விடத்தும்; தோழி,
'தலைவியையும் உடன்கொண்டு செல்க' என்று கூறியாங்குப்,
பலவும் அடங்கக்கூறும் மடம்படவந்த தோழியின் மாட்டும்;
வேற்று நாட்டிற்குப் பிரியும்வழி, வரும் வருத்தத்தினிடத்தும்;
பிரிந்து சென்ற தலைமகன், மீண்டும் திரும்பி வந்தவிடத்தும்;
பிரிந்து சென்ற தலைமகன், தான் சென்ற நிகழ்ச்சிக்கண் மிக்க
சிறப்பு எய்தியவிடத்தும்; தான் அடைந்த இன்பத்தினைப் பாக
னுக்குக் கூறுமிடத்தும்; காமக்கிழத்தியும் மனையாளும் பிரிவிடத்
துப் பாதுகாவலான சொற்களைக் கூறுமிடத்து, அவர்கட்கு விடை

பிறுத்தற் கண்ணும்; தான் சென்ற நாட்டின் வருத்தத்தை மிகவும் விளக்கமாகக் கூறித் தலைவியைப் பிரிந்துசென்ற தன் நிலைமையைக் கூறுமிடத்தும்; செய்தற்கரிய வினையைச் செய்து முடித்து வந்த தலைமைசான்ற காலத்து, விருந்தினருடன் நல்ல செயல்களைச் சிறப்பித்துக் கூறும் விருப்பத்தின் கண்ணும்; தலைவனை வரவேற்கும் பொருட்டு மங்கலமாக மாலையினை ஏந்தி நின்ற பெண்டிர், மக்கள், உறவினர் ஆகியோர் ஒழுகும் ஒழுக்கத்தினை விருப்புற்றவிடத்தும்; பெண்டிரல்லாத வாயிலாவோர் எதிர்கூறும் கூற்றிடத்தும்; ஆகிய, செயற்பாடமைந்த பகுதியினையுடைய முப்பத்து மூன்றிடத்தும் நிகழும் சொல்நிகழ்ச்சி, மிக்க சிறப்பினையுடைய தலைவனுக்கு உரியனவாம்.

## கற்பின்கண் தலைவிகூற்று நிகழுமிடம்

அவனறி வாற்ற அறியும் ஆகலின்
ஏற்றற் கண்ணும் நிறுத்தற் கண்ணும்
உரிமை கொடுத்த கிழவோன் பாங்கின்
பெருமையில் திரியா அன்பின் கண்ணும்
கிழவனை மகடூஉப் புலம்பெரி தாகலின்

அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்
இன்பமும் இடும்பையும் ஆகிய இடத்தும்
கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நளியின் நீக்கிய இளிவரு நிலையும்

புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு
அகன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி
இயன்ற நெஞ்சந் தலைப்பெயர்த் தருக்கி
எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்
தங்கிய ஒழுக்கதுக் கிழவனை வணங்கி

எங்கையர்க் குரையென இரத்தற் கண்ணும்
செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும்
காமக் கிழத்தி தன்மகத் தழீஇ
ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்
சிறந்த செய்கை அவ்வழித தோன்றி

அறம்புரி நெஞ்சமொடு தன்வர வறியாமைப்
புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானும்
தந்தையர் ஒப்பர் மக்களென் பதனால்
அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கினும்
கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது

நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்
பகுதியின் நீங்கிய நகுதிக் கண்ணும்
கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி
அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காதல் எங்கையர் காணின் நன்றென

மாதர் சான்ற வகையின் கண்ணும்
தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப் பரத்தை உள்ளிய வழியும்
தன்வயின் சிறப்பினும் அவன்வயின் பிரிப்பினும்
இன்னாத் தொல்சூள் எடுத்தற் கண்ணும்

காமக் கிழத்தி நலம்பா ராட்டிய
தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும்
கொடுமை ஒழுக்கத்துத் தோழிக் குரியவை
வடுவறு சிறப்பிற் கற்பில் திரியாமைக்
காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்

ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்
வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவ தென்ப. 1091

*தலைவனது மேம்பாட்டினைத் தலைவி செவ்வென அறியுமாகலின் அவனைச் சிறப்பித்துக் கூறுமிடத்தும்; தலைவன் பண்பினைத் தோழி கூறுமிடத்துத், தான் நிரல்பட நிறைவாகக் கூறுமிடத்தும்; தனக்கு உரிமையை வழங்கிய தலைவனின் பெருமையில் மாறுபடாது ஒழுகும் அன்பொத்த செயலிடத்தும்; தலைவனை நீங்கித் தனியாகவிருத்தல் தலைவிக்கு வருத்தம் மிகுமாகலின், ஆண்டு மனக்கலக்கம் பெருகிய அன்பின் மிகுதிக்கண்ணும்; தனக்கு இன்பமும் துன்பமும் ஒருபடித்தாக நிகழும் வழியும்; புதல்வனைப் பெற்று நெய்தேய்த்து நீராடிய தலைவியை, அடைய விரும்பும் தலைவனை, நெஞ்சுகலையுமாறு செய்து, தன்னைப் பொருளெனக் கருதவில்லை என்று எண்ணுமிடத்தும்; விருப்புமிக்க உள்ளத்தோடு பரத்தையின் மாட்டு இன்பம் வெஃகி நீங்கிய தனது வருத்தமிகுதி காட்டி, அவளை வெஃகும் உள்ளத்தை அடக்கி, அவள் விரும்பிய பரத்தையரையும் எடுத்துக் காட்டிக் கூட்டத்திற்கு உடன்படாத, முற்றும் வெருத நிலையின்கண்ணும்; பரத்தையர் மாட்டுச் சென்று தங்கும் ஒழுக்கமுடைய தலைவனை வணங்கி, 'என்பால் கூறுவனவற்றை என் தங்கையராகிய உன் இன்பத்திற்கு உதவும் பரத்தையரிடம் சென்று கூறுவாயாக' என்று கூறுதற்கண்ணும்; தலைவன் பரத்தையர் மாட்டுச் செல்லாது, தன மனைக்கண்ணே தங்கிய காலத்து, 'ஆண்டே செல்வாயாக' என்று, தன்*

உள்ளடக்கிக் கூறுதற்கண்ணும்; காமக்கிழத்தி, தலைவியின் பின்னோராய எடுத்துக் கழுவி இன்பமுற்ற விளையாட்டின் இறுதியில் கூறுதற்கண்ணும்; சிறந்த செய்கையினையுடைய அந்நேரத்துக்கண் தலைவன் வந்து, அறத்தினை விரும்பும் உள்ளத்தோடே, தன் வரவினைத் தலைவி அறியாதவாறு நின்று, தலைவியின் புறத்தே நிற்றக்கால், அவன்மாட்டு உளதாகிய ஊடலைப் போக்க வேண்டின விடத்தும்; 'தந்தையை ஒப்பர் மக்கள்' எனும் முதுமொழியைக் கூறிக் குறைவற்ற சிறப்பினையுடைய தன் மகனைப் பற்றிக் கூறுதற்கண்ணும்; கொடியோரது கொடுமைகள் வருத்தஞ் செய்கிறது' என்று, கூட்டத்தை இடையீடு படுத்தாது புகழை நச்சுவார் சொல்லுடன் ஒன்றுபட்டுக், கூட்டத்தை நயந்த தகைப்பாட்டின் கண்ணும்; தலைவனது பரத்தைமை ஒழுக்கத்தைத், 'தலைவியே பொறுத்துக் கொள்ள வேண்டும்' என நினைந்து, வீழ்ந்து வணங்கும் தலைவனைத் தூக்கி விட்டு, 'நீவிர் செய்கின்ற இச்செயலை என் தங்கையர்களாகிய பரத்தையர்கள் கண்டால் மிகவும் நன்றாகவிருக்குமோ?' என்று, அப்போது கூடிய வகையினிடத்தும்; பரத்தையரால் அணியப்பெற்ற நல்ல அணிகலனையுடைய தன் புதல்வனைக்கண்டு, மயக்குதல் வல்ல பரத்தையரின் செயலைக் குறிப்பிட்ட விடத்தும்; தன்மாட்டு உளதாகிய மேம்பாட்டினாலும், தலைவன் மாட்டுளதாகிய தகைப்பாடின்மையாலும், முன்னர்க்கூறிய குற்றவினைக் கூறுமிடத்தும்; காமக்கிழத்தியின் நலத்தினைப்பாராட்டித் தன்னை இழித்துக் கூறிக்கொள்ளுமிடத்தும்; தலைமகனது கொடுமை நிறைந்த ஒழுக்கத்தைத் தோழிக்குக் கூறுதற்குரிய வாற்றைக் குற்றமற்ற சிறப்பினையுடைய கற்பில் மாறுபடாது, தலைவனை வெறுத்துக் கூறலும், மகிழ்ந்து கூறலும், புலந்து விலக்கி ஒழுகுதலும், தழீஇக் கொள்ளுதலும் முதலியனவாக அவ்விடத்து வேறுபட்டு வருவனவாகிய பல நிகழ்ச்சிகளிடத்தும்; வாயில்களாவாரிடத்து வரும் சொல்நிகழ்ச்சி உளப்பட, இன்னபிற இடங்களில் தலைவிக்குக் கூற்று நிகழும் என்பர்.

## தலைமகட்கு உரிய கிளவி—தொடர்ச்சி

புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்து
இடைச்சுரத் திறைச்சியும் வினையுஞ் சுட்டி
அன்புறு தக்க கிளத்தல் தானே
கிழவோன் செயவினைக்கு அச்ச மாகும். 1092

*களவுக்காலத்துத் தலைவனுடன் சேர்ந்து உடன்போக்குப் போகிய தலைமகள், கற்புக்காலத்து வீட்டின்கண் இருந்து கொண்டு, 'தான் முன்னர் பாலைவழியில் தலைவனுடன் கண்ட கருப்பொருள் முதலியவற்றையும், அவற்றின் தொழிலையும் குறித்துத், தலைவன் அன்புறுதற்குத் தக்கவற்றைக் கூறுதலே, தலைமகன் செய்யும் தொழிலுக்கு அஞ்சும் அச்சமாகும். எனவே, புணர்ந்துடன் போகாத தலைவி, அங்ஙனமிருந்து கூறுதல் தலைவனுக்கு அச்சமாகாது என்க.*

தோழியுள் உறுத்த வாயில் புகுப்பினும்
ஆவயின் நிகழும் என்மனார் புலவர். 1093

*தோழி முதலிய வாயில்களாவாரைத் தலைமகன் மாட்டுத் தூதாக அனுப்பியவிடத்தும், முற்கூறிய அச்சப்பண்பு நிகழும் என்று சொல்லுவர் புலவர்.*

### *தோழிகூற்று நிகழும் இடம்*

பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த
தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணும்
அற்றமழி வுரைப்பினும் அற்றம் இல்லாக்
கிழவோற் சுட்டிய தெய்வக் கடத்தினும்
சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினும்
அடங்கா ஒழுக்கத் தவன்வயின் அழிந்தோளை
அடங்கக் காட்டுதற பொருளின் கண்ணும்
பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி
இழைத்தாங் காக்கிக கொடுத்தற் கண்ணும்
வணங்கியல் மொழியின் வணங்கற் கணணும்
புறம்படு விளையாட்டுப் புல்லிய புகர்ச்சியுஞ
சிறந்த புதல்வனைத் தேராது புலம்பினும்
மாணலந் தாவென வகுத்தற் கண்ணும்
பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும்
சூள்வயின் திறத்தால் சோர்வுகண் டழியினும்
பெரியோர் ஒழுக்கம் பெரிதெனக் கிளந்து
பெறுதகை யில்லாப் பிழைப்பினும் அவ்வழி
உறுதகை யில்லாப் புலவியின் மூழ்கிய
கிழவோள் பால்நின்று கெடுத்தற் கண்ணும்
உணர்ப்புவயின் வாரா ஊடலுற் றோள்வயின்
உணர்த்தல் வேண்டிய கிழவோன பால்நின்று
தானவெகுண் டாக்கிய தகுதிக் கண்ணும்
அருமைக் காலத்துப் பெருமை காட்டிய
எளிமைக் காலத் திரக்கத தானும்
பாணர் கூத்தர் விறலியர் எனறிவர்
பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்

நீத்த கிழவனை நிகழுமாறு படீஇயர்
காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்
பிரியுங் காலத் தெதிர்நின்று சாற்றிய
மரபுடை எதிரும் உளப்படப் பிறவும்
வகைபட வந்த கிளவி யெல்லாம்
தோழிக் குரிய என்மனார் புலவர். 1094

பெறுதற்கு இயலாத பெரும்பொருளை ஈட்டி வந்த தலைமகனை வெறுத்து நோக்காத வழக்கு ஏதுவாகச், சிறப்பித்துக் கூறுமிடத்தும்; முன்பு அனுபவித்து வாராநின்ற வருத்தம் நீங்கினமையைக் கூறுமிடத்தும்; குற்றமில்லாத் தலைமகன் நலன் கருதித் தெய்வக்கடன் புரியுமிடத்தும்; சிறப்புடைய இற்கிழமையினிடத்துத் தலைமகளை மறந்து பிறிதொன்றன் மாட்டுத் தாழ்ந்தொழுகும் தலைமகன் நிலையினிடத்தும்; தலைமகனது பெருமையிற் பிறழ்ந்த வொழுக்கத்தின் காரணமாக உளமழிந்த தலைவியின் மாட்டு, அவள்தன் பெருமை கூறுமாகத்தான் ஆற்ற உரைத்தற்கண்ணும்; பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டு சென்று வந்த தலைமகனை நெருங்கித், தலைவியைத் தலைவி செய்யும் கடப்பாட்டை உணர்த்தித், தலைவியைத் தலைமகற்கு அளித்தற்கண்ணும்; தலைமக்கள் மாட்டு வணங்கிய சொற்களுடன் வணங்கி யொழுகுமிடத்தும்; நாடோறும் தலைவியைப் பிரிந்து, பரத்தையர் சேரியில் வாழும் குற்றம் தலைமகன்மாட்டு உளதாகியவிடத்தும்; சிறந்த புதல்வனையும் நினையாது, தலைமகன் பிரிந்து வாழும் நிலைமையின்கண்ணும்; 'நீ தலைவியிடமிருந்து கவர்ந்துகொண்ட மாண்புமிக்க [illegible] கொடுத்துவிட்டுப் பின்செல்க' என்று கூறுமிடத்தும்; தலைமகன் ஒழுக்கம் ஏதுவாகத், தலைமகள் அவனைப் பேணாத போது நாணியவிடத்தும்; தலைமகன் தொடக்கத்தில் தலைவியின் மாட்டுக் கூறிய உறுதிமொழியில் பிழைத்தமை கண்டு, தலைவி அழிந்து கூறுமிடத்தும்; பெரியவராகிய தலைமகனது ஒழுகலாறு மிகவும் பெருமையுடையதாகும்; நீயோ பெருமையிற் பிழைத்தனை என்று மறைமுகமாகத் தலைவனைக் கோபித்தற்கண்ணும்; மேற்கூறிய வாராநின்ற தகுதி ஒழுக்கத்தில் நிற்கும் தலைமகன் செயல் பொறாது, புலவியுள் மிக்குநின்ற தலைவியின் மாட்டுநின்று, அவள் தன் ஊடலைக் கெடுத்தற்கண்ணும்; அவ்வழியும் அவள் தன் ஊடல் நீங்காமை கண்டு, அவ்வூடலை நீக்கும்பொருட்டுத் தலைமகன்மாட்டு நின்று அவனை இடித்துக் கூறுதற்கண்ணும்; அரிய நிலைமையாகிய களவுக்காலத்துத் தனக்கு இருந்த பெருமையையும் எளிய நிலைமையவாகிய கற்புக்காலத்துத் தனக்குரிய பெருமையின்மையையும் எண்ணித், தலைமகள் இரங்குதற்கண்ணும்; பாணர், கூத்தர், விறலி என்றின்னோரன்னர் தலைமகன் வாயிலாக வந்து குறையுற்று நிற்கும் இடத்

தும்; தலைவியை நீங்கிப் புறத்தொழுக்கு ஒழுகும் தலைமகனை, அவற்றினின்றும் மாற்றித் தலைமகளுடன் வாழ்தலைச் செய்ய விரும்பித், தன்னைக் குறையுற்று இருந்தவிடத்துக், கண்ணோட்டமின்றி நீக்குதற்கண்ணும்; தலைமகன் சேய்மைக்கண் பிரியுங்கால் தன்மாட்டுக் கூறுவனவற்றிற்கு மரபில்வழாது மாறுபட்டுக் கூறுமிடத்துமாகிய இன்னோரன்ன விடத்தும், பிறவிடத்தும், முறையாக வரும் கூற்றெல்லாம் தோழிக்கு உரியனவென்று சொல்லுவர் புலவர்.

## காமக் கிழத்தியர் கூற்று நிகழுமிடம்

புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்
இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்
பல்வேறு புதல்வர்க் கண்டுநனி உவப்பினும்
மறையின் வந்த மனையோள் செய்வினை
பொறையின்று பெருகிய பருவரற் கண்ணும்
காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையில்
தாய்போல் கழறித் தழீஇய மனைவியைக்
காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணும்
இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழையணிந்து
பின்னை வந்த வாயிற் கண்ணும்
மனையோ ளொத்தலின் தன்னோர் அன்னோர்
மிகையெனக் குறித்த கொள்கைக் கண்ணும்
எண்ணிய பண்ணையென் றிவற்றொடு பிறவும்
கண்ணிய காமக் கிழத்தியர் மேன. 1095

தலைவன், தன்னைத் தழீஇத் துய்க்கும்நிலை இடையீடுபட்டவிடத்துப் புலவி காரணமாகக் கூறுதலும்; மனையகத்தோர் (தலைவன், தலைவி) செய்த வினையைப் பழித்துக் கூறுமிடத்தும்; வெவ்வேறாகிய புதல்வரைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியுற்றவிடத்தும்; களவொழுக்கின்வழி வாராதாகிற்கும் மனைவியாவாளின் செயல்திறங் கண்டு, பொறுமையின்றிப் பெருகிய துன்பமிகுதிக் கண்ணும்; தன்மாட்டுள்ள காதல் சோர்விலும், ஒப்புரவு என்னும் பெருந்தக்க கொள்கை உடைமையானும், தாய்போல் நின்று தலைமகனை இடித்துரைத்துக் கூட்டப்பட்ட மனைவியைக் காய்தலின்றித், தலைமகனுடன் கூட்டுதற்கணணும்; இன்பந்தரும் சிரிப்பினையுடைய புதல்வனை எடுத்தணைத்து அணிகள் அணிவித்துப், பின்னர் அதுவே வாயிலாகத் தலைமகன் வந்தவிடத்தும்; தான் மனைவியைப்போன்றே இருத்தலான் தன் போல்வார் பலர் தலைவற்கு இருத்தல் மிகுதியாகும் என்று எண்ணிய உட்கோளிடத்தும்; தலைமகனுடன் யாறு இளமரக்கா முதலியவற்றிற்குச் சென்று விளையாடுமிடத்தும்; இதுபோன்ற பிறவிடங்களிலும் காமக்கிழத்திக்குக் கூற்று நிகழும் என்பர்.

வாயில்கள் கூற்று நிகழுமிடம்

கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்
முகம்புகல முறைமையிற் கிழவோற் குரைத்தல்
அகம்புகல் மரபின் வாயில்கட் குரிய. 1096

தலைவியின் கற்புமேம்பாட்டினையும், அன்பின் மிகுதியையும், சிறந்தனவாகிய பாகுபாடமைந்த இல்லக்கிழமைக்குரிய ஒழுக்கமுடைமையையும், மெல்லியலாம் பொறுமைக் குணத்தினையும், அடக்கமாகிய தலையொழுக்கம் உடைமையினையும், வன்மையாகத் தங்கள் வீட்டுக்குவரும் விருந்தினரை ஏற்று நடத்தும் பெற்றியும், சுற்றத்தினரை அன்பொடு தழீஇப் பாதுகாத்தலும், இது போன்ற பற நற்பண்புகளையுடைய தலைவியின் மாண்பினையும்; தலைவன் விரும்புமாற்றான் உரைத்தல், அகம்புகும் உரிமையினையுடைய வாயில்களாவார்க்கு உரியனவாம்.

செவிலிக்குக் கூற்று நிகழுமிடம்

கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய ஆகும் என்ப. 1097

இறந்த காலத்தினும், நிகழ் காலத்தினும், எதிர் காலத்தினும், தன் குலத்திலுள்ளார் கைக்கொண்டொழுகுமாறு நல்லனவற்றைக் கூறுதலும், அல்லனவற்றைக் கடிதலும், செவிலிக்கு உரிமையுடையவாம்.

அறிவர் கூற்று நிகழுமிடம்

சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய. 1098

மேற், செவிலிக்குரியனவாகக் கூறப்பட்ட சொற்கள் அறிவர் என்பார்க்கும் உரியன என்பதாம்.

அறிவர்க்குரிய மரபு

இடித்துவரை நிறுத்தலும் அவர தாகும்
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின். 1099

அறிவர் எனப்பார், தலைமக்களை இடித்துரைத்து நல்வழியில் நிறுத்தும் உரிமை பெற்றவர். ஏனெனில், தலைவனும் தலைவியும் அவர் எண்ணப்படி நின்றொழுகலான் என்பதாம்.

## தலைமகன் புலக்குமிடம்

உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி பிழைப்பினும்
புலத்தலும் ஊடலும் கிழவோற் குரிய. 1100

*கற்புக்காலத்துத் தலைவியின் ஊடல் எல்லை கடப்பினும், களவுக்காலத்துக் குறி (இடம்) பிழைப்பினும், அது காரணமாகத், தலைமகன் சற்றே வருந்துதலும், நீண்டபொழுது வருந்துதலும் உண்டு.*

## தோழிக்குரிய மரபு

புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்
சொலத்தகு கிளவி தோழிக் குரிய. 1101

*தலைவன் தலைவி காரணமாகப் புலத்தலும் ஊடலும் கொண்டவழிச் சொல்லத்தக்க பணிவான மொழிகள் தோழிக்கு உரியனவாம்.*

## தோழிக்கு உரியதோர் மரபு

பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழவி
மடத்தகு கிழமை உடைமை யானும்
அன்பிலை கொடியை என்றலும் உரியள். 1102

*தோழி, தலைவனது பரத்தையர் ஒழுக்கத்தை நிறுத்தக் கருதியும், தலைவியினுடைய இளமையோடுகூடிய உரிமையாகிய உடைமைச் சிறப்பைக் கூறுதற்கும், 'அன்பிலை, கொடியை' என்று தலைமகனை இழித்துக் கூறலும் உண்டு.*

## தலைவி பிறன்போலச் சுட்டிக் கூறுதல்

அவன்குறிப் பறிதல் வேண்டியும் கிழவி
அகம லியூடல் அகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றம் பெறுமே. 1103

*தலைவனது குறிப்பை அறிதல் விரும்பியும், தலைவிதனது உளம் நிறைந்த ஊடல் நீங்குமிடத்தும், தலைமகனைப் பிறன் போலக் கூறும் சொற்களும் தலைமகளுக்கு உள்ளனவாம். (எ-டு) "யாரையோ எம்மில் புகுதருவாய்" (கலி—98) என வந்தவாறு காண்க.*

## தலைமகனுக்கு உரிய பணிவான பேச்சு

காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வழிபடு கிழமை அவட்கிய லான. 1104

காமவேட்கை மிகுதிபட்டவிடத்துப் பணிவான மொழி களைக் கூறியும் இரந்து நிற்றும் நிலைமை, ஆராயுமிடத்துத், தலைமகனுக்குரியவாகும். அது இயல்பாகவே, தலைமகனை வழிபட்டுத் தாழ்ந்தொழுகும் உரிமை தலைமகளுக்கு உரிமையாம்.

## அன்பு பொதிந்த பேச்சு

**அருள்முந் துறுத்த அன்புபொதி கிளவி**
**பொருள்பட மொழிதல் கிழவோட் குரித்தே. 1105**

அருளொடுபட்ட அன்பு நிறைந்த சொற்களை உண்மை யாகக் கூறுதல் தலைமகளுக்கு உரியதாம்.

## அலர் எழுதலைப் பற்றியது

**களவுங் கற்பும் அலர்வரை வின்றே. 1106**

களவொழுக்கம் கற்பொழுக்கம் ஆகிய இரண்டிலும், அலர் (பழி) தூற்றுதல் என்பது வரையறைசெய்த தொன்றன்று; ஓரோவழி நிகழ்தலும் உண்டு; நிகழாமையும் உண்டு என்ப தாம்.

(எ-டு) ''கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாப்புகொண் டற்று.'' (குறள்.)

என வந்தவாறு காண்க.

## அலரினால் காமம் மிகுதியாதல்

**அலரில் தோன்றும் காமத்து மிகுதி. 1107**

பிறர் அலர் தூற்றியவிடத்துத், தலைமக்களுக்குக் காம வேட்கை அதனாலே மிகும் என்பதாம்.

(எ-டு) ''ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்.'' (குறள்).

என காண்க.

## கிழவோன் விளையாட்டால் மிகுதிப்படல்

**கிழவோன் விளையாட் டாங்கும் அற்றே. 1108**

தலைவன், பரத்தையர் மாட்டுப் பிரிந்து ஆடல் பாடல் நிகழ்த்தலும், யாறு குளம் ஆடுதலும், காமம் மிகுதற்குத் துணை யாகும் என்பதாம்.

## மனைவிபால் கணவனின் கொடுமையைக் கூறார்

**மனைவி தலைத்தாட் கிழவோன் கொடுமை**
**தம்முள வாதல் வாயில்கட் கில்லை. 1109**

தலைவி, தலைவனிடம் வெறுப்புக் கொண்ட வழியும், தலைவனுடைய கொடுமையினைத் தலைவிக்குக் கூறுதல் தோழி முதலிய வாயில்களாவார்க்குக் கிடையாது.

## மனைவிக்கு உறுதியுள்ளபோது கூறுவர்

மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக் குறுதி உள்வழி உண்டே. 1110

தலைவியாவாள் உறுதியாக உள்ளவிடத்துக் கையற்று (செயலற்று)க் கூறுஞ்சொல் வாயில்கட்கும் உண்டு.

## வாயில்கட் குரியதோர் மரபு

முன்னிலைப் புறமொழி எல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர். 1111

தலைவன் முன்பாக நிற்கவும், அவனுக்கு அயலதாக வைத்துக் கூறுஞ்சொல் நிகழ்ச்சி, வாயில்களாவார் யாவர்க்கும் உண்டு; அதுதானும், தலைவியின் குறைவினை நிறைவுசெய்ய விரும்பி முயலுமிடத்து என்று சொல்லுவர் புலவர்.

## கூத்தர்க்கு உரிய திறம்

தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்
பல்லாற் றானும் ஊடலில் தகைத்தலும்
உறுதி காட்டலும் அறிவுமெய்ந் நிறுத்தலும்
ஏதுவின் உரைத்தலும் துணியக் காட்டலும்
அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன. 1112

'முற்பட்டவர்கள் இவ்வாறு செய்வார்கள்' எனக் கூறுதலும்; 'இன்பம் நுகர்தல் இனியதொன்' றெனப் புகழ்தலும்; பலவகையானும் ஊடல் கொண்டோரை அவ்வூடலினின்று நீக்குதலும்; 'ஊடல் தணிந்தால் அடையும் பலன் இது' வென உறுதியை உணர்த்தலும்; தலைமகளுக்கு அறிவுகொளுத்துதலும்; பல ஏதுக்களைக் கூறி, அதனுன் வரும் பயனை எடுத்துக் காட்டலும்; ஒன்றன்பால் துணியுமாறு காரணங் காட்டுதலும்; அழகின் பெருமையை எடுத்துக்கூறலும், ஆகிய இவையெல்லாம், 'கூத்தர்' என்பார்க்கு உரியனவாகும்.

## கூத்தர்க்கும் பாணர்க்கும் உரிய கிளவி

நிலம் பெயர்ந் துரைத்தல் அவள்நிலை உரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய. 1113

தலைமகன் பிரியுங்காலத்துத், தலைவிக்குப் பின்நிகழக் கூடியவற்றைக் கூறுதலும்; பிரிந்து வந்தான் மாட்டுத் தலைவி இருந்த

நிலையை உணர்த்துதலும் ஆகியன கூத்தர் பாணர் ஆகிய இரு வருக்கும் உரிய தொழிலாகும்.

## இளையோர்க்குரிய கிளவி

> ஆற்றது பண்பும் கருமத்து விளைவும்
> ஏவன் முடிபும் வினாவும் செப்பும்
> ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும்
> தோற்றம் சான்ற அன்னவை பிறவும்
> இளையோர்க் குரிய கிளவி என்ப. **1114**

உடன்போக்கு ஒருப்பட்ட தலைமக்கள்மாட்டுச் செல்லும் வழியின் நிலையினை உணர்த்துதலும்; செய்யும் செயலால் விளை யும் பயனைக் கூறுதலும்; தலைமக்கள் ஏவியவற்றை முடித்துக் காட்டலும்; தலைவன் வினவியவற்றிற்கு விடையிறுத்தலும்; தலைவன் வினவாவிடத்தும் அவர்கள் நலன்கருதிக் கூறத்தக்கன கூறுதலும்; செல்லும் வழியில் கண்ட பொருள்களைக் (நிமித்தம்) கூறுதலும்; இன்பபல உணர்த்தும் உயிரில் பொருள்களை எடுத் துக் காட்டிபாயினும், ஊறு செய்வாரை விலக்கிக் கூறியும், எடுத்துக் கூறுதலும் இளையோர் என்னும் வாயிலோர்க்கு உரியனவாகும்.

> உழைக்குறுந் தொழிலுங் காப்பும் உயர்ந்தோர்
> நடக்கை எல்லாம் அவர்கட் படுமே. **1115**

அருகிருந்து குற்றேவல் செய்தலும், மெய்காத்தலும், பிற வும், உயர்ந்தோர்க்குளதாகிய ஒழுகலாறு யாவும் இளையோர் என்பார்க்கும் உண்டு.

## தலைமகனுக்கு உரிய மரபு

> பின்முறை யாகிய பெரும்பொருள் வதுவைத்
> தொன்முறை மனைவி யெதிர்ப்பாடு ஆயினும்
> மின்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினும்
> கிழவோன் இறந்தது நினைஇ ஆங்கண்
> கலங்கலும் உரியன் என்மனார் புலவர். **1116**

பழமையாகிய (களவில்பெற்ற) மனைவியையே, பின்னர் உலகியல் வழக்கப்படி சிறப்பு அமைந்த வதுவை முறைப்படி மணஞ்செய்து கொண்டபின், அவள், தான் பரத்தையர் வீட்டிலி ருந்து வந்தவுடன் எதிர்ப்பட்ட விடத்தும்; ஒளிபொருந்திய அணி கலன்கள் அணியப்பெற்ற தன் புதல்வனை வாயிலாகக் கொண்டு புக்கவிடத்தும்; தலைவன் கடந்தகால நிகழ்ச்சியினை (தலைவி யைப் பிரிந்து பரத்தையர் ஒழுக்கத்தினை மேற்கொண்டதை)

நினைந்த அப்பொழுதேயும், தலைவன் கலங்குதலும் உண்டு என்று சொல்லுவர் புலவர்.

## தலைமகட்கு உரியதோர் கிளவி

தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான. 1117

பரத்தையர் வீட்டிலிருந்து பிரிந்து வந்தனிலும் தலைமகள் சிறந்தாள் என்று எண்ணுமாறு, தாய் போன்று அவனை இடித்துரைத்து, அவன் மனக்கவறலை நீக்கிப், பண்டுபோல் கொண்டொழுகும் பெருந்தன்மை, மனையறம் பொருந்திய இல்லக்கிழத்திக்கும் உண்டு என்று சொல்லுவர் புலவர், அவன் முயக்கத்தால் மயங்கியவிட

## காமக்கிழத்தியை ஒப்பாக எண்ணுதல்

அவன் சோர்வு காத்தல் கடனெனப் படுதலின்
மகன் தாயுயர்புந் தன்னுயர் பாகுஞ்
செவ்வன் பணிமொழி இயல்பாக லான. 1118

தான் நடாத்துகின்ற இல்லறம் பிழைபடாது பாதுகாத்தல், தலைவிக்குக் கடமையாதலால், தன் மகனுக்குத் தாயாகிய காமக் கிழத்தியைத் தன்னின் தாழ்ந்தாள் என எண்ணாது, தன்னொடு ஒப்பாள் என எண்ணுவது தனக்கு உயர்வைத் தரும்; தலைவன் ஒழுகுந்திறம் உணர்த்திபதன்மை அதுவாகலான் என்பதாம்.

## பாசறையிலே தலைமகளோடு கூடார்

எண்ணரும் பாசறைப் பெண்ணொடும் புணரார். 1119

எண்ணுதற்கரிய படைவீட்டின்கண், தலைமகளிரோடும் கூடார் தலைமக்கள்.

## பரத்தையரைப் பாசறையிற் கூடுதலும் உண்டு

புறத்தோர் ஆங்கண் புணர்வ தாகும். 1120

மேற்கூறிய படைவீட்டின்கண், புறப்பெண்டிர் (பரத்தையர்) கூட்டத்துடன் தலைமக்கள் பொருந்துதலும் உண்டு.

## பார்ப்பார்க்கு உரிய கிளவி

காமநிலை உரைத்தலும் தேர்நிலை உரைத்தலும்
கிழவோன் குறிப்பினை எடுத்துக் கூறலும்
ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும்

செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க்கு உரிய. 1121

'நீ பிரிந்து செல்வையாயின் தலைவியின் வேட்கை மிகும்' எனக் கூறுதலும்; தலைமகன் செலவு ஏதுவாக நிகழும் நிகழ்ச்சியினை ஆராய்ந்து கூறுதலும்; தலைவன் எண்ணத்தைத் தலைவிக்குக் கூறுதலும்; அவின்பால் நிகழும் நிகழ்ச்சியினை நிமித்தமாகக் கொண்டு கூறுதலும்; 'தலைமகன் பிரிந்து போயினன்' என்று கூறுதலும்; 'செல்லாது ஈண்டே தங்குதல் வேண்டு' மெனக் கூறுதலும்;இவை போல்வன பிறவும் பார்ப்பார்க்கு (நன்மை தீமையைச் சீர்தூக்கிப் பார்ப்பவர்—காரணப் பெயர்.) உரியன வாகும்.

## வாயில்கள் இருவர்பாலும் மகிழ்பவர்

எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப. 1122

வாயில்களாவார் யாவரும், தலைமக்கள் இருவர் தேயத்து மட்டும் மகிழ்ச்சிபொருந்திய பொருண்மையை உடையர்.

## சிறைப்புறத்து அன்பற்றுப் பேசுதல்

அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்
சிறைப்புறங் குறித்தன் றென்மனார் புலவர். 1123

வாயில்களாவார், அன்பு நீங்கிய (கடுஞ்சொல்) சொற்களைச் சொல்வார்களாயின், தலைவனாயினும் தலைவியாயினும் சிறைப் புறத்தா ராகவுள்ள குறித்தே என்று கூறுவர் புலவர்.

## தலைவன் முன்னர்த் தலைவி புகழ்தல்

தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்தல்
எத்திறத் தானும் கிழத்திக்கு இல்லை
முற்பட வகுத்த இரண்டலங் கடையே. 1124

தலைவன் முன்னர்த் தன்னைப் புகழ்ந்துகூறுதல் எவ்விடத்தும் தலைவிக்குக் கிடையாது; முன்னால் கூறுபடுத்திக் காட்டிய, 'தாய்போற் கழறித் தழீஇக் கோடலும்', அவன் சோர்புகாத்தற் பொருட்டு, "மகன் தாயுயர்பு தன்னுயர் பாகும்" என்னும் இரண்டு இடமும் அல்லாதவிடத்து என்பதாம்.

## தலைவிமுன்னர் தலைவன் புகழ்தல்

கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி
கிழவோன் வினைவயின் உரிய என்ப. 1125

தலைவன், தலைவியின் முன்னால் தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் வினைவயிற் பிரியுமிடத்து உண்டு.

(எ-டு) "இல்லென இரந்தோர்க்கொன் றீயாமை இழிவு"
(கலி—2)

என வந்தவாறு காண்க.

## பாங்கர் மறுத்தும் உரைப்பர்

மொழிஎதிர் மொழிதல் பாங்கற் குரித்தே. 1126

தலைவன் கூறுமவற்றிற்கு உடன்படாது மறுத்துக் கூறுதலும் பாங்கர் என்பார்மாட்டு உண்டு என்பதாம்.

(எ-டு) "பொருள் பொருளார் புன்னலந் தோயார் அரும்பொருள்
ஆயும் அறிவி னவர்." (குறள்)

என வந்தவாறு காண்க.

## மறுத்தல் அருகியே வரும்

குறித்தெதிர் மொழிதல் அஃகித் தோன்றும். 1127

அவ்வாறு மறுத்துக்கூறும் நிகழ்ச்சி ஒரோவழி அரிதாகவே வரும் என்பதாம்,

## வற்புறுத்தியல்லது சேறல் இல்லை

துன்புறு பொழுதினும் எல்லாங் கிழவன்
வன்புறுத் தல்லது சேறல் இல்லை. 1128

தலைவன் ஏதுவாகத் தலைவி வருத்தமுறும் வாயெல்லாம், அவளை ஆற்றியிருக்கும் ஏதுக்காட்டி வற்புறுத்தியல்லது, தலைவன் அவளைச் சேறலில்லை என்பதாம்.

## செலவிடை அழுங்கல்

செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே
வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும். 1129

தலைவன், தலைவியை விட்டுப்பிரிந்து, பின் இடை மடங்குதல் செலவே தவிர்ந்தன்று; ஆற்றுது புலம்பும் தலைவியை வற்புறுத்தி ஆற்றியிருக்கச் செய்துவிட்டுப், பின்னர் மீண்டும் செல்லும்பொருட்டே யாகும்.

## தொழிலிடத்துக் கிழவியை உரையார்

கிழவி நிலையே வினையிடத் துரையார்
வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும். 1130

வினைமேற் கொண்ட தலைமகன்மாட்டுத் தலைவியின் நினைவு எழாது; எனவே, வினை முடிந்தவிடத்துத் தோன்றுதல் வெளிப்படை என்பதாம்.

## பன்னிரண்டு நாட்கள் பிரியான்

பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான. 1131

பரத்தையர் பிரிவில் நின்றகாலத்து உண்டான, பூப்புத் தோன்றி நிகழும் மூன்றுநாளும் சொற்கேட்கும் வழி ஒழுகி நின்று, பிற்பட்ட பன்னிரண்டு நாளும் தலைவியை நீத்துத் தலைவன் உறைதல்பெறான் என்று சொல்லுவர் புலவர்.

## மூன்றாண்டுகளே கல்விப் பிரிவு

வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது. 1132

எவ்வோராலும் விரும்பப்படுகின்ற கல்வி காரணமாகப் பிரியும் பிரிவு, மூன்று யாண்டுகளுக்கு உட்பட்டவே அமையும் என்பதாம்.

## வேந்துறு தொழில் ஓராண்டிற்குள்

வேந்துறு தொழிலே யாண்டினது அகமே. 1133

வேந்தற்குரிய தொழிலாகிய தூதிற்பிரிவு, நாடு காவற் பிரிவு முதலிய பகைதணிவினைப் பிரிவு ஆகியன ஓராண்டுக்கு உட்பட்டவே அமையும் என்பதாம்.

## பொருட்பிரிவும் ஓராண்டிற்கு உட்பட்டதே

ஏனைப் பிரிவும் அவ்வியல் நிலையும். 1134

எஞ்சிய பொருளீட்டற்குப் பிரியும் பிரிவும் ஓராண்டிற்கு உட்பட்டவே அமையும் என்பதாம்.

## பதி இகந்து இன்பம் நுகர்தல்

யாறுங் குளனும் காவும் ஆடிப்
பதிஇகந்து நுகர்தலும் உரிய என்ப. 1135

தலைவன் தலைவியுடனும் காமக்கிழத்தியுடனும் இல்லாகத்தின் புறத்தே சென்று, யாற்றிலும் குளத்திலும் நீர்க்குடைந் தாடுதலும், இளமரக்காவிற் சென்று விளையாடுதலும், ஆகிய நிகழ்ச்சிகளால் இன்பம் நுகர்தலும் உண்டென்று சொல்லுவர்

புலவர். (தலைவி அவ்வாறு செல்லுதல் ஓரோவழியே எனவும் உணர்க).

## சிறந்தது பயிற்றல்

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறமபுரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே. 1136

*தலைவனும் தலைவியும் இன்பம் நுகர்ந்து முடிந்த முதுமைக் காலத்தின்கண், மீண்டும் சிற்றின்பத்தின் கண்ணேயே தாழாது, பாதுகாவல் அமைந்த மக்கட்செல்வத்துடனும், அறத்தையே நாடுகின்ற உறவினருடனும் கூடி வாழ்ந்துகொண்டு, சிறந்ததாகிய பேரின்பத்தை அடையும் வழியிலே பழகுதலே இப்பிறப்பினுடைய பயனாக அமையும்.*

## கற்பின்கண் வாயில்கள்

தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி இளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப. 1137

*தோழி முதலாகக், கண்டோர் இறுதியாகவுள்ள பன்னிருவரும், அகவொழுக்கிற்குப் பொருந்திய வாயில்கள் என்று சொல்லுவர் புலவர்.*

## திரும்புவான் இடையே தங்கான்

வினைவயின் பிரிந்தோன் மீண்டுவரு காலை
இடைச்சுர மருங்கில் தவிர்தல் இலலை,
உள்ளம் போல உற்றுழி உதவும்
புள்ளியற் கலிமா உடைமை யான. 1138

*யாதாயினுமோர் வினைகாரணமாகப் பிரிந்து சென்ற தலைமகன், அவ்வினை முடிந்து வருங்காலத்து, எவ்வளவு நீண்ட வழியாயினும், இடையிடத்துத் தங்கிவருவது என்பது கிடையாது; தனது உள்ளம் நினைத்த ஒன்றை விரைந்து சென்று முடிக்குமாறு போலத், தக்காங்கு உதவும் புள்ளிகள் அமையப் பெற்ற, புரவியிலக்கணம் முழுதும் அமைந்த, குதிரைகள் பூட்டிய தேருடையான் அவன் என்பதனால்.*

# 5. பொருள் இயல்

[பொருள் இயல்பு உணர்த்துவது]

## தொடர்மொழிக்கண் பொருள் பொருந்துதல்

இசைதிரிந்து இசைப்பினும் இயையுமன் பொருளே
அசைதிரிந்து இசையா என்மனார் புலவர் 1139

'இசை மாறுபட்டு ஒலிப்பினும், பொருள், இயைபுடனேயே வரும்; அவ்விடத்துச் சொற்கு அங்கமாகிய அசையானது மாறுபட்டு இசைக்காது' என்பதாம். (எ-டு) 'கார்விரை [illegible] கடவுள் வாழ்த்துள் வருமாறு [illegible]

## [illegible] நிகழும் பேச்சுக்கள்

நோயும் இன்பமும் இருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய

மறுத்துரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்துஞ்
சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும்
அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரிய வாக
உவம வாயிற் படுத்தலும் உவமம்
ஒன்றிடத் திருவர்க்கும் உரியபாற் கிளவி. 1140

துன்பமும் இன்பமும் ஆகிய இருதன்மையும் தரவல்ல, காமத்தைக் கருதிய முறைமை இடையீடுபடுதலான், நகை முதலிய மெய்ப்பாடு எட்டனுடைய கூறுபாடும் தோன்றப், பொருந்திய உறுப்புடையது போலவும் உணர்வுடையது போல [illegible]ம் மறுத்துரைப்பது போலவும் அங்ஙனம் அல்லாதவற்றைத் தனது உள்ளத்துடன் இணைத்துக் கூறியும்; சொல்லாத மரபினை யுடைய (பறவைகள், கானல், மரம் முதலியன.) வற்றுடன் பொருந்தி, அவை செய்யாதனவற்றைச் செய்வதாகக் கூறிப்,

பின்னர், தன் நெஞ்சு அடங்குமாறுபோல அடங்கியிருக்கின்றன எனக் கூறியும்; யாவர் ஒருவர் உற்ற யாதொரு பிணியும் தாமுற்ற பிணியாகக் கொள்ளுதலும்; அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி உவமைப் பெயரும் உவமிக்கும் பெயருமாகிய இரண்டும், தொழில், பண்பு, பயன் என்னும் மூன்று பொருட்கும் உரித்தாக, உவமம் பொருந்துமிடத்து உவமவாயிற் படுத்தலும் தலைவனுக்கு தலைவிக்கும் உரிய ஒரு கூற்றுச்சொல் என்பதாம்.

## காமம் இடையீடுபட வரும் பொருள் வேறுபாடு

கனவும் உரித்தால் அவ்விடத் தான. 1141

மேற்கூறியவற்றால் காமம் இடையீடுபட்ட விடத்துக், கனுக் (கனவு) காணுதலும் நிகழ்தல் உண்டு.

## நற்றாய்க்கும் கனவு உரியதோர் மரபு

தாய்க்கும் உரித்தாற் போக்குடன் கிளப்பின். 1142

தலைமக்கள் உடன்போக்கில் சென்றவழி, கனுக்காணுதல் தலைவியினைப்பெற்ற தாய்க்கும் உளவாகும்.

## ஒருகூற்றுச் சொல்லிற்கு உரியார்

பால்கெழு கிளவி நால்வர்க்கும் உரித்தே
நட்பின் நடக்கை யாங்கலங் கடையே. 1143

அகத்திணை இலக்கணத்தின்கண் ஒரு கூற்றுச்சொல், தலைவி, தோழி, நற்றாய், செவிலி ஆகிய நால்வருக்கும் உரியதாம், நட்பின்கண்ணே ஒழுகும் ஒழுக்கம் அல்லாதவிடத்து என்பதாம்.

## நால்வர்க்கும் உரியன மூன்று

உயிரும் நாணும் மடனும் என்றிவை
செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய. 1144

உயிர், நாணம், மடப்பம் ஆகிய மூன்றும், குற்றந்தீர்ந்த சிறப்பினையுடைய மேற்கூறிய நால்வர்க்கும் உரியனவாம்.

## பிரிவின்கண், தலைவி, தன் உறுப்புநோக்கிக் கூறுதல்

வண்ணந் திரிந்து புலம்புங் காலை
உணர்ந்தது போல உறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே. 1145

தலைமகள், நிறம் வேறுபட்டு வருத்தமுறுங் காலத்துத், தலைமகன் பிரிவைத் தன் உறுப்புக்கள் அறிந்தனபோலப், பொருந்தும் வகையாற்கூறுதலும் உண்டு.

(எ-டு) "தன்னைத் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை." (குறள்-12) என வரும்

## தலைவி தலைவன்பாற் சேர்தல் பிரிவிடை இல்லை

உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்
என்னுற் றனகொல் இவையெனின் அல்லதைக்
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை. 1146

தலைவி, தன்னுடைய உடம்பும் உயிரும் மெலிந்தவிடத்தும், 'இவை என்ன காரணத்தாலோ வாடியது' என எண்ணுவ தல்லாது, அது காரணமாகத் தலைவன் உள்ளவழிச் செல்வது என்பது கிடையாது.

(எ-டு) "ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது." (குறள்-1176)
என வருதல் காண்க.

## நெஞ்சிறுற் சேர்தல் உளவாம்

ஒருசிறை நெஞ்சோ டுசாவுங் காலை
உரிய தாகலும் உண்டென மொழிப. 1147

தனித்து நெஞ்சோடு உசாவுங் காலத்தில், தலைவனைச் சேர்தல் உரியதாகலும் உண்டு என்று கூறுவர்.

## அறியாதாள்போல நடத்தல்

தன்வயிற் கரத்தலும் அவள்வயின் வேட்டலும்
அன்ன இடங்கள் அல்வழி யெல்லாம்
மடனொடு நிற்றல் கடனென மொழிப. 1148

தலைமகன் தன்னுடைய ஒழுக்கத்தைத் தலைமகளிடத்தில் மறைத்து உணர்த்தும்பொழுதும், தலைமகளிடத்தில் புணர்ச்சி வேட்கை தோற்றிய வழியுமாகிய, அத் தன்மைப்பட்ட இடங்க ளல்லாத விடமெல்லாம், தலைமகள் அறியாதாள்போன்று ஒழுகுதல் கடனென்று கூறுவர்.

## அறத்தொடு நிற்கும் நிலை

அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
அறத்தியல் மரபிலள் தோழி என்ப. 1149

தலைவி அறத்தோடு நிற்குங் காலத்தில் அல்லாமல், தோழி, தானே அறத்தோடு நிற்கும் தன்மை இல்லாதவளாவள்.

## தோழி அறத்தொடு நிற்றல்

எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுதல் உசாஅதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்புங் கிளவியோடு தொகைஇய
ஏழு வகைய என்மனார் புலவர். 1150

"தலைவனை எளியனாகக் கூறுதல்; அவனை உயர்த்துக் கூறுதல்; அவனது வேட்கையை மிகுத்துரைத்தல்; தாமும் பிறருடனே உசாவுதல்; காரணங் கூறி உணர்த்துதல்; எதிர்ப்பட்டமை கூறுதல்; உண்மையுரைத்தல் என்னும் ஏழுவகையாகத் தோழி அறத்தோடு நிற்றல் அமையும்" என்று கூறுவர் புலவர்.

## தலைமகளாலே செவிலி அறியும்

உற்றுழியல்லது சொல்லல் இன்மையின்
அப்பொருள் வேட்கைக் கிளவியி னுணர்ப. 1151

காலம் மிகுந்தவழி யல்லது, சொல்நிகழ்ச்சி இன்மையினால், தலைமகள் கருதிய பொருளின்மேல் கொண்ட வேட்கையைச் செவிலி தலைமகளாலேயே உணர்ந்து கொள்வள்.

## பெண்டிர்க்கு உரியதோர் இயல்பு

செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான. 1152

அடக்கமும்; களவொழுக்கினைப் புறத்தார்க்குப் புலப்படாது உள்ளடக்கும் மனவலியும்; நடுவு நிலைமையும்; செய்யத் தக்கனவற்றைக் கூறுதலும்; நன்மை தீமை விளைப்பனவற்றை வேறு பிரித்து அறிவித்தலும்; உள்ளக் கருத்தினை அறிதலருமையும் ஆகிய, இவையெல்லாம் பெண்பாற்குரிய சிறந்த குணங்களாகும்.

## தோழி கூற்றினால் வரும் பயன்

பொழுதும் ஆறும் காப்புமென் றிவற்றின்
வழுவி னாகிய குற்றம் காட்டலும்
தன்னை யழிதலும் அவணூறு அஞ்சலும்
இரவினும் பகலினும் நீவா வென்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள வென்ப. 1153

தலைவன் வருகின்ற காலமும், அவன் வரும் வழியும், வருமிடத்துக் காவல் மிகுதியும் எடுத்துக் காட்டி, அதனால் வரும் ஏதப்பாட்டிற்கு அஞ்சுதலும்; தலைவி தான் காரணமாக வருந்தலால் தானே வருந்துதலும்; அவனுக்கு வரும் இடையூற்றினை எண்ணி அஞ்சுதலும்; இரவுப் பொழுதிலும் வருக, பகற்பொழுதிலும் வருகவென்று கூறுதலும்; இரண்டு பொழுதிலும் வாராதே யொழிகவென்று கூறுதலும்; நன்மையும் தீமையும் பயப்பனவாகிய பிற நிகழ்ச்சிகளின் மேல் வைத்துக் கூறுமுகத்தான், தலைமகன் அறிந்துகொள்ளுமாறு செய்தலும்; இவை போன்று குறிப்பிட வரும் பிறசொல் நிகழ்ச்சிகளும், தலைவன் களவொழுக்கினை விட்டுத் தலைமகளைப் பலரறி மணம் புரிந்துகொள்ள வேண்டுமென்றே தோழியாற் கற்பித்துக் கூறப் படுவனவாம்.

## தலைமகளுக்கும் தோழிக்கும் உரிய இயல்பு

வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிப. 1154

தன் உள்ளத்தது விருப்பத்தை மாற்றி, இருவரும் எதிர்ப்பட்ட விடத்து மாற்றிய தன்மையைப் புலப்படக் கூறி, இருவரும் அறிந்துகொள்ளுதல், பொருந்திய பாகுபாடமைந்த கைக்கிளை பெருந்திணையிடத்து உண்டென்று சொல்லுவர் புலவர்.

## தலைமகனுக்கு உரியதோர் வழக்கம்

தேரும் யானையும் குதிரையும் பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும உரியர் என்ப. 1155

தலைமகன் தேர், யானை, குதிரை முதலிய ஊர்திகளிலும், பிறவற்றிலும் ஊர்ந்துசென்று தலைமகளைக் கூடுதலும் உண்டென்று கூறுவர் புலவர்.

(எ-டு) "கடுமான் பரிய கதழ்பரி கடைஇ
நடுநாள் வருஉம்." (நற்-149) என வரும்.

## உண்டன போலக் கூறுதல்

உண்டற் குரிய வல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும மரபே. 1156

உண்ணுதற் றொழிலுக்கு உரிய அல்லாத பொருளை, உண்ணுதற்குரியன போன்று கூறுதலும் இலக்கணவழக்கு.

(எ-(

"பசலையால் உணப்பட்டுப்
பண்டைநீ ரொழிந்தக்கால்" (கலி-15)

என வருதல் காண்க.

## மணக்காமைக்குப் பொருள் காரணம்

பொருளென மொழிதலும் வரைநிலை இன்றே
காப்புக் கைமிகுத லுண்மை யான. 1157

காவல் மிகுதியால் தலைவிக்கு வருத்தம் மிகுதிப்படுவதால், தலைவன், தலைவியை வரைந்து கொள்ளாமைக்குக் காரணம் பொருளென்று தோழி கூறுதலும், வரையறுத்து நீக்கும் தன்மை யதன்று.

## காவற்காலத்துப் பழியுடையதன்று

அன்பே அறனே யின்ப நாணொடு
துறந்த வொழுக்கம் பழித்தன் றாகலின்
ஒன்றும் வேண்டா காப்பி னுள்ளே. 1158

காவல் மிகுதியினால் தலைவிக்கு வருத்தம் நிகழ்ந்தவிடத்துத் தலைமகன் மாட்டு நிகழும் அன்பும், குடிப்பிறந்தோர் மாட்டுள்ள அறனும், தனக்கு இன்றியமையா இன்பமும் நாணமும் நீங்கிய ஒழுக்கம் பழியுடையதன்றாகலின், பொருத்தமுடையதேயாகும்; குற்றமுடையதென்று நீக்குதல்வேண்டாம் என்பதாம்.

## சுரமெனக் கூறல்

சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே. 1159

தலைமகன் பிரிந்து செல்ல விரும்பிய விடத்துத், தோழியும் தலைவியும், நீ போகின்ற வழி கொடிய பாலை நிலமாகும் என்று கூறி விலக்குதலும் உண்டு; அந் நிகழ்ச்சியினையும் நீக்குதல் கிடையாது.

## உயர்ந்தோர் கூறுவன

உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுதல் செய்யுட் குக் கடனே. 1160

உயர்மக்கள் கூறுவனவும் மறைநெறியொடு கூடுதலின், அந் நெறி நடத்தல் செய்யுள் வழக்கிற்கு முறைமையாகும்.

## அறக் கழிவு உடையன

அறக்கழி வுடைய பொருட்பயம் படவரின்
வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப. 1161

'அறத்திற்கு மாறுபட்ட கூற்றுக்கள் அகப்பொருட்குப் பயன்படாது வருமாயின், அவற்றையும் மரபென்றே கொள்ளு தலும் பழியுடைத்தன்று' என்று சொல்லுவர் புலவர்.

(எ-டு) "மள்ளர் குழீஇய விழவி னானும்" (குறுந்-31)

இவ்வடியில், தலைவி தேடிச் செல்லுதல் குற்றமெனப் படினும், சிறைப்புறமாக உரைவு கடாயது பொருட்பயன் தருதலின் கொள்க வென்பதாம்.

## பொருள்வகை புணர்க்க

மிக்க பொருளினுள் பொருள்வகை புணர்க்க
நாணுத்தலைப் பிரியா நல்வழிப் படுத்தே. 1162

மிகுதியாகப் பயன்பட வரும் பொருளின் கண்ணே தலைவி தலைவன் அவளிடமிருந்து நீங்காமைக்குக் காரணமாகிய நன்னெறிப்பாகிய பாங்குபாட்டினை அடக்கிக் கூறவேண்டும் என்பதாம்.

## 'எல்லா' எனும் பெயர்

முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொல்
நிலைக்குரி மரபின் இருவீற்றும் உரித்தே. 1163

முறைப்பெயர்ப்பக்கத்துப் பொருந்திய 'எல்லா' என்னும் பொதுச்சொல், [illegible] மக்கிற்றிய முறைமையில் தப்பப்பட்டு, [illegible] நோற்கும் பொதுவாய் உரிமையுடைய [illegible]

[illegible] (கலி-61)

என்பது

"யாரை யெலுவ [illegible] ரே" (நற்றிணை-395)

என்பது ஆணையும் குறித்த[illegible] காண்க.

இச்சொல் காமப் பொருளாகத் தோற்றுவது; அதனைச் சொல்லதிகாரத்தன்றி இவ்விடத்தே கூறப்பெற்றது.

## பிறருரிமையைத் தன்னுரிமையாகக் கூறுதல்

தாயத்தி னடையா வீயச் செல்லா
வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா
எம்மென வரூஉம் கிழமைத் தோற்றம்
அல்லா வாயினும் புலவுவ வுளவே. 1164

தாயத்தால் அடைகின்ற பொருளாய்; கொடுப்பக் குறை யாதனவாய், வினைசெய்து பெறும் தன்மையவாய்; வலித்துக் கொள்ள வியலாதன ஆதல், 'எம்முடையன' வென்று கூறப் படும் புலனெறி வழக்கிற்குப் பொருந்திவரும் உரிமையுடைய

உறுப்புக்கள் குற்றமுடையனவாயினும் அவற்றுள் பொருந்துவனவுள என்பதாம்.

(எ-டு) "என்றோள் எழுதிய தொய்யிலும்" (கலி-18) என்பதில் தோழி, தலைவி தோளைத் தன் தோளாகக் கூறினமை காண்க.

## ஒருபாலைக் குறிப்பது பிறபாலுக்கும் வருவது

ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப. 1165

ஐம்பாலில் ஒருபாலைக் குறித்தனவாயினும் ஏனைய பாற்களையும் குறித்து அவை வருதல்தான் உலகவழக்கென்று சொல்லுவர் புலவர்.

## இன்பம் யாதென்பது

எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற்று ஆகும். 1166

இன்பம் என்று கூறப்படுவதாவது, எல்லா வகையான உயிர்கட்கும், தாமே மனம் விரும்பி வந்து அடையப்பெறும் விருப்பம் ஆகும்.

## வாயிற்கு உரியவர் நால்வர்

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர். 1167

பரத்தையிற் பிரிந்த தலைமகன், ஊடல் கொண்டிருக்கும் தன் தலைவியின் மாட்டு ஊடல் தீர்க்கும் பொருட்டு வாயிலாக அனுப்புதல், நான்கு இனத்தார்க்கும் உரித்து; அவ்வொழுக்கம் பெரும்பாலும் மருதநிலத்தினின்றும் திரிந்து வருதல் இன்றென்று சொல்லுவர் புலவர்.

## தலைமகளுக்கு உரிய மரபு

ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்
பிரிதல் அச்சம் உண்மை யானும்
அம்பலும் அலரும் களவுவெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த வாங்கிரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகட் டோன்றும். 1168

இடையீடின்றி இன்பம் நுகர்தலோடு இல்லற உரிமையை உறுதியாகப் பெறுதலை விரும்புதலானும், வினைமேல் விருப்ப

முடைமையின் ஆடவர்கள் பிரிவரென்று அஞ்சும் அச்சம் மகளிர்க்கு உண்டாமாகலானும், அக் களவொழுக்கத்திடத்தே அம்பலும் அலரும் இக் களவொழுக்கத்தினைப் புறத்தார்க்குக் காட்டுமென அஞ்சுமாறு தோன்றிய இருவகைக் குறிப்பின் கண்ணும், பிறர் தம்மை ஐயத்தோடு பார்க்கும் பார்வை காரணமாக வந்த கூட்டம் இடையீடுபட்ட காரியத்தின்கண்ணும், தலைமகளுக்கு, உடன்போக்கும் வரைந்துகொள்ளக் கருதுதலும் தோன்றும்.

## வருத்த மிகுதியினைக் கூறுமிடத்து

வருத்த மிகுதி சுட்டுங் காலை
உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம். 1169

தலைவனுக்கும் தலைவிக்குமுள்ள வருத்த மிகுதியைத் தீர்த்தற்குக் கருதிச் சொல்லுமிடத்துச், சொல்லுவார், அவரது இல்வாழ்க்கைக்கண் தமக்கு வருத்தம் தோன்றியதாகக் கூறுதலும் உரித்தென்று கூறுவர் புலவர்.

## புலவியுள் தலைவனின் பணிவு

மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய. 1170

புலவிக்காலத்துத் தலைவன் பணிந்த விடத்து அச்சமும் நாணமுமின்றித் தலைவி அதனை ஏற்றுக்கோடலும்; தலைவன் தன்னுடைய தலைமைக்கு மாறாகத் தலைவியைப் பணிதலும் ஆராயுமிடத்து உரியவாகும். (எ-டு) "தப்பினேன், னென்றடி சேர்தலும் உண்டு" (கலி-89) எனத் தலைவன் பணிந்தவாறு காண்க.

## கற்பினுள்ளும் பாராட்டல்

நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே. 1171

கற்புக்காலத்துத் தக்கன நிகழுமிடத்து, வேட்கை மிகுதியினாலே அதனைப் புகழ்ந்துரைக்கும் தகைமையினைப் புலவர் இருவருக்கும் நீக்காது கொள்வர். (எ-டு) "ஏந்தெழில் ஆகத்துப் பூந்தார் குழைய" (அகம்-6) என்பது தலைவி புலவிக்கண் புகழ்ந்தது; பிறவும் வருமாறு அறிக.

## இறைச்சிப் பொருள்

இறைச்சி தானே உரிப்புறத் ததுவே. 1172

இறைச்சிப் பொருளாவது, கூறவேண்டியதோர் உரிப் பொருட்குப் புறத்ததாகப் புலப்பட்டு, அதற்கு உதவியாக அமையும் பொருட்டன்மை உடையதாம். அதாவது, கருப் பொருளாகிய நாட்டிற்கும் ஊர்க்கும் துறைக்கும் அடையாகி வருவது.

## இறைச்சியும் உள்ளுறை உவமமும்

இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியன் மருங்கில் தெரியு மோர்க்கே. 1173

கருப்பொருள் பிறிதொரு பொருளுக்கு உதவியாக அமையும் பொருட்டாதலே யன்றி, அக் கருப்பொருளின் உள்ளேயே தோன்றும் பொருளும் உள. அஃது உள்ளுறை உவமத்தின் பாகுபாட்டிலே அடங்குமாறு போல நடக்குமிடத்து; அது உள்ளுறை உவமமன்று; இறைச்சி யென்று ஆய்ந் துணரும் தெளிவுடையோர்க்கு என்பதாம்.

## அன்புறு தகுவன கூட்டல்

அன்புறு தகுவன இறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே. 1174

தலைவி பிரிவாற்றாது வருந்துங்காலத்துத், தோழி கருப் பொருள்களுள் தலைவன் அன்பு செய்வதற்குத் தகுவனவற்றைக் கருதிக் கூறலும் வற்புறுத்துதலாகும்

(எ-டு) "நசைபெரி துடையர் நல்கலும் நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கு
மன்பின தோழியவர் சென்ற வாறே. (குறுந்—37)

என வந்தமை காண்க.

## பாராட்டு உணர்த்துவன

செய்பொருள் அச்சமும் வினைவயிற் பிரிவும்
மெய்பெற வுணர்த்துங் கிழவிபா ராட்டே. 1175

தலைவன் தலைவியைப் பாராட்டிய பாராட்டு, "யாம் செய்யக் கருதிய பொருட்கு இவள் இடையூறு ஆவாள் கொல்?" என்று அஞ்சிய அச்சத்தையும், வினை காரணமாதத் தான் பிரிகின்றதனையும் ஒரு தலையாகத் தலைவிக்கு உணர்த்தும் என்பதாம்.

## பரத்தையை மனைவி புகழ்ந்தால்

கற்புவழிப் பட்டவள் பரத்தை யேத்தினும்
உள்ளத்து ஊடல் உண்டென மொழிப. 1176

கற்புநெறி தவறாத தலைவி, பரத்தையைப் புகழ்ந்து கூறினு ளாயினும், உள்ளத்தின்கண்ணே ஊடல் தன்மை உண்டென்று கூறுவர் புலவர்.

(எ-டு) “நாணி நின்றோ ளிலைகண் டியானும்
பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்
தணங்கருங் கடவுளன் னோணின்
மகன்றா யாதல் புரைவதாங் கெனவே. (அகம்—16)

என வந்தவாறு காண்க.

## தலைவன் குறிப்பினை உணர்தல்

**கிழவோள் பிறள்குணம் இவையெனக் கூறிக்**
**கிழவோன் குறிப்பினை உணர்தற்கும் உரியள். 1177**

தலைவி, வேறொரு தலைவியினுடைய குணங்கள் இத்தன்மையன வென்று கூறி, அவள் மாட்டு இவன் எத்தன்மையனாய் இருக்கின்றான் என்று தலைவனின் குறிப்பினை உணர்தற்கும் உரியள்.

(எ-டு) “கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே. (ஐங்—122)

என வந்தவாறு காண்க.

## பரத்தையர் துயரம் கணவனிடம் கூறுதல்

தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்
மெய்ம்மை யாக அவர்வயின் உணர்ந்து
தலைத்தாட் கழறல்தம் எதிர்ப்பொழு தின்றே
மலிதலும் ஊடலும் அவையலங் கடையே. 1178

தலைவனால் தாம் அடைந்த வருத்தத்தைத் தலைவிக்குப் பரத்தையர் கூறினும், அவர் கூறியவாற்றானே அவ் வருத்தத்தை அவரிடத்து உண்மையாக வுணர்ந்து தலைவன் முன்னால் நின்றுகொண்டு கூறும் இடிப்புரை (அறிவுரை) தம்மைப் பரத்தையர் எதிர்ப்பட்ட பொழுதின்கண் இல்லை. அவர் துயருறின்றவிடத்து அதற்கு வருந்தாது நீங்கினானென்று மகிழ்தலும், அவன் பிரிவிற்கு இவர் வருந்தினார் என்பதற்காகத் தான் ஊடல் கொள்ளுதலும், ஆகிய அவையிரண்டும் நிகழாதவிடத்து என்பதாம்.

## பொழுது தலைவைத்த கையறு காலை

**பொழுது தலைவைத்த கையறு காலை**
**இறந்த போலக் கிளக்குங் கிளவி**

மடனே வருத்தம் மருட்கை மிகுதியொடு
அவைநாற் பொருட்கண் நிகழும் என்ப. 1179

இறுதிக் காலத்துச் செயலற்ற பொழுதின்கண் அச் செயலறு பொழுதினை நீங்கியவாக இறுதியிலே வைக்கப்பட்ட மெய்ப் பாடுகள், தன் அழகு மிகுதியுடனே மடப்பமும் ஆற்றாமையும் வியப்புமாகிய நான்கு பொருளின்கண்ணே நடக்கும்; அங்ஙனம் அவை நடக்கின்ற நான்கு பொருளும் கூற்று நிகழுங்கால் தன்னகப் படாது மிக்குநின்றன போலக் கூறுங் கூற்றாய் நிகழு மென்று சொல்லுவர் புலவர்.

## இரந்து குறையுற்ற தலைவன்

இரந்து குறையுற்ற கிழவனைத்
நிரம்ப நீக்கி நிறுத்தல் அன்றியும்
வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலும்
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே. 1180

இரந்து நிற்கும் முறையில் தன் காரியத்தினைக் கூறிய தலைவனைத், தோழியானவள் மேம்பாடான வாய்பாட்டானே அகற்றி நிறுத்தலே யன்றியும்; தலைவன் தலைவிமாட்டுக் கொண்டுள்ள உறவினைத் தான் அறிந்ததாக மெய்யாகக் கூறுதலும்; அவன் இல்லையென மறுத்தவிடத்துத் தலைவன் மேல் பொய்யுரை பல ஏற்றிக் கூறுதலும்; நன்மை பயக்கும் சொற்களை விளையாட்டாக உரைத்தலும்; இவ்வாறே யன்றி வேறு பல் வகையானும் புனைந்துரைத்தலும் தோழியால் உரைக்கப் பெறு வதாம்.

(எ-டு) "அறியே மல்லே மறிந்தன யாதோ
பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
சாந்த நாறு நறியோள்
கூந்த லுறுகின் மார்பே தெய்யோ. (ஐங்—240)

என வாய்மை கூறியவாறு காண்க.

## உயர்மொழியும் ஐயச் சொல்லும்

உயர்மொழிக் கிளவி உறழுங் கிளவி
ஐயக் கிளவி ஆடூஉவிற் குரித்தே. 1181

உயர்த்துக் கூறும் சொல் நிகழ்ச்சி தலைவன் தலைவி இருவருக்கும் உரித்து. ஐயமாகக் கூறும் சொல் நிகழ்ச்சி தலைமகனுக்கே உரியது.

(எ-டு) "அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.

எனத் தலைவன் ஐயுற்றவாறு காண்க.

### துன்பம் நீக்கும் அறிவு

**உறுகண் ஓம்பல் தன்னியல் பாகலின்**
**உரிய தாகும் தோழிகண் உரனே.** 1182

தலைவிக்கு உண்டாகும் வருத்தத்தைப் போக்கிப் பாதுகாத்தல் தனக்குரிய கடமையாதலின், தோழிக்கு அறிவுளதாகக் கூறுதல் உரித்தாகும்.

(எ-டு) "பொருடான்
பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்
அன்ன பொருள்வயிற் பிரிவோய்."

எனத் தோழி அறிவுடையாளாகக் கூறியவாறு காண்க.

**உயர்மொழிக் கிளவியும் உரியவால் அவட்கே.** 1183

தோழிக்குத் தலைவன் தலைவியை உயர்த்துக் கூறும் கூற்றும் உரியவாம், ஒரோ வொரிடத்து என்பதாம்.

(எ-டு) "உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையு
முடையன்."
(கலி—47)

எனத் தலைவனை உயர்த்திக் கூறியவாறு காண்க.

### வாயில்கட்கு உரியதோர் கிளவி

**வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல்**
**தாவின்று உரிய தத்தங் கூற்றே.** 1184

தோழிக்கும் தலைவிக்கும் உரிய கூற்றின்கண், தலைவன் வாயிலாக வந்தவர்களை மறுத்து, அவனது பழிகளைக் கூறும் சொற்களை மறைக்காது வெளிப்படையாகவே கூறுதல், குற்றமன்றாகவே கொள்ளும் உரிமை உடையதாம்.

(எ-டு) "நெஞ்சத்த பிறவாக நிறையிலன் இவனென
வஞ்சத்தான் வந்திங்கு வலியலைத்து ஈவாயோ"
(கலி—69)

எனத் தலைவி தலைவனை வெளிப்படையாகக் கூறியவாறு காண்க.

### உள்ளுறை ஐந்து வகையாம்

**உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்**
**கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே.** 1185

உடனுறையும் உவமமும் சுட்டும் நகையும் சிறப்பும் எனக் கெடுதற்கரிய மரபினையுடைய உள்ளுறை ஐந்து வகைப்படும்.

உள்ளுறை-பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பது.

### அந்தமில் இன்பம்

அந்தமில் சிறப்பின் ஆகிய இன்பம்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே. 1186

*முடிவில்லாத சிறப்பினதாகிய இன்பத்திடத்து உள்ளுறைப் பொருண்மை வருதலும் வகுக்கப்பட்ட இயல்பேயாகும்*

### மங்கலம் முதலியன

மங்கல மொழியும் அவையல் மொழியும்
மாறில் ஆண்மையில் சொல்லிய மொழியும்
கூறிய மருங்கிற் கொள்ளும் என்ப. 1187

*மங்கலத்தாற் கூறுஞ் சொல்லும், அவைகளிலே கூறத்தகாதமொழியும், மாறில்லாத ஆண்மையிற் சொல்லிய மொழியும், உள்ளுறையின்பாற் படும்.*

### சிறப்பித்தல் காரணமாக வருவன

சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு
அனைநால் வகையும் சிறப்பொடு வருமே. 1188

*சினமும், பேதைமையும், பொறுமை தோன்றும் குறிப்பும், நல்குரவும் என்றுசொல்லப்பட்ட அந்நான்கு வகையும் யாதானும் ஒருபொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும்.*

### 'அன்னை' 'என்னை' என்றல்

அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்
தோன்று மரபின என்மனார் புலவர். 1189

*அன்னை என்னை என்று சொல்லுதலும் உள, அவை முன்னோர்கள் சொல்லி வந்த முறைமையாகும். அவை சொல்லினும் சொல்லிற்கு அங்கமாகிய எழுத்தினும் பொருள் தோன்றுத மரபினையுடையனவாம்.*

### ஒப்பு முதலிய சொற்கள்

ஒப்பும் உருவும் வெறுப்பும் என்று
கற்பும் ஏரும் எழிலும் என்று
சாயலும் நாணும் மடனும் என்று
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றங்கு
ஆவயின் வருஉங் கிளவி எல்லாம்
நாட்டியல் மரபின் நெஞ்சுகொளின் அல்லது
காட்ட லாகாப் பொருள என்ப. 1190

ஒப்பு, உரு, வெறுப்பு, கற்பு, ஏர், எழில், சாயல், நாண். மடன், நோய், வேட்கை, நுகர்வு என்று சொல்லப்பெறுகிற சொற்களுக்கெல்லாம் நாட்டில் வழங்குகிற முறைமையினால், இவற்றின் பொருளை மாணுக்கன் மனத்தினால் ஆராய்ந்து உணர்ந்து கொண்டால் அல்லது, ஆசிரியனால் உணர்த்தி அவை அறிவிக்க முடியாதனவாம்.

பொருள் நிலையுள்ளது

இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்
அவையில் காலம் இன்மை யான. **1191**

தேவர் உலகத்தினும் கடல் சூழ்ந்த உலகத்தினும் மேற் கூறப்பட்ட பொருளில்லாத காலம் இல்லாமையால், பொருளெல்லாம் உள்பொருள் என்றே கொள்ளப்பெறும்.

# 6. மெய்ப்பாட்டு இயல்

[மெய்ப்பாட்டுத் தன்மையினை உணர்த்துவது]

## பதினாறு பொருள்

பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
கண்ணிய புறனே நானான் கென்ப. 1192

*விளையாட்டு ஆயத்தின்கண் தோன்றிய முப்பத்திரண்டு பொருளையுங் குறித்த தன் புறத்து நிகழும் பொருள் பதினாறு என்று கூறுவர்.*

## எட்டெனவும் வரும்

நாலிரண் டாகும் பாலுமாருண்டே. 1193

*மேற்கூறப்பட்ட பதினாறு பொருளும் எட்டாக வரும் இடமும் உண்டு.*

## மெய்ப்பாடு ஆகுமாறு

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பா லெட்டாம் மெய்ப்பா டென்ப. 1194

*நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம் வெகுளி, உவகை என்று கூறப்படும் எட்டும், மெய்யினிடத்துத் தோன்றும் வேறுபாடு என்று கூறுவர்.*

## நகை நால்வகை

எள்ளல் இளமை பேதைமை மடனென்று
உள்ளப் பட்ட நகைநான் கென்ப. 1195

*இகழ்தல், இளமை, அறிவின்மை, மடமை என்று எண்ணப் பட்ட நான்கிடத்தில் தோன்றும்.*

## அச்சம் நால்வகை

இழிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே. 1196

இழிவும் இழந்தலும் அசைதலும் வறுமையும் என்ற நான்கிடத்தும் அழுகை தோன்றும்.

இளிவரல் நால்வகை

மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
யாப்புற வந்த இளிவரல் நான்கே. 1197

மூப்பும் பிணியும் வருத்தமும் மென்மையும் என்னும் நான்கின் பொருட்டினாலும் இளிவரல் தோன்றும்.

மருட்கை யாமாறு

புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே. 1198

புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்னும் நான்கினிடத்தும் அறிவு நிரம்பப்பெறாத வியப்புத் தோன்றும்.

அச்சம் நான்கு

அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே. 1199

தெய்வம், விலங்கு, கள்வர், அரசர் என்னும் நால்வகையாலும் அச்சம் உண்டாகும்.

பெருமிதம் நான்கு வகை

கல்வி தறுகண் புகழ்மை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமித நான்கே. 1200

பெருமிதமானது கல்விச் சிறப்பு, தறுகண்மை, புகழ்மை, கொடைத்தன்மை என்று சொல்லப்பட்ட நான்கு வகைகளாலும் உண்டாகும்.

வெகுளி நான்கு

உறுப்பறை குடிகோள் அலைகொலை என்றன
வெறுப்பின் வந்த வெகுளி நான்கே. 1201

உறுப்புக்களைக் குறைத்தல், குடிப்பிறப்புக்குக் கேடு சூழ்தல், கோல் கொண்டலைத்தல், கொலை செய்தல் என்னும் நால்வகையான வெறுக்கத்தக்க செயல்களால் வெகுளியுண்டாகும்.

உவகை நான்கு

செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென
அல்லல் நீத்த உவகை நான்கே. 1202

துன்பத்தை விலக்கிய உவகையானது செல்வநுகர்ச்சி, அறிவுடைமை, காமநுகர்ச்சி, விளையாட்டு ஆகியவகைகளாலும் உண்டாகும்.

## எட்டுக்கு மேலாக வரும் சில மெய்ப்பாடுகள்

ஆங்கவை,
ஒருபா லாக ஒருபா லாக
உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல்
தன்மை அடக்கம் வரைதல் அன்பெனாஅக்
கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்
நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவெனாஅ
முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை
கருதல் ஆராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅக்
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொருமை
வியர்த்தல் ஐயம் மிகைநடுக் கெனாஅ
அவையும் உளவே அவையலங் கடையே. 1203

மேற்சொல்லப்பட்டன ஒருபக்கமாக ஒரு பக்கம் முதலாகச் சொல்லப்பட்ட பொருளுடைமை, மகிழ்ச்சி, இன்புறுதல், நடுவு நிலைமையில் நிற்றல், தன்னுடைய அடக்கம், நீக்கவேண்டியவைகளை நீக்கி யொழுகுதல், அன்பு, ஒழுக்கத்தில் பிறரை வருத்தல், சூழ்ச்சி, வாழ்த்துதல், நாணுதல், துஞ்சல், அரற்றுதல், கனவு, சினத்தல், எண்ணுதல், அஞ்சுதல், சோம்பல், எண்ணுதல் ஆராய்ச்சி, காரிய விரைவு, உயிர்ப்பு, ஒழுக்கம், துன்பம், மறதி, பிறராக்கம் பொருமை, வியர்த்தல், ஐயம், ஒருவனை மதியாமை, ஒடுக்கம் என்று சொல்லப்பட்ட இவை முப்பத்திரண்டும் மெய்ப்பாட்டுள் வரும்.

## முதல் அவத்தை

புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநயம் மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மையொடு
தகுமுறை நான்கே ஒன்றென மொழிப. 1204

புகுகின்ற முகத்தினை விரும்புதல், நெற்றி வியர்வை அடையப் பெறுதல், நகை யுண்டாதலைமறைத்தல், மனமழிதலைப் பிறர்க்குப் புலனாகாது மறைத்தல் என்னும் தகுதியுடையனவாய் வரும் முதற்காட்சியின் மெய்ப்பாடெனக் கூறுவர்.

## இரண்டாம் அவத்தை

கூழைவிரித்தல் காதொன்று களைதல்
ஊழணி தைவரல் உடைபெயர்த்து உடுத்தலொடு
கெழீஇய நான்கே இரண்டென மொழிப. 1205

கூந்தலை விரித்தல், காதணியைக் கழற்றுதல், முறையாக அணிந்துள்ள அணிகளைத் தடவுதல், ஆடையைக் குலைத்துக் கட்டுதல் ஆகிய நான்கும் இரண்டாவது காட்சியின் மெய்ப்பாடாம்.

## மூன்றாவது அவத்தை

அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்
இல்வலி யுறுத்தல் இருகையும் எடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப. 1206

அல்குலைத் தடவல், அணிந்தவைகளை ஒழுங்குசெய்தல், இற்பிறப்புக் கூறி மறுத்தல், இரு கையையும் மேலே யெடுத்தல் ஆகிய நான்கும், மூன்றாவது காட்சியின் மெய்ப்பாடு என்று கூறுவர்.

## நான்காவது அவத்தை

பாராட் டெடுத்தல் மடந்தப வுரைத்தல்
ஈரமில் கூற்றம் ஏற்றலர் நாணல்
கொடுப்பவை கோடல் உளப்படத் தொகைஇ
எடுத்த நான்கே நான்கென மொழிப. 1207

பாராட்டிக் கூறுதல், மடமை கெடுமாறு சில உரைத்தல், அருளற்ற பேச்சுக்களைக் கேட்டு அலராயிற் றென்று நாணுதல், கொடுப்பவைகளைக் கொள்ளுதல், என்று தொகுத்தெடுத்துக் கூறப்பட்ட நான்கும் நான்காவது காட்சியின் செய்கையென்பர்.

## ஐந்தாம் அவத்தை

தெரிந்துடம் படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி உவத்தலொடு
பொருந்திய நான்கே ஐந்தென மொழிப. 1208

ஆராய்ந்து உடம்படுதல், விளையாட்டுத் தொழிலை மறுத்தல், மறைந்தொழுகுதல், கண்டவழி மகிழ்தல் எனப் பொருந்திய நான்கும் ஐந்தாவது காட்சிக்கு மெய்ப்பாடாம்.

## ஆறாம் அவத்தை

புறஞ்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையறவு உரைத்தல்
விளம்பிய நான்கே ஆறென மொழிப. 1209

கோலஞ் செய்யுங்கால் மனமழிதல், பொலிவழிந்து தோன்றுதல், கலக்கமுற்றுக் கூறுதல், செயலறவு தோன்றக்

கூறுதல் என்று கூறிய நான்கும் ஆருவது காட்சியின் மெய்ப்பாடாகும்.

## நிமித்தம் ஆமாறு

அன்ன பிறவும் அவற்ருெடு சிவணி
மன்னிய வினைய நிமித்தம் என்ப. 1210

மேற்கூறப்பட்டனவும், அத்தன்மையன பிறவும் அவற்ருெடு பொருந்தி நிலைபெற்ற வினையுடைய நிமித்தம் என்று கூறுவர்.

## உயிர் மெலிந்தபோது

வினையுயிர் மெலிவிடத்து இன்மையும் உரித்தே. 1211

செயலானது உயிர்மெலிந்தவிடத்தில் இல்லாமற்போதலும் உண்டு.

## கைக்கிளைக்கு உரியதோர் மரபு

அவையும் உளவே அவையலங் கடையே. 1212

நடுவிடத்தாம் ஐந்திணையல்லாத கைக்கிளைப் பொரு முன்கூறப்பட்ட புகுமுகம் புரிதல் முதலாயின உள.

## பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள்

இன்பத்தை வெறுத்தல் துன்பத்துப் புலம்பல்
எதிர்பெய்து பரிதல் ஏதம் ஆய்தல்
பசியட நிற்றல் பசலை பாய்தல்
உண்டியில் குறைதல் உடம்புநனி சுருங்கல்
கண்துயில் மறுத்தல் கனவொடு மயங்கல்
பொய்யாக் கோடல் மெய்யே என்றல்
ஐயஞ் செய்தல் அவன்தமர் உவத்தல்
அறனழிந் துரைத்தல் ஆங்குநெஞ் சழிதல்
எம்மெய் ஆயினும் ஒப்புமை கோடல்
ஒப்புவழி யுறுத்தல் உறுபெயர் கேட்டல்
நலத்தக நாடில் கலக்கமும் அதுவே. 1213

இன்ப நலத்தினை வெறுத்தல்; துன்பத்தால் புலம்புதல்; உருவெளிப்பாடு கண்டு வருந்துதல்; குற்றம் ஆராய்தல்; பசியால் வருந்தி நிற்றல்; பசலை பரத்தல்; உணவு சுருங்குதல்; உடல் இளைத்தல்; உறங்காமை; கனவோடு மயங்குதல்; தலைவன் கூறறைப் பொய்யாகக் கொள்ளுதல்; மெய்யே என்று கொள்ளுதல்; ஐயப்படுதல்; தலைவன் உறவினரைக் கண்டவிடத்தில் மகிழ்தல; அறத்தினை அழித்துக் கூறுதல்; நெஞ்சழிந்து கூறுதல்;

எவ்வுடம்பாயினுந் தன்னோடு ஒப்புமை கொள்ளுதல்; தலைமகளோடு ஒக்குமென்று கண்டவிடத்து மகிழ்தல்; தலைவன் பெயர் கேட்டு மகிழ்தல்; மனங்கலங்குதல் என்பன பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாம்.

## வரைந்து எய்துதற்கு ஏதுவாவன

> முட்டுவயிற் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்
> அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்
> தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்
> காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையென்று
> ஆயிரு நான்கே அழிவில் கூட்டம். 1214

களவு இடையீடுபட்ட விடத்தில் வருந்தாது, கழறியுரைத்தல்; வெறுப்புப் பிறர்க்குத் தோன்றாவாறு மெய்யின்கண்ணே நிறுத்தல்; அச்சத்தினால் அகன்று ஒழுகுதல்; சேர்க்கையை விலக்குதல்; தூதுவிட்டபொழுது வெறாமை; உறங்கிப் பொருந்துதல்; காதல் அளவு கடத்தல்; உரை கூறாமை ஆகிய எட்டு மெய்ப்பாடும் வரைந்தெய்துங் கூட்டத்திற்கு ஏதுவானவாம்.

## அழிவில் கூட்டத்துக்குரிய பொருள்

> தெய்வம் அஞ்சல் புரையறந் தெளிதல்
> இல்லது காய்தல் உள்ள துவர்த்தல்
> புணர்ந்துழி யுண்மை பொழுதுமறுப் பாதல்
> அருண்மிக உடைமை அன்புமிக நிற்றல்
> பிரிவாற் றாமை மறைந்தவை யுரைத்தல்
> புறஞ்சொல் மாணாக் கிளவியொடு தொகைஇச்
> சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே. 1215

தெய்வத்திற்கு அஞ்சுதல்; குற்றமற்ற அறத்தினைத் தேர்ந்து தெளிதல்; இல்லாததனை உள்ளதாகக் கொண்டு வெறுத்தல்; தலைவனது தலையளியை வெறுத்தல்; மனநிகழ்ச்சி யுண்மையைக் கூறுதல்; பொழுதினை மறுத்தல்; அருள் புலப்பட நிற்கும் நிலை; அன்புப் புலப்பட நிற்றல்; பிரிவினைப் பொறாமை; மறைத்த ஒழுக்கத்தைக் கூறிய புறஞ்சொல் ஆகிய, அலர் மாட்சிமைப் படாத கிளவியோடு கூடிய பதினொன்றும், அழிவில் கூட்டமாகக் கூறப்பட்ட பொருளாம்.

## ஒப்பினது வகை

> பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
> உருவு நிறுத்த காம வாயில்

நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே. 1216

ஒத்த பிறப்பும், ஒத்த ஒழுக்கமும், ஒத்த ஆண்மையும், ஒத்த ஆண்டும், ஒத்த அழகும், ஒத்த அன்பும், ஒத்த நிறையும், ஒத்த அருளும், ஒத்த அறிவும், ஒத்த செல்வமும் என்னும் பத்துவகையும் தலைமகளுக்கு இருக்கவேண்டிய ஒப்புப் பகுதியாம்.

## தலைமகட்கு ஆகாத குணம்

நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை
என்றிவை இன்மை என்மனார் புலவர். 1217

அழுக்காறு, கொடுமை, தம்மைப் பெரியராக மதித்தல், புறங்கூறுதல், கடுஞ்சொற் கூறுதல், மறதி, முயற்சியின்மை, தன்னுடைய குலச்சிறப்பை எண்ணி இன்புறுதல், பேதைமை, மறதி, ஒப்பு நினைத்தல் என்று கூறப்படுங் குணங்கள் தலைமக்கட்கு இருத்தல் கூடாதென்று கூறுவர் அறிஞர்.

## அதிகாரப் புறனடை

கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே. 1218

கண்ணினாலும் செவியினாலும் நன்றாக அறிந்துகொள்ளும் அறிவுடைய மக்கட்கல்லது, மெய்ப்பாட்டுப் பொருள் கொள்ளுதல் ஆராய்தற்கு அருமையுடையது ஆகும்.

# 7. உவமை இயல்

[உவமை உணர்த்தும் பகுதி]

## உவமையின் பாகுபாடு

வினைபயன் மெய்யுரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம். 1219

தொழிலும் பயனும் வடிவும் நிறனும் என்று கூறப்பட்ட நான்குமே அப் பாகுபட வந்த உவமைக்கண் புலனாகும்.

## மேலதற்கோர் புறனடை

விரவியும் வருஉம் மரபின என்ப. 1220

உவமைகள் ஓரே பொருளான் வருதலின்றி, இரண்டும் பலவும் கலந்தும் வரும் வழிமுறைகளை உடையன.

## மேலதற்கோர் சிறப்பு விதி

உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை. 1221

மேற் கூறப்பட்ட உவமை, ஆராயுமிடத்தில், உயர்ந்த பொருளின் மேலவாய் வரும்.

(எ-டு) "அரிமா வன்ன அணங்குடைத் துப்பின்"
தாமரை புரையுங் காமர் சேவடி"
என வரும்.

## உவமைக்கு நிலைக்களன்

சிறப்பே நலனே காதல் வலியோடு
அந்நாற் பண்பும் நிலைக்களம் என்ப. 1222

உவமை, உயர்ந்தவற்றோடு உவமிக்கப் பட்டனவாயினும், சிறப்பு, நலன், காதல், வலி ஆகிய நான்கு தன்மைகளையும் இருப்பிடமாகக் கொண்டு வரும்.

## தாழ்ந்த பொருளோடும் உவமிக்கப்படும்

கிழக்கிடும் பொருளோ டைந்தும் ஆகும். 1223

மேற்கூறப்பட்ட சிறப்பு முதலிய நான்கும் ஒழியத், தாழ்ந்த பொருளோடுங்கூடி உவமை ஐந்தாகவும் வரும்.

## உரியவை உரிய

முதலும் சினையுமென் றாயிரு பொருட்கும்
நுதலிய மரபின் உரியவை உரிய. 1224

*முதலும் சினையும் என்று கூறப்பட்ட இருவகைப் பொருட்கும், கருதிய மரபினால், அவற்றிற் கேற்பவை உவமை யாதற்கு உரியனவாம்.*

## சுட்டிக் கூறா உவமை

சுட்டிக் கூறா உவமம் ஆயின்
பொருளெதிர் புணர்த்துப் புணர்த்தன கொளலே. 1225

*குறிப்பிட்டுச் சொல்லாத உவமமாக இருக்குமானால், பொரு ளோடு சேர்த்துப், பொருந்தியவைகளைக் கொள்ளுதல் வேண்டும்.*

## உவமும் பொருளும் ஒத்தல்

உவமும் பொருளும் ஒத்தல் வேண்டும். 1226

*உவமை பொருள் என்னும் இரண்டும், ஒத்ததாகவே அமைந் திருத்தல் வேண்டும்.*

## உவமிக்கும் பொருளையே உவமையாக்கிக் கூறல்

பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பினஃ துவம மாகும். 1227

*உவமிக்கும் பொருளை உவமமாக்கிக் கூறினும், அது சிறந்த உவமமாகும்.*

## பெருகவும் சிறுகவும் கூறுதல்

பெருமையுஞ் சிறுமையும் சிறப்பில் தீராக்
குறிப்பின் வரூஉம் நெறிப்பா டுடைய. 1228

*பெருகக் கூறுதலும் சிறுகக் கூறுதலும் சிறப்பு நீங்காமல் குறிப்பாக வரவேண்டிய நெறிகளை உடையன.*

## உவமை உணர்த்தும் சொற்கள்

அவைதாம்.
அன்ன ஏய்ப்ப உறழ ஒப்ப
என்ன மான என்றவை எனாஅ
ஒன்ற ஒடுங்க ஒட்ட ஆங்க
என்ற வியப்ப என்றவை எனாஅ

எள்ள விழைய விறப்ப நிகர்ப்ப
கள்ள கடுப்ப ஆங்கவை எனாஅ
காய்ப்ப மதிப்ப தகைய மருள
மாற்ற மறுப்ப ஆங்கவை எனாஅ
புல்ல பொருவ பொற்ப போல
வெல்ல வீழ ஆங்கவை எனாஅ
நாட நளிய நடுங்க நந்த
ஓட புரைய என்றவை எனாஅ
ஆறாறு வமையும் அன்னவை பிறவும்
கூறும் காலைப் பல்குறிப் பினவே. 1229

இங்கு உரைக்கப்பட்டுள்ள இவை முப்பத்தாறு சொற்களும், இவைகளைப் போன்ற பிறவும், வழக்கிடத்திலும் செய்யுளிடத்திலும் வேறுபடு குறிப்பினவாகி வருகிற உவமைச் சொற்களாம்.

## வினையுவமச் சொற்கள்

அன்ன ஆங்கு மான இறப்ப
என்ன உறழத் தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பால் உவமம். 1230

அன்ன, ஆங்கு, மான, இறப்ப, என்ன, உறழ, தகைய, நோக்கு என்று கருதப்பட்ட எட்டுச் சொற்களும் வினைப்பால் உவமத்திடம் வரும் உருபுச்சொற்களாம்.

(எ-டு) "கொன்றன்ன இன்னா செயினும்"
"பகர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு"
"புலவு நுனைப் பகழியும் சிலையும் மான"
என வரும்.

## 'அன்ன' என்னும் சொல்

அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும். 1231

அன்ன என்னுஞ் சொல் ஒழிந்த பொருளோடும் பொருந்தும்.

(எ-டு) "மாரியன்ன வண்கை"
என வரும்.

## பயனிலை உவமச் சொற்கள்

எள்ள விழையப் புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல வீழ
என்றாங் கெட்டே பயனிலை உவமம். 1232

எள்ள, விழைய, புல்ல, பொருவ, கள்ள, மதிப்ப, வெல்ல, வீழ என்னும் எட்டும் பயனிலை உவம உருபுச் சொற்களாம்.

(எ-டு) "எழிலி வானம் என்னினன் தரூஉம்"
கவிகை வண்கைக் கடுமான் தோன்றல்
என வரும்.

## மெய்யுவமச் சொற்கள்

கடுப்ப ஏய்ப்ப மருளப் புரைய
ஒட்ட ஒடுங்க ஓட்ட நிகர்ப்பவென்று
அப்பா லெட்டே மெய்ப்பா லுவமம். 1233

கடுப்ப, ஏய்ப்ப, மருள, புரைய, ஒட்ட, ஒடுங்க, ஓட்ட, நிகர்ப்ப என்று கூறப்படும் எட்டும் மெய்யுவமத்திற்குரிய சொற்களாம்

(எ-டு) "விண்ணதி ரிமிழிசை கடுப்ப"
என வரும். பிறவும் வருமாறு காண்க.

## உருவு உவமச் சொற்கள்

போல மறுப்ப ஒப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தவென்
றெத்துவரு கிளவி யுருவி னுவமம். 1234

போல, மறுப்ப, ஒப்ப, காய்த்த, நேர, வியப்ப, நளிய, நந்த என்று வருகின்ற சொற்கள் எட்டும் உருவு உவமத்திற்கு வருகின்ற சொற்களாம்.

(எ-டு) "தன்சொ லுணர்ந்தோர் மேனி
பொன்போற் செய்யும் ஊர்கிழ வோனே"
என்பது போல வரும்.

## மேலனவற்றிற் கோர் புறனடை

தத்தம் மரபில் தோன்றுமன் பொருளே. 1235

மேற் பகுத்துணர்த்தப்பட்ட சொற்கள் கூறியவாற்றான் அல்லாமல், தத்தம் மரபில் தோன்றும் பொருள்களும் உளவாம்.

## உவமை எட்டும் ஆகும்

நாலிரண் டாகும் பாலுமா ருண்டே. 1236

மேற்சொல்லப்பட்ட உவமை நான்கு ல யல்லாமல், எட்டாகின்ற பக்கமும் உண்டு.

## எட்டின்வழி தோன்றும் உவமை

பெருமையும் சிறுமையும் மெய்ப்பா டெட்டன்
வழிமருங் கறியத் தோன்று மென்ப. 1237

*பெருமைபற்றியும் சிறுமைபற்றியும் ஒப்புமை கொள்ளப் படும் உவமை. மேற்கூறிய மெய்ப்பாடு எட்டின்வழித் தோன்று மென்று கூறுவர் புலவர்.*

## உவமைக்குரிய வேறுபாடு

உவமப் பொருளின் உற்ற துணரும்
தெளிமருங் குளவே திறத்திய லான. 1238

*உவமப் பொருளாலே, சொல்லுவாள் குறிக்கப்பட்ட பொருளை உணருந் தெளியும் பக்கமும் கூறுபாட்டியலான் உள்ளன.*

## மேலதற்கோர் புறனடை

உவமப் பொருளை உணருங் காலை
மருவிய மரபின வழக்கொடு வருமே. 1239

*உவமப் பொருளை உவமிக்கப்படும் பொருளாக உணரும் போது, பொருந்திய மரபினால் ஆகிய வழக்கோடு வரும்.*

## இரட்டைக் கிளவி

இரட்டைக் கிளவியும் இரட்டை வழித்தே. 1240

*இரட்டைக் கிளவியாவது, உவமை இரண்டு சொல்லோடு, அடுத்து வருவதோடு உவமிக்கப்படும் பொருளும் இரண்டு பொருளாகி வருதல் வேண்டும்.*

## ஓர் உவமை வேறுபாடு

பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்ன மரபில கூறுங் காலைத்
துணிவொடு வருஉம் துணிவினோர் கொளினே. 1241

*உவமைப்பொருள், தானல்லாதபடியினால் உவமைப் பொருளொடு படாது, பொருள் தோற்றிய இடத்தொடு நோக்கி, முன்ன மரபினால் சொல்லுங்காலத்துத், துணிவுடையோர் கொளின், அவர் துணிந்த துணிவின்கண்ணே வரும்.*

## உவமப் போலி

உவமப் போலி ஐந்தென மொழிப. 1242

*உவமைப் போலியாக வருவன ஐந்து என்று கூறுவர்.*

### மேலதற்கோர் புறனடை

தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வருஉம் திறத்த வெனப. 1243

*கெடுதற்கரிய சிறப்பினையுடைய அதன் தன்மையை ஆராய்ந்தால் வினை, பயன், மெய், உரு என்னும் நான்கினுலும் பிறப்பினுலும் வருந்தன்மையை உடையன என்பர்.*

### கூறும் உவமை

கிழவி சொல்லின் அவளறி கிளவி. 1244

*உவமைப் பொருளைத் தலைமகள் கூறில், அவளறிந்த பொருட்கண்ணே உவமை கூறப்படும்.*

### தோழி கூறும் உவமை

தோழிக் காயின் நிலம்பெயர்ந் துரையாது. 1245

*தோழி உவமை சொல்லின், அந்நிலத்தில் உள்ளன அல்லாமல் பிறநிலத்தில் உள்ளவைகளைக் கூறப்பெருள்.*

### தலைவன் கூறும் உவமை

கிழவோற் காயின் உரனொடு கிளக்கும். 1246

*தலைவன் உவமை கூறுவானுயின் அறிவொடு கூறப்பெறும்.*

### இடம் வரையறைப் படாது

ஏனோர்க் கெல்லாம் இடம்வரை வின்றே. 1247

*மேற்சொல்லப்பட்ட மூவரும் அல்லாத, நற்ருய் செவிலி முதலாயினுர்க்கு உவமை கூறுமிடம் வரையறுக்கப்படாது.*

### இன்ப துன்பக் கூற்றுக்கள்

இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
உவம மருங்கில் தோன்றும் என்ப. 1248

*மகிழ்ச்சியளிக்கும் கூற்றும் புலவி பயக்குங் கூற்றும் உவமப் பக்கத்தால் தோன்றும்.*

### )மகள் உவமை கூறுமிடம்

கிழவோட் குவமை ஈரிடத் துரித்தே. 1249

*தலைமகள் உவமை கூறுங்கால் மேற்சொல்லப்பட்ட இரண்டிடத்தும் உரித்தாம்.*

## தலைமகன் உவமை கூறுதற்கு இடம்

கிழவோற் காயின் இடம்வரை வின்றே. 1250

*தலைமகன் உவமை கூறுதல் எப்பொருட்கண்ணும் ஆகும்.*

## தோழி செவிலி கூறுமிடத்து

தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற் குரியர் கொள்வழி யான. 1251

*தோழியுஞ் செவிலியும் உவமை கூறுங்கால், கேட்டோர் கொள்ளும் வகையால், பொருந்துமிடம் பார்த்துக் கூறுதற் குரியர்.*

## மேலனவற்றிற் கெல்லாம் புறனடை

வேறுபட வந்த உவமைத் தோற்றம்
கூறிய மருங்கில் கொள்வழிக் கொளாஅல். 1252

*இந்த எடுத்தோதப்பட்ட இலக்கணத்தில் வேறுபட்டு வந்த உவமைத்தோற்றம், எடுத்தோதிய நெறியில் கொள்ளும் வழிக் கொள்க.*

## இதுவும் ஒரு மரபு

ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே. 1253

*உவமையை உவமிக்கப்படும் பொரு[illegible]ாடு நீக்கிக் கூறுதலும் பொருந்திய இயல்பாகும்.*

## இதுவும் ஒரு மரபு

உவமைத் தன்மையும் உரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான. 1254

*உவமிக்கப் படும் பொருளோடு உவமை தோன்றவருதலே யல்லாமல், உவமையது தன்மை கூறலும் பயனிலை பொருந்திய வழக்கின்கண் உவமையாதற்கு உரியதாகும்.*

## ஐய நிலை உவமம்

தடுமாறு வரலுங் கடிவரை வின்றே. 1255

*உவமைக்கண், தடுமாறி வருதலும் விலக்கப்படமாட்டாது.*

உவமை பல வந்தவழி வரும் வேறுபாடு

அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே
நிரனிறுத் தமைத்தல் நிரனிறை சுண்ணம்
வரன்முறை வந்த மூன்றலங் கடையே. 1256

*உவமை பல அடுக்கித் தோற்றுதல், ஒரு பொருளோடு தோற்றும் தொடரையுடையதாகப் பல உவமை வருதல், வரிசை வரிசையாக அமைத்தல், உவமையையும் பொருளையும் துணித்து ஓட்டுதல் என்பவற்றுள், அடுக்கியல் உவமை கடியப்படும்; ஆமென்று வரையப்பட்ட நிரல்நிறுத்தல் முதலிய மூன்றும் அல்லாதவிடத்து.*

# 8. செய்யுள் இயல்

[செய்யுள் இலக்கணம் உணர்த்துவது]

*செய்யுள் உறுப்புக்கள்*

மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவியல் எனாஅ
திணையே கைகோள் பொருள்வகை எனாஅ
கேட்போர் களனே காலவகை எனாஅ
பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமோ டியாப்பியல வகையின்
ஆறு தலையிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே. 1257

*இங்குக் கூறப்பட்ட முப்பத்து நான்கும், செய்யுள் உறுப்புக்களாம் என்று, நல்ல புகழையுடைய புலவர்கள் அறிவு வன்மையால் வகுத்து உரைத்துள்ளார்கள்.*

*மாத்திரையும் எழுத்தியலும்*

அவற்றுள்,
மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தனவே என்மனார் புலவர். 1258

*மேற் கூறப்பட்டவற்றுள், மாத்திரை வகையும் எழுத்தியல்வகையும் எழுத்ததிகாரத்திற் கூறப்பட்டனவேயாகும் என்று புலவர் கூறுவர்.*

*நேர்அசை நிரைஅசை*

குறிலே நெடிலே குறிலிணை குறில்நெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே. 1259

குறிலும் நெடிலும், குறிலிணையும் குறில் நெடிலும், தனியே வரினும் ஒற்றொடு வரினும், ஆராயுங்காலத்து நேரசையும் நிரையசையுமாம்.

(எ-டு) கோ—பூ—வேந்—தன்: இவை நான்கும் நேரசை
வெறி—சுரு—நிறம்-குரல்; இவை நான்கும் நிரையசை

## நேர்பு அசை நிரைபு அசை

இருவகை உகரமோ டியைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப
குறிலிணை உகரம் அல்வழி யான. 1260

மேற்கூறப்பட்ட இரண்டசையும் குற்றியலுகரம் அல்லாத முற்றியலுகரமும் சேர்ந்துவரின், நேர்பசையும் நிரைபசையும் எனப் பெயராகும், அவ்வழி குற்றெழுத்தொடு பொருந்தின உகரம் அல்லாத இடத்து.

(எ-டு) காது, காற்று, கன்று முதலியன நேர்பசை.
கதவு, புணர்வு, உருமு, விறவு என்பன நிரைபசை.

## இயலசை உரியசை

இயலசை முதலிரண் டேனவை உரியசை. 1261

முதலிற் கூறப்பெற்ற நேரசையும் நிரையசையும் இயலசை எனப் பெயர்பெறும்; நேர்பசையும் நிரைபசையும் உரியசை எனப் பெயர்பெறும்.

## நேரசையாகத் தனிக்குறில் ஆகாத இடம்

தனிக்குறின் முதலசை மொழிசிதைந் தாகாது. 1262

தொடர்மொழிக்கண் மொழி சிதைந்து தனிக்குறில் நேரசையாகாது.

## குற்றியலிகரம்

ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம். 1263

குற்றியலிகரம் ஒற்றெழுத்தின் தன்மையை உடையது.

## முற்றிய லுகரம்

முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ
நிற்றல் இன்றே யீற்றடி மருங்கினும். 1264

முற்றியலுகரமும் மொழி சிதைந்து நேர்பசை நிரையசை என்று உரைக்கப்பட மாட்டாது; அஃது ஈற்றடி மருங்கில் தனியசையாகி நிற்றலும் இல்லை.

## இருவகை உகரமும் ஒற்றொடும் தோன்றும்

குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே. 1265

இருவகை உகரமும் ஒற்றொடு தோன்றித் தனியசையாகி நிற்கவும் பெறும்.

## இசையொடு சேர்த்தல்

அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தல் வல்லோர் ஆறே. 1266

அசையையும் சீரையும் ஓசையோடு சேர்த்துப் பாகுபாடு உணர்த்தல் வல்லோர்களுடைய நெறி முறையாகும். அதாவது, பொருளொடு சொல்லை அறுத்தவிடத்துத் தளையும் சீரும் சிதைந் தால், அவ்வழி ஓசையை நோக்கி அதன்வழிச் சேர்த்துக என்பதாம்.

## சீர் என்பது

ஈரசை கொண்டு மூவசை புணர்த்தும்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே. 1267

இரண்டசைகளைக் கொண்டும், மூன்றசைகளைக் கொண்டும் சீர்பொருந்தி முடிந்தது சீர் என்று கூறப்பெறும்.

(எ-டு) தாமரை புரையுங் காமர் சேவடி- ஈரசைகள் வந்தன.
எந்நன்றி, செய்ந்நன்றி-மூவசைகள் வந்தன.

## இயற்சீர் ஆசிரிய உரிச்சீர்

இயலசை மயக்கம் இயற்சீ ரேனை
உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர். 1268

மேற்கூறப்பட்ட அசைகளில், இயலசை மயங்கி வந்தன இயற்சீரெனப் பெறும்; உரியசை மயங்கி வந்தன ஆசிரிய உரிச் சீரெனப் படும்.

(எ-டு) தேமா, புளிமா, கருவிளம் கூவிளம்- இவை இயற்சீர்
ஆற்றுநோக்கு, ஆற்றுவரவு, வரகுசோறு, வரகு தவிடு-இவை உரிச்சீர்

## ஆசிரிய உரிச்சீர் ஆமாறு

முன்னிரை இறினும் அன்ன வாகும். 1269

நேர்பசை நிரைபசைப்பின் நிரையிறுதியும், ஆசிரிய உரிச் சீராகும். (எ-டு) யாற்றுமடை, குளத்துமடை என வரும்.

### இயற்சீர்க்கு உரியதோர் வேறுபாடு

நேரவண் நிற்பின் இயற்சீர்ப் பால. 1270

*உரியசையின் பின்னர் நேரசைவரின், அஃது இயற்சீரின் தன்மையைப் பொருந்தி நிற்கும்.*

### இயலசைப்பின் உரியசை வரின்

இயலசை யீற்றுமுன் உரியசை வரினே
நிரையசை இயல வாகும் என்ப. 1271

*இயலசையின் பின்னர் உரியசைவரின் நிரையசையின் தன்மையைப் பெறும். (எ-டு) ஆற்றுக்கால் என வரும்.*

### உயிரளபெடை அசைநிலை ஆகுதல்

அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே. 1272

*உயிரளபெடை அசையாக நிற்கவும் பெறும். (எ-டு) "கடாஅ உருவொடு"—அலகு பெற்றது. 'உப்போஓ எனவுரைத்து'—அசைநிலையாயிற்று.*

### ஒற்றளபு எடுப்பின்

ஒற்றள பெடுப்பினும் அற்றென மொழிப. 1273

*ஒற்று அளபு எடுத்தாலும் அத் தன்மையைப் பெறும். (எ-டு) "கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்" என வரும்.*

### வெண்பா உரிச்சீர்

இயற்சீர் இறுதிமுன் நேர்அவண் நிற்பின்
உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப. 1274

*இயற்சீரின் முடிவுக்குப்பின் அவ்விடத்தில் நேரசை நிற்குமாறுல், வெண்பாவின் உரிச்சீர் ஆகும் என்று கூறுவார்கள். (எ-டு) மாவாழ்கான், மாவருகான், புலிவாழ்கான், புலி வருகான் என வரும்.*

### வஞ்சி உரிச்சீர்

வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீ ரல்லா மூவசை யான. 1275

*வஞ்சிச் சீர் என்று வகுத்துக் கூறப்பட்டவை, மேற்கூறிய வெண்சீர் அல்லாத மூவசைச்சீர் எல்லாம் ஆகும்.*

*இறுதியில் நிரையசையாய் வரும் மூவசைச்சீர் வஞ்சியுரிச்சீர் என்க. நேர் நேர் நிரை, நேர் நேர் நேர்பு, நேர் நேர் நிரைபு,*

நேர் நிரை நிரை. இவ்வாறு, நேர், நிரை, நேர்பு, நிரைபு ஆகியன மூச்சீர்களாக அமைவன அறுபதும் வஞ்சியுரிச் சீர்களாம்.

## வஞ்சிப்பாவிலேயே வஞ்சியுரிச்சீர் வரும்

தன்பா அல்வழித் தான்நடை இன்றே. 1276

வஞ்சியுரிச் சீர், வஞ்சிப்பாவைத் தவிர வேறு பாவகையினுள் வராது.

## பிற சீர்கள் வஞ்சிப்பாவினுள் வரும்

வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய. 1277

வஞ்சிப் பாவினுள் ஒழிந்த சீர்கள் வரப்பெறும்.

## வெண்பா உரிச்சீர் ஆசிரிய உரிச்சீர்

வெண்பா உரிச்சீர் ஆசிரிய உரிச்சீர்
இன்பா நேரடிக் கொருங்குநிலை இலவே. 1278

வெண்பா உரிச்சீரும், ஆசிரிய உரிச்சீரும் வெண்பாவினது ஆசிரிய நேரடிக்கண் ஒருங்கு நிற்றல் இல்லை.

## வரும் இடத்தில்

கலித்தளை மருங்கிற் கடியவும் பெறாஅ. 1279

கலித்தளை வருமிடத்தில் மேற்கூறப்பட்ட இருவகைச்சீரும் ஒருங்கு நிற்கவும் பெறும்

கலித்தளை அடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே. 1230

ஆராய்ந்து பார்ப்பவர்கட்க் கலிப்பாவிற்குரிய கலித்தளைக்கண் நேரீற்றியற் சீர் நிற்றற்குரியதன்று என்பது விளங்கும்.

## நேரீற்று இயற்சீர்

வஞ்சி மருங்கினும் இறுதிநில் லாது. 1281

வஞ்சிப்பாவினும் நேரீற்றியற்சீர், அடியின் முடிவிலே நிற்கமாட்டாது.

## ஓரசைச் சீர்

இசைநிலை நிறைய நிற்குவ தாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறவே. 1282

இசைநிற்கின்ற நிலை நிரம்பா நிற்குமாயின், அசையுஞ் சீராம் தன்மையைப் பெறும். (எ-டு) "கழல் தொழா மன்னர்தம்

கை," நேரசை சீராயிற்று; "புன நாடன் பேரே வரும்" நிரையசை சீராயிற்று.

### தளைவகை சிதையாத் தன்மையிடத்து

இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான. 1283

*ஓரசைச் சீரைத் தளைவகை சிதையாத தன்மை வேண்டும் இடத்து, இயற்சீர்போலக் கொள்க.*

### வெண்சீர் ஈற்றசை

வெண்சீர் ஈற்றசை நிரையசை யியற்றே. 1284

*வெண்சீர் ஈற்றசை, தளைவழங்கு மிடத்து, இயற்சீரசை நிரையீற்றைப் போல் நிற்கும்.*

### ஆசிரியப் பாவிற்கு உரிய சீர்

இன்சீ ரியைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய அடிக்கே. 1285

*இனிய ஓசைபொருந்தி வருகுவதாயின், ஆசிரிய அடிக்கு வெண்பா உரிச்சீரும் வரப்பெறும்.*

அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீர்
ஒன்றுத லுடைய ஓரோஒரு வழியே. 1286

*இனிய ஓசை அமைய வந்தால் வஞ்சியுரிச்சீரும் ஒவ்வோரிடத்து ஆசிரியப்பாவில் வரப் பெறும்.*

### அடி என்பது

நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே. 1287

*நான்கு சீர் ஒன்றாக வரப்பெறின் அஃது அடியென்று கூறப்பெறும்.*

### தளையும் தொடையும்

அடியுள் ளனவே தளையொடு தொடையே. 1288

*முன்னர்க் கூறிய நாற்சீரடியுள், தளையும் தொடையும் உள்ளன.*

### தளை தொடை வாரா இடம்

அடியிறந்து வருதல் இல்லென மொழிப. 1289

தளையுந் தொடையும் நான்குசீர் அடிகளில் வருமேயன்றி, அதற்கு மேற்பட்ட அடிகளில் வரமாட்டா.

### அடியின் சிறப்பே பாட்டு

அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே. 1290

அடியின் சிறப்பினாலே அது பாட்டென்று கூறப்பெறும். எனவே பாட்டென்னும் செய்யுட்கு, அடி இன்றியமையாத தென்று கொள்க. பாட்டாவன, வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்பன.

### குறளடி என்பது

நாலெழுத் தாதி யாக ஆறெழுத்
தேறிய நிலத்தே குறளடி யென்ப. 1291

நாலெழுத்து முதலாக, ஆறெழுத்து இறுதியாக ஏறிய மூன்று நிலங்களையுடையது குறளடி என்று கூறுவர்.

### சிந்தடி என்பது

ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே
ஈரெழுத் தேற்றம் அல்வழி யான. 1292

சிந்தடிக்கு அளவு ஏழெழுத்து முதல் ஒன்பது எழுத்துவரை என்று கூறுவர்.

### அளவடி என்பது

பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
ஒத்த நாலெழுத் தேற்றலங் கடையே. 1293

பத்தெழுத்து முதலாகப் பதினான்கு எழுத்து வரையிலும் அளவடிக்கு எல்லையென்று கூறுவர்.

### நெடிலடி என்பது

மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப. 1294

நெடிலடிக்கு அளவு பதினைந்து எழுத்தாம்; இரண்டு எழுத்துக்கள் மிகுதிப்படுதலும் இயற்கையே என்று கூறுவர்.

### கழிநெடிலடி என்பது

மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப. 1295

கழிநெடில் அடிக்கு அளவு பதினெட்டு எழுத்து; இரண்டு எழுத்துக்கள் மிகுதிப்படுதலும் இயற்கையே என்று கூறுவர்.

### சீர்நிலை ஆமாறு

சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது
நேர்நிரை வஞ்சிக் காறு மாகும் 1296

நேரசை இறுதியாகும் போது, சீர்நிலை ஐந்தெழுத்துக்கு மேற்படாது; நிரையசை இறுதியாகிய வஞ்சியுரிச் சீர்க்கு ஆறெழுத்தும் ஆகும்.

### சீர்க்கு உரியதோர் மரபு

எழுத்தள வெஞ்சினும் சீர்நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப. 1297

ஓரடிக்கு ஓரடி எழுத்தளவு குறைந்து வரினும், சீர்நிலை நான்கிற்கு மேற்படுதலும் குறைதலும் இல்லை.

### உயிரில்லாத எழுத்துக்கள்

உயிரில் லெழுத்தும் எண்ணப் படாஅ
உயிர்த்திறம் இயக்கம் இன்மை யான. 1298

உயிர்போல இயங்காதபடியால், உயிரில்லாத எழுத்துக்கள் சீரில் கணக்குச் செய்யப் பெறமாட்டா, குற்றியலிகரமும் உகரமும் எண்ணப் படுவதில்லை. எனவே, எண்ணப்படுவன ஒரு மாத்திரை ஒலியளவிற்குக் குறையாத உயிரும் உயிர்மெய்யுமே என்க.

### வஞ்சி அடிக்குச் சீர்

வஞ்சி யடியே இருசீர்த் தாகும். 1299

வஞ்சிப் பாவிற்கு உரிய அடி இரு சீர்களை உடையது.

### வஞ்சி உரிச்சீரின் குறைந்த நிலை

தன்சீ ரெழுத்தின் சிறுமை மூன்றே. 1300

வஞ்சியுரிச்சீரின் சிறுமை மூன்றெழுத்தென்று கொள்ளப் பெறும்.

### வஞ்சியடி முச்சீரால் வருமிடம்

முச்சீ ரானும் வருமிட னுடைத்தே. 1301

வஞ்சியடி மூன்று சீர்களால் வருகின்ற இடமும் உண்டு.

(எ-டு) தூங்குகையான் ஓங்குநடைய
உறழ்மணியான் உயர்மருப்பின

என்பதனுள், மூன்றெழுத்து முதலாக ஆறு எழுத்துக்காறும் வந்தமை காண்க.

## அசை கூறுதல்

அசைகூன் ஆகும் அவ்வயி னான. 1302

மேற்கூறப்பட்ட இருவகை அடியினும் அசை வரும்.

## சீர் கூறுதல்

சீர்கூன் ஆதல் நேரடிக் குரித்தே. 1303

சீர் முழுவதுங் கூனாகி வருதல் அளவடிக்கு உரியது.

(எ-டு) "உதுக்காண், சுரந்தானா வண்மைச் சுவர்னமாப் பூதன்
பரந்தானாப் பல்புகழ் பாடி—இரந்தான்மாட்
டின்மை அகல்வது போல இருள்நீங்க
மன்னும் அளிதேர் மழை."

இது வெண்பாவிற் கூன்

"அவரே,
கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே."

என வருவது ஆசிரியத்திற் கூன்.

"நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் வரிஇய அம்புதெரி தியே"

இது கலிப்பாவிற் கூன்

## அடிகட்கு விரி உணர்த்தல்

ஐவகை அடியும் விரிக்குங் காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்தும்
எழுபது வகையின் வழுவி லாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே. 1304

மேற்கூறிய ஐவகை அடியினையும் விவரிக்கும்பொழுது, பொருள்வகை பொருந்திய பதினேழ் நிலத்தும், எழுபது வகைக் குற்றங்கள் நீங்கி அறுநூற்று இருபத்தைந்தாகும். அசைச்சீர், இயற்சீர், ஆசிரிய உரிச்சீர், வெண்சீர், வஞ்சியுரிச்சீர் என்னும் ஐந்தினையும் நிறுத்தி, இவ்வைந்து சீரும் வருஞ்சீராக உறழும் வழி இருபத்தைந்து விகற்பமாம். அவ் இருபத்தைந்தின்கண்ணும் மூன்றுவது ஐந்து சீரையும் உறழ நூற்றிருபத்தைந்து விகற்ப

மாம். அந் நூற்றிருபத்தைந்துடனும் நான்காவது சீரையும் உறழ, அறுநூற்றிருபத்தைந்தாகும் என்க.

### அளவிறந்தன அடி விரிவு

ஆங்கனம் விரிப்பின் அளவிறந் தனவே
பாங்குற உணர்ந்தோர் பன்னுங் காலை. 1305

நன்கு உணர்ந்தவர்கள், அவ்வாறு ஆராயும்போது எல்லையற்றனவாக முடியும் என்பார்கள். அறுநூற்றிருபத்தைந்துடனும், ஐந்தாவது வரும் ஐஞ்சீரையும் அறுசீர் முதலாயினவற்றையும் உறழ என, மேற்கொண்டு விரித்துக் கொண்டே போக, அடிவகை எண்ணிறந்தனவாதல் காணலாம்.

### ஆசிரியப்பாவிற்குரிய அடி

ஐவகை அடியும் ஆசிரியக் குரிய. 1306

ஐவகை அடிகளும் ஆசிரியப் பாட்டிற்கு உரியனவாம்.

### விரவி வரினும் ஏற்புடைத்தாகும்

விராஅய் வரினும் ஒருஉநிலை இலவே. 1307

மேற்கூறப்பட்ட ஐந்தடியும் தனித்தனி ஆசிரியப்பாவிற்கு உரித்தாகி வருதலேயல்லாமற் கலந்துவரினும் நீக்கப்படமாட்டாது.

### தளை வேறுபாடு கொள்ளல்

தன்சீர் வகையினும் தளைநிலை வகையினும்
இன்சீர் வகையின் ஐந்தடிக்கு முரிய
தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா. 1308

தத்தம் சீர்நிலை வகையானும் தளைநிலை வகையானும் இனிய ஓசை வேறுபாட்டினையுடைய, ஐந்தடிக்கும் உரிய தன்னுடைய சீருள்ள விடத்தில், தளை வேறுபாறு கொள்ளுதல் வேண்டியதின்று.

### ஆசிரியத்தளை ஆமாறு

சீரியன் மருங்கின் ஓசை யொப்பின்
ஆசிரியத் தளையென றறியல் வேண்டும். 1309

சீரானது பொருந்துகிற இடத்தில், ஓரசை ஒத்துவருமானால், அதனை ஆசிரியத்தளை யென்று அறிந்துகொள்ளுதல் வேண்டும்.

## வஞ்சிக்கு உறழ்தல் இல்லை

குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை இலவே வஞ்சிக் கென்ப. 1310

குறளடி முதலாக அளவடியளவும் வஞ்சியுரிச்சீர் வந்து பொருந்துதல் இல்லை; இவ்வடிகள் ஆசிரிய உரிச்சீரும் ஆகும்.

## வெண்பாவிற்குரிய அடியும் தளையும்

அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றுத் தன்மை யான. 1311

தளைவகை பொருந்தாத் தன்மைக்கண், அளவடியுஞ் சிந்தடியும் வெண்பாவுக்கு உரியனவாம் என்க.

## கலிப்பாவிற்கு அடியாமாறு

அளவடி மிகுதி உளப்படத் தோன்றி
இருநெடில் அடியுங் கலியிற் குரிய. 1312

ஐவகை யடியினும் அளவடி மிகுதியாகிய பதின்மூன்றெழுத்தும் பதினான்கெழுத்தும், நெடிலடியும் கழிநெடிலடியும் கலிப்பாவிற்கு உரியன.

## கலித்தளை ஆகுமாறு

நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்டல்
வரைநிலை யின்றே அவ்வடிக் கென்ப. 1313

நிரையீற்றியற் சீரும் நிரையீற்றாசிரிய உரிச்சீரும் நிற்ப, நிரை முதல் வெண்சீர் வந்து நிரை யொன்றியக் காலும், அது யாம்.

## கலந்த தளைகள்

விராஅய தளையும் ஒருஉநிலை இலவே. 1314

பிறவாகிக் கலந்த தளைகளும் நீக்கப்படுதல் இல்லை.

## ஆசிரியத்தில் வெண்பாவடி மயங்குதல்

இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்பவும் உளவே. 1315

இயற்சீர் வெண்டளையால் ஆகிய வெண்பாவடி, ஆசிரியப்பாவின்கண் நிற்றற்குரிய மரபோடு நிற்றலும் உண்டு.

## வெண்டளை ஆசிரியம் விரவிவரல்

வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீரடியும் உளவென மொழிப. 1316

*இயற்சீர் வெண்டளை கலந்தும், ஆசிரியத்தளை கலந்தும் ஐஞ்சீரடியும் ஆசிரியப்பாவின்கண் வருவன உள.*

## அறுசீரடி வரல்

அறுசீ ரடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉம் நேரடி முன்னே. 1317

*அறுசீரடி, ஆசிரியத் தளையொடு பொருந்தி, நேரடிக்கு முன்னாக ஆசிரியப்பாவின்கண் நடைபெற்று வரும்.*

*(எ-டு) சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே யாம்பாடத் தான்மகிழ்ந்
துண்ணு மன்னே"*

*இதில் முதலடி நான்கு சீரான் வந்தது, இரண்டாவது ஆசிரியத் தளையோடு பொருந்தி அறுசீரடியாய் வந்திருத்தலைக் காண்க.*

## எழுசீரடிக்கு உரிய மரபு

எழுசீ ரடியே முடுகிய னடக்கும். 1318

*முடுகியலடி என்பது எழுசீர்களால் வரும்.*

முடுகியல் வரையார் முதலிரண் டடிக்கும். 1319

*ஐஞ்சீரடிக்கும், அறுசீரடிக்கும் முடுகியலை நீக்க மாட்டார்கள்.*

## முடுகியல் வாரா இடங்கள்

ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினும்
மூவகை அடியும் முன்னுதல் இலவே. 1320

*முடுகியலாகி வருகிற மூவகை அடியும் ஆசிரியப்பாவினும் வெண்பாவினும் நிற்கமாட்டா.*

## ஈற்றயலடி முச்சீரும் பெறும்

ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கில்
தோற்ற முச்சீர்த் தாகும் என்ப. 1321

*நேரிசை ஆசிரியப்பாவின் ஈற்றயல் அடியின் தோற்றம் மூன்று சீராகவும் முடியும் என்று கூறுவார்கள்.*

(எ-டு) ‘முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே’ என வரும்.

## இடையடியும் வரும்

இடையும் வரையார் தொடையுணர்ந் தோரே. 1322

*தொடுக்கப்படும் தொடையியலை உணர்ந்தோர், இடையடி வருதலையும் நீக்கமாட்டார்கள்.*

## கலிப்பாவின் ஈற்றயலடி

முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும். 1323

*ஈற்றயலடி முச்சீரெனக் கூறப்பட்டது கலிப்பாவின்கண் நாற்சீராகியும் வரும்.*

## வஞ்சிப்பாவின் இறுதியடி

வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே. 1324

*வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியப்பாவின் தன்மையை உடையது ஆகும்.*

## வெண்பாவின் ஈற்றடி

வெண்பா ஈற்றடி முச்சீர்த் தாகும்
அசைச்சீர்த் தாகும் அவ்வழி யான. 1325

*வெண்பாவின் இறுதியடி மூன்று சீர் உடையதாகும்; அதன்கண் இறுதிச்சீர் அசைச்சீராக வரும்.*

## மேலதற்கோர் புறனடை

நேரீற் றியற்சீர் நிரையும் நிரைபும்
சீரேற் றிறூஉம் இயற்கைய என்ப. 1326

*வெண்பாவின் இறுதிச்சீரின் அயற்சீர் நேரீற்றியற்சீராயின் நிரையசையும், நிரைபு அசையும், சீராந் தன்மையைப் பெற்று முடியும் இயற்கையை உடையன என்று கூறுவர்.*

## மேலதற்கோர் புறனடை

நிரையவண் நிற்பின் நேரும் நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர். 1327

*வெண்பாவின் ஈற்றயற்சீர் நிரையீற்று இயற்சீராயின் நேரசையும் நேர்பசையும் முடிபாம்.*

### கலிப்பாவிற்கு முடிவு உணர்த்தல்

எழுசீர் இறுதி ஆசிரியங் கலியே. 1328

*கலிப்பாவிற்கு ஈற்றயலடி முச்சீரான் வரும் ஆசிரிய முடிபாகும்*

### இதுவும் அது

வெண்பா இயலினும் பண்புற முடியும். 1329

*கலிப்பா, வெண்பாச் சுரிதகமாக முடியும்.*

### யாப்பு ஆமாறு

எழுத்து முதலா ஈண்டிய அடியில்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர். 1330

*"எழுத்து முதலாக அசை சீர் அடி என்று இங்கு உரைக்கப் பட்ட அடியினால், தான் குறித்த பொருளை இறுதியடியளவும் முடிவுபெற நிறுத்துதல் யாப்பாகும்" என்று, யாப்பிலக்கணம் அறிந்த புலவர்கள் உரைப்பார்கள்.*

### யாப்பின் பகுதிகள்

பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர். 1331

*"பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்னும் ஏழிடத்தும் வளவிய புகழையுடைய சேரன், சோழன், பாண்டியன் என்னும் மூவரது தமிழ் நாட்டகத்தவர் வழங்குந் தொடர்மொழிக்கண் வரும் மொழி,யாப்பின் பாற் பட்டதாகும்" என்று புலவர்கள் கூறுவர்.*

(எ-டு) *"தாமரை புரையுங் காமர் சேவடி*
*பவளத் தன்ன மேனி திகழொளிக்*
*குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்*
*நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்*
*சேவலங் கொடியோன் காப்ப*
*ஏம வைகல் எய்தின்றால் உலகே"* (குறுந்)

### மரபு ஆகும் முறை

மரபே தானும்,
நாற்சொல் லியலான் யாப்புவழிப் பட்டன்று 1332

மரபாவது, தான் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச் சொல்லின் இயற்கையால் யாப்பின்வழிப் பட்டதாகும்.

## அகவலோசை ஆசிரியத்திற்கு

அகவலென்ப தாசிரி யம்மே. 1333

*அகவல் என்னும் ஓசை ஆசிரியத்துக்கு உரியதாகும்.*

## வெண்பா அஃதன்று

அஃதன் றென்ப வெண்பா யாப்பே, 1334

*வெண்பாவாகச் செய்யப்பட்டது அகவலோசை யன்று. தூக்கு எனினும் ஓசை எனினும் ஒக்கும். அகவலற்ற ஓசையினைச் செப்பலோசை எனவும் உரைப்பார்கள்.*

## கலிக்குத் துள்ளல் ஓசை

துள்ளோசை கலியென மொழிப. 1335

*துள்ளலோசை கலிப்பாவுக்காகும். அஃதாவது, கன்று துள்ளிற்று என்னுமாறு போல இடையிடை உயர்ந்து வருதலாம்.*

## வஞ்சிக்குத் தூங்கல் ஓசை

தூங்க லோசை வஞ்சி யாகும். 1336

*தூங்கல் என்னும் ஓசை வஞ்சிப்பாவில் வரும். இது அறுதியற்ற ஓசைத்தாகி வருவதாம்.*

## மருட்பாவிற்கு ஓசை வரையறை

மருட்பா வேனை இருசா ரல்லது
தானிது என்னும் தன்மை யின்றே. 1337

*மருட்பாவுக்கு ஓசை இஃது என்று கூறக்கூடியதாக ஒன்றும் இல்லை. அது வெண்பாவும் ஆசிரியப்பாவும் உறுப்பாக இரண்டின் ஓசையையும் பெறும்.*

(எ-டு) *திருநுதல் வேரரும்பும் தேங்கோதை வாடும்*
*இருநிலனும் சேவடி எய்தும்—அரிபரந்த*
*போகிதழ் உண்கண் இமைக்கும்*
*ஆகும் மற்றிவள் அகலிடத் தணங்கே.*

*என வரும். இதனில் செப்பலோசையும் அகவலோசையும் வந்துள்ளமை காண்க.*

## ஓசை அமைதியின்றிப் பாட்டு இல்லை

அவ்வியல் பல்லது பாட்டாங்குக் கிளவார், 1338

ஓசை வகைகளைக் கொண்டல்லாமல் பாட்டியற்ற மாட்டார்கள்.

## தூக்கு நடக்கும் இடவகை

தூக்கியல் வகையே ஆங்கென மொழிப. 1339

தூக்கென்று கூறப்பட்ட உறுப்பு நடக்கும் இடவகை சொல்லப்பட்ட நான்கு இடமுமாகும்.

## தொடைப் பாகுபாடு

மோனை எதுகை முரணே இயைபென
நானெறி மரபின தொடைவகை என்ப. 1340

தொடையினது பாகுபாடு, மோனை, எதுகை, முரண், இயைபு என்று நான்கு வகைப்படுவதாம்.

அளபெடை தலைப்பெய ஐந்தும் ஆகும். 1341

அளபெடைத் தொடையைச் சேர்க்க அது ஐந்து என்று கூறவும் பெறும்.

பொழிப்பும் ஒரூஉம் செந்தொடை மரபும்
அமைந்தவை தெரியின் அவையுமா ருளவே. 1342

பொழிப்பு, ஒரூஉ, செந்தொடை எனப் பொருந்தியவைகளையும் ஆராயுமிடத்து, அவையுந் தொடைப் பாகுபாடாகவே அமையும்.

நிரனிறுத் தமைத்தலும் இரட்டை யாப்பும்
மொழிந்தவற் றியலான் முற்றும் என்ப. 1343

வரிசையாக நிறுத்தி அமைத்துக்கொள்ளுதலும், இரட்டைத் தொடையும், முற்கூறிய வழியினால் முடியவும் பெறும்.

## மோனை என்பது

அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை. 1344

அடிதோறுந் தலையெழுத்து ஒத்துவருவது மோனைத் தொடையாகும்.

(எ-டு) "மாவும் புள்ளும் பதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவும் கூம்ப
மாலை தொடுத்த கோதையுங் கமழ
மாலை வந்த வாடையும்
மாயோய் நின்வயிற் புறத்திறுத் தற்றே." என வரும்.

### எதுகை என்பது

அஃதொழித் தொன்றின் எதுகை யாகும். 1345

அடிதோறும் முதலெழுத்து ஒன்றாமல், இரண்டாம் எழுத்து ஒன்றிவருமானால் அஃது எதுகையாகும்.

(எ-டு) ''அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்
கடியவே காடென்றார் கனங்குழாய் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும்
உரைத்தனரே''

என வரும்.

### வருக்க எழுத்தும் வரும்

ஆயிரு தொடைக்கும் கிளையெழுத் துரிய. 134

மோனைத்தொடைக்கும் எதுகைத்தொடைக்கும் எடுத்த எழுத்தே வருதலின்றி வருக்க எழுத்தும் உரியன.

(எ-டு) ''பகலே பல்பூங் கானல் கிள்ளை யோப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇய
பின்னுப்பிணி அவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படக் கருதி''

என்பது வருக்க மோனை.

''ஆறறி அந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரம் தீமடுத்துக்
கூறாமற் குறித்ததன்மேல் செல்லுங் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி''

என்பது வருக்கஎதுகை.

### முரண் என்பது

மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே. 1347

சொல்லாலும் பொருளாலும் மாறுபடத் தொடுத்தல் முரண்தொடை எனப்பெறும்.

(எ-டு) ''இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னின் அன்ன நுண்தா துறைக்கும்.''

என்பது பொருள்முரண்.

''சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணும் உடையவால் அணங்கே.''

என்பது சொல்முரண்.

## இயைபு என்பது

இறுவாய் ஒப்பினஃ தியைபென மொழிப. 1348

அடிதோறும் ஈற்றெழுத்துப் பொருந்திவரின் இயைபுத்தொடை என்று கூறுவர்.

(எ-டு) "இன்னகத் துவர்வாய்க் கிளவியும் அணங்கே
நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே
ஆடமைத் தோளி கூடலு மணங்கே
அரிமதர் மழைக்கணு மணங்கே
திருநுதற் பொறித்த திலதமு மணங்கே"

என வரும்.

## அளபெடை என்பது

அளபெழின் அவையே அளபெடைத் தொடையே. 1349

அடிதொறும் அளபெழுமாறு தொடுப்பின், அளபெடைத் தொடையாம்.

(எ-டு) "ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற் பட்டது" என வரும்.

## பொழிப்பு என்பது

ஒருசீ ரிடையிட் டெதுகை யாயின்
பொழிப்பென மொழிதல் புலவர் ஆறே. 1350

ஒரு சீர் இடையிட்டு எதுகை முதலியன வருமாறு தொடுப்பின், அதனைப் பொழிப்பென்று கூறுதல் புலவருடைய நெறியாகும்.

(எ-டு) 'அரிக்குரற் கிண்கிணி அரற்றுஞ் சீறடி'

இது பொழிப்பு மோனை.

'பன்னருங் கோங்கின் நன்னலங் கவற்றி'

இது பொழிப்பு எதுகை.

'சுருங்கிய நுசுப்பில் பெருகுவடந் தாங்கி'

இது பொழிப்பு முரண்.

'கடலே, கானலங் கழியே கைதையர் துறையே'

இது பொழிப்பு இயைபு.

'பூஉங் குவளைப் போஒ தருந்தி'

இது பொழிப்பு அளபெடை.

ஒரூஉ என்பது

இருசீர் இடையிடின் ஒரூஉஎன மொழிப. 1351

இரண்டு சீர் இடையீட்டு மோனை முதலாயின வரத் தொடுப்பதனை ஒரூஉத்தொடை என்று கூறுவர்.

(எ-டு) 'அம்பொற் கொடுஞ்சி நெடுந்தேர் அகற்றி'
இஃது ஒரூஉ மோனை.

'மின்னிவ ரொளிவடந் தாங்கி மன்னிய'
இஃது ஒரூஉ எதுகை.

'குவிந்து சுணங்கரும்பி கொங்கை விரிந்து'
இஃது ஒரூஉ முரண்.

'நிழலே இனியத னயலது கடலே'
இஃது ஒரூஉ இயைபு.

'காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்'
இஃது ஒரூஉ அளபெடை.

செந்தொடை என்பது

சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லியற் புலவர்அது செந்தொடை என்ப. 1352

மேற்கூறப்பட்ட தொடையும் தொடை விகற்பமும்போல் அல்லாமல், வேறுபடத் தொடுப்பது செந்தொடை என்று, சொல்லிலக்கணங்களை அறிந்த புலவர்கள் கூறுவர்.

(எ-டு) 'பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே.' என வரும்.

தொடையெல்லாம் விரிவகையால் உணர்த்தல்

மெய்பெறு மரபில் தொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை எழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே. 1353

வடிவுபெற்ற மரபினையுடைய தொடையின் வகைகள் எல்லாம் பதின்மூவாயிரத் தறுநூற்றுத் தொண்ணூற் றொன்பது என்று, செய்யுள் இலக்கணங்களை அறிந்தவர்கள் உரைப்பார்கள்.

| | |
|---|---|
| மோனைத் தொடை | 1019 |
| எதுகைத் தொடை | 2473 |
| முரண் தொடை | 2 |
| இயைபுத் தொடை | 182 |
| அளபெடைத் தொடை | 159 |
| பொழிப்புத் தொடை | 654 |
| ஒரூஉத் தொடை | 654 |
| செந்தொடை | 8556 |
| ஆகத், தொகை விகற்பம் | 13699 ஆகும். |

## வரம்பிலவாக விரியும்

தெரிந்தனர் விரிப்பின் வரம்பில வாகும். 1354

மேற்கூறப்பட்ட தொடையினை ஆராய்ந்து விரித்துரைக்கத் தொடங்கினால் மேலும் கணக்கில்லாமல் விரியும்.

(எ-டு) 'அணிமலர் அசோகின் தளிர்நலங் கவற்றி'
இஃது இணைமோனை.

'பொன்னின் அன்ன பொறிசுணங் கேந்தி'
இஃது இணை எதுகை.

'சீறடிப் பேரகல் அல்குல் ஒல்குபு'
இஃது இணை முரண்.

'தாஅட் டாஅ மரைமலர் உழக்கி'
இஃது இணை அளபெடை.

'அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல்'
இது கூழை மோனை.

'நன்னிற மென்முலை மின்னிடை வருந்த'
இது கூழை எதுகை.

'சிறிய பெரிய நிகர் மலர்க் கோதைதன்'
இது கூழை முரண்.

'மாதர் நகிலே வல்லே இயலே'
இது கூழை இயைபு.

'மாஅத் தாஅண் மோஒட் டெருமை'
இது கூழை அளபெடை

'அயில்வேல் அனுக்கி அம்பலைத் தமர்ந்த'

*இது முற்று மோனை.*

*இப்படிப் பலவும் வரும்.*

## தொடைக்கு உரியதோர் மரபு

தொடைநிலை வகையே ஆங்கென மொழிப. 1355

*தொடைநிலை வகை மேற்கூறப்பட்ட பாகுபாட்டினை உடையன என்று கூறுவர்.*

## நோக்கு என்பது

மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே. 1356

*மாத்திரை முதலாக அடிநிலையளவும் நோக்குதலாகிய கருவி நோக்கென்று சொல்லப்படும்.*

## பாவகையின் விரி

ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே. 1357

*பாவினது வகையை விரிக்குங்காலத்தில், ஆசிரியம் எனவும், வஞ்சியெனவும், வெண்பா எனவும், கலியெனவும் நான்குவகைப் படும் என்று கூறுவர்.*

## முப்பொருட்கும் உரியன அவை

அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப. 1358

*அப்பாக்கள் நான்கும், பொதுவாக நின்றவிடத்து, அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று முதற்பொருட்கும் உரியன என்று கூறுவர்.*

## நான்கு பாவும் இரண்டினுள் அடங்கும்

பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா என்றாங்
காயிரு பாவினுள் அடங்கும் என்ப. 1359

*மேற்கூறப்பட்ட நான்கு பாக்களும், ஆசிரியப்பா வெண்பா என்னும் இரு பாக்களுள் அடங்கும்.*

ஆசிரிய நடைத்தே வஞ்சி யேனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப. 1360

*ஆசிரியம் போன்ற நடையை உடையது வஞ்சி; வெண்பாப் போன்ற நடையை கலி என்று கூறுவர்.*

## வாழ்த்தியல் வகை

வாழ்த்தியல் வகையே நாற்பாக்கு முரித்தே. 1361

*வாழ்த்தியலின் வகை நால்வகைப் பாக்களுக்கும் உரிய தாகும்.*

## புறநிலை வாழ்த்திற்கு உரிய பா வகை

வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ. 1362

*'வழிபடுகிற தெய்வம் நின்னைப் பாதுகாக்கக் குற்றந்தீர்ந்த செல்வத்தோடு வழிவழியாகச் சிறந்து விளங்குக' என்னும் புறநிலைவாழ்த்துக், கலிப்பா வகையினும், வஞ்சிப்பா வகை யினும் வரப்பெறாது.*

## வாயுறை வாழ்த்து அவையடக்கியல் செவியறிவுறூஉ என்பன

வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
செவியறி வுறூஉவென அவையும் அன்ன. 1363

*வாயுறை வாழ்த்தும், அவையடக்கியலும், செவியறிவுறுத்தற் பொருளும் கலியினும் வஞ்சியினும் வரப்பெறா; எனவே ஏனைய இரண்டினும் வரப்பெறும்.*

## வாயுறை வாழ்த்து

வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே. 1364

*வாயுறைவாழ்த்தை விளங்க ஆராயின், வேம்பையுங் கடு வினையும் போன்ற வெஞ்சொல்லைச் சேர்க்காது, இனிய நற் சொற்கள் அமைத்துப், பயனுள சொல்லில் பாதுகாப்புச் சொற் களைக் கூறுதலாம். வாயுறை—சொல் மருந்து. (எ-டு) புறம் 'இருங்கடலுடுத்த' எனும் செய்யுளைக் காண்க.*

### அவையடக்கியல்

அவையடக் கியலே அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே. 1365

*அவையடக்கமாவது, குற்றமற ஆராயின், அறியாதவை களைச் சொன்னாலும், அதனைப் பண்பமை சொற்களாகக் கொள்ளுங்கள் என்று எல்லா மக்களுக்கும் தாழ்மையான சொற்களைக் கூறுதலாம்.*

### செவியறிவுறூஉ

செவியுறை தானே,
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே. 1366

*செவியுறையாவது பெரியோர்களுடைய நடுவில் தாழ்ந்து ஒழுகுதல் கடமையாம் என்று செவியறிவுறுத்துதல்.*

### நாற்சீரடிக்குப் பொருந்துவன சில

ஒத்தா ழிசையும் மண்டில யாப்பும்
குட்டமும் நேரடிக் கொட்டின என்ப. 1367

*ஒத்தாழிசைக் கலிக்கு உறுப்பாகிய ஒத்தாழிசையும், ஆசிரியப்பாவின்கண் நிலைமண்டிலம் அடிமறிமண்டிலம் என்பனவும், ஒத்தாழிசைக்கும் கொச்சகத்திற்கும் பொதுவாகிய குட்டமும் நாற்சீரடிக்குப் பொருந்துவன.*

### குட்டம் எருத்தடி உடைமை

குட்ட மெருத்தடி யுடைத்து மாகும். 1368

*தரவு ஈற்றயலடி முச்சீரால் வரவும் பெறும்.*

### மண்டிலமும் குட்டமும் செந்தூக்கியல

மண்டிலங் குட்டம் என்றிவை இரண்டும்
செந்தூக் கியல என்மனார் புலவர். 1369

*மண்டிலமாகக் கூறப்படும் பாவும், குட்டமெனக் கூறப்படும் பாவும், அகவலோசையின் தன்மையைக் கொண்டவை.*

(எ-டு) *"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே.*
*மலையன் ஒள்வேற் கண்ணி*
*முலையும் வாரா முதுக்குறைந் தனளே"*

*இது நேரிசை யாசிரியம்.*

"நீரின் தண்மையும் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து தீரத் தீரும்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாவே."

இஃது இணைக்குறளாசிரியம்.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே."

இது நிலைமண்டில ஆசிரியம்

"குரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரல் எனினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே."

இஃது அடிமறி மண்டிலம்

## வெண்பா ஆமாறு உணர்த்துதல்

நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ
டொத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின. 1370

நெடுவெண்பாட்டு, குறுவெண்பாட்டு, கைக்கிளை, பரி பாடல், அங்கதச் செய்யுள் இவைகளைப் போன்றவைகள் எல் லாம், வெண்பாயாப்பினை உடையன. (எ-டு) வரும்வழிக் காண்க.

## கைக்கிளைப் பொருண்மை

கைக்கிளை தானே வெண்பா வாகி
ஆசிரிய இயலான் முடியும் என்ப. 1371

கைக்கிளைப் பாடல் வெண்பாவினால் முழுவதும் வராமல், முதலிரண்டடியும் வெண்பாவாகிக், கடையிரண்டடியும் ஆசிரிய மாகி, இருபாக்களினாலும் முடிவுபெறும். [இது மருட்பா எனப் பெறும்.]

(எ-டு) "உரவொலி முந்நீர் உலாய்நிமிர்ந் தன்ன
கரவரு காமங் கனல — இரவெதிர்
முள்ளெயி றிலங்கு முகிழ் நகை
வெள்வளை நல்காள் வீடும்என் உயிரே"

என வரும்.

## பரிபாடல் ஆமாறு உணர்த்தல்

பரிபா டல்லே தொகைநிலை வகையின்
இதுபா என்னும் இயல்நெறி இன்றிப்
பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப. 1372

*பரிபாடலாவது, தொகைநிலை வகையால் பா இஃது என்று சொல்லப்பெறும் இலக்கணம் இல்லாமல், எல்லாப் பாவிற்கும் பொதுவாக நிற்றற்கு உரியதென்று கூறுவர்.*

## இதுவும் அது

கொச்சகம் அராகஞ் சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும். 1373

*பரி பாடல், பாட்டுப் பொதுவாய் நிற்றலே யல்லாமல், கொச்சகமும் அராகமும் சுரிதகமும் எருத்தும் என்று சொல்லப் பட்ட நான்கும் தனக்கு உறுப்பாகக், காமப்பொருளைக் கூறும் தன்மையை உடையது. [அறத்தினும் பொருளினும் வராது.]*

## இதுவும் அது

சொற்சீ ரடியும் முடுகியல் அடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும். 1374

*சொற் சீரடியும் முடுகிய லடியும் பரிபாடற்கு உரியன வாகும்.*

## சொற்சீர் ஆமாறு உணர்த்தல்

கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து
முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்
மொழியசை யாகியும் வழியசை புணர்ந்தும்
சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே. 1375

*கட்டுரை வகையினால் எண்ணொடு சேர்ந்து, நாற்சீரடி யின்றி முச்சீரடியானும் இரு சீரடியானும் ஒழிந்த அசையினை யுடையதாகியும், ஒரு சீரின்கண்ணே பிறிதொரு சீர்வரத் தொடாது ஓரசைவரத் தொடுத்தும், சொற்றானே சீராந் தன்மை யைப் பெற்றும், இவ்வியல்போடு நடக்கும் சொற்சீரடி. (எ-டு) இவ்விலக்கணம் வருமாறு, ஆயிரம் விரித்த எனும் பரி பாடற் செய்யுளுள் வரும், தரவு, எருத்து, அராகம், ஆசிரியம், பேரெண், தனிச்சொல், சுரிதகம் முதலியவாற்றான் அறிக.*

அங்கதமாவது

அங்கதந் தானே அரில்தபத் தெரியில்
செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே. 1376

அங்கதமாவது, குற்றமற ஆராயின், செம்பொருளெனவும் கரந்ததெனவும் இருவகைப்படும்.

செம்பொருள் அங்கம்

செம்பொரு ளாயின வசையெனப் படுமே. 1377

செம்பொருள் அங்கதம் வசையென்று பெயர்பெறும்.

மொழிகரந்து வரும் அங்கதம்

மொழிகரந்து மொழியினது பழிகரப் பாகும். 1378

தான் மொழியும் மொழியை மறைத்து மொழியின், அது பழிகரப்பெனப் பெயர்பெறும்.

செய்யுள் வகை

செயயுள் தாமே யிரண்டென மொழிப. 1379

சொல்லப்பட்ட செய்யுட்கள் இரண்டு வகையின என்று கூறுவர் புலவர்.

செவியுறைச் செய்யுள்

புகழொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயின்
செவியுறைச் செய்யுள் என்மனார் புலவர். 1380

புகழொடும் பொருளொடும் புணரவரில், செவியுறைச் செய்யுள் என்று கூறுவர் புலவர்.

அங்கதச் செய்யுள்

வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர். 1381

வசையொடும் நசையொடும் சேர்ந்த செய்யுள், அங்கதச் செய்யுள் என்று கூறுவர் புலவர்.

கலிப்பாவின் பாகுபாடு

ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே. 1382

கலிப்பா, ஒத்தாழிசைக் கலிப்பாவும், கலிவெண் பாட்டும், கொச்சகமும், உறழ் கலியும் என நான்கு வகைப்படும்.

## இருவகை ஒத்தாழிசைக் கலி

அவற்றுள்,
ஒத்தா ழிசைக்கலி இருவகைத் தாகும். 1383

*ஒத்தாழிசைக் கலி இரண்டு வகைப்படும்.*

## ஒத்தாழிசைக் கலியின் உறுப்புக்கள்

இடைநிலைப் பாட்டே தரவுபோக் கடையென
நடைநவின் றொழுகும் ஒன்றென மொழிப. 1384

*ஒத்தாழிசைக் கலி, தாழிசையும் தரவுஞ் சுரிதகமும் அடைநிலைக்கிளவியுமென நான்கு உறுப்பினையுடையது. [இடைநிலைப் பாட்டு ஒத்தாழிசைக் கலிப்பா.]*

## தரவு வருதல்

தரவே தானும் நாலடி இழிபாய்
ஆறிரண் டுயர்வும் பிறவும் பெறுமே. 1385

*தரவு நாலடியிழிபாகப் பன்னிரண்டடி உயர்பாக இடைவரும் அடி எல்லாவற்றானும் வரப்பெறும்.*

## தாழிசை வருதல்

இடைநிலைப்பாட்டே,
தரவகப் பட்ட மரபின வென்ப. 1386

*தாழிசைகள் தரவிற் சுருங்கிவரும் என்பர்.*

## தனிச்சொல் வருதல்

அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகும் ஆங்கென மொழிப. 1387

*அடைநிலைக் கிளவியாகிய தனிச்சொல், தாழிசைப் பின்னர் நடத்தலைப் பொருந்தி யொழுகும் என்று கூறுவர் புலவர்.*

## சுரிதகம்

போக்கியல் வகையே வைப்பெனப் படுமே
தரவிய லொத்தும் அதனகப் படுமே
புரைதீர் இறுதி நிலையுரைத் தன்றே. 1388

*சுரிதகம் என்பது வைப்பெனவும் படும். அது தரவோடொத்த அளவினையுடையதாகியும், அதனில் குறைந்த அளவினை உடையதாகியும், குற்றந்தீர்ந்த பாட்டினது இறுதி நிலையை உரைத்தது.*

## ஒத்தாழிசைக் கலிப்பா

ஏனை யொன்றே,
தேவர்ப் பராய முன்னிலைக் கண்ணே. 1389

சொல்லாது ஒழிந்த ஒத்தாழிசைக் கலிப்பா, முன்னிலையிடத்துத் தேவரைப் பரவும் பொருண்மையினை உடையது.

## முன்னிலைப் பரவலின் வகை

அதுவே
வண்ணகம் ஒருபோ கெனவிரு வகைத்தே. 1390

தேவரிடத்து முன்னிலைப் பரவலாவது அது, வண்ணக மெனவும் ஒருபோகு எனவும் இரு வகைப்படும்.

## வண்ணகம்

வண்ணகந் தானே,
தரவே தாழிசை எண்ணே வாரமென்று
அந்நால் வகையில் தோன்றும் என்ப. 1391

வண்ணக வொத்தாழிசையாவது, தரவும் தாழிசையும் எண்ணும் சுரிதகமும் என்று சொல்லப்பட்ட நான்கு உறுப்பினையும் உடையது ஆகும்.

## தரவிற்கு அடிவரையறை

தரவே தானும்,
நான்கும் ஆறும் எட்டும் என்ற
நேரடி பற்றிய நிலைமைத் தாகும். 1392

வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவிற்குத், தரவு நான்கும் ஆறும் எட்டும் ஆகிய அளவடியினாலே வரும்.

## தாழிசைக்கு அடி வரையறை

ஒத்துமூன் றாகும் ஒத்தா ழிசையே
தரவிற் சுருங்கித் தோன்றும் என்ப. 1393

தாழிசையும், தம்முள் அளவும் ஒத்து மூன்றாகிவரும். அவை தரவிற் சுருங்கித் தோன்றும் என்பதாம்,

## அடக்கியல்

அடக்கியல் வாரந் தரவோ டொக்கும். 1394

அடக்கியலாகிய சுரிதகம் தரவு என்பவற்றோடு ஒத்த இலக்கணத்தை உடையது ஆகும்.

எண் பெருகுதலும் சுருங்குதலும்

முதற்றொடை பெருகிச் சுருங்குமன் னெண்ணே. 1395

முதலில் தொடுத்த உறுப்புப் பெருகிப், பின்தொடுக்கும் உறுப்புச் சுருங்கி வர(

எண் இடை ஒழிதல்

எண்ணிடை ஒழிதல் ஏதம் இன்(
சின்னம் அல்லாக் காலை யான. 1396

தனிச்சொல் இல்லாதவிடத்து, மேற்சொல்லப்பட்ட எண், ஒவ்வொன்று இடையொழிந்து வருதலும் குற்றமாகாது.

ஒருபோகின் இருவகை

ஒருபோ கியற்கையும் இருவகைத் தாகும். 1397

'ஒரு போகு' என்னும் கலியும் இரண்டு வகைப்படும்.

கொச்சக வொருபோ கம்போ தரங்க மென்
றொப்ப நாடி உணர்தல் வேண்டும். 1398

ஒருபோகு என்னும் கலியினைக் கொச்சக வொருபோகு எனவும் அம்போதரங்கம் எனவும் பொருந்த நாடி அறிதல் வேண்டும்.

கொச்சக ஒருபோகு

தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
மடக்கிய லின்றி அடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக வொருபோ காகும் என்ப. 1399

தரவு முதலான உறுப்புக்களுள், தரவின்றித் தாழிசை முதலிய உறுப்புக்கள் பெற்றும்; தாழிசையின்றித் தரவு முதலியன உடைத்தாகியும்; எண்ணுகிய உறுப்புக்களை இடையிட்டுத் தனிச்சொல் வாராதொழியினும்; சுரிதக மின்றித் தரவு தானே நிமிர்ந்தொழுகி முடியினும்; ஒத்தாழிசையின் யாக்கப்பட்ட யாப்பினும், அதற்குரித்தாக ஓதப்பட்ட கடவுள் வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப்பொருளாக வரினும் கொச்சக ஒருபோகு என்று பெயர்பெறும்.

மேலதற்கு ஓர் புறனடை

ஒருபான் சிறுமை யிரட்டியத னுயர்பே. 1400

மேற்கூறப்பட்ட கொச்சக ஒருபோகு பத்தடிச் சிறுமை யாகவும் இருபதடிப் பெருமையாகவும் வரும்.

### அம்போதரங்கம்—அடிவரையறை

அம்போ தரங்கம் அறுபதிற் றடித்தே
செம்பாதி வாரஞ் சிறுமைக் கெல்லை. 1401

*அம்போதரங்க ஒருபோகுக்கு உயர்ந்த எல்லை அறுபதடியாம்; அதிற் பாதியாகிய முப்பதடி உரிமை சிறுமைக்கு எல்லையாம்.*

### அம்போதரங்கத்துக்கு உறுப்புக்கள்

எருத்தே கொச்சகம் அராகஞ் சிற்றெண்
அடக்கியல் வாரமொ டைந்திலக் குரித்தே. 1402

*தரவும், கொச்சகமும், அராகமும், சிற்றெண்ணும் அடக்கியல் வாரமும் என ஐந்து உறுப்புடையது அம்போதரங்க ஒருபோகு.*

### கலி வெண்பா

ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்
திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே. 1403

*ஈற்றடியளவும் ஒரு பொருளைக் குறித்து, வெண்பா இலக்கணத்தைக் கொண்டு, மாறுபாடில்லாமல் முடிவது, கலிவெண்பாவாகும்,*

*(எ-டு) "மரையா மரல்கவர மாரி வறப்ப*
*வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்*
*சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்*
*உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்*
*தண்ணீர் பெறூஅத் தடுமாற் றருந்துயரம்*
*கண்ணீர் நனைக்கும் கடுமைய காடென்றால்*
*என்னீர் அறியாதீர் போல இவைகூறல்*
*இன்னீர வல்ல நெடுந்தகாய் எம்மையும்*
*அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு*
*துன்பந் துணையாக நாடி னதுவல்ல(து)*
*இன்பமும் உண்டோ எமக்கு."* *(கலி. 6)*

*என வரும்.*

### கொச்சகக் கலி

தரவும் போக்கும் இடை இடை மிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே. 1404

தரவாகிய உறுப்பும் சுரிதகமாகிய உறுப்பும் முதலும் முடிவும் வருதலில்லாமல் இடையிடை வந்து தோன்றியும்; ஐஞ்சீரடி பல வந்தும்; தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி என்னும் ஆறு உறுப்புக்களையும் பெற்றும்; மேற்கூறப்பட்ட உறுப்புக்களை உடைத்தாகியும் இல்லாதாகியும்; வெண்பாவின் இலக்கணத்தைக் கொண்டு வெளிப்படையாகத் தோன்றும் பாநிலை வகை, கொச்சகக் கலிப்பா ஆகும் என்று, நூலின் இலக்கணங்களை அறிந்த புலவர்கள் கூறினர்.

## உறழ் கலி

கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்
போக்கின் றாகல் உறழ்கலிக் கியல்பே 1405

உறழ் கலிப்பாவிற்கு இலக்கணம், கூற்றும் மாற்றமும் கலந்து வந்து, சுரிதகம் இல்லாமல் முடிவது.
(எ-டு) 'யாரிவன் எங்கூந்தல்'
என வரும் கலி. 89-வது செய்யுளைக் காண்க.

## ஆசிரியப்பாவின் அடிவரையறை

ஆசிரியப் பாட்டின் அளவிற் கெல்லை
ஆயிரம் ஆகும் இழிபுமூன் றடியே. 1406

ஆசிரியப் பாடலின் உயர்ந்த அளவுக்கு எல்லை ஆயிரம் அடிகளாகும்; குறைந்தது மூன்றடிகளாம். (இடைப்பட்டன எல்லா அடிகளாலும் ஆசிரியப்பா வரப்பெறும்.)

## நெடுவெண்பாட்டு குறுவெண்பாட்டு

நெடுவெண் பாட்டே முந்நான் கடித்தே
குறுவெண் பாட்டிற் களவேழ் சீரே. 1407

நெடுவெண்பாட்டிற்கு எல்லை பன்னிரண்டடி; குறுவெண் பாட்டிற்கு அடி அளவடியுஞ் சிந்தடியுமாகிய இரண்டடியுமாம்.

## அங்கதப் பாட்டு

அங்கதப் பாட்டள வவற்றோ டொக்கும். 1408

அங்கதப் பாட்டாகிய வெண்பாவிற்கு எல்லை சிறுமை இரண்டடி; பெருமை பன்னிரண்டடி

## அடி வரையறை இல்லாதவை

கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை யென்றிவை
தொகைநிலை மரபின் அடியில வென்ப. 1409

*கலிவெண்பா, கைக்கிளைப்பொருளைப் பற்றிய பா, செவியுறை வாழ்த்து, வாயுறை வாழ்த்து புறநிலை வாழ்த்து என்னும் பொருண்மைக்கண் வரும் வெண்பாக்கள் எல்லாம் அளவு வரையறுக்கப்படா. பொருள் முடிவுபெறும் வரை வேண்டிய அளவானே வரப்பெறும்.*

*மருட்பாவினால் வருவன*

புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதிற் றெரியின்
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின வென்ப. 1410

*புறநிலை வாழ்த்தும், வாயுறை வாழ்த்தும், செவியறிவுறூஉவும், மருட்பாவினால் வரப்பெறும் என்பர்.*

*பரிபாடற்கு அடி வரையறை*

பரிபா டல்லே,
நாலீ ரைம்ப துயர்படி யாக
ஐயைந் தாகும் இழிபடிக் கெல்லை. 1411

*பரிபாடற் செய்யுள் நானூறடி உயர்பாகவும், இருபத்தைந் தடி இழிபாகவும் வரும்.*

*அளவியல் வகை*

அளவியல் வகையே அனைவகைப் படுமே. 1412

*இவ் வதிகாரத்துள் ஈண்டு அதிகரிக்கப்பட்ட அளவியல், ஈண்டுச் சொன்ன வகை பெறும்.*

*எழுநிலமும் அடி வரையறையும்*

எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியின்
அடிவரை யில்லன ஆறென மொழிப. 1413

*எழுநிலமாவன பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்பன; அவற்றுள், பாட்டொழிந்த ஆறும் அடி வரையிலவாம்.*

*அறுநிலமும் அவை அமைதலும்*

அவைதாம்,
நூலி னான உரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான

மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான. 1414

அடி வரையில்லாதவை ஆறு என்று கூறப்பட்ட அவை தாம், நூலின்கண்ணவும்; உரையின்கண்ணவும்; நொடித்தன் மாத்திரையாகிய பிசியின்கண்ணவும்; ஒரு மொழிக் கேதுவாகி வரும் முதுமொழிக்கண்ணவும்; மறைத்துச் சொல்லுஞ் சொல்லாற் கிளந்த மந்திரத்தின் கண்ணவும்; சொல்லுகின்ற பொருளை இடைகரந்து சொல்லும் குறிப்பின்கண்ணவும் என அறுவகைப்படும்.

## நூல் எனப்படுவது

அவற்றுள்,
நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உண்ணின் றகன்ற உரையொடு புணர்ந்து
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே. 1415

நூலென்று கூறப்படுவது, எடுத்துக்கொண்ட பொருளொடு முடிக்கும் பொருண்மை மாறுபடாமல், கருதிய பொருளைத் தொகையானும் வகையானும் காட்டி, அதனகத்து நின்றும் விரிந்த உரையோடு பொருத்தமுடையதாகி, நுட்பமாக விளக்குவதாம். அதுவே நூலின் இயல்பாம் என்க.

## நூலியல்பின் இருவகை

அதுவே தானும் ஒருநால் வகைத்தே. 1416

மேற்கூறப்பட்ட நூல் தானும் நான்கு வகையினை உடையதாம்.

## நூல் நடக்கும் வகை

ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்று
ஆங்கனை மரபின் இயலும் என்ப. 1417

ஆசிரியன், யாதானும் ஒரு பொருளைக் குறித்துக் கூறுஞ் சூத்திரத்தினாலும், இனமாகிய பொருள்கள் சொல்லப்படும் ஓத்தினாலும், மேற்சொல்லப்பட்ட இனங்கள் பலவற்றையும் கூறப்படும் [illegible]லத்தினாலும், இம்மூன்றனையும் உறுப்பாக அடக்கிய [illegible] அம்மரபினால் நூல் நடக்கும்.

### சூத்திரம் என்னவென்பது

அவற்றுள்,
சூத்திரந் தானே
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே. 1418

*சூத்திரமாவது கண்ணாடியின் நிழலைப்போல் விளங்கத் தோன்றி, ஆராயாமற் பொருள் நன்றாக விளங்குமாறு பாட்டின் கண்ணே பாடி யமைப்பது.*

### ஓத்திற்கு இலக்கணம்

நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்தென மொழிப உயர்மொழிப் புலவர். 1419

*ஒரே வகையான மணியை, வரிசையாக வைத்தாற்போல, ஒரே வகையான பொருளை ஓரிடத்தே அமைத்து வைத்தலை உயர்ந்த மொழிகளையுடைய புலவர் ஓத்து என்று உரைப்பர்.*

### படலத்திற்கு இலக்கணம்

ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
பொது மொழி தொடரின்அது படலம் ஆகும். 1420

*ஓரினமாகிய நெறியில்லாமல், பலவகையான பொருள்களும் கலந்து, பொதுமொழியால் தொடர்வுபடின், அது படலம் என்னும் பெயரைப் பெறும்.*

### பிண்டம் என்பது

மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவரது பிண்டம் என்ப. 1421

*மூன்று உறுப்பினையும் அடக்கிய தன்மையுடையதாயின் அதனைப் புலவர் பிண்டம் என்று கூறுவர்.*

### உரைவகை நான்கு

பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருண்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்று
உரைவகை நடையே நான்கென மொழிப. 1422

*பாட்டிடத்திலே வைக்கப்பட்ட பொருட்குறிப்பினாலும்; பாக்களை யொழியத் தோற்றிய சொல்வகையானும்; பொரு*

னியல்பில்லாத பொய்ம்மொழியினாலும்; பொருளைப் பொருந்திய நகைமொழியினாலும் என்று, உரையின்வகை நான்காக நடக்கும் என்று புலவர் கூறுவர்.

### உரை இருவகை

அதுவே தானும் இருவகைத் தாகும். 1423

மேற்கூறப்பட்ட உரை, மைந்தர்க்கு உரைப்பனவும் மகளிர்க்கு உரைப்பனவும் என இரண்டு வகைப்படும்.

### உரைப்பதற்கு உரிய வரையறை

ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே
ஒன்றே யார்க்கும் வரைநிலை யின்றே. 1424

மகளிர்க்கு உரைக்கும் உரை செவிலிக்குரியது; மைந்தர்க்கு உரைக்கும் உரை எல்லார்க்கும் உரியது.

### பிசி என்னவென்பது

ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணி வினானும்
என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே. 1425

பிசியினுடைய வகையானது, ஒப்புமைக் குணத்தோடு பொருந்தி வரும் உவமப் பொருளானும், ஒன்று சொல்ல ஒன்று தோன்றுந் துணிவிற்றாகச், சொல்லும் சொல்லானும் என்று இருவகைப்படும்.

### முதுமொழி என்னவென்பது

நுண்மையும் சுருக்கமும் ஒளியும் உடைமையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப. 1426

நுண்மை விளங்கவும், சுருக்கம் விளங்கவும், ஒளியுடைமை விளங்கவும், மென்மை விளங்கவும் என்று இத்தகையன விளங்குமாறு தோன்றிக், கருதின பொருளை முடித்தற்கு வரும் ஏதுவைக் குறித்தன, முதுமொழி என்று கூறுவர் புலவர்.

### மந்திரம் என்னவென்பது

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப. 1427

நிறைந்த மொழியினையுடைய மாந்தர், தமது ஆணையால் சொல்லிய மறைந்தமொழிதான் மந்திரம் என்று அறிஞர்கள் கூறுவர்.

## குறிப்பு மொழி

எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்பு மொழியே. 1428

எழுத்தோடுஞ் சொல்லோடுஞ் சேராதாகிச், சொல்லினால் உணரப்படும் பொருளின் புறத்ததுவே குறிப்புமொழி யாகும்.

## பண்ணத்தி என்னவென்பது

பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டி னியல பண்ணத் திய்யே, 1429

பண்ணைத் தோற்றுவிக்கும் செய்யுட்கள், பா கலந்த பொருளை யுடையனவாகிப், பாட்டுக்களின் இயல்பை உடையனவாம் [பண்ணத்தி—பாவினம்.]

## பண்ணத்தியின் அளவு

அதுவே தானும் பிசியொடு மானும். 1430

மேற்கூறப்பட்ட பண்ணத்தி, பிசியோடொத்த அளவினை உடையது ஆகும்.

(எ-டு) "கொன்றை வேய்ந்த செல்வன் அடியினை
என்று மேத்தித் தொழுவோம் நாமே."

என வரும்.

## பண்ணத்தி—அடிப் பெருக்கம்

அடிநிமிர் கிளவி ஈரா றாகும்
அடியிகந்து வரினும் கடிவரை யின்றே. 1431

பண்ணத்தியின் அடிப்பெருக்கம் பன்னிரண்டாகும். அவ்வெல்லையைக் கடந்து வரினும் விலக்கப்பெறுதல் இல்லை.

கிளரியல் வகையிற் கிளந்தன தெரியின்
அளவியல் வகையே அனைவகைப் படுமே. 1432

இங்குச் சொன்னவகையினால் சொல்லப்பட்டவைகளை ஆராயுமிடத்து அளவியல்வகை அத்துணை வகையாகப் பாகுபடுவதாகும் என்க.

### திணை ஆமாறு

கைக்கிளை முதலா ஏழ்பெருந் திணையும்
முற்கிளந் தனவே முறையி னான. 1433

திணையாவது கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்பன; அவை முறையாக மேலே கூறப்பட்டன.

### கைகோள் வகையிற் களவு

காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வுமென்று
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே. 1434

இயற்கைப் புணர்ச்சியும், இடந்தலைப்படலும், பாங்கற் கூட்டமும், தோழியிற் கூட்டமும் என்று சொல்லப்பட்ட நான்கு வகையானும், அவற்றைச் சார்ந்து வருகின்ற மொழியானும் வருவன களவென்று கூறுதல், மறையறிந்தோர் நெறியாம். கள்வென்றது மறை என்றது, அது தீமை பயக்கும் களவு அல்லாததனால் என்க.

### கைகோள் வகையிற் கற்பு

மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்
இவைமுத லாகிய வியனெறி திரியாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே. 1435

களவொழுக்கம் வெளிப்படுதலும், களவொழுக்கமின்றி, உறவினராலே பெறுதலும் என்று சொல்லப்பட்ட, இவை முதலாகிய இயற்கை நெறியில் தப்பாது, மகிழ்தலும், புலத்தலும், ஊடலும், ஊடல் தீர்தலும், பிரிதலும் என்று சொல்லப்பட்ட இவற்றொடுங் கூடி வருவது கற்பு என்று சொல்லப்பெறும்.

### தொகுத்து உணர்த்தல்

மெய்பெறும் அவையே கைகோள் வகையே. 1436

கைகோள் வகையாவன பொருள்பெற வந்த மேற்கூறப்பட்ட களவு கற்பு என்னும் இருவகையேயாம்.

### களவொழுக்கக் கிளவி கூறுதற்கு உரியவர்

பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியோடு

அளவியன் மரபின் அறுவகை யோருங்
களவியற் கிளவிக் குரியர் என்ப. 1437

பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, மிகுந்த சிறப்பினை யுடைய தலைவன், தலைவி என்று கூறப்பட்ட கூத்தொழுகும் தன்மையினையுடைய அறுவகையோரும், களவொழுக்கச் சொல் கூறுதவற்கு உரியவராவர்.

## கற்பொழுக்கத்துப் பன்னிருவர்

பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர். 1438

பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அழகிய மேன்மையினை யுடைய அறிஞர், கண்டோர், பேணத்தக்க சிறப்பினையுடைய பார்ப்பான் முதலாகச், சொல்லப்பட்ட அறுவருங்கூடப் பன்னிரு வரும் கற்பின்கண் கூறுதற்குரியர்.

## இருவகைக் கைகோளிற்கும் மரபு

ஊரும் அயலும் சேரி யோரும்
நோய்மருங் கறிநரும் தந்தையும் தன்னையும்
கொண்டெடுத்து மொழியப் படுதல் அல்லது
கூற்றவண் இன்மை யாப்புறத் தோன்றும். 1439

ஊரில் உள்ளவர்களும், சேரியில் உள்ளவர்களும், பக்கத்து வீட்டில் உள்ளவர்களும், நோய்ப்பகுதியை அறிபவர்களும், தந்தையும், தமையனும் இருவகைக் கைக்கோளினும் பட்டதனை யுட் கொண்டு பிறிதொன்றினை எடுத்துக் கூறினல்லது, வேறு வகையின்மை பொருந்தத் தோன்றும்.

## நற்றாய் கூற்று மிகுதியல்லா நிலை

கிழவன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது. 1440

தலைவனொடும் தலைவியொடும் நற்றாய் கூற்று மிகுதியாகத் தோன்றாது.

## கண்டோர் கூற்று நிகழ்தல்

ஒண்டொடி மாதர்க் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப. 1441

ஒண்டொடி மாதராவார், நற்றாயும் தோழியும் செவிலியும்; இவரோடுந் தலைவனோடும் தலைவியொடுங் கண்டோர் கூறுதல் காணப்பட்டது.

## இடைச்சுர மருங்கில் தலைவன் கிளத்தற்கு உரியன

இடைச்சுர மருங்கில் கிழவன் கிழத்தியொடு
வழக்கிய லாணையில் கிளத்தற்கும் உரியன். 1442

தலைவியை உடன்கொண்டு போகும் இடைச்சுரத்தின்கண், தலைவியைத் தலைவர் வழக்குநெறி யாணையானே கூறுதற்கும் உரியன்.

(எ-டு) நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை
மணலிடு மருங்கின் அரும்புறம் பொருந்தி
அமர்வரி னஞ்சேன் பெயர்க்குவென்
உமர்வரின் மறைகுவன் மாஅ யோளே"

என வரும்.

## தலைவன் தலைவி அல்லாதார்க்குரிய மரபு

ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தின் எடுத்தே. 1443

தலைவனையும் தலைவியையும் ஒழிந்த பதின்மரும், அத் தலைவனொடும் தலைவியொடும் சொல்லிப்போந்த மரபினாலே, சொல்லப் பெறுவர்.

## கேட்டற்கு உரியவர் பதின்மர்

மனையோள் கிளவியும் கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே. 1444

தலைவனின் மொழியையும், தலைவியின் மொழியையும் நினைக்கும்போது கேட்பவர்கள் அவரேயாவர்; அதாவது அப் பதின்மரும்.

## பார்ப்பார் அறிவர் பேச்சுக்கள்

பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்த்தே. 1445

பார்ப்பார் அறிவர் என்று சொல்லப்பட்ட இருவர்கூற்றையும், இயைபொடு பொருந்தி எல்லோருமே கேட்பர்,

### பரத்தை வாயில் ஆகியோர் பேச்சுக்கள்

பரத்தை வாயில் எனவிரு வீற்றும்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப் பயனிலவே. 1446

*பரத்தை என்று சொல்லப்பெறும் வேறுபாட்டினும், வாயில் என்று சொல்லப்பெறும் வேறுபாட்டினும், தலைமகளைக் குறிப்பிடாத கூற்றுப் பயனில்லை.*

### வாயில்கள் உசாவல்

வாயில் உசாவே தம்முள் உரிய. 1447

*வாயில்கள் உசாவுமிடத்துக் கிழத்தியைச் சுட்டாது தம்முள் உசாவுதல் உரிமையாகும்.*

### கேட்டற் பொருண்மைக்கு மரபுவழு வமைத்தல்

ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் முதலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர். 1448

*ஞாயிறு, திங்கள், அறிவு, நாண், கடல், கானல், விலங்கு, மரன், புலம்பலையுடைய பொழுது, பறவை, நெஞ்சு முதலியனவும்; பிறவும், தாம் கருதிய நெறியினால் சொல்லுவனபோலவும் கேட்குநபோலவும் சொல்லி அமையப்பெறும் என்று கூறுவர் புலவர்.*

### இடம் என்பது

ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியும்
கரும நிகழ்ச்சி இடமென மொழிப. 1449

*ஒருவழிப்பட்டு ஓரியல்பாக முடியும் வினைநிகழ்ச்சி இடமென்று கூறுவர் புலவர்.*

### காலம் என்பது

• இறப்பே நிகழ்வே எதிர தென்னும்
திறத்தியன் மருங்கில் தெரிந்தனர் உணரப்
பொருள்நிகழ் புரைப்பது கால மாகும் 1450

*இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் என்று கூறப்பட்டு இடமும் பக்கமும், ஆராய்ந்து நோக்குமாறு பொருள் நிகழ்ச்சியைக் கூறுவது காலமாகும்.*

(எ-டு) "பூத்துறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே"

எனவும்,

"அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கே ழூர"

எனவும் வரும்.

*பயன்என்பது*

இதுநனி பயக்கும் இதன்மா றென்னும்
தொகுநிலைக் கிளவி பயனெனப் படுமே. 1451

யாதானும் ஒரு பொருளைக் கூறியவழி, இதன் பின்பும், இதனைப் பயக்குமென விரித்துக் கூறாது, முற்கூறிய சொல்லி னுனே தொகுத்துக் கூறுதல் பயன் எனப்படும்.

*மெய்ப்பாடு என்பது*

உயர்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும். 1452

யாதானும் ஒன்றைக் கூறிய விடத்தில் அதன்கண் பொருண்மையை விசாரித்து உணர்தலில்லாமல், அவ்விடத்தில் வரும் பொருட்டன்மையானே மெய்ப்பாடுதோன்ற முடிப்பது, மெய்ப்பாடு என்னும் உறுப்பாம்.

*மெய்ப்பாடு—எண்வகை இயல்நெறி*

எண்வகை இயல்நெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின தருவே. 1453

அது, நகை முதலாகிய எட்டு மெய்ப்பாட்டு நெறியையும் பிழையாதாகி, மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தை உடையது.

*எச்சமாகும்*

சொல்லொடுங் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
புல்லிய கிளவி எச்ச மாகும். 1454

பிறிதோர் சொல்லோடும், பிறிதோர் குறிப்போடும் முடிவைக் கொள்ளுகிற, இயற்கை பொருந்திய சொல் எச்சமாகும்.

முன்னம் என்பது

இவ்விடத் திம்மொழி இவரிவர்க் குரியவென்று
அவ்விடத் தவரவர்க் குரைப்பது முன்னம். 1455

இவ்விடத்தில் இம்மொழியை இவர்க்குச் சொலத்தகும் எனக் குறித்து, அவ்விடத்தில் அம்மொழியை உரைப்பது முன்னமாகும்.

பொருள்வகை ஆமாறு

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்குநெறி இன்றி
இதுவா கித்திணைக் குரிப்பொரு ளென்றது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப. 1456

இன்பமும் துன்பமும் புணர்வும் பிரிவும் ஒழுக்கமும் என்று சொல்லப்பட்டவை வழுவு நெறியில்லாமல், இத் திணைக்குரிய பொருள் இப்பொருள் என்றது, எல்லாப் பொருட்கும் பொதுவாகி நிற்கும் பொருளே பொருள்வகையாம் என்று கூறுவர் புலவர்.

துறை ஆமாறு

அவ்வவ மாக்களும் விலங்கும் அன்றிப்
பிறவவண் வரினுந் திறவதி னுடித்
தத்த மியலின் மரபொடு முடியின்
அத்திறந் தானே துறையெனப் படுமே. 1457

ஐவகை நிலத்திற்கும் உரியரெனப்பெறும் பல்வேறு வகைப்பட்ட மக்களும், மாவும், புள்ளும், ஒதுங்கவா றல்லாமல் வேறுவகையாகச் செய்யினும், அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் மரலாற்று முறைமையும் மாறுபடாமற் செய்யின், அத்தகைய திறப்பாடு உடைத்தாய் வருவது, துறை என்று சொல்லப்படுவதாம்.

மாட்டேறு என்பது

அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தன ருணர்த்தல்
மாட்டென மொழிப் பாட்டியல் வழக்கின். 1458

பொருள் கொள்ளுங்கால், அகன்று பொருள் கிடப்பச் செய்யினும், அணுகிக் கிடப்பச் செய்யினும், இருவகையானுஞ் சென்று பொருள் முடியுமாற்றால் கொணர்ந்துரைப்பச்

செய்தலைச், செய்யுள் வழக்கில் மாட்டென்றும் உறுப்பென்று கூறுவார்கள்.

மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி
உடனிலை மொழியினும் தொடர்நிலை பெறுமே. 1459

மேற்கூறிய எச்சமும் மாட்டும் இன்றியும், அச்செய்யுளுட கிடந்தவாறே அமையுமாறுஞ் செய்யுள் செய்யப்பெறும்.

## வண்ணம் இருபது

வண்ணந் தாமே நாலைந் தென்ப. 1460

வண்ணங்களாவன இருபது என்று கூறுவார்கள்.

## வண்ணங்களின் பெயர்கள்

அவைதாம்,
பாஅ வண்ணம் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்
அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்
எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்
தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணம் என(று)
ஆங்கென மொழிப அறிந்திசி னோரே. 1461

இவைகள் இருபதும் வண்ணங்களின் பெயர்களாம்.

## பாஅ வண்ணம்

அவற்றுட்
பாஅ வண்ணம்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும். 1462

பாஅ வண்ணமாவது, சொற்சீரடியாகி நூலின்கண் பயின்று வருவது.

(எ-டு) "அஇஉ அம்மூன் றுஞ் சுட்டு"
"கொல்லே ஐயம் எல்லே இயக்கம்" என வரும்.

## தாஅ வண்ணம்

தாஅ வண்ணம்
இடையிட்டு வந்த எதுகைத் தாகும். 1463

தாஅ வண்ணமாவது இடையிட்டு எதுகை கொண்டு வரும்.

(எ-டு) "தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் கலுழ
வாடா வவ்வரி புதைஇப் பசலையும்
வைகல் தோறும் பைபயப் பெருகின
நீடார் இவணென நீமனங் கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழி
வாடாப் பௌவம் வார்முகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலின்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே" என வரும்.

## வல்லிசை வண்ணம்

வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே. 1464

வல்லெழுத்து மிகுந்து வருவது, வல்லிசை வண்ணம் ஆகும்.

(எ-டு) "பட்டொட்டி யன்ன தொடர்புமுடப் புன்னைக்கீழ்க்
கட்டொட்டுக் கண்ணி தொடுப்பவர் தாழைப்பூத்
தொட்டிட்டுக் கொள்ளும் துறைச்சேர்ப்பன் நின்னொடு
விட்டொட்டி யுள்ளம் விடாது நிலையுமேன்
விட்டொட்டி நீங்காதோ வொட்டு" என வரும்.

## மெல்லிசை வண்ணம்

மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே. 1465

மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுந்து வருவதாம்.

(எ-டு) "பொன்னி னன்ன புன்னை நுண் தாது
மணியி னன்ன நெய்தலங் கழனி
மனவென உதிரு மாநீர்ச் சேர்ப்பன்" என வரும்.

## இயைபு வண்ணம்

இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே. 1466

இடையெழுத்து மிகுந்துவருவது இயைபு வண்ணம் ஆகும்.

(எ-டு) "வால்வெள் ளருவி வரைமிசை யிழியவும்
கோள்வல் உழுவை விடரிடை யியம்பவும்"
என வரும்.

## அளபெடை வண்ணம்

அளபெடை வண்ணம் அளபெடை பயிலும். 1467

அளபெடை பொருந்தி வருவது, அளபெடை வண்ணம் ஆகும்.

(எ-டு) "தாஅட் டாஅ மரைமலர் உழக்கி
பூஉக் குவளைப் போது தருந்திக்
காஅய்ச் செந்நெல் கறித்துப் போதுய்
மாஅத் தாஅண் மோஓட் டெருமை" என வரும்.

## நெடுஞ்சீர் வண்ணம்

நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும். 1468

நெட்டெழுத்து மிகுந்துவருவது நெடுஞ்சீர் வண்ணமாகும்.

(எ-டு) "நீரூர் பாறை யாறே காடே
நீலூர் காயாப் பூவீ யாவே
காரூர் பாறை மாவே யானே
யானா தாமே வாழா மோரே
பூஊர் பாகா தேரே
பீலூர் தோளாள் சீறா ரோரோ" என வரும்.

## குறுஞ்சீர் வண்ணம்

குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும். 1469

குற்றெழுத்துப் பயின்று வருவது, குறுஞ்சீர் வண்ணம் என்று பெயர்பெறும்.

(எ-டு) "உறுபெய லெழிலி தொகுபெயல் பொழியச்
சிறுகொடி டவரை நெறிதலை யவிழ
குறிவரு பருவ மிதுவென மறுகுபு
செறிதொடி நறுநுத லழியல்
அறியலை அரிவையர் கருதிய பொருளே" என வரும்.

## சித்திர வண்ணம்

நெடிலும் குறிலும் நேர்ந்துடன் வருமே. 1470

நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் சார்ந்துவருவது சித்திர வண்ணமாகும்.

(எ-டு) "ஓரூர் வாழினுஞ் சேரி வாரார்
சேரி வரினும் ஆர முயங்கார்" என வரும்.

## நலிபு வண்ணம்

நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும் 1471

ஆய்தம் பொருந்திவருவது நலிபு வண்ணம் என்று பெயர் பெறும்.

(எ-டு) "அஃகாமை செல்வத்துக் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்"

என வரும்.

## அகப்பாட்டு வண்ணம்

அகப்பாட்டு வண்ணம்
முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே. 1472

அகப்பாட்டு வண்ணமாவது முடியாத் தன்மையான் முடிந்ததன் மேலது ஆகும்.

## புறப்பாட்டு வண்ணம்

புறப்பாட்டு வண்ணம்
முடிந்தது போன்று முடியா தாகும். 1473

புறப்பாட்டு வண்ணமாவது, முடிந்தது போன்று முடியாதாகி வரும்.

## ஒழுகு வண்ணம்

ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும். 1474

ஓசையால் ஒழுகிக்கிடப்பது ஒழுகுவண்ணம் என்று கூறப்பெறும்.

## ஒரூஉ வண்ணம்

ஒரூஉ வண்ணம் ஒரூஉத்தொடை தொடுக்கும். 1475

ஒரூஉ வண்ணமாவது நீங்கின தொடையாகித் தொடுப்பது.

(எ-டு) "தொடிநெகிழ்ந் தனவே மன்பசந் தனவே
யான்சென் றுரைப்பின் மாண்பின் றெவனோ
சொல்லாய் வாழி தோழி வரைய
முள்ளாற் பொதுளிய விலங்குகுலை நெடுவெதிர்
பொங்குவர விளமழை துவைப்ப
மணிநிலா விரியுங் குன்றுகிழ வோற்கே"

என வரும்.

## எண்ணு வண்ணம்

எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும். 1476

எண்கள் பொருந்தி வருவது, எண்ணு வண்ணமாம்.

(எ-டு) "நிலம்நீர் வளிவிசும் பென்ற நான்கின்
அளப்பரி யையே

நாள்கோள் திங்கள் ஞாயிறு கனையழல்
ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை''
என வரும்.

## அகைப்பு வண்ணம்

அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும். 1477

அறுத்தறுத் தியலுவது அகைப்பு வண்ணம் என்று பெயர் பெறும்.

(எ-டு) ''தொடுத்த வேம்பின்மிசைத் துதைந்த போந்தையிடை
அசைத்த வாரமலைப் பட்டு ரண்ண லென்பான்
இயன்ற சேனமுர சிரங்குந் தானையெதிர்
முயன்ற வேந்த ருயிர் முருக்கும் வேலினவன்''

என வரும்.

## தூங்கல் வண்ணம்

தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும் 1478

வஞ்சியுரிச்சீர் பயின்று வருவது தூங்கல் வண்ணமாம்.

(எ-டு) ''வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற் கேகினும்''

என வரும்.

## ஏந்தல் வண்ணம்

ஏந்தல் வண்ணம்
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும். 1479

ஏந்தல் வண்ணமாவது, சொல்லிய சொல்லினானே சொல்லப் பட்டது சிறக்க வருவதாம்.

(எ-டு) ''கூடுவார் கூடல்கள் கூடல் எனப்படா
கூடலுட் கூடலே கூடலும்—கூடல்
அரும்பிய முல்லை அரும்பவிழ் மாலைப்
பிரிவிற் பிரிவே பிரிவு''

என வரும்.

## உருட்டு வண்ணம்

உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும். 1480

உருட்டு வண்ணமாவது, அராகந் தொடுத்து வருவது.

(எ-டு) ''தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்''

என வரும்.

## முடுகு வண்ணம்

முடுகு வண்ணம் முடிவறி யாமல்
அடியிறந் தொழுகி அதனோ ரற்றே 1481

முடுகு வண்ணமாவது, நாற்சீரடியின் மிகுந்துசென்று அராகத்தோடு ஒக்கும்.

(எ-டு) ''நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை முந்துறீஇ''

என வரும்.

## தொகுத்து உணர்த்துதல்

வண்ணந் தாமே அவையென மொழிப. 1482

மேற் கூறப்பட்டவைகள்தாம் வண்ணம் என்று கூறுவர்.

## அம்மை எனும் செய்யுள்

சின்மென் மொழியால் சீர்புனைந் தியாப்பின்
அம்மை தானே அடிநிமிர் வின்றே. 1483

சிலவாய், மெல்லியவாகிய மொழியினானே தொடுக்கப் பட்ட, அடிநிமிர்வில்லாத செய்யுள் அம்மையாம்.

(எ-டு) ''அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போல் போற்றாக் கடை''

என வரும்.

## அழகு எனும் செய்யுள்

செய்யுள் மொழியால் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே. 1484

செய்யுட்குரிய சொல்லினால், சீரைச் சேர்த்துத் தொடுப்பின் அவ் வகைப்பட்ட செய்யுள், 'அழகு' என்று கூறப்பெறும்.

(எ-டு) ''துணியிரும் பரப்பகம் குறைய வாங்கி
மணிகிள ரடுக்கன் முற்றிய வெழிலி
காலொடு மயங்கிய கனையிருள் நடுநாள்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப
நெடுவரை மருங்கில் பாம்பென இழிதரும்
கடுவரல் கலுழி நீந்தி
வல்லியம் வழங்கும் கல்லதர் நெறியே.''

என வரும்.

## தொன்மை என்பது

தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே. 1485

தொன்மையாவது, உரையொடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய பொருள்மேல் வருவன; அவை இராம சரிதமும் பாண்டவ சரிதமும் போன்ற செய்யுளாம்.

## தோல் என்பது

இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிப தொன்னெறிப் புலவர். 1486

இழும் என்கின்ற மொழியினால் விழுமிய பொருளைக் கூறினும், பரந்த மொழியினால் அடி நிமிர்ந்து ஒழுகினும், தோல் என்னுஞ் செய்யுளாம்.

(எ-டு) "பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
துளிதரு வெள்ளம் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி எளிதெனக் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை
நன்மை யில்லை தீமை யில்லை
செய்வோ ரில்லை செய்பொரு ளில்லை
அறிவோர் யாரஃ திறுவழி யிறுகென"

என வரும்.

## விருந்து எனுஞ் செய்யுள்

விருந்தே தானும்
புதுவது புனைந்த யாப்பின் மேற்றே. 1487

விருந்தாவது, முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின்மேல் வருவது.

## இயைபு ஆமாறு

ஞகார முதலா னகார வீற்றுப்
புள்ளி யிறுதி யியையெனப் படுமே. 1488

ஞண நமன யரல வழள என்னும் பதினொரு புள்ளியும் ஈறாக வருஞ் செய்யுள், இயைபு என்று பெயர் பெறும்.

புலன் என்னுஞ் செய்யுள்

தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே. 1489

வழக்கச் சொல்லினாலே தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமல் பொருள் தோன்றி விளங்குவது, புலன் என்னுஞ் செய்யுளாம்.

(எ-டு) "பாற்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்செறி முரசின் முழங்கி யொன்னார்
மலைமுற் றின்றே மயங்குதுளி சிதறிச்
சென்றவர் திருமுகங் காணக் கடுத்தனர்
இன்றுபுகக் கடவுதி பாக வுதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல்
இரும்பிடி யுடைய தாகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே"
என வரும்.

இழைபு ஆமாறு

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடங்காது
குறளடி முதலா ஐந்தடி யொப்பித்
தோங்கிய மொழியான் ஆங்கவண் மொழியின்
இழையின் இலக்கணம் இயைந்த தாகும். 1490

ஒற்றோடு சேர்ந்த வல்லெழுத்து அடங்காது ஆசிரியப்பாவிற்கு ஓதப்பட்ட நாலெழுத்தாதியாக இருபதெழுத்தின் வரையும், உயர்ந்த பதினேழு நிலத்தும் ஐந்தடியும் முறையானே வரத் தொடுப்பது இழைபு என்னுஞ் செய்யுளாம்.

(எ-டு) 'பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து
வண்டு சூழ விண்டு நீங்கி
நீர்வாய்க் கொண்ட நீலம் ஊர்வாய்
ஊதை வீச வூர வாய
மதியேர் நுண்டோட் டொல்கி மாலை
நன்மணங் கமழும் பன்னாள் ஊர
அமையேர் வளைத்தோள் அம்பரி நெடுங்கண்
இணையீ ரோதி ஏந்திள வனமுலை
இரும்பல் பலவிடை எழுந்த மாவின்
நறுந்தழை துயல்வரும் செறிந்தேந் தல்குல்
அணிநகை நசைஇய அரியமர் சிலம்பின்
மணிமருள் வார்குழல் வளைஇய பிறைநுதல்

ஒளிநிலவு வயங்கிழை உருவுடை மகளிரொடு
களிமுழவு முழங்கிய அணிநிலவு மணிநகர்
இருந்தளவு மலர்தளவு சுரும்புலவு நறுந்தொடையலன்
கானளவு கலனளவு நலனளவு நலனளவு
பெருமானம் புணர்ந்தனை என்பவஃ
தொருநீ மறைப்ப ஒழிந்த வதன்றே’’ என வரும்.

யாப்பிற்கோர் புறனடை

செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி
இழைத்த இலக்கணம் பிழைத்தன போல
வருவன உளவெனும் வந்தவற் றியலால்
திரிபின்றி முடித்தல் தெள்ளியோர் கடனே. 1491

செய்யுளிடத்திலே பொருள்பெற ஆராய்ந்து நூல் செய்யப்பட்ட இலக்கணத்தில் தவறினபோன்று, பின் காணப்படுவனவும் இருக்குமானால், முன் கூறப்பட்ட இலக்கணத்தோடு மாறுபடாமல் முடித்துக் கொள்ளுதல் அறிவுடையோரது கடனாகும்.

# 9. மரபு இயல்

[பொருட்கு மரபு உணர்த்துதல்]

## இளமைப் பெயர்கள்

மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்
பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்று
ஒன்பதுங் குழவியொ டிளமைப் பெயரே. 1492

*விலக்குதற்கரிய சிறப்பினையுடைய மரபிலக்கணத்தைக் கூறத் தொடங்கினால், பார்ப்பும், பறழும், குட்டியும், குருளையும், கன்றும், பிள்ளையும், மகவும், மறியும் என்னும் ஒன்பதும் குழவிடைக் குறிக்கும் இளமைப்பெயராம்.*

## ஆண்பாற் பெயர்கள்

எருதும் ஏற்றையும் ஒருத்தலுங் களிறும்
சேவுஞ் சேவலும் இரலையுங் கலையும்
மோத்தையுந் தகரு முதளு மப்பரும்
போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப. 1493

*ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி, கடுவன் என்னும் பதினைந்தும் பிறவும் அறிஞர்களால் தொகுத்துக் கூறப்பட்ட ஆண்பாற்பெயர் என்று புலவர் மொழிவர்.*

## பெண்பாற் பெயர்கள்

பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகுங் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே. 1494

*பேடை, பெ[illegible] பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு [illegible]ந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி என்னும் [illegible] பெண்பா[illegible]ம்.*

# 1. இளமைப் பெயர்கள்

## பறவையின் இளமைப் பெயர்

அவற்றுள்
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை. 1495

*மேற் கூறப்பெற்றனவற்றுள் பார்ப்பு, பிள்ளை என்னும் இரண்டும் பறவையின் இளமைப் பெயர்களாம்.*

## ஊர்வனவற்றின் இளமைப் பெயர்கள்

தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன. 1496

*ஊர்வனவற்றிற்கும் மேற்கூறப்பட்ட பார்ப்பு பிள்ளை என்னும் இருவகை இளமைப்பெயரும் பொருந்தும்.*

## குட்டி எனப்படுவது

மூங்கா வெருக்கெலி மூவரி யணிலொ
டாங்கவை நான்குங் குட்டிக் குரிய. 1497

*மூங்கா, வெருகு, எலி, அணில்என்பவற்றின் இளமை,குட்டி யென்று கூறற்கு உரியனவாம்.*

## பறழ் எனப்படுவன

பறழெனப் படினும் உறழாண் டில்லை. 1498

*மேற்கூறிய நான்கும் பறழ் என்று கூறவும் பெறும்; அதனொடும் மாறில்லை.*

## குருளை எனப்படுவன

நாயே பன்றி புலிமுயல் நான்கும்
ஆயுங் காலைக் குருளை யென்ப. 1599

*நாய், பன்றி, புலி, முயல் ஆகிய நான்கும் ஆராயுமிடத்துக் குருளையென்று கூறப்பெறும்.*

(எ-டு) "இறவர்க் கன்ன சாய்செவி குருளை" என வரும்.

நரியும் அற்றே நாடினர் கொளினே. 1500

*நரியின் இளமைப் பெயரும், ஆராயுங் காலத்துக் குருளை எனப்படுவதே யாகும்.*

(எ-டு) "பிணந்தின் பெண்டிர்க்குக் குருளைக் காட்டிப்
புறங்காட் டோரி புலவுத்தசை பெறூஉம்"
என வரும்.

### குட்டியும் பறழும் வழங்கலாம்

குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார். 1501

மேற்கூறப்பட்ட ஐவகை உயிர்க்கும் குட்டி பறழ் என்பனவும் வழங்கல் ஆகும்.

### பிள்ளைப் பெயர்க்கு உரியன

பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை
கொள்ளுங் காலை நாயலங் கடையே. 1502

மேற்கூறியவற்றுள், நாயன்றி ஒழிந்தவை, பிள்ளை யென்னும் இளமைப்பெயர்க்கும் உரியன. (எ-டு) பன்றிக் குருளை, பன்றிக்குட்டி, பன்றிப்பறழ், பன்றிப் பிள்ளை என வரும்.

### மறி எனப்படுவன

ஆடுங் குதிரையும் நவ்வியும் முழையும்
ஓடும் புல்வாய் உளப்பட மறியே. 1503

ஆடு, குதிரை, மான், முழை என்னும் ஐந்தின் இளமையும் மறியென்னும் இளமைப்பெயர் பெறும்.

### குரங்கிளமை குட்டி ஆகும்

கோடுவாழ் குரங்குங் குட்டி கூறும். 1504

கிளைகளிலே வாழ்கின்ற குரங்கின் இளமையையும், குட்டி என்று கூறுவர்.

### பிறவும் கொள்ளப்படும்

மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்
அவையும் அன்ன அப்பா லான. 1505

மேலைச் சூத்திரத்திற் கூறிய குட்டி யென்னும் பெயரே யல்லாமல் மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும் எனப்பட்ட இந்நான்கும் குட்டியென்னும் பெயர்போல, அக் குரங்கின் பகுதிக்கு உரியனவாம்.

### கன்று என்பதற்கு உரியன

யானையும் குதிரையும் கழுதையும் கடமையு
மானோ டைந்துங் கன்றெனற் குரிய. 1506

யானை, குதிரை, கழுதை, கடமை, மான் ஆகிய ஐந்தின் இளமைகளும், 'கன்று' என்னும் பெயரையும் பெறுவதற்கு உரியன.

எருமையும் மரையும் வரையா ராண்டே 1507

*'கன்று' என்று கூறும் இளமைப்பெயரை எருமைக்கும் மரைக்கும் சேர்த்து வழங்குவர்.*

கவரியும் கராகமும் நிகரவற் றுள்ளே. 1508

*கவரி கராகம் என்று கூறப்பெறுவனவும், கன்று என்னும் பெயரைப் பெறுவதற்குரியன. கராகம்—கரடி.*

ஒட்டகம் அவற்றோ டொருவழி நிலையும். 1509

*ஒட்டகமும் முற்கூறியவைகளைப் போல், 'கன்று' என்னும் பெயரைப்பெறும்.*

## குழவிப் பெயர்க்கு உரியன

குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை. 1510

*குழவி யென்னும் இளமைப்பெயரை யானையின் இளமையும் பெறும்.*

ஆவும் எருமையும் அது சொலப் படுமே. 1511

*ஆவும் எருமையும் குழவிப்பெயர் பெறுவனவாம்.*

கடமையு மரையு முதனிலை யொன்றும். 1512

*கடமையும் மரையும் குழவியெனப் பெயர்பெறும்.*

குரங்கும் முசுவும் ஊகமும் மூன்றும்
நிரம்ப நாடின் அப்பெயர்க் குரிய. 1513

*குரங்கு முதலிய மூன்றும், ஆராயுமிடத்தில் குழவிப் பெயர்க்கு உரியனவாம்.*

## மக்கள் இளமைக்கு உரியன

குழவியு மகவு மாயிரண் டல்லவை
கிழவ வல்ல மக்கட் கண்ணே. 1514

*குழவி மகவு என்று கூறப்பட்ட இரண்டு இளமைப் பெயரும் அல்லாத ஏனையவை, மக்கட்கு உரியனவல்ல.*

## ஓரறிவுயிர்க்குரிய இளமைப் பெயர்கள்

பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே. 1515

*பிள்ளை குழவி கன்று போத்து என்னும் நான்கும் ஓரறிவு உயிரின் இளமைப் பெயர்களாம்.*

## நெல்லும் புல்லும் விலக்கப்பட்டன

நெல்லும் புல்லும் நேரா ராண்டே. 1516

*கூறப்பெற்ற நான்கின் இளமைப்பெயரும், நெல், புல் முதலிய ஓரறிவுயிர்க்குக் கொள்ளார்.*

*இளமைப் பெயரை வரையறுத்தல்*

சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையல திலவே. 1517

*சொல்லிவந்த மரபுடையன அல்லாமல், சொல்ல வேண்டிய மரபுடையன வற்றுக்கும், சொல்லத் தொடங்கின், இவைகளே இளமைப் பெயராம்.*

## 2. அறிவும் உயிரும்

*அறிவுநிலை விளக்கம்*

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே. 1518

*ஓரறிவு உயிராவது உடம்பினாலே அறிவது; ஈரறிவு உயிராவது உடம்பினாலும் வாயினாலும் அறிவது; மூவறிவு உயிராவது உடம்பினாலும் வாயினாலும், மூக்கினாலும் அறிவது; நாலறிவு உயிராவது உடம்பினாலும் வாயினாலும் மூக்கினாலும் செவியினாலும் கண்ணினாலும் அறிவது; ஐயறிவு உயிராவது உடம்பினாலும் வாயினாலும் மூக்கினாலும் செவியினாலும் கண்ணினாலும் அறிவது; ஆறறிவு உயிராவது, உடம்பினாலும் வாயினாலும் மூக்கினாலும் கண்ணினாலும் செவியினாலும் மனத்தினாலும் அறிவது.*

*ஓரறிவு உயிர்கள்*

புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. 1519

*புல் மரம் முதலியன ஓரறிவை உடையனவாம். இவ்வாறு ஓரறிவை உடையன வேறும் உள்ளன. (அவை கொட்டி, தாமரை, முதலியனவாம்.)*

*ஈரறிவு உயிர்கள்*

நந்து முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. 1520

நந்தும் முரளும் ஈரறிவை யுடையன; இவ்வாறு ஈரறிவை யுடையன பிறவும் இருக்கின்றன. நந்து என்றதனால் சங்கு நத்தை அலகு நொள்ளை என்பனவும், முரள் என்றதனால் இப்பி கிளிஞ்சில் ஏரல் என்பனவும் ஈரறிவு உடையனவாகவே கொள்ளப்படும்.

## மூவறிவு உயிர்கள்

சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. 1521

சிதலும் எறும்பும் மூவறிவினை உடையனவாம். இவ்வாறு மூவறிவையுடையன வேறும் இருக்கின்றன; அவை அட்டை முதலாயின.

## நாலறிவு உயிர்கள்

நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. 1522

நண்டும் தும்பியும் நான்கு அறிவுகளை உடையனவாம். இவ்வாறு நான்கு அறிவுகளையுடையன வேறும் இருக்கின்றன; அவை ஞிமிறு சுரும்பு போல்வனவாம்.

## ஐயறிவு உயிர்கள்

மாவும் புள்ளும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறபபே. 1523

நாற்கால் விலங்குகளும், பறவைகளும் ஐவகை அறிவுகளை உடையன. இவ்வாறு ஐயறிவையுடையன வேறும் இருக்கின்றன; அவை, பாம்பு மீன் முதலே ஆமை முதலாயின.

## ஆறறிவு உயிர்கள்

மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. 1524

மக்களே ஆறறிவு உடையவர் என்று கூறப்பெறுபவர். அறறிவுடையன பிறவும் உள்ளன. (பிறவாவன, தேவர், அசுரர், இயக்கர் முதலாயினோர்.)

## விலங்குகளுள்ளும் ஆறறிவு

ஒருசார் விலங்கும் உளவென மொழிப. 1525

ஆறறிவுடைய விலங்குகளும் ஒரு சில உள்ளன என்று கூறுவர். அவை கிளி, குரங்கு, யானை முதலாயினவாம்.

## 3. ஆண்பாற் பெயர்கள்

*யானைக்குக் களிறு*

**வேழக் குரித்தே விதந்துகளி றென்றல்.** 1526

*'களிறு' என்று சிறப்பித்துக் கூறுதல் யானைக்கு உரியது.*

*பன்றிக்கும் களிறு*

**கேழற் கண்ணும் கடிவரை யின்றே.** 1527

*பன்றியின்கண்ணும் ஆண்பாலைக் களிறென்றல் விலக்கப் படாது.*

*ஒருத்தல் எனப்படுவன*

புல்வாய் புலியுழை மரையே கவரி
சொல்லிய கராமோ டொருத்தல் ஒன்றும். 1528

*புல்வாய், புலி, உழை, மரை, கவரி, சொல்லப்பட்ட கராம் இவைகளின் ஆண், ஒருத்தல் என்னும் பெயரைப் பெறும்.*

வார்கோட் டியானையும் பன்றியும் அன்ன. 1529

*நீண்ட கொம்பையுடைய யானையும் பன்றியும் ஒருத்தல் என்னும் பெயரைப் பெறுவனவாம்.*

ஏற்புடைத் தென்ப எருமைக் கண்ணும். 1530

*எருமையின் ஆணினையும், 'ஒருத்தல்' என்று உரைத்தல் ஏற்புடையதே என்று கூறுவர்.*

*ஏறு எனற்கு உரியன*

பன்றி புல்வாய் உழையே கவரி
என்றிவை நான்கும் ஏறெனற் குரிய. 1531

*பன்றி, புல்வாய், உழை, கவரி என்னும் இவை நான்கின் ஆணும், ஏறு என்று கூறுதற்கு உரியனவாம்.*

எருமையும் மரையும் பெற்றமும் அன்ன. 1532

*எருமையும் மரையும் பெற்றமும் ஏறு என்று கூறற்கு உரியன.*

கடல்வாழ் சுறவும் ஏறெனப் படுமே. 1533

*கடலிலே வாழுஞ் சுறுவின் ஆணும் ஏறு என்று கூறப்படும்*

### போத்து எனற்கு உரியன

பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே. 1534

*பெற்றம், எருமை, புலி, மரை, மான் ஆகிய ...ன் ஆணும், போத்து என்று கூறப்படும்.*

நீர்வாழ் சாதியும் அதுபெறற் குரிய, 1535

*நீர்வாழ் உயிர்களுள் முதலை முதலியவற்றின் போத்து என்னும் பெயரைப்பெறுதற்கு உரியன.*

மயிலும் எழாஅலும் பயிலத் தோன்றும், 1536

*மயிலுள்ளும் எழாலுள்ளும் ஆணினைப் போத்தென்றல் பெரும்பான்மை யாகும்.*

### இரலை கலை எனற்கு உரியன

இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய. 1537

*இரலை என்னும் பெயரும் கலை என்னும் பெயரும் மானின் ஆண்பாற் குரியனவாம்.*

கலையென் காட்சி உழைக்கும் உரித்தே
நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும். 1538

*என்னும் பெயர், உழைக்கும் முசுவிற்கும் உரியதாம்*

### ஆட்டின் பெயர்கள்

மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
யாத்த என்ப யாட்டின் கண்ணே. 1539

*மோத்தை, தகர், உதள், அப்பர் என்னும் பெயர்கள் யாட்டின் ஆண்பாலுக்கு உரியனவாம்.*

### சேவற் பெயர்க்கு உரியன

சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு
மாயிருந் தூவி மயிலலங் கடையே. 1540

*அழகிய பெரிய தூவிகளையுடைய மயில் அல்லாத, பிற பறவைகளின் ஆண்பெயர், சேவல் என்று கூறப்பெறும்.*

### ஆற்றலும் ஏற்றையும்

ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்
ஏற்றைக் கிளவி உரித்தென மொழிப. 1541

*ஆற்றல் பொருந்திய ஆண்பால்களுக்கெல்லாம் ஏற்றை என்று கூறுஞ்சொல் உரியதென்று கூறுவர்.*

### ஆண் பெண்

ஆண்பால் எல்லாம் ஆணெனற் குரிய
பெண்பால் எல்லாம் பெண்ணெனற் குரிய
காண்பவை யவையவை அப்பா லான. 1542

*ஆண்பால் உயிர் எல்லாம் ஆண் என்னும் பெயர் பெறும்; பெண்பால் உயிரெல்லாம் பெண் என்னும் பெயர் பெறும்; அவ்விருவகைக்கும் அறிகுறி, காண்டல் ஆகிய தன்மையேயாம்.*

## 4. பெண்பாற் பெயர்கள்

### யானையின் பெண்

பிடியென் பெண்பெயர் யானை மேற்றே. 1543

*பிடியென்னும் பெண்பெயர் பெண் யானையைக் குறிக்கும்.*

### பெட்டை என்றற்கு உரியன

ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை
பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய. 1544

*ஒட்டகம், குதிரை, கழுதை, மரை இவை நான்கும் பெட்டை என்னும் பெயரைப்பெறும்.*

புள்ளும் உரிய அப்பெயர்க் கென்ப. 1545

*பெட்டை யென்னும் பெயரைப் பெறுதற்குப் புட்களின் பெண்பால்களும் உரியனவாம்.*

### பேடையும் பெடையும்

பேடையும் பெடையும் நாடின் ஒன்றும். 1546

*பேடை என்னுஞ் சொல்லும், பெடை என்னுஞ் சொல்லும், ஆராயுமிடத்துப் பெட்டை யென்பதனோடு பொருந்தும். (இது பெரும்பாலும் பறவைக்கே வரும்.)*

### அளகு எனப்படுவன

கோழி கூகை யாயிரண் டல்லவை
சூழுங் காலை அளகெனல் அமையா. 1547

*கோழி கூகை ஆகிய இரண்டைத்தவிர மற்றவை ஆராயுமிடத்து, அளகு என்று கூறப்பெறா.*

பெண்பாலான
அப்பெயர்க் கிழமை மயிற்கும் உரித்தே. 1548

*அளகு என்னும் பெண்பாற்பெயரைப் பெறும் உரிமை, மயிலுக்கும் உண்டு.*

## பிணை எனப்படுவன

புல்வாய் நவ்வி உழையே கவரி
சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே. 1549

*புல்வாய், நவ்வி, உழை, கவரி என்னும் நான்கிற்கும் பெண்பாலிடத்திலே பிணையென்னும் பெயர் வழங்கும்.*

## பிணவு எனப்பெறுவன

பன்றி புல்வாய் நாயென மூன்றும்
ஒன்றிய என்ப பிணவென் பெயர்க்கொடை. 1550

*பன்றி, புல்வாய், நாய் ஆகிய மூன்றின் பெண்பாலும் பிணவு என்னும் பெயரைப் பெறும்.*

## பிணவல் எனவும் படும்

பிணவல் எனினும் அவற்றின் மேற்றே. 1551

*'பிணவல்' என்று கூறினாலும், மேற் கூறப்பட்டவைகளின் மேலேயே செல்லும்.*

## ஆ என்னும் பெயர்

பெற்றமும் எருமையும் மரையும் ஆவே. 1552

*ஆ என்னும் பெண் பெயரைப் பெற்றம் முதலாகிய மூன்றும் பெறும்.*

## பெண்ணும் பிணவும்

பெண்ணும் பிணவும் மக்கட் குரிய. 1553

*பெண்ணென்னும் பெயரும், பிணவு என்னும் பெயரும் மக்களின் பெண்பாற்கும் உரியதாகும்.*

## நாகு எனும் பெயர்

எருமையும் மரையும் பெற்றமும் நாகே. 1554

*எருமை முதலாகச் சொல்லப்பட்ட மூன்றிற்கும், நாகு என்னும் பெண்பாற் பெயர் உரியது.*

நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே. 1555

நீர்வாழ் சாதியுள், நந்தும், 'நாகு' என்னும் பெண்பாற் பெயரைப் பெறும்.

### மூடும் கடமையும்

மூடுங் கடமையும் யாடல பெறாஅ. 1556

மூடு, கடமை என்னும் பெயர்களை ஆட்டின் பெண்பாலை யொழிந்த ஏனைய விலங்குகள் பெறமாட்டா.

### பாட்டி என்னும் பெயர்

பாட்டி என்ப பன்றியும் நாயும். 1557

பாட்டி என்னும் பெயர், பன்றியினதூஉம் நாயினதூஉம் பெண் பெயராகும்.

நரியும் அற்றே நாடினர் கொளினே. 1558

பெண்நரியும் 'பாட்டி' என்னும் பெயரைப் பெறும்.

### மந்தி எனும் பெயர்

குரங்கும் முசுவும் ஊகமும் மந்தி. 1559

குரங்கு, முசு, ஊகம் இவற்றின் பெண்பெயர் மந்தியாகும்.

## 5. அதிகாரப் புறனடை

குரங்கின் ஏற்றைக் கடுவன் என்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிள்ளையைத் தத்தை என்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்
இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்
எருமையுள் ஆணினைக் கண்டி என்றலும்
முடிய வந்த வழக்கின் உண்மையில்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே. 1560

குரங்கின் ஆணைக் கடுவன் எனவும், மரத்தில் வாழுங் கூகையைக் கோட்டான் எனவும், சிவந்த வாயினையுடைய கிளியைத் தத்தை எனவும், வெவ்விய வாயினையுடைய பூனையைப் பூசை எனவும், ஆண்குதிரையைச் சேவல் எனவும், கருநிறப் பன்றியை ஏனம் எனவும், ஆண் எருமையைக் கண்டி எனவும் முடிவாகக் கூறப்பட்ட உலகவழக்குச் சொல் இருப்பதால், கடமையை உணர்ந்தவர்கள், இவைகளையும் விலக்க மாட்டார்கள்.

பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவை. 1561

*பெண் ஆண் பிள்ளை என்பவைகளைப் பொருந்துமிடத்திற்குத் தக்கவாறு ஏற்றுக்கொள்க.*

## 6. உரிமையும் பிறவும்

*அந்தணர்க்கு உரியன*

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய. 1562

*நூல், கரகம், முக்கோல், மணை என்பவை, ஆராயுமிடத்து அந்தணர்கட்கு உரியவையாம்.*

*அரசர்கட்கு உரியன*

படையுங் கொடியுங் குடியும் முரசும்
நடைநவில் புரவியும் களிறுந் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய. 1563

*படை, கொடி, குடி, முரசு, குதிரை, களிறு, தேர், தார், முடி ஆகிய ஒன்பதும், ஆராயுமிடத்துச், செங்கோலையுடைய அரசர்கட்கு உரியவைகளாம்.*

*அந்தணர் அரசர்க்கும் பொதுவானவை*

அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்கு
ஒன்றிய வருஉம் பொருளுமா ருளவே. 1564

*அந்தணாளர்க்கு உரியவென மேல் ஓதப்பட்டனவற்றுள், மூந்நூலும் மணையும்போல்வனவாக அரசர்களுக்கும் உரியனவாகி வருகின்ற பொருள்களும் உள்ளன.*

பரிசில் பாடாண் டிணைத்துறைக் கிழப்பெயர்
நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித் தன்றே. 1565

*பரிசில் கடாநிலையும் பரிசில் விடையும் போல்வன பாடாண் திணைக்குரிய கைக்கிளைப்பொருள் பற்றியும் கொடைத்தொழில் பற்றியும் பெறும் பெயர். நெடுந்தகை, செம்மல் என்றாற் போன்றனவும் பிறவும் பொருந்தச் சொல்லுதல் அந்தணர்க் குரித்து.*

*எல்லாரையும் சார்த்தி வருவன*

ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
யாருஞ் சார்த்தி அவைஅவை பெறுமே. 1566

*நகரும், தமது இயற்பெயரும், சிறப்புப்பெயரும், தத்தம் தொழிற்கேற்ற கருவியும், எல்லாரையுஞ் சார்த்தி, அவையவை வருதல் பெறும்.*

## நிலைமையும் தலைமைக் குணச் சொல்லும்

தலைமைக் குணச்சொலும் தத்தமக் குரியதோர்
நிலைமைக் கேற்ப நிகழ்த்துப வென்ப. 1567

*தலைமைக்குணம் உடையராகக் கூறுதலும், தத்தமக்கேற்ற நிலைமைக்குப் பொருந்துமாறு நிகழ்த்துப என்று கூறுவார்கள்.*

## படைவகை பெறுதோர்

இடையிரு வகையோர் அல்லது நாடில்
படைவகை பெறுஅர் என்மனூர் புலவர். 1568

*அரசரும் வணிகரும் அல்லாதோர்க்குப் படைக்கல வகை கூறப்பெறுர்.*

## வாணிக வாழ்வினர்

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை. 1569

*வைசிகன் வாணிகத்திலே வாழும்வாழ்க்கையைப் பெறும்.*

## உழவுத் தொழிலுக்கு உரியவர்

மெய்திரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான. 1570

*பொருள் தெரிந்த வகையால், எண்வகைக் கூலமுஞ் செய்து விளைத்தலும் இவர் கடன் ஆம்.*

## கண்ணியும் தாரும்

கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே. 1571

*வைசிகருக்குக் கண்ணியுந் தாரும் சொல்லப்பெறும்.*

## வேளாண் மாந்தர்க்கு

வேளாண் மாந்தர்க் குழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி. 1572

*வேளாளர்கட்கு, உழுதூண் வாழ்க்கை அல்லது, பிற வகையான வாழ்க்கை இல்லை என்று சொல்லுவர்.*

வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே. 1573

*வேந்தரால் ஏவப்பட்ட தொழிலினுனே, படையுங் கண்ணியும் வேளாண்மாந்தர்க்கும் உளதாகும்.*

அந்தணாளரும் அரச பதவியும்

அந்த ணாளர்க் கரசுவரை வின்றே. 1574

அந்தணாளர் அரசியல் பூண்டொழுகலும் விலக்கப்படாது.

மன்பெறு மரபால் உரியன

வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
தாரும் ஆரமும் தேரும் மாவும்
மன்பெறு மரபின் ஏனோர்க் குரிய. 1575

வில், வேல், கழல், கண்ணி, தார், மாலை, தேர், மா என்று சொல்லப்பட்டன எல்லாம் மன்னனாற்பெற்ற மரபினால், வைசிகர்க்கும் வேளாளர்கட்கும் உரியன.

அன்ன ராயினும் இழிந்தோர்க் கில்லை. 1576

அவர் அத்தகைய மரபுடையோர் ஆனாலும், அவர்களுள்ளும் இழிந்த பண்பினோர்க்கு அத் தகுதிகள் இல்லையாகும்.

## 7. பிற மரபுகள்

புல் எனப் படுவன

புறக்கா ழனவே புல்லெனப் படுமே. 1577

புறத்திலே உறுதியுடையன் புல்லென்று கூறப்படும்.

மரம் எனப் படுவன

அகக்கா ழனவே மரமெனப் படுமே. 1578

உள்ளுறுதி உடையன மரமென்று கூறப்பெறும்.

புல்லொடு வருவன

தோடே மடலே ஓலை என்ரு
ஏடே இதழே பாளை என்ரு
ஈர்க்கே குலையே நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர். 1579

தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை என்பனவும் பிறவும் புறக்காழனவாகிய மரத்தின்கண் பொருந்திய உறுப்புக்களாம்.

மரனொடு வருவன

இலையே முறியே தளிரே தோட்டே
சினையே குழையே பூவே அரும்பே

நனையே உள்ளுறுத் தனையவை யெல்லாம்
மரனொடு வருஉம் கிளவி யென்ப. 1580

இலை, முறி, தளிர், தோடு, சினை, குழை, பூ, அரும்பு, நனை என்று கூறப்படுபவைகள் எல்லாம் மரத்தின்கண் வரும் உறுப்புச் சொற்களாம்.

## இரண்டனும் வருவன

காயே பழமே தோலே செதிளே
வீழோ டென்றாங் கவையு மன்ன. 1581

காய், பழம், தோல், செதிள், வீழ் என்பன இருவகைக்கும் பொதுவாகி வரும்.

## உலகத்தைக் குறித்தல்

நிலம் தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
இருதிணை யைம்பால் இயனெறி வழாமைத்
திரிவில் சொல்லொடு தழால் வேண்டும். 1582

உலகு நிலம் முதலாகிய ஐம்பெரும் பூதங்கலந்த மயக்கமாதலால், மேற்கூறப்பட்ட பொருள்களைத் திணையும் பாலும் வழுவுதலில்லாமல், திரிபுபடாத சொல்லோடே தழுவுதல் வேண்டும்.

## செய்யுளுள் மரபுநிலை திரிதல்

மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான. 1583

மரபு வழிப்பட்ட சொல்லினாலேயே செய்யுள் செய்ய வேண்டுதலின் ஈண்டுச் சொல்லப்பட்ட மரபுநிலையில் திரிதல் செய்யுட்கில்லை.

## மரபுநிலையும் பொருள் மாறுபாடும்

மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும். 1584

மரபுநிலை மாறுபட்டுவரில், பொருள் வேறு வேறாகும்.

## வழக்கு எனப்படுவது

வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாக லான. 1585

'வழக்கென்று' சொல்லப்பட்டது உயர்ந்தோர் மேலது; நூலின் நிகழ்ச்சி அவர்களிடத்த தாகலான்.

# 8. நூல் மரபுகள்

*முதல்நூல் வழிநூல்*

மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூல்தாம் இருவகை நிலைய
முதலும் வழியுமென நுதலிய நெறியின. 1586

*வழிமுறையில் மாறுபடாத பெருமையினை உடையன வாய், உரைக்கப்பெறும் நூல்கள் இருவகை நிலைப்படும்; அவை, முதலும் வழியும் என்று கூறப்பட்ட நெறியை உடையனவாம்.*

*முதனூல் என்பது*

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும். 1587

*இருவகை வினைகளில் நின்றும் நீங்கி, விளக்கம் பெற்ற அறிவினையுடைய கடவுள் செய்தது முதல் நூல் என்று கூறப் பெறும்.*

*வழிநூல் என்பது*

வழியெனப் படுவ ததன்வழித் தாகும். 1588

*வழி நூல் என்று கூறப்படுவது, கடவுளுடைய முதல் நூலின் வழியே அதனை ஒட்டிச் செய்யப்படுவதாகும்.*

*நான்கு வகை*

வழியின் நெறியே நால்வகைத் தாகும். 1589

*வழிநூல் எனப்படுவது நான்கு வகைப்படும்.*

*நால்வகை வழிநூல் விளக்கம்*

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே. 1590

*முதல் நூல் ஆசிரியன் விரித்துச்செய்ததைத் தொகுத்துச் செய்தலும்; தொகுத்துச் செய்ததை விரித்துச் செய்தலும்; அவ்விரு வகையினையும் தொகை விரியாகச் சொல்லுதலும்; நூலை மொழிபெயர்த்துத் தமிழின்கண் செய்தலும் என வழிநூல் நால்வகையாம்.*

*நூற்கு இலக்கணம்*

ஒத்த சூத்திரம் உரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி

ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர். 1591

*ஒத்த சூத்திரத்தானும் காண்டிகையானும் பொருள் மேற் கூறிய வகையுடைத்தாகிப், பத்துக் குற்றமும் இல்லாமல், நுட்ப மாகிய முப்பத்திரண்டு வகைப்பட்ட தந்திர உத்தியோடு பொருந்துமாயின், நுட்பமான அறிவினையுடைய புலவர் அதனை நூலென்று கூறுவர்.*

உரையெடுத் ததன்முன் யாப்பினுஞ் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விதித்தலும் விலக்கலும் எனவிரு வகையொடு
புணர்த்தவை நாடிப் புணர்க்கவும் பெறுமே. 1592

*சூத்திரத்தின் முன்னர் உரையை விரித்துரைக்கு மிடத்தில், சூத்திரம் பொருள்விளங்கக் காண்டிகை புணர்க்குமிடத்தும், ஆசிரியன் இப்பொருள் இவ்வாறு கூறல்வேண்டுமென விதித் தலும், இப்பொருள் இவ்வாறு கூறப்பெறுதென விலக்கலு மாகிய இருவகையோடு பொருந்தின வகையை ஆராய்ந்து சேர்க் கப்பெறும்.*

### சூத்திரத்து இலக்கணம்

மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு
சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகித்
துளக்க லாகாத் துணைமை யெய்தி
அளக்க லாகா அரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்தெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர். 1593

*மேல், தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து நன்றாக அமைத்தல் என்று நால்வகையினோடு சொல்லப்பட்ட பொருளோடு, சிலவெழுத்தினால் இயன்ற செய்யுளாகி, உரைக் குங் காலத்து அவ்வுரையிற் பொருளெல்லாம் தன்னகத்துட் கொண்டு, நுட்பமாகிய பொருட்டன்மையோடு பொருந்திய விளக்கமுடையதாகியும், கெடுக்கமுடியாத துணைச்சூத்திரங்களை உடையதாகியும், வரையறுக்கப்படாத அரிய பொருளையுடைய தாகியும், பலவகையானும் பயனைத் தருவது சூத்திரத்தின் தன்மையாகும் என்று புலவர்கள் கூறினர்.*

### காண்டிகை உரை

பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பில்
கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும். 1594

குற்றமில்லாத சூத்திரஞ் சொன்ன முறைமையோடு, சூத்திரப் பொருளை மறைப்பில்லாமல் விளக்கிக் கூறுவது காண்டிகை உரையாம்.

### காண்டிகை விளக்கம்

விட்டகல் வின்றி விரிவொடு பொருந்திச்
சுட்டிய சூத்திரம் முடித்தற் பொருட்டா
ஏது நடையினும் எடுத்துக் காட்டினும்
மேவாங் கமைந்த மெய்ந்நெறித் ததுவே. 1595

சூத்திரத்திலே படுகின்ற சொற்பொருளினை விட்டு விலகுதல் இல்லாமல், விரிவுடனே பொருந்திக், குறித்த சூத்திரம் முடித்தற்காக, ஏது நெறியானும் எடுத்துக்காட்டினும், பொருந்தியபடியாக அமைகின்ற பொருள் நெறியினை உடையது காண்டிகை என்பர்.

### உரை ஆமாறு

சூத்திரத் துட்பொருள் அன்றியும் யாப்புற
இன்றி யமையா தியைபவை எல்லாம்
ஒன்ற உரைப்ப துரையெனப் படுமே. 1596

சூத்திரத்து உட்பொருள் அல்லாமலும், அந்நூலகத்தில் யாப்பிற்கும் பொருத்தம் இன்றியும் அமையாதன எல்லாம் கொணர்ந்து பொருந்துமாறு உரைப்பது உரையாகும் என்பர்.

### உரையின் அமைதி

மறுதலைக் கடாஅ மாற்றமும் உடைத்தாய்த்
தன்னூ லானும் முடிந்தநூ லானும்
ஐயமும் மருட்கையும் செவ்விதின் நீக்கித்
தெற்றென வொருபொருள் ஒற்றுமை கொளீஇத்
துணிவொடு நிற்றல் என்மனார் புலவர். 1597

மறுதலைக் கேள்வியும் மறுமொழியும் உடையதாய், ஐயப்படல் மருண்டுநிற்றல் ஆகியவைகளை நீக்கித், தன்னூலினாலாவது பிறநூலினாலாவது தெளிவாக ஒரு பொருளை ஒப்புமைப் படுத்தி, இதுவே முடிவென்று நிற்றல் உரையாம் என்று புலவர் உரைப்பர்.

### மறுதலையாயின் சிதைவே

சொல்லப் பட்டன எல்லா மாண்பும்
மறுதலை யாயின் மற்றது சிதைவே. 1598

மேற்கூறப்பட்ட உரையிலக்கணம் முதலியன நன்கு அமைந்திருப்பினும், முதல் நூலோடு மாறுபடின், அதனால் எல்லாச் சிறப்பும் அழிந்துபோகும்.

## முதல்வனிடத்திற் சிதைத லில்லை

சிதைவில என்ப முதல்வன் கண்ணே. 1600

முதல்வன் இயற்றிய முதனூலாயின், அந்நூற்கண் அழிவு ஏற்படமாட்டாது.

## வழிநூற்குரிய மரபு

முதல்வழி யாயினும் யாப்பினுட் சிதையும்
வல்லோன் புனையா வாரம் போன்றே. 1601

ஒருவன், முதனூல் வழியாக நூல் செய்யினும் அறிவுமிக்கோன் செய்யாத கூறுபாட்டினைப் போன்று, அந்நூலும் யாப்பினுள்ளே சிதைவுறும்.

## சிதைவு எனப்படுவது

சிதைவெனப் படுபவை வசையற நாடில்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில கூறல் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாபபிற் றுதல்
பழித்த மொழியான இழுக்கக் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோ ளின்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி யாகும்.

சிதைவென்று மேற்கூறப்பட்டன யாவையென்று குற்றமற ஆராய்ந்து பார்க்கில்: சொன்னதைச் சொல்லுதல்; முன் சொன்னதற்கு மாறுபாடாகக் கூறுதல்; குறைவாகச் சொல்லுதல்; மிகுதியாகச் சொல்லுதல்; பொருளில்லாதவைகளைக் கூறுதல்; மடக்க உணர்வு ஏற்படும்படியாகக் கூறுதல்; கேட்போர்க்குத் துன்பம் தரும்படியான தன்மையில் அமைதல்; பழிக்கப்பட்ட சொற்களால் தாழ்வுண்டாமாறு கூறுதல்; தானே ஒரு பொருளை எண்ணிக் கூறுதல்; எவ்வகைப் பொருளையும் உறுதியாகப் பற்று உணர்த்தல்; ஆகிய இவைகளும், இத்தன்மையவாகிய பிறவுமாம்.

## எதிர்மறுத்து உணர்வாராயின்

எதிர்மறுத் துணரினத் திறத்தவு மவையே. 1603

எதிர்மறுத்து உணர்வாராயின், [illegible] ம் குற்றமாம் என்க.

## 9. உத்தி வகைகள்

ஒத்த காட்சி உத்திவகை விரிப்பின்
நுதலிய தறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்துமெய்ந் நிறுத்தல்
மொழிந்த பொருளோ டொன்ற வைத்தல்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்
வாரா ததனுன் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வாராதது முடித்தல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
ஒப்பக் கூறல் ஒருதலை மொழியே
தன்கோட் கூறல உடம்பொடு புணர்த்தல்
பிறனுடம் பட்டது தானுடம் படுதல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழிவாம் என்றல் கூறிற் றென்றல்
தான்குறி யிடுதல் ஒருதலை யன்மை
முடிந்தது காட்டல் ஆணை கூறல்
பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்
மறுதலை சிதைத்துத் தன்துணி புரைத்தல்
பிறன்கோட் கூறல் அறியா துடம்படல்
பொருளிடை யிடுதல் எதிர்பொரு ளுணர்த்தல்
சொல்லி னெச்சம் சொல்லியாங் குணர்த்தல்
தந்துபுணர்ந் துரைத்தல் ஞாபகம் கூறல்
உயர்த்துக்கொண் டுணர்தலொடு மெய்ப்பட நாடிச்
சொல்லிய வல்ல பிறவவண் வரினும்
சொல்லிய வகையால் சுருங்க நாடி
மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்டு
இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே. 1604

*ஒத்த அழகு பொருந்திய உத்தி வகையை விரித்துக் கூறத் தொடங்கினால், கூறிய பொருளை அறிதல்; அதிகார முறை; தொகுத்துக் கூறுதல்; தொகைபடக் கூறிய பொருளை வகைபடக் கூறல்; சொன்ன பொருளோடு பொருந்துமாறு கூறுதல்; சொல்லப்படாத பொருளும் உரையில் அமையுமாறு நிறுத்தல்; வாராததற்கு ஒத்திய இலக்கணத்தை வந்ததுகொண்டு முடித்தல்; வந்ததுகொண்டு வாராததை உணர்த்தல்; முற்பட அதிகரித்த பொருளை அவ்வகையினாற் கூறாது முறைபிறழக் கூறுதல்; ஒரு பொருளெடுத்து இலக்கணங் கூறியவிடத்து அதுபோல்*

வனவற்றை இலக்கணத்தால் முடித்தல்; உறுதி பெறச் சொல்லு தல்; தன்னுடைய கொள்கையைக் கூறுதல்; கூறவேண்டிய முறையில் தவறாமை; பிறன் ஒத்துக்கொண்டதைத் தானும் ஒத்துக்கொள்ளுதல்; கூறப்பட்ட சூத்திரத்தால் கூறப்படாத பொருளைக் காத்தல்;

முன் கூறப்பட்ட சூத்திரத்தினால் வருகின்ற சூத்திரத்தின் பொருளையும் பாதுகாத்தல்; மேலே கூறுவோம் என்பது தோன்றக் கூறாது விடுதல்; முன் கூறியதைப் பிறகு கூறாது விடுதல்; தானே பெயரமைத்தல்; ஒருதலைப் பக்கமாகக் கூறாமை; கூறப்பட்ட இலக்கணத்தை எடுத்துக் காட்டுதல்; தான் உறுதியாகச் சொல்லுதல்; ஒரு சூத்திரம் பல பொருட்கு ஏற்குமாயின், அவற்றுள் நல்லதனைப் பொருளாகக் கொள்ளுதல்; தொகுத்துச் சுட்டிய மொழியால் வகுத்துக் கொள்ளுதல்; மற்ற வர்கள் கூற்றை மறுத்துத் தன்னுடைய முடிவை உரைத்தல்; பிறனுடைய கொள்கையைச் சொல்லுதல்; தானறியாதவை களைப் பிறர் கூறியிருந்தால் உடம்பட்டுக் கொள்ளுதல்;

பொருளைச் சேரக்கூறாது இடையீடுபடக் கூறுதல்; இனி மேற்கூறவேண்டுவது இதுவென உணர்த்தல்; சொல்லப்பட்ட எச்சங்களைக் கண்டு, சொல்லியவாற்றாற் பொருள் கொள்ளுதல்; முன்னுவது பின்னுவது நின்ற சூத்திரத்தின் சொல்லை, இடை நின்ற சூத்திரத்தினுங் கொணர்ந்து சேர்த்தல்; இரட்டுற மொழிந்து இரண்டு சொல்லுக்கும் பொருள் கொள்ளுதல்; பொருந்தாமை உளதாகத் தோன்றின், பொருந்துமாறு விசாரித்து உணர்த்தல்; ஆகியவைகளோடு, உண்மைபெற ஆராய்ந்து சொல்லாத பிறபொருள் அங்கு வந்தாலும், சொல்லிய வகையால் சுருங்குமாறு செய்து, உள்ளத்தில் எண்ணிக், குற்ற மறத் தெரிந்துகொண்டு, சொல்லிய இனத்தோடு சேர்த்து, நுண்ணுர்வினையுடைய புலவர்கள் தங்களுடைய நூலினைச் செய்து உணர்த்துதல் வேண்டும்.

தொல்காப்பியமும்

புலியூர்க்கேசிகன் தெளிவுரையும்

முற்றுப்பெற்றன

# நூற்பா முதற்குறிப்பு அகராதி

## [எழுத்து அதிகாரம் 1—483]

( எண்—நூற்பாவின் எண் )

## [ சொல் அதிகாரம்—484-946 ]

# [ பொருள் அதிகாரம் 947—1604 ]